தமிழ் வெளியீட்டுக் கழக வரிசை எண்—150

# இந்திய ஆட்சி அமைப்புமுறை வளர்ச்சி-I

# (THE DEVELOPMENT OF INDIAN POLITY)

ஆசிரியர்

எச். என். சின்ஹா

தமிழாக்கம்

வி. கண்ணையா, எம்.ஏ.

பேராசிரியர், அரசியல் துறை

அரசினர் கலைக் கல்லூரி, கோவை.






தமிழ் வெளியீட்டுக் கழகம்

தமிழ்நாடு - அரசாங்கம்

First Edition—April 1967

B.T.P. No. 150



# THE DEVELOPMENT OF INDIAN POLITY

H. N. SINHA

ranslation

V. KANNIAH

PRICE Rs. 6-25



Printed by
BHARANI PRESS,
55, Perambur Barracks Road,
Vepery, Madras-7.

1

# அணிந்துரை




(திரு. இரா. நெடுஞ்செழியன், தமிழகக் கல்வியமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கி ஆறு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவருகின்றனர். தொடக்கத்தில் இருந்த இடர்ப்பாடுகள் மெல்லமெல்ல மறைந்துவருகின்றன. நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், ‘தமிழிலேயே கற்பிப்போம்’ என முன் வந்துள்ள கல்வி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித்தர முன்வந்த நூலாசிரியர் கள் தொண்டுணர்ச்சி, இவற்றின் காரணமாக இத் திட்டம் நம் மிடையே மகிழ்ச்சியும் மனநிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், புவியியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், தத்துவம் ஆகிய பல துறைகளில் தனி நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் வெளியீட்டுக் கழகம் நூல்களை வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான ‘இந்திய ஆட்சி அமைப்புமுறை வளர்ச்சி-I’ என்ற இந் நூல் தமிழ் வெளியீட்டுக் கழகத்தின் 150ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 185 நூல்கள் வெளிவந்துள்ளன.

கணக்கிலடங்காத் தடைகளையெல்லாம் அகற்றித் தமிழன்னை கல்லூரிக் கலைமண்டபத்தில் கொலுவீற்றிருக்கிறாள்; எனவே, இவ் அன்னையை வாழ்த்துவோமாக. உழைப்பின் வாரா உறுதி கள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றிகாண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும்; அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். சென்னைப் பல்கலைக்கழகத்தின் பலவகை உதவிகளுக்கும் ஒத் துழைப்புக்கும் நம் மனங் கலந்த நன்றி உரித்தாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# முனனுரை

மிக முறபடட காலததிலிருநது இனறுவரையான இநதிய ஆடசி அமைபபுமுறை வளாசசியை விளகக ஒரு நூல எழுத நான நீணட காலமாகவே நினைததுககொணடிருநதேன சிடஜவிக எனபாரின புகழசானற ஐரோபபிய ஆடசி அமைபபு முறையின வளாசசி எனனும நூலிலிருநது நான இக கருததைப பெறறேன முறகால, இடைககால இககாலததிய ஆடசி அமைபபுமுறையின தனித்த, தனிபபடுததபபெறற ஆயவுகள மேறகொளளபபடடிருககையில, அரசியல நிறுவனஙகள, கோடபாடுகள, மரபுகள ஆகியவறறின வளாசசியையும தொடாசசியையும எலலாக காலஙகளினவழியாகக கணடு ஆயவு செயயும நூல ஒனறுமிலலை எனபதைக கணடேன

குறிபபாக அரசியல துறையில இநதியா ஒனறைப படைககும இக காலததிய நம பெருமுயறசிகளெலலாம நமமுடைய கடநதகாலப படடறிவுகளோடு தொடாபுகொணடிருகக வேணடுமெனறு நான உணருகிறேன இது நமககுச சிறிது அறிவுரை அளிககலாம சில இடறுகுழிகளை இது தவிாககலாம இதறகுமுன நிகழநதவைகளோடு தொலைககாடசித தொடாரில இவைகளை நாம நோககாதவரையில இனறைய சிககலகளின உளளாாநத இயலபை அறியவும வருஙகாலததைத நுணணறிவோடு முனனோககிப பாாககவும நமமால இயலாது வரலாறறின எலலாத திருபபஙகளிலும இனறைய நம காலம இருபபதுபோல, புதிய வழியில நாம அடியெடுதது வைககுமுன இதுவரை கடநதுவநத வழியைத திருமபிப பாாகக ஒரு நொடியேயாயினும தயஙகி மேறசெலலுதல பொருததமுடையதாகும மேலநாடடிலிருநது ஏறறுககொணட பாராளுமனற முறை மககளாடசியின புதிய பாதையில நாம ஏறகெனவே இருககிறோம நமமுடைய வாழவிறகும இயலபிறகும இதை எநத அளவு பொருததமுடியும எனபதும, நமமுடைய கடநதகால மரபுரிமைகளாகிய நிறுவனஙகளிலும அரசியல மரபுகளிலும இதை எபபடிப பொருததி இணைககமுடியும எனபதும ஆயவிறகும அறிவிறகும உரியவைகளாகும நம புதிய வாழவில இது நமககு உதவலாம இந நோககைக கருததிறகொணடுதான இந நூல மேறகொளளபபடடிருககிறது

இது இரணடு பாகஙகளைக கொணடிருககிறது இநதோ-ஆரிய ஆடசி அமைபபுமுறை எனத தலைபபுககொணட முதற

பாகம், பண்டைக்கால இந்தியாவில் அரசின் வளர்ச்சியைக் கண்டு ஆய்கிறது. இப்பொழுது கிடைக்காத 'பழங்கால இந்திய ஆட்சி அமைப்புமுறையில் இறைமை' என்ற என்னுடைய முந்திய நூலைப்போன்றதே இதுவும். இந்தோ-இஸ்லாமிய ஆட்சி அமைப்புமுறையெனப் பெயர்கொண்ட இரண்டாம் பாகம் இடைக்கால இந்தியாவில் அரசின் வளர்ச்சியைக் கண்டு ஆய்வு செய்கிறது. இரண்டு பாகங்களிலும் இந்த ஆய்வு ஒரேமாதிரியான வழிகளைப் பின்பற்றி அரசியல் வளர்ச்சியை விளக்க முற்படுகிறது. 3000 ஆண்டிற்கு மேலான இந்திய வரலாற்றின் இவ் விரண்டு காலங்களின்போது உறவுகளையும், அரசியல் மரபுகளின் தொடர்ச்சியையும், நிறுவனங்களையும் கண்டறிய இது முற்படுகிறது. எவ்வளவு தூரம் இது வெற்றியுடன் செய்யப்பட்டுள்ளதென்பது எனக்குத் தெரியாது. தகுதித் திறன் மிக்க கற்றறிந்தவர்களால் இது மதிப்பீடு செய்யப்பெறும். எப்படி இருந்தபோதிலும், ஒரு தனித்த, தொடர்ச்சியான முறையாக இதை உருவாக்கிக் காண முயலவேண்டுமென்று நான் நினைத்தேன். இந் நூலைப் பொறுத்தவரை இப் பணி பாதி நிறைவேறியுள்ளது. இக் காலத்தை எடுத்துக்கொள்ளாத வரையில் வளர்ச்சியின் படிமுறையை முற்றிலும் தேர்ந்தாராய முடியாது. ஆகையால், இக்கால இந்திய அரசின் வளர்ச்சியைக் கண்டு ஆய்வு செய்யத்தக்க மூன்றாவது பாகத்தை எழுத நான் திட்டமிட்டுக்கொண்டிருக்கிறேன். இது எப்பொழுது முடியுமென்பதை நான் அறியேன்; ஏனெனில், இந்த இரண்டு பாகங்களை எழுதுவதில் எண்ணத்தக்க இடைவேளை இருந்திருக்கிறது. 1935-ல் லண்டன் பல்கலைக் கழகத்திற்கான பேரறிஞர் பட்டத்திற்காக (Ph.D) இது எழுதப்பட்டிருக்கையில், அமெரிக்க ஐக்கிய நாட்டின் சிக்காகோ பல்கலைக் கழகப் பட்ட மேற்படிப்பு மாணவர்களுக்கான என்னுடைய சொற்பொழிவுகளிலிருந்து இரண்டாம் பாகம் 1954-ல் உருப்பெற்றது.

இந்த நூலில் பல வேத, சமஸ்கிருத, அரேபிய, பாரசீகச் சொற்களும் மேற்கோள்களும் வருகின்றன. இவைகளின் சரியான எழுத்துப் பெயர்ப்பைக் கவனமாகச் செய்திருக்கிறேன். ஆனால், எழுத்துக் கூட்டல்களில் ஒரேமாதிரியாக இருக்க எல்லா இடங்களிலும் எழுத்துகளின் ஒலிவேறுபாடுகளைக் குறித்துக் காட்டுகிற குறிகளைப் பயன்படுத்த இயலவில்லை.

இந் நூலை உருவாக்குவதில் பல நட்புரிமைமிக்க கற்றறிந்தவர்களின் உதவியை நான் பெற்றேன். பாரசீக, அரேபிய மூலப் பாடக் குறிப்புகளை விளக்குவதில் இவர்கள் எனக்குக் குறிப்பாக

உதவியுள்ளார்கள். இதற்காக நான் இவர்களுக்குக் கடப்பாடுடையவனாக இருக்கிறேன். சிக்காகோ பல்கலைக்கழக நூல் நிலைய நூலகரும், சிக்காகோ பல்கலைக்கழக வரலாற்றுத்துறைத் தலைவராகிய பேராசிரியர் வால்டர் ஜான்சனும் (Walter Johnson) இவர்களுடைய நூல்நிலையங்களை நான் பயன்படுத்திக்கொள்வதில் வரம்புமீறிய பெருந்தன்மை காட்டினார்கள். நான் இவர்களுக்கு என் நன்றியறிதலைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இறுதியாக, இந் நூலின் தயாரிப்பின்போது பல்வேறு வழிகளில் என் மனைவி எனக்குச் செய்த உதவிகளை இங்கு நான் குறிப்பிடவில்லையென்றால் கடமை தவறியவனாவேன்.

ஜபல்பூர்.<br>
நவம்பர் 30. 1962

எச். என். சின்ஹா

## பொருளடக்கம்

### பாகம் I—இந்தோ-ஆரிய ஆட்சி அமைப்புமுறை

# 1. இந்தோ-ஆரிய ஆட்சி அமைப்புமுறை ஆய்விற்கோர் அறிமுகம்

## இருக்கு வேத காலச் சமூகமும், அரசும், அரச பதவியும்

இந்தோ-ஆரியர்களின் வருகையோடு நம்முடைய இந்தோ-ஆரிய ஆட்சி முறை ஆய்வு தொடங்கவேண்டும். கி.மு. 1600—1400-ல் இவர்கள் இந்தியாவிற்குள் நுழைந்தனர். இவர்கள் தம்முடன் ஓர் இன அமைப்பையும், வேள்வி வழிபாட்டு மரபையும், இயலுலகுசார்ந்த ஒழுங்குக் கோட்பாட்டையும் கொண்டு வந்தனர். விஸ், ஜனம் ஆகியவற்றின்மேல் அமைந்திருந்த இவர்களுடைய இன அமைப்பு, இவர்களுடைய புதிய இடத்தில், கிராமங்களையும் இராஷ்டிரங்களையும் கொண்டிருக்கும் நிலம் சார்ந்த அமைப்பாக மெதுவாக உருமாற்றப்பெற்றது. இவர்களுடைய கடவுளர்களின் சிறப்புக் கருதி யக்ஞம் அல்லது வேள்வி வழிபாட்டை நடத்தச் சமயக் குருமார்களாகிய நிபுணர்களின் சேவைகள் தேவைப்பட்டன. இவர்களின் இயலுலக ஒழுங்குக் கோட்பாடு அல்லது இருக்கு வேத ரிதம், இயற்பியல் சார்ந்த இயற்காட்சிகளில் ஓர் ஒழுங்கையும் முறையையும் உட்கொண்டிருந்தது. இந்த இயலுலக ஒழுங்கைப் பேணுவதில் இவர்களுடைய கடவுளர்கள் கருவியாகப் பயன்பட்டனர். ஆகையால், வேள்வியின் உருவில் காணிக்கைகளைப் பெற இவர்கள் தகுதி பெற்றனர். சப்த சிந்து குடியிருப்பில் இந்த வேள்வி வழிபாட்டு மரபு பெரிதும் விரிவாக்கப்பட்டது. இயற்கையின் தெய்வமாக்கப்பெற்ற சக்திகளின் பிரதிநிதிகளாகப் புதிய கடவுளர்கள் தோன்றினர். இவர்களின் வழிபாட்டிற்கென மெதுவாக ஒரு சடங்குமுறை உருவாகிற்று. எண்ணற்ற சமயக் குருமார்களின் சேவைகளும் தேவையாயின. எனவே, காலப்போக்கில் திருப்படையலின் சமயம் ஒன்று குருமார்களின் வகுப்போடு ஏற்பட்டது.

இருக்கு வேதத்தில் வருணிக்கப்பட்டிருப்பதைப்போல் இந்தோ-ஆரிய சமூகம் தந்தைவழி சார்ந்ததாக இருந்தது. ஆகையால், இராஷ்டிரத்தின் அரசாங்கம் முடியாட்சியாக இருந்தது. அதனுல் அரச பதவி காலப்போக்கில் மரபுவழித் தொடர்கிறதாக இருந்தாலும், பொதுவாகத் தேர்ந்தெடுப்பிற் குரியதாக இருந்தது. மக்கள் தொடர்பு சார்ந்த சபா, சமிதி என்ற இரண்டு நிறுவனங்கள் இருந்தன. மூதறிஞர்களும் வலிமை மிக்கவர்களும் அரசரைத் தெரிவுசெய்து தேவையான போது உதவியுமிருக்கலாம். மக்கள் கொடுக்க விரும்பியதைத் தவிர, அரசர் எந்த முறையான திறைப்பொருளேயும் உரிமை யோடு கேட்கமுடியாது. அரசர் தேர்ந்தெடுக்கப்பட்டமையால் இவரைப் பதவியிலிருந்து விலக்கிவிடவும் முடியும். இருந்த போதிலும், இந்தோ-ஆரியரின் பல்வேறு இனங்களுக்குள்ளும், இந்தோ-ஆரியருக்கும் பூர்வீகக் குடிகளுக்குமிடையேயும் அடிக்கடி நிகழ்ந்த போரின் காரணமாக அரசரின் அதிகாரம் தெள்ளத் தெளிந்தவகையில் அதிகரித்தது. உண்மையில் அரசர் கள் போரில் பெரும்பாலும் வெற்றி கண்ட தலைவர்களாக இருந் தனர். இது அரசர்களின் சிறப்பையும் இவர்களுடைய போர் வீரர்களின் சிறப்பையும் அதிகரித்தது. காலப்போக்கில் இவர்கள் ஓர் ஒழுங்கமைந்த நிறுவனமானுர்கள். அரசர்கள், அதாவது, இராஜன்யர், பெரும்படைவீரர் வகுப்பு ஆகியவற்றின் தெளி வற்ற தொடக்கம் இது.

ஆனுல், அடிக்கடி நிகழ்ந்த இப் போர் நடவடிக்கை வேள்விப் படையலின் சிறப்பையும் உயர்த்திற்று. போர்களில் வெற்றி காண்பதில் கடவுளர்களின் உதவி தேவைப்பட்டமையால், இயன்றவரை அடிக்கடி திருப்படையல்களால் இவைகளைத் தொழுது வேண்டவேண்டியிருந்தது. இதற்காகச் சமயக் குரு மார்களின் சேவைகள் கேட்டுப் பெற்றுக்கொள்ளப்பட்டன. ஆகையால், வேள்விகளை நடத்துவதில் மிகத் திறம்படைத்த ஒரு வகுப்பினரின் சிறப்புப் பெரிதும் உணரப்பெற்றது. இந்தோ-ஆரிய சமூகம், குறிப்பிட்ட வாழ்க்கைத் தொழிலை மேற்கொண்ட ஓர் அமைவுற்ற வகுப்பாக மெல்ல வளர்ச்சியடைந்தது. பல நூற்றுண்டுகள் பஞ்சாபில் இருந்தபின், இந்தோ-ஆரியர், பெருகி வரும் மக்கள்தொகையின் அழுத்தம் காரணமாகப் பரந்த கங்கை, யமுனை சமவெளிகளில் பரவினர்.

கங்கைச் சமவெளியில் இந்தோ-ஆரியர்கள் பரவியதோடு, அரசுகளின் உருவளவு பெருமளவு வளர்ச்சியடைந்தது. போர் நடவடிக்கை மிகக் கடினமானதாக இருந்ததோடன்றி பஞ்சா பில் அடிக்கடி நிகழ்வதாகவுமிருந்தது. (அ) பரந்த அரசுகளும்,

(ஆ) அடுத்தடுத்து நிகழும் போர் நடவடிக்கையுமாகிய இவ்விரண்டு கூறுகள் புதிய சமூக, அரசியல் வளர்ச்சிகளை உண்டாக்கின. வினைசெயல் அடிப்படையில் சமூகம் வேறுபடுத்தி உணரத் தொடங்கியது. போர்நடப்பு அடுத்தடுத்தும் கடினமாகவுமிருந்ததால், போர்க்கலையில் தனிச்சிறப்பாய்வு ஒரு தேவையாயிற்று. தெளிவற்ற போர்வீரர் வகுப்பு ஒரு க்ஷத்திரிய சாதியாகக் கெட்டிப்பட்டது. இதேபோல் பிராமண சாதியும் தோன்றியது. போரில் வெற்றிக்காக இவர்களுடைய சேவை பெரிதும் போற்றப்பட்டதால் ஒரு சிக்கலான சடங்குமுறையும் தோன்றியது. இவர்கள் கடவுளர்களைவிடச் சிறந்தவர்களாகக்கூடக் கருதப்பெற்றனர். ஏனெனில், இவர்களின் சடங்குகளாலும் வழிபாடுகளாலும் கடவுளர்களிடமிருந்து இவர்கள் நட்பாதரவுகளைப் பெறலாம். வேள்விகளை நடத்தப் பல மாதங்கள், ஆண்டுகளாகலாம்; எண்ணற்ற குருமார்களின் சேவைகள் தேவைப்படலாம். ஆகையால், பெருமளவு தனிச்சிறப்பாய்வு தேவைப்பட்டது. இதற்கு முந்திய காலத்தின் குருமார் வகுப்பு, மிக உறுதிவாய்ந்ததொரு குருமார்களின் சாதியாக அமைந்தது. மறுபடியும் கங்கை, யமுனை தாழ்வெளிகளின் பரந்த பரப்புகளின் வெற்றிகளோடும், சமூகத்தின் வளர்ந்துவரும் தேவைகளோடும் வேளாண்மையும், மற்றக் கலைகளும், தொழில்களும் பரவலாகவும் திறமையோடும் செயற்படுத்தப்பட்டுவந்தன. இக் கலைகளிலும் கைவினைத் தொழில்களிலும் ஆன தனிச்சிறப்புப் பயிற்சி, வைசியர்களென்ற ஒரு புதிய வகுப்பு தோன்ற உதவியது. இதற்கு முன்னிருந்த தெளிவற்ற வகுப்புகளிலிருந்து இதேபோன்ற தொழில்கள் பின்தோன்றின. இறுதியாக, ஆரியர்களால் வென்று அடிமைப்படுத்தப்பெற்ற ஆரியர் அல்லாதாருக்குள்ளிருந்து அல்லது அமைதியாகப் பணிந்து ஆரியர்களின் வழிபாட்டு முறையை ஏற்றுக்கொண்டவர்களிலிருந்து சூத்திரர் என்ற ஒரு நான்காவது சாதி எழுந்தது. இவ்வாறு சமூகத்தில் நான்கு சாதிகள் தோன்றின.

## சமயத்தின் பாதுகாப்புப் பொறுப்பிற்கு உட்பட்ட அரச பதவியும் பெரிய நாடுகளும்

அடுத்தடுத்து அரசின் வளர்ச்சியும் தொடர்ந்து நடைபெற்றது. பெரிய அரசுகளின் தோற்றத்தோடு அரசரின் பொருள் வளங்களும் படைபலமும் பெருமளவு வளர்ச்சியடைந்தன. தேர்ந்தெடுப்பிற்குரியதாக இருந்த இவருடைய பதவி படிப்படியாக மரபுரிமைக்குரியதாக ஆகிற்று; மரபுவழி அரச பதவியோடு பழைய வேதகாலப் பொதுமக்கள் தொடர்புடைய நிறுவனங்கள் ஒழுங்கற்றனவாயின. சமிதி, சபா ஆகிய இடங்களை

இராஜசபையும் மந்திரி பரிசத்தும் எடுத்துக்கொண்டன. அமைச்சரவையாகிய மந்திரி பரிசத் அரசரின் தலையாய அலுவலர்களைக் கொண்டிருந்ததால் மிகமுக்கியமான நிறுவனமாயிற்று. இவ்வலுவலர்கள் இருந்தது, அரசின் பணிகளையும் அரசரின் வளரும் செல்வாக்கையும் வேறுபடுத்திக் காட்ட ஓர் உறுதியான குறிப்பாகும். இவர் இப்பொழுது 'சட்டத்தின் காவலர்' என்னும் 'தலைமை அதிகாரத்தின்', அதாவது, இறைமையின் சின்னமாக இருந்தார். மேலும், இவருடைய அதிகாரம் இப்பொழுது சமயத்தின் இசைவாணையைப் பெறுகிறது. அதாவது, வேதகால முற்பகுதியில் சமயச் சார்பற்றிருந்த அரசபதவி ஒரு சமயச் சார்புடைய நிறுவனமாக உருமாறியது. ஏனெனில், உலகியல் சார்ந்த தேவைகளிலிருந்து இப் பதவி எழவில்லை; அல்லது சமயச்சார்பற்ற குணவியல்பைக்கொண்ட அதிகாரத்தை இது செயல்படுத்தியது. சதபத, ஐதரேய பிராமணங்கள் கூறுகிறபடி, வேள்விகளின் எதிரிகளாகிய பேய்களை எதிர்த்துப் போராட இது தோன்றியது. எனவே, அரச அதிகாரம் இதற்காகமட்டுமன்றி, அதாவது, மக்களை ஆளமட்டுமன்றிப் புனிதச் சட்டத்தை நிலவச் செய்யவும் தேவைப்பட்டது; சமூகத்தின் நான்கு வகுப்புகளுக்கும் குறித்துக் கொடுக்கப்பட்டிருந்த சடங்குகளையும் கடமைப் பொறுப்புகளையும் கடைப்பிடித்தலைப் புனிதச் சட்டம் கொண்டிருந்தது. எடுத்த எடுப்பில், இந்தச் சடங்குகள், கடமைப் பொறுப்புகள் எல்லாம் புனிதமானவைகள் அல்ல; அதாவது, வேதவழிபாட்டோடு தொடர்புடையன அல்ல. இவைகளில் பல பொதுமக்களிடமிருந்து தோன்றியவைகளேயாகும்.

காலப்போக்கில், இந்தோ-ஆரியர்கள் எங்கும் பரவியதால், அவர்களுடைய பழமையான பழக்கங்களையும், வழக்காற்றையும், சடங்குகளையும் இவர்கள் மறந்துவிட்டிருக்கலாம். இதனால் தான் இவர்கள் புதியவர்களோடும், இவர்களுடைய வழிபாட்டு மரபோடும், பழக்கங்கள், செயல்வகைகள் ஆகியவற்றோடும் தொடர்பு கொண்டனர். இந்தோ-ஆரியர்கள் தம் வருணம், வேள்வி வழிபாட்டு மரபு, பழக்கங்கள் ஆகியவைகளை இழக்க அஞ்சினர். இதனால்தான், இவர்களுடைய சடங்குகளையும், வழிபாட்டு முறைகளையும், பழக்கங்களையும், வழக்காறுகளையும் வசதியான சட்டத் தொகுப்புகளில் சேர்க்கவும், விளக்கவும், விரிவாக்கவும் இவர்கள் பெரிதும் முயன்றனர். ஏனெனில், இவற்றை இவர்கள் மறந்துவிடலாகாது. இதைப் பொறுத்தவரை மத்திய நாடாகிய துருவாயாம், மத்திய மாயாம் திசி (Dhruvayam Madhyamayam disi) ஆகிய பிரமவருத்தத்தில் (Brahmavarta) நிலவிய பழக்கங்களும் வழக்காறும் விதிக

ளாகக் கொள்ளப்பட்டன. ஒரு காலத்தில் இந்தோ-ஆரியருக்குச் சொந்தமான ஒவ்வொன்றும் புனிதமாகக் கருதப்பெற்றது. பொதுமக்களின் பொழுதுபோக்குகள், சமயச் சடங்குகள், சமூக நிறுவனங்கள், வழக்கமான சட்டங்கள், மரபுகள், அரச முடிசூட்டு விழாபோன்றவைகளின் நற்பண்புகளெல்லாம் உருமாறிப்போயின. ஆரிய வருணத்தையும் வழிபாட்டு மரபையும் இழக்கும் அச்சத்தாலும் பழைய பழக்கங்களையும் மரபுகளையும் விடாது பற்றிக்கொள்ளும் மனித உணர்வாலும் இவர்கள் ஒரு சமய வழிபாட்டு முறையை வளர்த்துக்கொண்டனர்; இது சமயமாயிற்று; இதைப் பின்பற்றுதல் மக்களின் புனிதச் சட்டமாயிற்று. இதுதான் பிராமண சமயம். அரச பதவியும் இதனோடு இணைக்கப்பெற்று, இதன் செயல்வினைகளும் இதனால் உறுதிசெய்யப்பெற்றன. நடைமுறைக் குறிப்பில், அரசபதவியின் சமயத்தொடர்பு, இதன்மீது சமயப் பாதுகாப்புப்பொறுப்பின் திணிப்பேயாகும். சமயம் அல்லது குருமார்த் தொகுதியினர் அரசரை என்ன செய்யச் சொன்னார்களோ அதையே அரசர் செய்யவேண்டியிருந்தது.

## சமயப் பாதுகாப்புப் பொறுப்பிலிருந்து அரச பதவி விடுதலை பெறல்

இப் பாதுகாப்புப் பொறுப்பு நிலையிலிருந்து பிராமண அரச பதவி மெதுவாகத் தன்னை உறுதிப்படுத்திக்கொள்ளத் தொடங்கியது. சமயத்தின் செயல் விளைவிற்குள்ளாவதிலிருந்து இது சமயத்தின்மீது தன் அதிகாரத்தைச் செயல்படுத்தத் தொடங்கியது. சாதி, சமயச் சடங்கு முறை, குருமார்த் தொகுதி அடிப்படையில் அமைந்திருந்த பிராமண சமுதாய அமைப்பில் ஏற்பமைதியில்லா சமயங்கள் மதிப்பு வைக்கவில்லை உண்மையில் இவைகளுக்கெதிராகத்தான் இவை தோன்றின. பௌத்த, சமண சமயங்களைத் தோற்றுவித்தவர்கள் அரசர்களின் ஆதரவை நாடினர். இவ் வேண்டுகோளில் சமயச்சார்புடைய போக்கில்லை. புதிய சமயம் மக்களிடையே பரவவேண்டுமென்பதற்காக அரசரின் ஆதரவை வரவேற்றனர்; இச் சமயங்கள் பரவத் தொடங்கியதும், பிராமண சமயத்தின் பிடிப்பும் குருமார்களின் ஆதிக்கமும் சிறிது சிறிதாகத் தளர்ந்தன. உபநிடதம் எனப்பட்ட மெய்யுணர்வு முறைகள், சாரவாக்கர்களின் கோட்பாடுகள் ஆகியவை பரவியதாலும் பிராமண சமயத்தின் பிடிப்பு தளர்ந்தது. மொத்தத்தில், நாடு முழுவதிலும் சிந்தனைக் கிளர்ச்சி ஒன்றிருந்தது. மக்களின் சமயமாக இருந்த வழிபாட்டு மரபு முறையை ஆராய்வதும், பகுத்தறிவிற்கொத்த காரணத்தை அறிவதும் இதன் போக்காக இருந்தது. ஆகவே, பிராமணீய

வழிபாட்டுமுறை சிந்தனையாளர்களைத் திருப்திசெய்யத் தவறிய பொழுதும், இதனுடைய நிறைவில் ஐயங்கொண்டபொழுதும், ஒரு புதிய வாழ்வுமுறைக்குத் தளம் அமைக்கப்பட்டது. இப் புதிய ஒழுங்குமுறையில் அரசன் தன்னை உறுதிப்படுத்திக்கொள்ளவும், இதன்வழியாக அரசு தன்னை உறுதி செய்துகொள்ளவும் முடிந்தது.

அரசர், தம் நிலையை உறுதிப்படுத்திக்கொள்ள மற்றொரு கூறுபாடும் உதவிற்று. அரச ஆதரவின் தகவை பிராமணங்கள் அறிந்திருந்தன. ஏற்பமைதியில்லாச் சமயம் பரவியது பிராமண வழிபாட்டு மரபுமுறையைக் கீழறுத்ததை இவர்கள் கண்டனர். நான்கு சாதிகளுக்குள், தடைசெய்யப்பட்ட திருமணங்களின் விளைவாக மக்களின் புதிய வகுப்புகள் தோன்றியபொழுதும், சமூகத்தின் சட்டங்களைத் தளர்த்தாமல் இவர்களை ஏற்றுக் கொள்ள முடியாதபொழுதும் கலவர உணர்ச்சி பெரிதாக இருந்தது. சமூகத்தின் நால்வகைச் சாதியையும் இவை ஒவ்வொன்றின் குறிப்பிட்ட கடமைகளையும் அரசரின் அதிகாரத்தால் அப்படியே வைத்துப் பேண பிராமண சமயம் அரசரைத் தூண்டியது. முரண் சமயக் கருத்துகளின் விளைபயன்களை மட்டுப்படுத்த பிராமண சடங்கு முறை விதிகள் பல்வேறு சமூகக் கடமைப் பொறுப்புகளை நிறைவேற்றுவதற்கான சுருக்கமான விதிமுறைகளைக் கொண்ட மூன்று தனிப்பட்ட வகைகளாகப் பிரிக்கப்பட்டிருந்தன. இவை சிரௌத்தா (Srauta), கிரியா (Grhya), தர்மசூத்ரா (Dharma Sutra); அதாவது, இவை ஒரு சொல்லில் கல்ப சூத்திரங்களாகும். ஏற்பமைதியில்லாச் சமயங்களால் அழிக்கப்படவிருந்த வேத சமயத்தை இவை பேண முற்பட்டன. முதல் சட்டத் தொகுப்புகளாகவும், பகுத்துணரமுடியாத சமயம், ஒழுக்கம், பொதுவாழ்வில் உள்ள சமயச் சார்பிலாக் கூறுகள் ஆகியவற்றின் தொகையைக் கொண்ட விதிகளாக இருந்தன; அரசருக்கும் இவரது அரசாங்கத்திற்கும் வழிகாட்டும் விதிகளை இத் தொகுப்புகள் கொண்டிருந்தன. உண்மையில், சமயத்தை அடிப்படையாகக்கொண்ட பொது அல்லது வழக்கமான சட்டமாக இவைகள் இருந்தன.

ஆனால், மொத்தத்தில் அரச பதவி அதிகாரத்தையும் செல்வாக்கையும் பெற்றுக்கொண்டிருந்தது. சமூக ஒழுங்கையும் புனிதச் சட்டத்தையும் காப்பவர் அரசரே என்று பிராமண சமயம் கருதியபொழுதும், பௌத்த, சமண சமயங்கள் இவருடைய உதவியை நாடியபொழுதும், சமூக அமைப்பில் அரசரின் சிறப்பு ஐயப்பாட்டிற்குரியதன்று. இத்துடன் பொருள்வளங்களின் வளர்ச்சியும், படைபலமும், அரசரின் அரசாங்க அமைப்

பும் சேர்த்துக்கொள்ளப்பட்டன. இதற்கிடையில் வட இந்தியாவில் அங்க, மகத, அவந்தி, காசி, கோசலை போன்ற பல முக்கியமான அரசுகள் தோன்றி, தனித் தலைமைக்குப் போராடின. ஐந்தாம் நூற்றாண்டில் (கி.பி.) நடந்த தனித் தலைமைக்கான போராட்டத்தில் மகத நாடு வெற்றிபெற்றுத் திகழ்ந்தது. பிராமண சமயத்தின் வாழ்வுப் போராட்டத்தில் உதவிய நாடுகளில் மகதம் முதன்மையானதாகும்.

## கோனாட்சியின் மேம்பாட்டை மோரியப் பேரரசு நிறுவுகிறது

கி.மு. நான்காம் நூற்றாண்டில் மோரியர் குலத்தின் தோற்றம், இந்தியாவில் வரலாற்றிற்குரிய முதல் பேரரசின் தோற்றத்தில் முடிவடைந்தது. வடஇந்திய நாடுகளுக்கிடையேயான தனி ஆதிக்கப் போராட்டத்தின் இயல்பான விளைவின் பயன்தான் இப் பேரரசு. இதை அமைப்பொழுங்கு செய்த சந்திர குப்தர் சமணசமயப் பற்றுடையவராக இருந்தார்; அசோகரின் ஆட்சியின்கீழ் இப் பேரரசு பரப்பிலும் வலிமையிலும் உச்ச நிலையை அடைந்தது. இவர் முற்றிலும் புத்தசமயச் சார்புடையவராக இருந்தார், ஒரு குறிக்கோள் அரசரைப்போல் அசோகர் வாழ முற்பட்டார். சமூகப் பிரிவுகளையும் புனிதச் சட்டங்களையும் பேணுகின்ற பிராமண மரபோடு, பிராமணர் ஒழுங்குபடுத்திய வாழ்க்கையின் சாதிக் கருத்துகள், தனி முதன்மை ஆகியவற்றின் ஏற்பின்மேல் அமைந்த தர்ம சூத்திரம், அதாவது, சட்டம், பௌத்தர், சமணர் ஆகியோர் நாட்டில் இருந்தது ஆட்சி இடர்ப்பாடுகளை உண்டாக்கியதை இவர் கண்டார். இவர்களின் சமூக, சமயத் தேவைகளை ஏற்றுக்கொள்ளுவதற்கு சமயப் பொறை இன்றியமையாத் தேவையாக இருந்தது. சமயப் பொறையால் பௌத்தர்களும் சமணர்களும் தாராளமாகத் தம் சொந்த சமயத்தையும் வாழ்வு முறையையும் பின்பற்றலாம். இவர்களுக்குரிய வழக்கமான, சமயச் சார்பற்ற சட்டங்களால் இவர்களை ஆட்சி செய்யலாம். ஆனால், சமயப் பொறையின் இவ்விரு கூறுபாடுகளிலும் தம் செயல்திறமிக்க தலையீடு தேவைப்படுமென்பதை அசோகர் விரைவில் உணர்ந்துகொண்டார். முதலாவதைப் பொறுத்தவரையில், சிரமணர்களும் பிராமணர்களும் நேர்மையாக நடத்தப்படவில்லை என்றும், முதியோர் மதிக்கப்படவில்லை என்றும், ஒருவர் மற்றொருவரின் சமயத்தைப் பற்றிக் கேவலமாகப் பேசியதில் மக்கள் குற்றம் கண்டதை இவர் அறிந்திருந்தார். பொது நலத்திற்கு ஒவ்வாத இந் நடத்தை விரும்பத்தக்கதாக இருக்கவில்லை. ஆகவே, தம் மக்களின் நடத்தையைத் தம் அதிகாரத்தால் ஒழுங்குபடுத்தலாம் என்று இவர் நினைத்தார். தம் கட்டளைகளை வரைந்து விரிவான ஆட்சி இயல்

ஏற்பாடுகளால் இவற்றைச் செயற்படுத்த இவர் முற்பட்டார். இரண்டாவதைப் பொறுத்தவரையில், மக்களின் பல்வேறு பிரிவினர், பிராமணர், பௌத்தர், சமணர் ஆகியோரின் வழக்கமான சட்டங்களைப் பெறுவதற்கு அசோகர் பெரிதும் கவலை கொள்ளவேண்டியதில்லை. தொல்பழமையான காலத்திலிருந்து வழக்கமான தலச் சட்டங்கள் கட்டுப்படுத்துகிற ஓர் ஆற்றல் பெற்றிருந்தன. இவைகளைப்போல்தான் பிராமண சட்டத் தொகுப்புகளும் செயல்பட்டுவந்தன. குடும்பங்கள்,[1] நாடுகள் ஆகியவற்றின் வழக்கமான சட்டங்கள் மதிக்கப்படவேண்டு மென்றும், நாடுகளின் சட்டங்கள் நிலைபெறவேண்டுமென்றும்[2] ஆபஸ்தம்பர் கூறினர். இந்த மரபிற்கொப்ப அசோகரும், பிராமண சமயத்தைப் பின்பற்றாத ஏற்பமைதி பெறாச் சமயத்தினர், சமயப் பிரிவினர் ஆகியோரின் வழக்கமான சட்டங்கள் நிலவவேண்டுமென்று விதி செய்யவேண்டியிருந்தது. இதனால் தான், கிராமப் பகுதிகளின் பொறுப்பதிகாரிகளாக இருந்த இராஜுகர்களுக்கு, 'நீதியியல் நடைமுறைகளிலும் தண்டனைகளிலும் நடுநிலை இருக்கவேண்டு'மென்று கட்டளையிட்டார்.[3] 'மற்றவர்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ள கோட்பாடுகளை எல்லோரும் கேட்க விரும்பவேண்டும், கேட்கவேண்டும்'[4] என்று இவர் விரும்பினர். இதைச் செயல்படுத்த சமயச் சார்புடைய தர்ம மகாமாத்திரர்களை இவர் பெற்றிருந்தார். இவ்வாறு, தம் மக்கள் பிரிவினர் எல்லோரிடமும் 'ஒருமனப்பாட்டை' இவர் நிலவச் செய்தார். 'எல்லோருடைய நலனையும் மேம்படச் செய்தல் என் மிகச் சிறந்த கடமை. பொதுநல மேம்பாட்டைவிட வேறு சிறந்த பணிகிடையா'[5] தென்று இவர் கூறியபொழுது இவர் கருத்துத் தெளிவாயிற்று..

'பொது நல' மேம்பாடும், மக்கள் பிரிவினரிடையே 'ஒருமனப்பாடும்' இவருடைய குறிக்கோளாக இருந்திருந்தால், இவருடைய மக்களின் பல்வேறு பிரிவினர் தம் சமயத்தைத் தாராளமாகப் பயன்படுத்தவும், இவர்களுடைய சட்டங்களைப் பின்பற்றவும் சூழ்நிலைகளுக்கு இவர் பொறுப்புறுதியளிக்க வேண்டும். இவருடைய அதிகாரத்தின் ஆணையாலும், பிராமண சமயம் அல்லது வேறெந்த சமயத்தின் உரிமைக் கோரிக்கைகளைப் புறக்கணிப்பதாலும் இதை நிறைவேற்ற முடியுமென்றாலும்,

[1] Etena desa-kula-dharmavyakhyatah—ii, 15, 1.

[2] Tatra tatra desa pramanyameva syat, I, 1, 2, 6.

[3] Delhi Topra, P.E., iv.

[4] Girnar, R.E. xii.

[5] Ibid., vi.

அசோகர் ஓரளவிற்கு மக்களின் சமய வாழ்க்கையைக் கட்டுப் படுத்தினுர். இந்தப் பயனை அடைய இவர்களுடைய ஒழுக்கம் சார்ந்த நடத்தையைக் கட்டுப்படுத்த முயன்ருர். சில சடங்கு களை நடத்துவது நல்லது அல்லது தீயதெனும் கருத்தை இவர் தெரிவித்தார். எனவே, அசோகரின் ஆற்ருமையிலும், இதன்வழி யாகவும் அரசபதவியாகிய நிறுவனம் தன்னை உறுதிப்படுத்திக் கொண்டு, புனிதச் சட்டத்தின் காவலராகமட்டுமன்றி மக்களின் பொதுநலனின் பொறுப்பு நிறுவனமாயிற்று. அரச பதவியின் தகுதிச் சிறப்பு இவ்வாறு பெருமளவு வளர்ச்சியடைந்தது.

## அரச பதவியின் புதிய சீர்மை

அரச பதவியின் இச் சீர்மை விரைவில் பிராமண சமயத் தாலும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. கௌடில்லியரின் அர்த்த சாத்திரத்தில் இது காணப்படுகிறது. மக்களின் குணநலத்தைத் தூய்மைப்படுத்தல் (Vidya-vinito-rajahi prajanam vinaye ratah), சரியான சட்டத்தையும் கடமையையும் எடுத்துரைத்தல் (தர்மப்பிரவர்த்தகர்), சமூகத்தின் பல்வேறு பிரிவுகளின் சட்டங்களை இணைத்தல்போன்றவை அரசருடைய கடமையாக இருந்தனவென்று இவர் வலியுறுத்திக் கூறினுர். சட்டத்தின் சமயச் சார்பற்ற கருத்து ஒப்பீட்டடிப்படையில் தாராளமாக விளக்கப்பட்டிருப்பதை நாம் முதன்முறையாக அர்த்தசாத்திரத் தில் காண்கிருேம். தர்மத்திலிருந்தும், அதாவது, சமயம் வியவகாரம், அதாவது, நீண்டகாலமாக நிலைபெற்றதிலிருந்தும், சரித்திரம் அல்லது நல்ல, நேர்மையான நடத்தையிலிருந்தும், இராஜசாசனம் அல்லது அரச கட்டளையிலிருந்தும் சட்டம் பெறப் பட்டது. எங்கு இம் முதல் மூன்றும் மோதுகின்றனவோ அங்கு தர்மம் நிலவியது என்னும் கோட்பாட்டைச் சட்டங்களின் செயற்பாடு பின்பற்றியது; அதனுல் தர்மம், நியாயத்தோடு, அதாவது, நீதிநெறிகளோடு பொருதினுல், நியாயம் நிலைபெற வேண்டும்; ஏனெனில், புனிதச் சட்டத்தின் மூலவாசகம் கிடைக்க வில்லை.[6] சட்டத்தின் பயன்பாட்டில் சாட்சிகளின் விசாரணை ஒரு முக்கியமான இனமாகும். இறுதியாக, அரச கட்டளையில் தொனிக்கும் நியாயம் நிலைபெறுமாஞல், நிலைபெறமுடியும்; ஏனெனில், நியாயத்தை, அதாவது, நீதிநெறிகளைத் திருப்தி செய்த கட்டளைகளை உருவாக்குவதற்காகப் பல்வேறு பிரிவுகள், சமயங்கள் ஆகியவற்றின் வழக்கமான சட்டத்தை அரசர் ஓரினப்படுத்தவேண்டியிருந்தது. எது சரியான சட்டம், கடமை என்பதையும், எது சரியானதன்று என்பதையும் இவர் உறுதி

[6] Kautalya, 'Arthasastra', Bk. III. Ch. I.

செய்யவேண்டும்; இப்படிச் செய்வதால்தான் இவர் தர்மப் பிரவர்த்தகரானுர். மக்களின் ஒழுக்கநெறியையும் இவர் ஒழுங்கு படுத்திஞர். சமூகத்தில் அரசரின் முழுமையான தகுதிச் சிறப்பைக் கௌடில்யரின் கருத்துகள் சுட்டிக்காட்டுகின்றன. இவை வெறும் கருத்துகளாகா ; உண்மை நிகழ்வுகளிலும் மரபுகளிலும் இவை தோற்றுவிக்கப்பட்டன. எனவே, உண்மையான பொருளில் அரசர் படிப்படியாக ஓர் இறையாக வளர்ந்துவந்தார்.

## அரசரின் தெய்வமாக்கப்பட்ட திருவுரு

அரச பதவியின் உட்பொருளுக்கு அசோகரின் எடுத்துக் காட்டு உதவிய சமயத்தில், நாட்டில் அரசியல் குழப்பங்கள் தோன்றின. மோரியப் பேரரசின் வீழ்ச்சியோடு, பல அரசுகள் முதன்மை நிலைக்கு உயர்ந்தன. சகர், குஷாணர், பாக்டீரிய கிரேக்கர் போன்ருேர் நாட்டின்மீது படையெடுத்தனர். பின்னர் அவர்கள் புதிய நாட்டை நிறுவினர். இப் புதியவர்களுக்கும் நாட்டரசுகளுக்குமிடையில் போராட்டம் தோன்றியது. இவர்களுடைய சமயத் தொடர்புகளால் அரசியல் போட்டி மனப்பான்மை மேலும் கேடுற்றது. பிராமண சமயம் மீட்டுயிர்ப்புப் பெற்ற·சமயத்தில் புதியவர்கள் நாட்டிற்குள் நுழைந்தனர். பௌத்த சமயம் பரவுவதற்கு அசோகர் அளித்த ஆதரவின் விளைவாக பௌத்த சமயத்திற்கு எதிரான ஓர் எதிர்வினையில் இம் மீட்டுயிர்ப்பின் தோற்றமிருந்தது. எனவே, பௌத்த சமயத்திற்கெதிரான ஒரு முனைப்பை இது பெற்றிருந்தது. இதனுடைய மரபுக்கோட்பாட்டிற்கு இது உதவிற்று. ஆகையால், வெளியார் நாட்டில் நுழைந்தபொழுது இவர்கள் மிலேச்சர் என்ருே அல்லது நாகரிகமற்றவர்கள் என்ருே இகழப்பட்டனர். இவர்களை பிராமண சமயம் ஒதுக்கிவைத்துத் தாழ்வுபடுத்தியதால், இவர்கள் மகிழ்ச்சியோடு பௌத்த சமயத்தைத் தழுவினர். இச் சமயம் இவர்களை நன்ருக நடத்தியது. பிராமண சமூக அமைப்பில் இவர்களுக்கு இயற்கையாகவே பரிவுணர்வு கிடையாது; எனவே, அதை அழிக்க முற்பட்டனர். பிராமண சமயத்திற்கெதிராக பௌத்த சமண சமயங்களை ஆதரித்தவர்கள் இருந்ததைப்போல், நாட்டரசுகளுக்குள் பிராமண சமயத்தின் மீட்டுயிர்ப்பை ஆதரித்தவர்களுமிருந்தனர். இயல்பாகவே, மோதிக்கொள்ளும் சமயங்களின் ஆதரவாளர்களாக அரசர்கள் தோன்றியபொழுது, இவைகளின் பகைமை மேலும் கேடுற்றது. சமய வேறுபாடுகளிலிருந்து ஒரு தாக்காற்றலை அரசியற்போட்டியுணர்வு பெற்றது. இந் நிலை ஐயத்திற்கிடமின்றி அரசைச் சமயச் சார்புடையதாக்கிற்று. ஆனுல், அரசில் கட்டுப்பாட்டு ஒற்று

மையை இது உண்டாக்கிற்று. அரச அதிகாரத்தின்மீது பிராமண மீட்டுயிர்ப்பு சார்ந்திருந்ததால், சமய மரபுக் கோட்பாட்டு ஆற்றல்கள் அரச அதிகாரத்தை வலிமைப்படுத்த இயக்கப்பட்டன. ஆகையால், அரசர் மனித உருவில் இருக்கும் கடவுளாகக் கருதப்பெற்றார். இவருடைய கட்டளைக்குப் பணிய மறுக்கமுடியாது. இங்கு வெளியார்களின் எடுத்துக்காட்டு அரசரின் தனி மதிப்புநிலையை வலுப்படுத்த உதவியது. சக, குஷாண அரசர்களில் பலர் தம்மை தேவபுத்திரர், அதாவது, 'கடவுளின் மகன்' என்றும், 'தர்மிகர்' என்றும் பெயரிட்டுக்கொண்டனர். பிராமண சமயத்திற்கு இது முன்னிகழ்வை அளித்தது; இவர்களுடைய அரச பழக்க வழக்கங்கள் மேற்கொள்ளப்பட்டன. ஆகவே, உலகில் புனித சமயத்தைக் காத்தலுக்காக அரசர் தெய்வ உரிமை பெற்றவராகக் கருதப்பெற்றார். இராமாயணம், மகாபாரதம். புராணங்கள் வழியாக இச் சீர்மை போதிக்கப்பட்டது. மனுஸ்மிருதியைப்போன்ற சட்டத் தொகுப்பால் இது ஏற்றுக்கொள்ளப்பட்டது. இது அதிகாரத்தை மையப்படுத்துவதற்காக உதவியது. இந் நோக்கை அடைய அர்த்த சாத்திரத்திலிருந்து இநத ஆட்சி நுட்பம் பெறப்பட்டது. அரசரிடம் அதிகாரம் மையப்படுத்தப்பட்டிருந்ததாலும் இவரது அதிகாரத்தின்மேல் பிராமண சமயம் மீட்டுயிர்ப்பைச் சார்ந்திருந்ததாலும், அரச அதிகாரம் வளர்ந்து பயனுடையதாயிற்று.

## சமயத்தின்மீது அரசு தனிமுதன்மை

இந்தப் பின்னணியோடு குப்த, ஹர்ஷ பேரரசுகள், இதற்கு முன்னறியாத அரச அதிகாரத்தின் பெருமையை எதிரொலித்தன. இவர்கள் வலிமைமிக்க வெற்றியாளர்களாகவும் சூழ்ச்சித்திறமிக்க அரசர்களாகவும் இருந்தனர். சமய ஆதரவாளர்களாக அரசர் இருப்பதன் தீய பயன்களை இவர்கள் கண்டனர். சமயப் பொறையின்மை பொதுநலத்தோடு ஒவ்வாமையை இவர்கள் உணர்ந்திருந்தார்கள். எனவேதான், இவர்கள் சமயப் பொறைக் கொள்கையைப் பின்பற்றினர். சமயம்பற்றிய இவர்களின் மனப்பான்மையை இது கொண்டிருந்தது; அதாவது, பொதுநலன், ஆட்சிபற்றியவைகளில் இவர்கள் தங்களுடைய சமயத்தொடர்புகளால் பாதிக்கப்படத் தயாராக இல்லை. சமயத்தின்மீதான அரசின் தனிமுதன்மையை இது தெளிவாக வெளிக்காட்டியது. உண்மை ஆட்சி இயலில் இத் தனிமுதன்மையை அடைவதில் சட்டத்தின் தொனி மாற்றத்தால் அரசர் உதவி பெற்றார். ஏனெனில், சட்டத்தின் உட்பொருள் இதுவரை சமய

ஒழுக்கச் சார்புடையதாக இருந்தது. படிப்படியாக இக் கூறு களைச் சட்டமிழந்து, பெருமளவு சமயச் சார்பில்லாக் கூறுகளைப் பெறத் தொடங்கியது. தனிநிலையான சட்டம் வளரும் நிலையில் இருந்தது. நாரதரின் தொகுப்பைப் போன்றதொரு சட்டத் தொகுப்பு சட்டத்தின் இப் புதிய போக்கை எடுத்துக்காட்டியது. இரண்டு காரணங்களால் இது ஏற்பட்டிருக்கவேண்டும். ஒன்று, அரச கட்டளைகள் அல்லது ஆட்சி இயற் சட்டங்கள். அரசரால் வெளியிடப்பெற்ற கோட்பாடுகள் போன்றவைகளில் தோன்றிய இத்தகைய சட்டம் அளவில் பெருகிவந்தது. சட்டத்தின் முக்கியமான தோற்றுவாயாக கௌடில்லியர் ஏற்றுக்கொண் டதை நாம் பார்த்தோம். இரண்டு, பிராமண வாழ்க்கை அமைப்பையும் சாதிமுறைகளையும் சட்டமும் நீதியும் பின்பற்றும் வரையில், சட்டத்தையும் நீதியையும் செயல்படுத்துவதில் நேர்மை இருக்கமுடியாது. ஏனெனில், பிராமண சமயத்தைத் தவிர மற்றவைகளைப் பல்லாயிரக்கணக்கான மக்கள் இந்தியாவில் மேற்கொண்டிருந்தனர் என்பதை உணர்ந்திருக்கவேண்டும். தலப் பழக்கங்களும் மரபுகளும் நிலவ அனுமதிப்பதால் பெருமள வில் இடர் தவிர்க்கப்படலாம். ஏற்பமைதியில்லாக் கோட்பாட் டினர், குடிமக்கள், வணிகம், ஒரே தொழிலில் ஈடுபட்டுள்ளவர் களின் சங்கம், தன்னாட்சி இனங்கள்போன்ற இன்னும் பிறவும் தம் சொந்தச் சட்டங்களைப் பின்பற்ற அனுமதிக்கப்பட்டனர். இருந்தபோதிலும், தலச்சட்டங்களில் மோதல் ஏற்படும் நிகழ்வு களில் நடுவராய் இருந்து தீர்ப்புக் கூற அரசர் அழைக்கப் பெற்றார். முன்காலத்தில், தலச்சட்டங்களையும் வழக்காறுகளை யும் நன்றாக நுண்ணாய்வு செய்தபின் அரசர் தம் முடிவைக் கூற வேண்டுமென்று மனு விதி செய்தார். தம் கடமைப்பொறுப்பை எளிதாக்க, இயன்றவரை சட்டம் சமயச் சார்பற்றதாகிக்கொண் டிருந்தது; அதாவது, சமய, ஒழுக்கக் கூறுகளை இது விட்டுச் சென்றுகொண்டிருந்தது. சட்டம் சமயச் சார்பற்றதானபொழுது அரசர்தம் சமயப் பொறைக் கொள்கையைப் பயனுடைய தாக்க இது உதவிற்று. இவரிடம் அதிகாரம் செறிவடைய்வும் இது உதவியது. அதிகாரத்தை மையப்படுத்தும் நோக்கத்திற் காகக் கௌடில்லியரால் வரைந்துகொடுக்கப்பட்ட ஆட்சிமுறை ஒரு மாதிரியாயிற்று.

## ஆதிகால இந்திய ஆட்சிமுறையில் இறைமைக் கோட்பாடு

இந்திய ஆட்சிமுறையின் வளர்ச்சியின் இம் மதிப்பீட்டோடு ஆதிகால இந்திய ஆட்சிமுறையில் இறைமைபற்றிய ஆய்விற்கு நாம் செல்லலாம். பழங்கால இந்தியாவில் இறைமை அரசரின்

உடலுருக்கொண்டிருந்தது. அரசருக்குரிய இறைமை, அரசின் அதிகாரத்தின் அடையாளமாக இருந்தது. பழங்கால இந்திய இலக்கியத்தில் இறைமை என்ற சொல்லின் குறிப்பீடு இதை வெளிக்கொணர்ந்தது. இறைமைக்கொப்பான இந்தியச் சொல் க்ஷத்ரா (Ksatra) அல்லது வேத இலக்கிய காலத்தில் க்ஷாத்ரஸ்ரி (Ksatrasri), அர்த்தசாத்திரத்தில், சட்டத் தொகுப்புகளில், கல் வெட்டுகளில், சுவாமித்வ (Svamitva) அரசின் ஏழு கூறுகளில் முதலாக இருந்தாலும், சுவாமின் ஒன்றுருகுமென வலியுறுத்தி யவர் கௌடில்யர். இவர் உண்மையில் இறையாகவும் அரசின் சின்னமாகவும் இருந்தார். இறைமை என்பதை முற்கால இந்தி யர் உண்மையில் புரிந்துகொண்டிருந்தபடி இச்சொல் இறைமை யின் உட்பொருளை மெய்யாக வெளியிடுகிறது; சுவாமி தலைவ ராக அல்லது அரசின் தலைவராக, அமைச்சர்கள், நட்பு நாடுகள், பொருள், படை, சட்டம், அரண்கள் ஆகியவற்றேடு அரசின் முழுப்பொருளைக் கொண்டிருந்தார். இதனுல்தான் இறைமை பற்றிய இந்தியக் கோட்பாடு பழங்கால இந்திய அரசுக் கோட் பாட்டின் அடிப்படையாக்கப்பட்டது.

## இறைமையின் உட்பொருள் ஆதிகால இந்திய அரசின் இயல்பைப் பொறுத்திருந்தது

தலைவராக அல்லது அரசுத் தலைவராக இருந்த அரசர், அரசை ஆளும் தெய்வீக உரிமையென்ற ஒரு புதிய உரிமையைச் சிறிது சிறிதாகப் பெற்றுர். க்ஷாத்ரஸ்ரி அல்லது இறைமையின் உட்பொருளை இது பெருமளவு விரிவுபடுத்தியது. குப்தர்களின் காலத்தின்பொழுது ஒருவருக்கொருவரான சமயப் போக்கை இவர் ஒழுங்குபடுத்தினுர். சமயங்களுக்குள் பகைமை இருக்கக் கூடாதென்றும், எல்லாச் சமயங்களும் ஒப்புரவு காட்டவேண்டு மென்றும் இவர் நெறிசெய்தார். இதில் பெருமளவு சமயச் சார்பற்றிருந்துவரும் சட்டத்தின் மாறிய இயல்பாலும் இவர் உதவப்பெற்றுர். எனவே, முன்னைக்காட்டிலும் இவருடைய இறைமை, உட்பொருளில் ஆதாயம் பெற்ற முன்னைவிட மிகப் பயனுடையதாயிற்று. இறுதியில், அரசியல் இயல்போடு தொடர்புபடுத்தி இறைமையின் உட்பொருளை அறிந்துகொள்ள வேண்டுமென்பதை நாம் குறிப்பிட்டுள்ளோம். சுயேச்சையான ஆட்சிப் பரப்புகளாகிய பல நிலப்பரப்புகளின் ஏற்பின்மீது பழங் கால இந்திய அரசு நிறுவப்பட்டது. தற்கால அரசுகளிலிருந்து இது பெரிதும் மாறுபட்டிருந்தது. இது இதனுள் இப்படிப்பட்ட எத்தகைய அரசையும் ஏற்றுக்கொள்ளாது. பழங்கால இந்திய அரசுபற்றிய இப்போதைய சில எண்ணப் போக்குகளின் ஆய்விற்கு இது கொண்டுசெல்கிறது.

பழங்காலப் பேரரசுகள் ஒருமுக அரசாகவுமில்லை; நிலமானிய அரசாகவுமில்லை—கூட்டரசாக, ஆனால், திறை செலுத்தும் அரசுகளாக இருந்தன.

அர்த்த சாத்திரம், தாமோதர்பூர் செப்பேடுகள், வஸ்ரா முத்திரைகள்போன்ற குப்தக் கல்வெட்டுகள், மதுபவன் செப்பேடுகளைப்போன்ற ஹர்ஷரின் கல்வெட்டுகள்போன்றவைகளின் சான்றின்பேரில், பழங்கால இந்தியாவில் பல்வேறு காலங்களில் தோன்றிய பேரரசுகளில் ஒருமைப்பட்ட கட்டுப்பாட்டமைப்பொன்று உருவாகிற்றென்று கொள்ளப்படுகிறது. பேரரசின் ஆட்சி இதனுடைய ஆட்சி எல்லையோடு உடனிணைந்து பரவியிருந்ததாகவும், மத்தியிலிருந்து கட்டுப்படுத்தப்பெற்ற தக்க அலுவலர்களின்கீழ் ஆட்சிப் பரப்புகளின் படிநிலை அமைப்பொன்று இருந்ததென்றும் மெய்ப்பிக்க அறிஞர்கள் முயன்றனர். நிலைமையின் உண்மையான நிகழ்வுகளுக்கு எதிராக இத்தகைய எண்ணப் போக்கு செல்கிறது. பழங்காலத்தில் திரளான அரசுகளுக்குள் நடந்த தனிமுதன்மை நிலைப் போராட்டத்தின் விளைவாக இந்தியப் பேரரசுகள் தோன்றின. பேரரசை நிறுவ மேற்கொள்ளப்பட்ட வழி திக்விஜயம் அல்லது நாடுகளை வெற்றிகொள்வது. பாதுகாப்பான நிலையின் எல்லைக்குள் இது மேற்கொள்ளப்பட்டது. இக்கீழ்ப்படுத்தலில் மரபுவழியிலான ஆறுவகைக் கொள்கை பயன்படுத்தப்பட்டது. இக் கீழ்ப்படுத்தல் முடிவுற்றதும், ஒரு கொள்கை அடிப்படையில் தோல்வியுற்ற அரசர்கள் இவர்களுடைய அரசுகளில் மீண்டும் பழைய பதவிகளில் அமர்த்தப்பட்டனர். இவர்களுடைய நாடுகளில் இவர்கள் உண்மையான, சட்டப்படியான அரசர்களாக ஏற்றுக்கொள்ளப்பட்டனர். எல்லாச் செயல்முறை நோக்கங்களுக்கும் இவர்கள் சுயேச்சையானவர்கள். மேல்நிலை அரசருக்கு இவர்கள் திறை அல்லது சொந்த சேவை உருவில் கடப்பாடுடையவர்களாக இருக்கவேண்டுமென்பது இவர்களுடைய சுயேச்சையில் ஒரு குறைபாடாகும். இத்தகைய பேரரசு ஒருமையான கட்டுப்பாட்டைப் பெறமுடியவில்லை. செல்வாக்கு மண்டலத்தோடு, அதாவது, சக்கரத்தோடு உடனிணைந்து செல்லக்கூடியதும் மத்தியிலிருந்து வழிகாட்டக்கூடியதுமான ஆட்சி நிறுவனத்தையும் இப் பேரரசு பெறமுடியவில்லை. வெளிநாட்டினர் தாக்குதலுக்குப்பின் இவை பெரும்பாலும் தோன்றி, இராணுவ இயல்பை உறுதியாகத் தக்கவைத்துக்கொண்டன. பேரரசுகளின் தோற்றுவாயாக இருந்த திக்விஜயத்தால் இந்த இராணுவ இயல்புகள் வெளிக்கொண்டுவரப்பட்டன. எனவே, படைவலிமையில் சார்புடன் இருந்துகொண்டு, தோல்வியுற்ற

அரசர்களுக்கு நாடுகளை மீளத்தந்து, ஒருமுக அரசின் தனிப்பட்ட ஆட்சி அமைப்போடு பேரரசுகள் ஒத்துப்போக முடியவில்லை.

நிலமானிய முறைக்கோட்பாடுகள் முற்றிலும் இல்லாதிருந்ததால், இவைகளைக் கூட்டரசுகளென்றோ நிலமானிய அரசுகளென்றோ குறிப்பிடமுடியவில்லை. சமூக, அரசியல் என்ற இரண்டு இயல்புகளை நிலமானிய முறை பெற்றிருக்கிறது. நிலவுடைமை உரிமையை அடிப்படையாகக்கொண்டு மக்களின்சமூக, அரசியல் தன் மதிப்புநிலையை இது ஒழுங்குபடுத்தியது. பழங்கால இந்தியாவில், சாதியின் அடிப்படையில் அமைந்த சமூக அமைப்பில், இது கற்பனை செய்ய முடியாததாகும். ஆகையால், பழங்கால இந்தியப் பேரரசுகளை நிலமானியக் கூட்டரசுகள் எனக் குறிப்பிடுவது பொருத்தமான இயல்பு விளக்கமாகாது.

பழங்கால இந்தியப் பேரரசுகள் திறை செலுத்துகிற முறைகளாக இருந்தன. இக் காலத்தின் துறைச்சொல் தொகுதியில், சக்கரம், அல்லது அர்த்த சாத்திரத்தின் படி மண்டலம், அதாவது, வட்டங்கள் அல்லது செல்வாக்கு மண்டலங்களின் தலைவராக, ஒரு சக்கரவர்த்தி, ஒரு மேல்நிலை அரசர் ஆட்சி செய்தார். மேல்நிலை அரசருக்கும் கீழ்நிலை அரசருக்குமிடையிலான உறவு, நிலைக்கேற்றவாறு தன்விருப்பில் அல்லது கட்டாயமாக இருந்தது. ஆனால், மேல்நிலை, கீழ்நிலை அரசர்களின் அரசாங்கம் ஒரேபடித்தான பிரிவாக இருந்தாலும் சுயேச்சையாக இருந்தது. அதாவது அரசாங்கத்தைப் பொறுத்தவரை இவர்கள் ஒவ்வொருவரின் நாடுகளும் சுயேச்சையாக இருந்தாலும், அரசாங்க நுட்பமுறை ஒரே மாதிரியாகத்தான் இருந்தது. மற்றவர்களைத் தம்கீழ் வைத்துக்கொள்ள மேல்நிலை அரசர் தம் கீழ்நிலை மன்னர்களை அடிக்கடி பயன்படுத்தினர்; அதாவது, மாநில அரசப் பிரதிநிதிகளைப் பயன்படுத்தியதுபோல் பயன்படுத்தினர். தம் சொந்த அரசின் ஆட்சியில் தம் மதிப்பிற்காக இவர்கள் மேல்நிலை அரசரால் தொடர்புபடுத்திக்கொள்ளப்பெற்றனர். சாமந்தர்கள் என்ற பெயரால் தெளிவாகத் தெரிந்த திறை செலுத்தும் அரசர்களின் தனிமதிப்பிற்கு இது இழுக்கானதன்று. பழங்கால இந்தியப் பேரரசின் இயல்பு இத்தகையதாக இருந்தது.

## திறை செலுத்துகிற முறையின் அரச இறைமை

இத்தகைய பேரரசுகளில் அரசரின் இறைமை இவருடைய மேதகவு நிலையெனப் பொருள்கொண்டது. இதன் பிடிப்புப் பெரும்பாலும் நிலையுறுதியற்றதாகவிருந்தது. இவருடைய நாட்டின் நீர், நிலம் ஆகியவற்றின் உயர்தனித் தலைவராகவும்,

புனிதச் சட்டத்தை நிலைநிறுத்துபவராகவும், காலத்தைப் படைப்பவராகவும், மனித உருவில் கடவுளாகவும், நீதியின் தலைவராகவும் அரசர் ஆவதைக்கொண்டுதான் மேதகுநிலை இருந்தது. ஆனால், இவருடைய மேதகு நிலை இவருடைய பேரரசுமீது இருந்ததைக் காட்டிலும், இவருடைய சொந்த அரசிற்குள்ளும் தம் நேர்முகக் கட்டுப்பாட்டின்கீழும் மிக மெய்யானதாக இருந்தது. பழங்கால இந்தியாவில் இறைமையின் தன்மை இத்தகையதாக இருந்தது. சக்கரவர்த்தியாக இருந்த அரசரின் மேதகு நிலையை ஒத்து இது இருந்தது. இவர் சக்கரவர்த்தியாக இருந்தார்; ஏனெனில், அரசர்களின் வட்டம் ஒன்றிற்கு, சக்கரத்திற்கு இவர் உயர்தலைவர். இந்த வட்டத்தை நாம் 'செல்வாக்கு மண்டலம்' என்று குறிப்பிடலாம் ; இதை கௌடில்யர் மண்டலமென்றார்.

# 2. அரசபதவி சமயச்சார்பற்ற ஒரு நிறுவனம்

## (கி.மு. 1400–1000)

### இந்தோ-ஆரியர் வருகை

தொல் பழமையான காலத்தில், இந்திய நாட்டில் கருநிறமான 'தஸ்யுஸ்' என்ற மக்கள் வசித்தபொழுதும், புகழ்பெற்ற நாகரிகங்களைப் பயனுள்ள சிந்து-கங்கைச் சமவெளிகள் தம்பால் கொண்டிருந்தபொழுதும், இந்தியாவின் மலைவாயிலுக்குஇந்தோ-ஆரியர்களென்ற வெள்ளை நிறமான வீரியமிக்க ஓர் இனம் ஒன்றன் பின் ஒன்றாகத் தாக்குதல்களால் பஞ்சாபில் நுழைந்தது. இவர்கள் எங்கிருந்து வந்தனர், எப்பொழுது வந்தனர் என்ற பிரச்சினைகள் இன்றும் அறிஞர்களைக் குழப்பமடையச் செய்கின்றன. 'இவர்களுடைய முற்கால இருப்பிடம் ஆர்டிக் நிலப்பரப்பா அல்லது மத்திய ஆசியாவின் பாலைப் பகுதியா அல்லது காக்கசீய நாடுகளா அல்லது அங்கேரி நாட்டின் தாழ்வெளிப் பகுதிகளா'[1] என்பன பற்றி நமக்கு அக்கறை இல்லை. இவர்கள் இந்தியாவிற்குள் நுழைந்து, மனித வரலாற்றில் ஒரு புதிய வரலாற்றுக் காலப் பிரிவைத் தொடங்கினர் என்பதுதான் சிறப்பாகும். சிந்து, கங்கை, யமுனை ஆற்றங்கரைகளில் ஒரு புதிய வாழ்க்கையும் புதிய நாகரிகமும் தோன்றி, மலர்ந்ததன் வரலாற்றுச் சின்னங்கள் இன்னும் எஞ்சி இருக்கின்றன. இந்தோ-ஆரியர்களின் வருகையும், இவர்கள் நாட்டை வென்றதும், இவர்களுடைய அருஞ்செயல்களும் மிக நீண்ட வரலாறாகும்; இவ் வரலாற்றின் உறுதியற்ற கால நீட்சி மானிட வரலாற்றின் துயரார்ந்த ஓர் உட்கதையாகும். இப்பொழுது சுறுசுறுப்பாகவும், மகிழ்ச்சி மிக்கதாகவும் இருக்கின்ற வாழ்க்கை, தோண்டி எடுக்கப்பட்ட இடங்களின் புழுதி மண்ணின் துகளில் சேர்ந்த இறந்த காலத்தின் மெல்லிய எதிரொலிகள் வழியாக நமக்கு அனுப்பப்பட்டிருக்கிறது. நல்ல முயற்சியின் முதற்பயனாகச் சிந்து வெளியில் கண்டு

[1] 'Cambridge History of India', Vol. I, pp. 68-70.

பிடிக்கப்பட்டவைகளைக் கூறலாம்; எனினும், இதைவிட்டு, இந்தோ-ஆரியர்கள் சப்த சிந்துவில் குடியேறிய காலத்தில் நாம் நாட்டம் செலுத்தவேண்டும். காபூல், சிந்து, ஜீலம், ஜீனுப், ரவி, சட்லட்ஜ், பியாஸ் ஆகிய ஏழு ஆறுகளின் நாடுதான் சப்த சிந்து நாடு. இவ் ஆறுகள்பற்றிய மிகச் சுவையான விவரங்கள் இருக்கு வேதம் என்ற பாசுரத் தொகுப்புகளில் அடங்கி இருக்கின்றன.

இருக்குவேதம் நமக்களிக்கும் இந்தோ-ஆரியரின் சித்திரம் திண்ணிழலுருவமேயாகும். உருவரைகள் தெரிகின்றன; விவரங்கள் கடந்த காலத்தின் அமைதியிலும் தெளிவின்மையிலும் புதைந்து கிடக்கின்றன. காலத்தின் பரந்த கூறுகளின் மறைவினுல் இருக்குவேதச் சொற்களின் பொருள் மறக்கப்பட்டிருக்கிறது. இவற்றின் பொருள் விளக்கம் ஒரு பிரச்சினையாகவே இருக்கிறது. இருப்பினும், ஆரிய இனத்தின் பெருமைக்குரிய நூலின் புதை மறைவான செய்திகளை வெளிக்கொணர மக்கள் முயலுகின்றனர். இந்தோ-ஆரிய அரசு, சமூகம்பற்றிய கருத்தை நமக்களிக்கப் போதிய விவரங்கள் பொறுக்கிச் சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஆகவே, இருக்குவேதம்பற்றியதொரு குறிப்பின்றிப் பழங்கால இந்திய அரசு, சமூகம்பற்றிய எந்த ஆய்வும் ஒழுங்காகத் தொடங்கமுடியாது.

## ரிதமும் யக்ஞமும் (Rta and Yajna)

இப் பெருந்தொகுப்பு உருப்பெறும்பொழுது, இந்தோ-ஆரியர்கள் பல நூற்றாண்டுக்கால சமூக மாற்றங்கள் வழியாகச் சென்றனர். இவர்களுடைய சமூகக் கட்டமைப்பு ஏறத்தாழ உறுதிப்பட்டது; இவர்களுடைய நாடோடி வாழ்க்கையின் நிலையுறுதியற்ற தன்மை கைவிடப்பட்டது. புதிய மக்களிடையே இவர்கள் வந்து தங்கினர். நாட்டைக் கைப்பற்றுமுன் இவர்கள் இப் புதியவர்களை அகற்றவேண்டியிருந்தது. ஆரியர் அல்லாதாரோடான இவர்களுடைய தொடர்பால் பல சமூக மாற்றங்கள் ஏற்பட்டிருக்கவேண்டுமென்பதில் ஐயமில்லை. ஆனுல், இம் மாற்றங்கள், இவர்களுடைய சமூக, சமய மரபுரிமை முழுவதையும் மாற்றியமைக்க அல்லது உருமாற்றம் செய்யுமளவிற்குரிய தன்மையைப் பெற்றிருக்கவில்லை. பஞ்சாபில், இந்தோ-ஆரியர்களின் மங்கிய பின்னணியில் மரபுரிமையாகப் பெற்ற ஒரு பெரிய சிந்தனைக் களஞ்சியம் இருந்தது. இவர்களுடைய பிற்காலச் சமூக மேம்பாடுகளை இது மிக முக்கியமாகப் பாதித்தது. இரானியர்களோடு வசித்த இவர்களுடைய பழமையான இடத்திலிருந்து இந்தோ-ஆரியர்கள் இரண்டு குறிப்பிடத்தக்க கோட்பாடுகளைக்

கொண்டுவந்தனர்; அதாவது, இயலுலகக் காட்சியில் நிலவுகின்ற உலக ஒழுங்குக் கோட்பாடு, இது இருக்குவேத ரிதமாகும்; முன்னோர்களையும் வானுலகத்திற்குரியவர்களையும்[2] கொண்டாடுவதற்கான யக்ஞம் அல்லது வேள்விபற்றிய கோட்பாடு, இவ் வேள்வியை நடத்த சமயக் குருமார்களின் சேவை தேவையாயிற்று.

## 'ரிதத்தி'ன் தோற்றம்

இந்தோ-ஐரோப்பியர் காலத்தைப்போல் இவ்விரண்டு கோட்பாடுகளும் பழமையானவை. இயற்கையின் உலகில் 'மேலுலகிற்குரியவற்றின்' மீது மேலுலகின் ஆட்சியால் ரிதம் அல்லது இயலுலக ஒழுங்கு விளக்கப்பெற்றது. மானிட உலகில் நாம் சமூகமென வழங்கும் சமூக, ஒழுக்கமுறைகளில் இது உருக் கொண்டிருந்தது அல்லது தாக்கி மீட்சி பெற்றிருந்தது. சமூகத்தில் குலத்தந்தையின் ஆட்சி தேவரின் (Dyoh)[3] ஆட்சிக்கு ஒப்பாக இருந்தது. ஆற்றல் குறையாமல் சூரியன் நாள்தோறும் தன் பாதையில் சென்றுகொண்டிருப்பதையும், பருவங்கள் மாறாமல் தொடர்ச்சியாக வந்து போய்க்கொண்டிருப்பதையும், மந்திர சக்தியால் நடப்பதுபோல் சந்திரன் வளர்வதும் தேய்வதும் ஆகியவற்றைச் சிந்திக்கும் மனிதன் (மனுஷ்) கண்டபொழுது, இயலுலக ஒழுங்கினை இக் கருத்துத் தானாகவே நினைப்பூட்டி இருக்கவேண்டும். இயற்கையின் இத் தோற்றங்கள் தம் உறுதியான நோக்கிலிருந்து விலகியிருக்க முடியாது; இவைகளின் விருப்பாற்றல் கோடியும், 'முறிந்தும் இருக்கமுடியாது.' உலகில் எவரும் எதிர்த்து நிற்கமுடியாத ஒரு விருப்பாற்றலை இவை பெற்றிருந்தன.[4] ஆனால், இவைகளைப்போல் மனிதன் அவ்வளவு வலிமையுடையவனாகவும் மாறுபடாதவனாகவும் இல்லை. எனவே, இவை எல்லாவற்றையும் ஆட்சி செய்த, எல்லாவற்றையும் கண்காணித்த, 'ஒளியுடையவை' அல்லது 'மேலுலகுக்குரியவை' என்று தெய்வமாக்கப்பெற்றுக் கருத்திற் கொள்ளப்பெற்றன. நிலையான நோக்கிலிருந்து இவை மாறுபடாமையால், ரிதம் அல்லது இயலுலக ஒழுங்கு என்ற ஓர் ஒழுங்கு கருத்திற் கொள்ளப்பட்டது. ஒளியுடையவைகளால் அல்லது கடவுளர்களின் த ருச் செயற்பாடுகளால்தான் இவ் வொழுங்கு நிறைவேறியது. பேராசிரியர் புளும்ஃபீல்டு சரியாய்க் குறிப்பிட்டதுபோல்,

[2] Farquhar, 'Outlines of the Religious Literature of India,' p. 1.

[3] Griswold, 'Religion of the Rig-Veda,' p. 24; A. A. Macdonell, 'Vedic Mythology,' p. 7.

[4] Kaegi, 'Rg-Veda,' p. 29.

'ரிதத்தின் உண்மையான பொறுப்பாளனுக வருணன் இருந்தான்' [5]

ரிதத்தின் இக் கருத்தாற்றல் அவெஸ்தா அஷாவில் கூறப்பட்டிருப்பதாகத் தெரிகிறது. கி.மு. 1600-ல் அர்த்தாவின் உருவத்தில் பர்சியப் பெயர்ச்சொற்களில் இது காணப்பட்டது. வருணனுக்கும் அகர மஸ்தா (Ahura Mazdah) விற்குமிடையில் மெய்யாகவே பெருமளவு ஒருமைப்பாடு இருக்கிறது. இரண்டும் தோற்றுவாயில் ஒரேமாதிரியாக இருக்கின்றன.[6] ரிதத்தைப் பொறுத்தவரையிலும் இவ்வளவுதான்.

## 'யக்ஞ' கருத்தும் பண்பாடும்

யக்ஞத்தைப் பொறுத்தவரையில், முன்னோர்களையும் கடவுளர்களையும் வழிபடுவதற்கு இது தேவைப்பட்டதென்று நாம் பார்த்தோம். இப்பொழுது இக் கடவுளர்கள் இயற்கைக் காட்சிகளின் தெய்வமாக்கப்பட்டவர்களாக இருந்தனர். இவைகளை ஒளிமிக்கவைகள், அதாவது, தேவர்கள் என்று ஆரியர்கள் பெயரிட்டனர். எதிர்க்கமுடியாத வலிமை, குறையாத ஆற்றல், தளராத விருப்பாற்றல், மிக உயர்ந்த மிகுநலம், வரம்பற்ற வள்ளன்மை, ஒழுக்கப் பெருமை ஆகியவற்றை இவை கொண்டிருந்ததாகக் கருதப்பெற்றது.[7] மேலும், இந்தோ-ஆரியர்களின் பூசல்களிலும் போராட்டங்களிலும், இன்பங்களிலும் துன்பங்களிலும் பங்குபற்ற இவர்கள் தயாராக இருந்தனர். எனவே, ஆரியர் அல்லாதார், அதாவது, ஆதிக் குடிகளுக்கு எதிரான போர்களில் வெற்றிபெற இக் கடவுளர்களின் உதவியை இவர் நாடினர். இக் கடவுளர்களின் பெருமையும் வள்ளன்மையும் இவர்களிடமிருந்து பிரார்த்தனைகள் அல்லது பாசுரங்கள் உருவத்தில் தெவிட்டுகிற அளவில் பாராட்டுதல்களைப் பெற்றனர். சோமரசத்தின் உருவத்திலும் (அவெஸ்தாஹோமா) பால் அல்லது தானியத் திருப்படையல்கள் அல்லது பலியிடப்பட்ட விலங்குகளின் இறைச்சியையும் காணிக்கையாக இவர்கள் தாராளமாகப் பெற்றனர். வழிபாடுகள் உவந்தளிக்கும் காணிக்கைகள் ஆகிய இரண்டும் யக்ஞமாயிற்று. வானுலகிற்கு உரியவர்களை அழைத்து இவர்களின் ஆதரவைப் பெறுவதும், இவர்களின் மன்னிப்பை நாடுவதும் இதன் முதன்மையான நோக்கங்களாகும். கருமைநிறக் கருமிகளாகிய ஆதிக்குடிகளை இந்தோ-

[5] Bloomfield, 'Religion of the Veda', p. 128.

[6] Moulton, 'Early Zoroastrianism, p. 61; Bloomfield, op. cit.. pp. 132 ff.

[7] 'Vedic Mythology,' pp. 15, 17; R. V., ii, 28, 8; Ibid., 54, 18.

ஆரியர் வெறுத்தனர். ஏனெனில், இவர்கள் கடவுளுக்கு வேள்வி எடுப்பதில்லை. நல்லவைகளை இவர்களுக்கு அளிப்பதில்லை. இவர்களுடைய சுக துக்கங்களில் இவ்வர்திக் குடிகள் பங்குபெறவில்லை. கடவுளுடன் களிப்பான நட்பும் மதிப்பும் இவர்களிடத்தில் ஓர் உறுதியான மனிதத் தன்மையை ஊறு இல்லாமல் பேணச் செய்தன. பேர உணர்வில் இவர்கள் கடவுளர்களுக்குப் பலியிட்டாலும், கடவுளர்களின் செயற்பாடுகளைத் தூண்ட யக்ஞங்கள்[8] அல்லது வேள்விகள் உதவுமென இவர்கள் நம்பினார்கள். மேலும், ரிதத்தின் பரந்த மார்க்கமாகிய இயலுலக ஒழுங்கைப் பேண உதவுமெனவும் நம்பினார்கள். ஆனால், இவைகளைப் பேண கடவுளர்கள் ஏன் சிரமப்பட வேண்டும்? உலகத்தில் வசிக்கும் நேர்மையாளர்கள், நற்சிந்தனையாளர்கள், அதாவது ஆரியர்கள், இவர்கள் ஏற்றுக்கொள்ளும் மற்றோர்கள் ஆகிய இனத்திற்கு நன்மை செய்வதும், என்றும் நிலைத்து நிற்கும் உலக இயந்திரம் இயங்கச் செய்வதும் இதன் நோக்கமாகும். ஆகவே, மனிதர்கள் கடவுளர்களை மகிழ்விக்க முயலுவதும், இவர்களுடன் நல்லுறவு கொள்ளுவதும் வெறும் நன்றியால்மட்டுமன்றி இவர்கள் மகிழ்விக்கப்படவில்லையென்றால் இவர்கள் பிணங்கித் தாக்கலாம். இவ்வாறாயின், நாட்டுக்குடியினம் என்ன ஆவர்?[9] யக்ஞத்தின் பயன்பாடும் கருத்தாக்கமும் இவைகளேயாம்.

## இருக்கு வேதத்தில் சமய குருமார் அமைப்புமுறையும் உயர்குடி ஆட்சி வகுப்பும்

ரிதத்தையும் யக்ஞத்தையும் பற்றியவைகள் இவ்வளவே. தம் பழைய இடத்திலிருந்து பஞ்சாபிற்குள் இவர்கள் கொண்டு வந்தவைகள் இவைகள் மட்டுமல்ல. ஒரு சமய குருமார் அமைப்பு முறையை, அதாவது, ஒரு சாதியையன்றி ஒரு வகுப்பை இவர்கள் தம்மோடு கொண்டுவந்தனர். கடவுளர்களுக்கு யக்ஞம் தயாரிக்கவேண்டிய தேவையிலிருந்து இவர்கள் தோன்றியிருக்க வேண்டும். அவெஸ்தா சுராஸ்டரோடு நிகழ்ந்த ஒருங்கொத்த நிகழ்ச்சியாகிய வேதகால ஹோடர், அவெஸ்தா அதர்வனோடு நிகழ்ந்த வேத அதர்வன், சோமத்தோடு நிகழ்ந்த ஹோமம் ஆகியவை தற்செயலாகமட்டும் நிகழ்ந்தவைகளல்ல.[10] 'இந்தோ-இரானியர் காலத்தில் சமய குருமார்களின் பணிகளின் ஒரு குறிப்பிட்ட வேறுபாட்டை இவை உறுதியாகக் குறிப்பிடுகின்றன.'[11]

[8] R.V., iii, 34, 1; R.V., vii, 19, 11.
[9] Ragozin, 'Vedic India,' 390.
[10] A. A, Macdonell, 'Vedic Mythology', p. 7.
[11] Griswold, op. cit., p. 26.

சுதாஸ் அரசரின் விசுவாமித்திரரும் வசிஸ்டரும், சாந்தனுவின் தேவாபியும் ஆகிய பல குருமார்கள் அல்லது புரோகிதர்களின் பல எடுத்துக்காட்டுகளை இருக்கு வேதத்தில் நாம் பெற்றிருக்கிறோம்.[12] ஆனால், இதே சமயத்தில் குருமார்களிலிருந்து மாறுபட்ட மற்றொரு வகுப்பினரைப்பற்றியும் குறிப்புகளை நாம் காணுகிறோம். எடுத்துக்காட்டாக, இருக்கு வேதத்தில் நூல் ஐந்தில், 54, 7-ல் ஒரு ரிஷிக்கும் அரசனுக்கும் வேறுபாடு காணப்படுகிறது. நூல் ஒன்றில், 108, 7-ல் ஒரு பிராமணனுக்கும் அரசனுக்கும் வேறுபாடு காணப்படுகிறது. புருஷ ஸூக்தாவில் (Purusa Sukta) ராஜன்யா என்ற சொல் காணப்படுகிறது. உயர் குடியினர் என்னும் பொருளில் க்ஷத்திரியர், அரசகுடும்ப உறுப்பினராகப் பத்தாவது நூலில் 109, 3-ல் காணப்படுகிறது. எனவே, இருக்கு வேதகாலத்தில், வளர்ச்சிக்கு ஒன்றை ஒன்று சார்ந்திருந்த சமய குருமார் தொகுதியும் உயர்குடியுமாகிய இரண்டு தனிப்பட்ட வகுப்புகள் இருந்திருக்கலாமெனத் தெரிகிறது. ஒவ்வொரு தொல் பழமையான சமூகத்திலும், பணிகள் அடிப்படையில் பொதுவாக ஓர் இராணுவ உயர்குடியும் ஒரு குருமார் அமைப்பும் காணப்படுகின்றன. ஆரியர்களின் முதற் குடியிருப்பாகிய பஞ்சாபில் இவர்களுக்குள் இப்படித்தான் இருந்தது. தஸ்யுக்களோடான இவர்களின் தொடர்ந்த மோதலால், சமூகத்தின் இராணுவத் தேவைகள் தவிர்க்கமுடியாததாகவும், வற்புறுத்தக்கூடியதாகவும் இருந்ததோடு, படைவீரர்களின் அதிகாரம் வளரக்கூடியதாக இருந்தது. இத்துடன் குருமார்களின் சிறப்பும் வளர்ச்சியடைந்திருக்கவேண்டும். வேள்விகளால் கடவுளர்களின் உதவியைப்பெற இவர்களின் சேவைகள் இடையறாது பெறப்பட்டன. எனவே, இராணுவ அதிகாரத்தின் மேட்டிமை குருமார் வகுப்போடு இணைந்து வளர்ச்சியடைந்திருக்கவேண்டும். நாடுகளை வென்று கீழ்ப்படுத்தியதோடு இந்த இராணுவ உயர்குடியினர் நிலப்பரப்புகளின் அதிபர்களாகி இருக்கவேண்டும். மெய்யாகவே, போரிடுகிறவர்களும் வழிபடுகிறவர்களும் அடங்கிய இந்தச் சமூகத்தின் சித்திரம் இவர்களின் கடவுட்கொள்கையில் வெளிப்படுத்துகிறது. இவைகளுக்குள், வீரத்திற்குரிய இந்திரன், சமய குருவிற்குரிய அக்னி ஆகிய இரு பொதுவான வகைகளைக் காணலாம்.

## இருக்குவேதத்தில் வகுப்புகள் சாதிகள் இல்லை

இவ்விரண்டு தொழில்களைத் தவிர, வைத்தியர்கள்,[13] தச்சர்கள், தானியம் அரைப்போர், கவிஞர்கள் ஆகியோரின் தொழிலைப்

[12] R.V., ii, 33, 53; R.V., vii, 18, 83; R.V., x, 98.

[13] R.V., ix, 112, 1.

போல் மற்றவைகளின் சான்றுகள் இருக்குவேதத்தில் இருப்பதைக் காணலாம். வாழ்க்கைத் தொழில்கள் பொதுவாக மரபு வழியொட்டியதாக இருக்கவில்லை என்பதை செய்யுட்பகுதிகளில் ஒன்று[14] மிகத் தெளிவாக்கியுள்ளது. குருமார்களுக்குரிய குலத்தில் பிறவா விஸ்வாமித்திரர் குருவானது இதை மேலும் வலியுறுத்துகிறது. தேவாபியைப் பொறுத்தும் இது உண்மையே. மேலும், இருக்குவேதப் பாசுரங்களை இயற்றியவர்கள் குருமார்கள் மட்டுமன்றி அரசர்களும் இயற்றினர். பரத்துவாசர், நூல் ஆறு, 15-ம்; சிந்துவீப, நூல் பத்து, 133-ம்; மாந்தாத்ரி, நூல் பத்து, 133-ம்; சிபி நூல் பத்து, 179-ம்; பிருதுவயின்யர் நூல் பத்து, 148-ம் இயற்றியதாகக் கூறப்படுகிறது. நூல் எட்டில், 9, 10–ல் மற்ற மூன்று ரிஷிகளோடு பிருதுவயின்யர் கூறப்பெற்றிருக்கிறார். வகுப்புகளேயன்றிச் சாதிகள் இல்லை என்பதையும், தொழிலிற்கேற்ற குழுக்கள் இருந்தனவென்பதையும் இக் குழுக்கள் இறுக்கமின்றி இருந்தனவென்பதையும் இச் செய்யுள்களின் சான்று முடிவு செய்கின்றது.[15] மற்றச் சில இனங்களுக்குள்,[16] அரசபதவி மரபுரிமையாக வந்ததாக இருந்திருக்கலாம்; ஆனால், அரசர், போர்வீரர் ஆகியவர்களின் சாதி ஒன்றிருந்ததாக மெய்ப்பிக்கமுடியாது. அதாவது, அரசர்கள், வீரர்கள், குடியானவர்கள், படையல் செய்வோர், கவிஞர்கள், தச்சர்கள் போன்றோரின் செய்கடமைகளுமிருந்தன. ஆனால், சமூகத்தை இவை வகுப்புகளாகவும் சாதிகளாகவும் பிரிக்கவில்லை. செய்தொழில் எடுத்துக்கொள்ளப்பட்டதேயன்றிப் பிறப்பன்று. சமூகத்தின் இந்நிலை, சமூகக் குழுக்களின் பெருமளவு நெகிழ்ச்சியைக் குறிப்பிடுகின்றன. இருக்குவேதத்தில் சித்திரிக்கப்பட்டிருக்கும் இக் காலம் சமூக வளர்ச்சி, புதிய சூழ்நிலைகளுக்கிணைதல், விரிவாக்கம், சீரமைவு போன்றவைகளின் காலமாகும். ஆனால், சமூக அமைப்பின் இணைந்த கூறுகள் உறுதியற்ற நிலையில் இருந்ததால் ஒழுக்கக் கூறுகள் நிலையாகவும் தெளிவாகவும் இருந்தன. குறிப்பாக, வருணனை ஓர் ஒழுக்கம் சார்ந்த கடவுளாகக்[17] கருத்தில் கொண்டது ஒழுக்க வளர்ச்சியில் ஒரு பெரும் முயற்சியாகும். இவருடைய விதிகள் நிலையானவை, எதிர்க்கமுடியாதவை (iii, 54, 18). மேலும், பாவமும் குற்றமும்

14 R.V., ix, 112, 3.

15 Senart, 'Caste in India,' p. 117.

16 C.H.I., p. 94.

17 R.V., ii, 28; R.V., v, 85; R.V., vii, 86, 89, 41, 44; R.V., i, 24, 25.

ஏற்றுக்கொள்ளப்பட்ட செய்தி நம்முடைய முடிவை வலியுறுத்து கிறது.[18]

## சமூகத்தின்மீது ரிதம், யக்ஞம் ஆகியவற்றின் விளைபயன்

ஆனால், இச் சமூக, ஒழுக்க ஊடிழையிலும், வழியாகவும் ரிதம், யக்ஞ ஆகியவற்றின் இரட்டைப் பாவுநூல் சென்றது. பல வகுப்புகளைக்கொண்டிருப்பதாகச் சமூகம் ஏற்றுக்கொள்ளப் பட்டது. இவை ஒவ்வொன்றும் ஒரு செய்கடமையால் தனிச் சிறப்புகளால் விளக்கப்பட்டது. மானிட உலகில், இயலுலக ஒழுங்கின் பிரதியாகிய ரிதமாகிய இச் சமூக ஒழுங்கு, இவற்றின் இணக்கமான செயற்பாட்டால் அமைந்தது. இதற்கிடையில், யக்ஞத்தின் பயன்பாடும் ஆற்றலும் மெதுவாக, ஆனால், நிலையுறுதி யாக வளர்ந்துகொண்டிருந்தது. உலக நிறுவனம் இயங்கவும், மனிதர்களின் விருப்பங்களை வழங்கவும் கடவுளர்களை யக்ஞம் தூண்டியதென்று முதலில் கருதப்பட்டது. மக்கள் விரும்பிய தைச் செய்யக் கடவுளர்களை வற்புறுத்துவது விரும்பத்தக்க தென்று நினைத்தபொழுது அடுத்த நடவடிக்கை எடுக்கப்பட்டது. ஒன்றைப் பார்த்துப் பின்பற்றுவதால் ஒன்றை ஆக்கும் பழைய கருத்து இங்கு வருகிறது. ரிதத்தின் ‘நிலையான விதிகளுக்கு’ உட்பட்டு, மேலுலகத்திற்குரிய சோமா, அக்னி ஆகியவற்றின் ‘ஆய்ந்த முடிவின்’ பேரில், உலகத்தின் பேணுகையும் தொடர்ச் சியும் இருக்கிறது. பின் அக்னியும் சோமனும் வேள்வியின் சட்டத்திற்கும் ஒழுங்கிற்கும் நிலையான விதிகளுக்கும், சடங்கிற் கும் சடங்குமுறைக்கும் இணங்க இங்கு பூமியில் கொண்டுவரப் பட்டும்.[19] ‘சமயச் சடங்குமுறைப்படி வேள்வி சரிநிறை வாக்கப்பட்டபொழுது இது கட்டாயப்படுத்தும் அதிகாரத்திற் குள் வந்தது.[20] மிகத்திறமையான ஒரு மழைவழிபாட்டால் தம் புரவலர் சாந்தனுவிற்கு ரிசி தேவாபி மழை வரவழைத்தாரென்று நூல் பத்து, 98-ல் நமக்குக் கூறப்படுகிறது. நூல் பத்து 101 மற் றொரு மழை வரவழைக்கும் பாசுரமாகும். மெய்யாக எண்ணற் றவைகளில் இவை இரண்டு! யக்ஞத்தின் வலிந்து ஈர்க்கின்ற அதிகாரக் கோட்பாடும் வேள்விச் சடங்குமுறைகளின் படிப்படி யான விரிவாக்கமும் வேதகாலத்தில் சமூகத்தில் புதிய மாற்றங் கள் முன்குறித்துக் காட்டப்பட்டன. சமய குருமார் தொகுதி ஒரு சாதியாக இணைந்தமைந்தமைக்கு இவைகள் உறுதியான அடையாளங்களாகும்.

[18] R.V., iv, 5, 5; R.V., vii, 49, 3. Ibid., 84, 2.

[19] Ragozin, ‘Vedic India,’ p. 392.

[20] Ibid. p. 394.

## இந்தோ-ஆரிய இனங்கள்

சமூகத்தில் மாறுதல்களோடு அடுத்தடுத்து இவைகளின் அரசியல் அமைப்புகளிலும் மாறுதல்கள் வந்துகொண்டிருந்தன. இம் மாறுதல்களின் தன்மை, இவர்கள் சப்த சிந்து நாட்டிற்குள் நுழைந்து வென்று, குடியேறிய வழியால் பெருமளவு உறுதி செய்யப்படவேண்டும். இந்த இந்தோ-ஆரியர்களின் செயற்பாடு கள்பற்றி இருக்குவேதம் ஒன்றும் சொல்லவில்லை. இவர்களின் குடியமர்விலிருந்தும் இன அமைப்பிலிருந்தும் இவர்களின் வருகை அதிர்கிற முறைதான் என்பதை எப்படியும் ஊகிக்கலாம். இனத்தொகுதிகளாக இவர்கள் நாட்டில் நுழைந்து குடியமர்ந் தனர். இதன் மேற்கெல்லை குபா நதியாலும், கிழக்குக்கோடி எல்லை சரஸ்வதி நதியாலும், வடக்கெல்லை இமயமலைகளாலும் குறிக்கப்பட்டது. இது இவர்களின் சப்தசிந்து நாடாகும். இதன் வழியாக காபூல் ஆறும் சிந்து நதியும் இதன் ஐந்து கிளையாறுகளும் பாய்ந்த கரஃபிரிஸ்தானுக்கு வடகிழக்கில் அலினர்களும்[21] கிழக்கு ஆப்கானிஸ்தானத்தில் இப்போதைய பக்தூன் (Pakhtun) களுக்கு ஒப்பான பாக்தர்களும்,[22] போலன் கணவாயைச் சுற்றி யிருந்தநாட்டில் வசித்த பகலானர்களும்,[23] சிந்துநதிக்கும் அசிக்னி நதிகளுக்குமிடையில் வசித்த பிற்காலத்திய சிவிகர்களுக்கு ஒப்பான சிவாக்களும்,[24] வடமேற்கில் வசித்த விசாணியர்களும்,[25] குருக்ஷேத்திரத்தை யொட்டிய சரஸ்வதி நதிக்கரையில் வசித்த புருக்கள்,[26] பருஸ்ணிக் கரையில் வசித்த அனுக்கள், வடமேற்கத் திய மக்களாகிய துருஷியர்கள்,[27] சரயுவின் வடமேற்கில், அதா வது விபாஸ், சடத்ரியின் இணைந்த போக்கில், சரவாதி, ஆபயா, திரிசவதி, ஆபயாவின் வடமேற்கில் உள்ள உசிஷரஸ் போன்ற நதிகளின்[28] கரையில் நிறுவப்பெற்ற பரதர் அல்லது திரிட்சுஸ்[29] மண்டலத்தில் வசித்த யாதுகளும் துருவாசர்களும் போன்ேறார் இந்நாட்டில் வசித்த சில இனங்கள் என்று இருக்குவேதத்தில் குறிப்பிடப்பட்டிருக்கின்றன. அலை அலையாக இவ்வினங்கள் நுழைகையில், இங்கிருந்தவர்களோடு இவர்கள் மோதினர். ஆதிக்குடிகளோடு, அதாவது 'ஆரிய எதிரிகள்' 'தாச எதிரிகள்'[30] ஆகிய இவர்களோடு முன் பஞ்சாபில் நுழைந்திருக்கலாம். ஆனல், இக் குடியேற்றக் காலத்தின் தோற்றத்தையும் முடி வையும் உறுதிப்படுத்த வேறு வழிகள் இல்லை. எவ்வாருயினும்,

21 A. A. Macdonell, 'Vedic Index,' Vo. I, p. 39.
22 Ibid., p. 494.
23 Ib.d., Vol. II, p. 99.
24 Ibid., pp. 381–82.
25 Ibid., p. 31.
26 Ibid., Vol. I, p. 22,
27 Ibid., p. 385.
28 R.V., iii, 23, 4.
29 Ibid., Vol. II, p. 95.
30 R.V., vi, 33, 3 and 60, 6; R.V., vii, 83, 1.

இக்காலம் போராட்டம், குடியமர்வு, விரிவாக்க காலமென்பது உறுதி. கருமைநிற எதிரிகளாகிய தஸ்யூக்களை இடம் பெயர்த்து அழிக்க இந்தோ-ஆரியர்களுக்கு நீண்டகாலம் பிடித்திருக்க வேண்டும். எனினும், இவர்களை இந்தோ-ஆரியர்கள் எவ்வளவு இழிவாகப் பேசி இருந்தாலும், இவர்கள் குடிசைகளிலும் காடுகளிலும் வசித்த படுகேடான காட்டுமிராண்டிகளல்லர்; உண்மையில் இவர்கள் நாகரிகமான மக்கள்; இவர்கள் நகர்களில் வசித்தனர்; அரண்களையும் இவர்கள் பெற்றிருந்தார்கள்.[31] இவர்களை வெற்றிகொள்ள இந்தோ-ஆரியர்கள் தம் இன அமைப்பு முறையில் இருந்து வேறுபட்ட முறையில் தம்மை அமைத்துக்கொள்ள வேண்டியிருந்தது.

## இன அமைப்பு அழிகிறது

இவர்களுடைய இன அமைப்பு வெற்றி அழுத்தத்தின்கீழ் அழிந்திருக்கவேண்டும். எடுத்துக்காட்டாக, இந்தியாவிற்குள் வந்து குடியேறுகையில் ஒரு பெரிய இனம், பரவலான பகுதிகளில் சிதறிக்கிடந்த தஸ்யூக்களைத் தாக்க வசதியான சிறிய தொகுதிகளாகப் பிரிந்திருக்கவேண்டும். மறுபுறம், ஒரு சிறிய இனம் தன் வலிமையின்மை உணர்ந்துகொண்டு மற்றச் சிறிய அல்லது பெரிய இனங்களோடு இதே நோக்கத்தில் இணைந்திருக்க வேண்டும். ஆரியர் அல்லாதார்களை இவர்கள் வெற்றிகொண்டு தனித்து அல்லது கூட்டாக, இடம் பெயரச் செய்கையில், இவர்கள் ஓரினக் குடியிருப்புகளாக அல்லது பல்லினக் கூட்டாக தங்கி வசிக்கலாம். இதனால்தான் அனுர்களும் திரியூஸ்களும் 'நெருங்கித் தொடர்புகொண்டனர்,'! துருவாசர்களும் யாதுக்களும் 'இரண்டு இணைந்த இனங்க'ளாக இருந்தனர். இதனால்தான் பிற்கால வேதகாலத்தில் புருக்கள் தம் முன்னைய போட்டியாளர்களுடன் (பரதர்) நெருங்கி இணைந்தனர். இரண்டு இனங்களும் குரு இனத்தில் கலந்தன, அல்லது இதனால் தான், சிரிஞ்சயர்களுடன் பரதர்கள் நெருங்கித் தொடர்புகொண்டனர்.[32] இப்படிப்பட்ட பல நிகழ்வுகளில் இவை தெரிந்தவைகளாகும். ஆனால், ஆற்று வழிகளையும், காடுகளின் திட்டுகளையும், உயர்ந்த மலைமுகடுகளையும் தாழ்வெளிகளையும் சப்த சிந்து நாடு கொண்டிருந்ததால் இந்நாட்டின் புறக்கூறுகள் சிதைவுச் செயற்பாங்கிற்கும் இணைப்பிற்கும் உதவியிருக்க வேண்டும். இவ்வியற்கைத் தடைப்பாடுகளால் தனித்திருத்தப்பட்டு, பாதுகாக்கப்பெற்ற தனித்த அல்லது குழுமிய இனங்கள்

31 R.V., i, 103, 3; R.V., ii, 20, 8.

32 C.H.I., Vol. I, pp. 82, 83.

தங்கியிருந்தன. இத்தகைய பாதுகாக்கப்பெற்ற இடங்களில் தங்கி வசிக்கமுடியுமாகையால் இங்கு வேளாண்மையும் தொழிலும் இயற்கையாகவே தோன்றும். இத்துடன் இன நலன்களன்றி மற்ற நலன்களும் இங்குத் தோன்றலாம். போரால் நிலம் சேர்த்தல் பெரும் பரிசாகக் கொள்ளப்படும். நாடு சேர்த்தல் ஆவலை வேதகால இந்தியர்கள் மெய்யாக எவ்வாறு கொண்டனர் என்பதையும், மேலும் நிலத்தை வென்று அடிமைப்படுத்தவேண்டுமென்ற பற்றார்வக் கிளர்ச்சி எப்படி நிறைவேறியதென்பதையும் இருக்கு, அதர்வ வேதங்கள் போதிய அளவில் எடுத்து விளக்கின. வேளாண்மை செய்யும் கலையை இவர்கள் முன்னரே தெரிந்திருந்தமையால்[33] பஞ்சாபைப் போன்ற செழிப்பான நாட்டில் நற்பேறு இவர்களை விட்டுவைத்தது. எதிரிகளிடமிருந்து எவ்வளவு பரந்த பரப்பை வெற்றிகொள்ளமுடியுமோ அவ்வளவு பரப்பையும் பண்படுத்த இவர்கள் விரும்பினர். உழுதல்,[34] நில அமைப்பு,[35] வயல்களின் தனி அமைப்பு,[36] பாசனம்,[37] பற்றிய பல குறிப்புகள் செறிந்தமுறை வேளாண்மை செயற்பாட்டிலிருந்ததை மெய்ப்பிக்கின்றன. மேலும் கிராமங்களின் அமைப்பால் இவர்களின் நிலப்பற்றுகை மெய்ப்பிக்கப்படுகிறது.[38] இயற்கையின் மேதகு சிறப்பையும் விழுமிய தோற்றத்தையும் கொண்டிருக்கும் புகழுக்குரிய சித்திரத்தை எண்ணற்ற பாசுரங்களில் இவர்களின் நாட்டார்வம் வெளியிட்டிருக்கிறது. பொன்னொளி உதயம், விரைந்து பாயும் ஆறுகள், மலைகள், காடுகள் ஆகியவை பற்றிய இவர்களுடைய ஆர்வப் பாராட்டுதல் நன்கறியப்பெற்றதால் விரித்துரைக்க வேண்டியதில்லை. புதிய இடத்தோடு இந்தோ-ஆரியர்கள் பெரும்பற்றார்வம் கொண்டிருந்தனரென்ற கருத்தை மொத்தத்தில் இருக்குவேதம் தெரிவிக்கிறது.

## ராஷ்டிரத்தின் எழுச்சி

இப் பற்றுகையோடு ஆதிக்குடிகளிடத்தில் ஆரியர்களின் வெறுப்பும் சேர்ந்திருக்கவேண்டும்; ஆரியரின் வருணத்தையும் வெற்றியையும் பேண ஆழ்ந்த கவலைகொண்டிருந்தனர். இவர்கள் இருந்து வசித்த நிலத்தைப் பொறுத்து ஒரு பலமான உணர்வு

33 V.I., i, p. 181.

34 R.V., i. 23, 15 and 176, 2 ; R.V., x, 34, 13 ; 117, 7 ; 146, 6 ; R.V., viii, 20, 19 ; 22, 6 ; R.V., iv, 57, 4 and 8.

35 R.V., i, 110, 5; 100, 18 ; R.V., ix, 85, 4 ; 91, 6.

36 R.V., x, 33, 6; R.V., iii, 3, 15; R.V., v. 62, 7.

37 R.V., vii, 49, 2; A.V., i, 6. 4; A.V., xix, 2, 2.

38 R.V., i, 44, 10: 114, 1; R.V., ii, 12, 7; R.V., x, 146, 1 ; A.V., iv, 37, 7 and 8; etc.

தோன்றியிருக்கவேண்டும். இந் நிலத்தில் இருந்து இவர்கள் வெளியேற்றப்பட விரும்பவில்லை. மேலும் பாதுகாப்பு, தாக்குதல் தேவைகளால் வலியுறுத்தப்பட்டு இவ்வுள்ளுணர்ச்சிப் பாங்கு அரசியல் உணர்வு நிலை முதிரா நிலைக்குரிய உருவத்தைப் பெற்றிருக்கவேண்டும்; எனவே, வேதகால ஆரியர் வழங்கிய முதல் அரசு இப்படித் தோன்றியிருக்கவேண்டும்.[39] தொடக்கத்தில், இனம் சார்ந்த தொகுதிகளை ராஷ்டிரம் பின்பற்றியிருக்க வேண்டும்; ஆனால், பிற்காலத்தில் இவைகளைத் தடையின்றிப் பிரித்திருக்கவேண்டும். எந்த முறையில் இவைகள் அமைக்கப் பெற்றிருந்தாலும், இவைகள் உருவத்தில் சிறியனவாகத்தான் இருந்திருக்கவேண்டும்; ஏனெனில், இங்கு இனத் தொகுதிகளின் தன்மையைக் காட்டிலும் எண்ணற்ற இயற்பியல் தடைகளைக் கொண்டிருக்கும் நாட்டின் தன்மை வலியுறுத்தியிருக்கவேண்டும் ஆகவேதான் சப்த சிந்து நாடு சிறிய அரசுகள் (ராஷ்டிரங்கள்) பலவற்றைக் கொண்டிருக்கவேண்டும்.[40] ஒரு குறிப்பிட்ட இனத்தையொட்டி ஒரு ராஷ்டிரம் பெயர் பெற்றிருந்தாலும் ஒரு தனிப்பட்ட இனத்தின் மக்களைமட்டுமே இது கொண்டிருந்திருக்க முடியாது. அதாவது, ராஷ்டிரம் ஒரே இனத்தைக் கொண்டிருக்கவில்லை.

## ராஷ்டிரத்தின் மையக்கருவாகிய கிராமம்

ஆனால், ஓர் அரசியல், ஆட்சிப் பரப்பிற்குரிய அமைப்பாக ராஷ்டிரத்தின் எழுச்சி இன அமைப்பின் சிதைவுச் சின்னத்தில் தோன்றி இருந்தால், இதனுடைய இணைந்த பிரிவாகிய கிராமத்தின் தோற்றம்தான் இதற்குக் காரணமாகும். ஒரே இனமான சனத்தை அல்லது இனத்தை ஒரு ராஷ்டிரம் கொண்டிருந்ததா இல்லையா என்பதை உறுதிப்படுத்துவது கடினமாக இருப்பதைப் போல், விஷ் (vis) முழுவதையும் அல்லது பல விஷின் ஒரு பகுதியை அல்லது பல விஷுகளின் பாகங்களை ஒரு கிராமம் பெற்றிருந்ததா இல்லையா என்பதையும் வலியுறுத்தல் கடினமாகும்.[41] ஆனால், விஷின்மீது அடுக்கப்பட்ட புதிய நிறுவனம் கிராமம் என்றும் இதற்குரிய அரசியல் இயல்பும் இருந்ததை உறுதிசெய்ய முடியுமானால், பின் ராஷ்டிரத்தின் அரசியற்பண்பை எளிதாக மெய்ப்பிக்கலாம். கிராமத்தின் வளர்ச்சியாகவும் கிராமங்களின் கூட்டொருமையாகவும் ராஷ்டிரம் இருந்திருக்கவேண்டும்.

39 R.V., iv, 42, 1; R.V., vii, 84, 2; 34, 11 ; R.V., x, 109, 3. etc.
40 Muir, 'Sanskrit Text Series', Vol. V, p. 454.
41 C.H.I., Vol. I, p. 91.

இருக்கு வேதத்தில் கிராமம், குலம் அல்லது விஷ்ன்[42] மக்களைக் குறிப்பிடாமல் பொதுவாக மக்கள் வசிக்கும் இடமென்று அடிக்கடி குறிப்பிடப்பட்டுள்ளது. இடையறாது போரிட்டுக் கொண்டும், புது இடங்களை வென்றும் பரவிவந்த ஒரு தனிப்பட்ட குலத்தின் உறுப்பினர்களை இது முதலில் கொண்டிருந்திருக்க வேண்டும். ஆனால், சிறிதுசிறிதாகக் கிராமத்தின் தனித்த நிலை மறைந்தது; பல்வேறு குடும்பங்களை இது கொண்டிருந்தது; இவைகள் எல்லாம் கிராம வாழ்க்கைக்கு உதவின.[43] இவர்களில் சிந்திக்கிறவர்களும், ஆழ்ந்து ஆராய்கிறவர்களும் கடவுளர் வழிபாட்டை ஏற்றனர். இவர்களில் போராற்றல் உடையவர்களும், துவக்கத் துணிவுடையவர்களும் மற்றவர்கள்மீது அதிகாரம் செலுத்தினர்; மக்களிற் பெரும்பாலோர் வணிகம், வேளாண்மை, தொழில் ஆகியவற்றில் ஈடுபட்டனர்; வெற்றிகொள்ளப்பட்ட ஆதிக்குடிகள் சமூகத்தில் இணைக்கப்பெற்று அடிமைகளைப்போல் பணியாற்றக் கட்டாயப்படுத்தப்பெற்றனர்.[44] வேளாண்மை தவிர, தேர்கள் செய்தல்,[45] போர்க்கருவிகளைச் செய்தல்,[46] நெசவு,[47] கப்பல் கட்டுதல்[48] போன்றவை இவர்கள் செய்த தொழில்களில் சிலவாகும். இதே மனிதன் வேறு தொழிலையும் கைநுட்ப வேலையையும் மேற்கொள்ளமுடியும்.[49] கிராமச் சமூகத்தின் செல்வர், வறியர் என்ற பாகுபாடு இருந்ததாகத் தெரிகிறது. உணவு கேட்டுப் பட்டினியால் வாடியவர்களுமிருந்தனர்.[50] கிராமத்தில், ஆதரவற்றவர்களுக்கும் குருமார்களுக்கும் நன்கொடைகளை வாரிவழங்கிய மனிதர் கிராமணி.[51] ஏனெனில், 'இவர் கொடை கொடுப்பவர்', இவர் தலைவரைப்போல் முன்னே நடக்கிறார். ஆனால், கிராமணி அல்லது கிராம முதல்வர் ஒரு முக்கியமானவர் அதர்வ வேதகாலத்தில்[52] அரசரைத் தேர்வு செய்பவராக இருந்த சிறப்பைத் தவிர, சேனானி அல்லது

42 R.V., 44, 10 & 11; R.V., i, 94, 1; R.V., ii, 12, 7; R.V., x, 149, 42

43 R.V., i, 114, 1; R.V., viii, 7, 11; R.V., x, 127, 5.

44 Muir, 'Sanskrit Text Series,' Vol. V, p. 452.

45 R.V., 1, 62, 13; 130, 6; 171, 2; R.V., ii, 19, 8; 35, 2; R.V., iv, 16, 20; R.V., v, 2, 11; etc.

46 R.V., i, 162, 20; 127, 3; R.V., vii, 104, 21; R.V., viii, 91, 19; etc.,

47 R.V., i, 61, 8; R.V., vii, 3, 9; R.V., x, 130, 1; etc.

48 R.V., i, 116, 3; R.V., ii, 39, 4; R.V., viii, 42, 3; R.V., ix, 70, 10; R.V., i, 25, 7.

49 R.V., x, 97, 6; 'Viprah sa ucyate bhisag raksoha', etc.

50 R.V., x, 117, 1—6.

51 R.V., x, 62, 11; 107, 5.

52 A.V., iii, 5, 7.

படையை நடததிசசெலலும்[53] படைததலைவரோடு குறிபபாக இவா தொடாபுகொணடிருநதாா. ஏனெனறல, மககளின குழு அலலது படையினா பிரிவு[54] எனறு வருவிககபபடட பொருளாக கிராமம பெறுகிறது ஆகையால கிராமணி இதன தலைவராக இருநதிருககலாம அக காலததில ஒரு நிலைபபடை இருநத பொழுது தேசியப படை அலலது நாடடுப படை கிராமஙகள எனற பிரிவுகளைககொணடிருநதது, அதாவது கிராமஙகளால கொடுககபபடட மனிதத தொகுதியாகவும இருநதிருககலாம இந நாடடுபபுறப பகுதிகள கிராமஙகள எனப பெயாபெற றிருநதன ஏனெனில இவை கிராமஙகள அலலது படைபபிரிவு களை அளிததன அலலது கிராமஙகள அலலது நாடடுபபுறப பகுதிகள அளிதத படையினரை தேசியபபடை கொணடிருநத தால பிரிவுகள 'கிராமஙகள எனறும இவைகளின தலைவா கிரா மணி யெனறும இருககலாம மேலும அரசாகள கிராமஙகளை வெனறனா, கிராமஜிததா அலலது கிராமஙகளை வெனறவா[55] எனற அடைமொழியை இவாகள விருமபினா இஙகு கிராமங களை அலலது படையினரை வெனறவா எனறு பொருள இருக கலாம எவவாறயினும தேசியப பாதுகாபபில கிராமம ஒரு பஙகுபெறறிருநதது மிகக உறுதியெனத தோனறுகிறது ஆகை யால நாடடின படைமுறையில இது ஒரு மையக கருவாக உருவாகியிருககலாம ஆனல இராணுவக கருததில கிராமம சிறபபுப பெறவிலலை, நாடடின நிதிமுறையில ஒரு பிரிவாக இது சிறபபடைநதிருநதது கிராமஙகள குதிரைகள, கால நடைகள ஆகியவறறின ஒரு பஙகு அரசிறகுரிய வரிகளில அடஙகிறறென அதாவவேதததிலிருநது நாம அறிகிறேம[56]

ஆனல, கிராமஙகளின பஙகுப பணியை இதுகூட நிறைவு செயயாது கிராம சபாவில[57] மககளின கூடடாணமை வாழககை கூவி மையபபடுததபபெறறது ஆரியரின தனனுடசி விருப பின சினனம இதுவாகும ஏனெனில, கிராமக காரியஙகளில[58] மிக இயலபானவைகளையும விளைததிடபமுடையவைகளையும விவாதிகக மககள இஙகுதான கூடினா கிராம நீதிமனறமாக வும இது பயனபடுததபபெறறது,[59] கிராம மககளில மிகக

[53] V I, i p 247
[54] R V i 100 10 R V iii, 33 11 R V x 27 19 A V iv, 7 5, A V, v 20 3
[55] R V, v 54, 8 A V, vi, 97, 3
[56] A V iv 22 2
[57] R V, vi, 28 6
[58] R V x, 71, 10, A V xii 1, 56, A V vii 38 4, A V vi 28 6
[59] A V vii, 38, 4

மேன்மையடைந்தவர்களை இது கொண்டிருந்தது.[60] இத்தகைய வேளைகளில், கிராமியவாதின் அல்லது கிராம நீதிபதி சபாவிற்கு அல்லது கிராம சபைக்கு[61] தலைமை தாங்கினர். சபா எனப் பெயர்பெற்ற அவை, முதிர் சிந்தனைகள் நடக்காதபொழுது கிராம மக்களுக்கு இது ஒரு சிறந்த பொழுதுபோக்கிடமாக இருந்தது. நரிஷ்டா என்ற பெயரால் இது குறிப்பிடப்பட்டிருக்கிறது.[62] இங்கு மக்கள் அடிக்கடி தம் நேரத்தை விளையாட்டில் வேடிக்கையாகச் செலவிட்டனர்.[63] ஆகவே, தற்காலப் பொழுதுபோக்கிடத்தின் நோக்கங்களை இது எளிய முறையில் நிறைவேற்றியது. எல்லாவற்றிற்கும் மேலாக, பயன்பாட்டிற்குரிய நிலங்களையும் தரிசு நிலங்களையும் கட்டுப்படுத்துவதில் சபா தன் கூட்டு விருப்பாற்றலை வெளியிட்டதெனலாம்.[64] ஏனெனில், வேறுவகையாக எப்படி நிலங்களை அளப்பது. நீர்ப்பாசனத்தின் உதவியால் செறிந்த வேளாண்மையை எப்படி மேற்கொள்வது?[65] முன்னரே கூறப்பட்டதுபோல், ராஷ்டிரத்தின் பொருளகத்திற்கு கிராம பாக்கிகளைச் செலுத்துவதற்கு இது பொறுப்புடையதாக இருந்தது. ஆகவே, இராணுவ (தற்காப்பு, தாக்குதல்), நீதி, நிதி நோக்கங்களுக்கான கிராம அல்லது நாட்டுப்புறப் பகுதியின் சிறப்பு, இதனுடைய அரசியல் இயல்பிற்கு ஆதாரமளிக்கிறது. ராஷ்டிரம் அல்லது அரசை உருவாக்கக் கிராமங்கள் இணைந்ததால், நாட்டில் ராஷ்டிரம் மிக உயர்ந்த அமைப்பாக ஆகிறது.

## ராஷ்டிரத்தின் வடிவங்கள்

தொடக்க காலத்தில் இருந்த அரசின் வடிவத்தைப்போல் வேதகாலத்திய ராஷ்டிரம் கோனாட்சியாக இருந்திருக்கவேண்டுமென்று தெரிகிறது. தந்தைவழி சமூக அமைப்பாலும், இராணுவத்தின் தாக்கும், பாதுகாக்கும் இடையறாத் தேவைகளாலும் இது இப்படி இருந்திருக்கவேண்டும்.[66] அடிக்கடி வலியுறுத்தப்படுவதுபோல் ராஷ்டிரம் அரசருக்குரியதாக இருந்தது. க்ஷத்திரியர் இதற்குத் தலைமை தாங்கி இதைப் பாதுகாத்தனர்.[67] ஆனால், இந்த ராஷ்டிரம் அல்லது வேதகால அரசு தற்கால அரசிலிருந்து பண்புவகையில் மிக வேறுபட்டதாக இருந்தது.

[60] R.V., viii, 4, 9.
[61] Taittiriya Samhita, ii, 3, 1.
[62] A.V., vii, 12, 2.
[63] R.V., x, 34, 6.
[64] R.V,, i, 127, 6.
[65] R.V., vii, 49, 2. A.V., i, 6, 4; A.V., xix, 2, 2.
[66] 'Vedic Index', Vol. II, p. 210.
[67] 'Raja rastranam', R.V., vii, 34; 'Esa rastram ksatriyasya gupitam' R.V., x, 173, 1.

அரசாங்கத்தோடு எல்லாக் கூறுகளிலும் ஒப்பாக இது இருந்தது. வெளி எதிரிகளை எதிர்த்து இது மக்களுக்குப் பாதுகாப்பளித்தது; போரிட்டது; வரிகளை வசூலித்தது; நீதி செலுத்தியது. இப் பணிகள் எல்லாம் அரசரைச் சேர்ந்தது. இயல்பான அரசாங்க வடிவம் முடியாட்சியாக இருந்தாலும் இந்த வடிவம்மட்டும்தான் இருந்ததா என்று சொல்வது கடினமானதாகும். இருக்கு, அதர்வ வேதங்களில் பொதுவாகக் கடவுளர்களை, மாருட்டுகளைக் குறிப் பிடுகையில் ஓம்புநர் என்ற பொருளில் 'கணம்' என்ற சொல் கூறப் பட்டிருப்பதை நாம் காணுகிறோம். இருக்குவேதத்தில் குறைந் தது இருபத்திரண்டு தடவைகளும், அதர்வ வேதத்தில் நான்கு தடவைகளும் இது வருகிறது. இருக்குவேதத்தில் நூல் இரண்டு 23, 1-ல் 'கணானும்த்வா கணபதிம்' (Gananam tva Ganapatim) 'ஜெயிஸ்த ராஜம்,' முறையே வானுலகத் தலைவரும் முதல்வரும் தலையாய (வழிபாட்டில்) அரசர் என்னும் பொருளில் பிரமணஸ் பதி (Brahmanaspati) தொழுது வேண்டப்படும் பிரார்த்தனை ஒன்றை நாம் பெற்றிருக்கிறோம். இப் பொருள் விளக்கத்தைச் சரியானதென்று எடுத்துக்கொண்டு, கணபதிம் என்ற இடத்தில் ஜெயிஸ்த ராஜம், கடவுளர்களுக்கு வழங்கப்பட்ட உருவங் களாக இருக்கலாம். அதாவது, பல தலைவர்கள் அல்லது அரசர் களின் கீழ் வாழ்ந்த அமைவுபெற்ற மக்கள் நிறுவனமாகிய 'கண'த்தோடு, வேதகால ஆரியர்கள் பழகியவர்களாக இருக்க வேண்டும். இந்த அரசர்களின், அதாவது, ராஜனுவின்கீழ் ஜெயிஸ்த ராஜா, அதாவது, தலையாய அரசர் இருந்தார். இருக்குவேதத்தில் பத்தாம் நூலில், 97, 6-ல் 'சமிதியில் அரசர் கள்' என்று சாயனரால் விளக்கப்படும் 'ராஜானு சமிதாவிவா' (Rajanah Samitaviva) என்ற சொல் வருகிறது. இப் பின்விளக் கம் சரியானதாக இருந்தால், சமிதியைப் பெற்றிருந்த ஒருவகை யான அமைப்பு இருந்ததாக ஒரு குறிப்பு வருகிறது. சமிதி, அதாவது, மக்கள் சபையில் அரசர்கள் தலைவர்களாக இருந் தனர். அதர்வ வேதத்தில் நூல் பத்தொன்பதில் 22, 16, 17-ல் 'கண' 'மகாகண' என்பன 'ஓம்புநர்கள்' என்ற பொருளில் வரு கின்றன. இப் பின்நிகழ்வுண்மைகளைக் கொண்டு, எந்த ஓர் அரசர் அல்லது தலைவரின்கீழன்றிப் பல மன்னர்களின்கீழ் ஒருங் கமைந்த அரசியல் வாழ்வு வாழ்ந்த இனத் தொகுதிகள் இருந் திருக்கலாம் என்று நாம் கூறலாம். பௌத்த சமய முறையில் கணத்தின் தனிச்சிறப்பும், பிற்காலத்தில் வஜ்ஜி, மல்லர், மாளவா ஆகிய கணங்கள் எனப்பட்ட இனம் சார்ந்த சிறு குழு ஆட்சிகள் இருந்ததும் இக் காலத்தில் கூட்டாண்மை நிறுவனமாகக் கணம் தோன்றியிருக்கவேண்டுமென்ற முடிவைக் குறிப்பிடலாம். தனிப்பட்ட நிலையில், தன்னாட்சி நிறுவனத்தின் எல்லாக் கடமை

யோடு கூடிய ஒரு கூட்டாண்மை வாழ்க்கையை கிராமங்கள் பெற்றிருந்தனவென்பதைக் கற்பனை செய்வது சிரமமில்லை. ஆகையால், சமிதிகளையும் ராஜாக்களையும் தலைவர்களாகக் கொண்ட பொதுமக்கள் சபையோடு, நன்கமைந்த மக்கள் தொகுதியாகக் கணங்கள் இருந்திருக்கலாம். முடியாட்சியல்லாத ஓர் அரசாங்க முறையைப்பற்றி நாம் இவ்வளவுதான் சொல்லலாம்.

## முடியாட்சி ராஷ்டிரம்

வேதகாலத்தில் முடியாட்சி சிறிது வளர்ச்சியையும் வகைத் திரிபுவளத்தையும் பெற்றிருந்ததாகத் தெரிகிறது. விவரங்களைப் பெற வேறு வழிகள் இல்லை. இருக்கு, அதர்வ வேதங்களில் வரும் ஏக்கராஜ்,[68] சாம்ராத்,[69] அதிராஜ்,[70] சுவராஜ்.[71] ஆகிய சொற்களிலிருந்து நாம் ஊகிப்பவைகள்தாம். இவை எதைக் குறிப்பிட்டாலும், ராஜனைக்[72] காட்டிலும் சாம்ராஜ் பெருமளவு அதிகாரத்தை வெளியிடுகிறது; ஏனெனில், 'ராஜனின் பதவி தாழ்ந்ததென்றும், சாம்ராஜின் பதவி உயர்ந்ததென்றும்[73] நிலையுறுதிப் படுத்துகிறது. காத்தியாயன சிரௌத சூத்திரம். இது ஒரு மிகப் பொதுவான கூற்றாகும். ராஜனின் தனிமதிப்பு நிலைக்கும் சாம்ராட்டின் நிலைக்குமிடையில் வேறுபாடு எவ்வளவு சரிநுட்பமானதென்பது சிந்தனைக்குரிய கருத்தாகும்.

இந்தோ-ஆரியர்கள் பஞ்சாபில் வசித்த காலத்தில் இவர்கள் பேரரசுகளை உருவாக்கினார்கள் என்பதும்,இவர்களை ஆட்சிசெய்ய 'சாம்ராட்களை' அல்லது பேரரசர்களைப் பெற்றிருந்தனர் என்பதும் சிறிது மிகைபடக்கூறுவதாகும். பல்வேறு முடியாட்சி ராஷ்டிரங்களுக்கும் இவைகளுள் தனி முதன்மை நிலையை அடைந்த நாடுகளுக்கும் இடையில் தனித் தலைமைக்கான ஒரு போராட்டம் நடந்துகொண்டிருந்ததென்பதை ஒரு விளக்கமாக மட்டுமே நாம் கூறலாம். இதில் வெற்றிபெற்ற நாடு வேறுபாட்டைத் தெரிவிக்கிற சாம்ராட் என்ற பட்டத்தைப் பெற்றது.

68 R.V., viii, 37, 3; A.V., iii, 4, 1.

69 R.V., x, 128, 9 ; A.V., vi, 98, 1; A.V., ix, 10, 24.

70 R.V., i, 25, 10; R.V., ii, 28, 6; R.V., v, 85, 1 ; R.V., vi, 68, 9 ; R.V., viii, 42, 1.

71 Ibid, ii, 28, 1.

72 V. 1, Vol. II, p. 433.

73 AV., xv, 1, 1, 2.

ராஷ்டிரத்தின் தலைவராக அரசரிருந்தார்.[74] இவருடைய பதவி தேர்ந்தெடுப்பதற்குரியதாக[75] இருந்ததாகத் தோன்றியது. ஆனால், இவர் உண்மையில் எவ்வாறு தேர்ந்தெடுக்கப்பெற்றார் என்று சொல்வது கடினமாகும். விஷ்அரசரைத் தெரிவுசெய்த தென்று இருக்குவேதத்தில் நூல் பத்து, 124, 8-ல் இருந்தும், நூல் பத்து, 173. 1-ல் இருந்தும் நாம் அறிகிறோம். அரசராக்குவோர் எனப்பட்ட ஒரு பிரிவினர்—ராஜகிர்ட், கிராமணி போன்றோர் மன்னரைத் தெரிவு செய்தனர் என்று அதர்வ வேதம், நூல்மூன்று, 5, 7 குறிப்பிடுகின்றன. மக்களே விஷ்ன் தலைவரைத் தெரிவு செய்யும் வேதகாலப் பழமையான மரபும், இத் தலைவர் அரசரெனப் பெயர்பெற்றார் என்பதும் உண்மையாக இருக்கலாம். பிற்காலத்தில் இராணுவத் தேவைகளின் வளர்ச்சியோடு நிலங்களைச் சேர்த்துக்கொள்ளுதல், நாடுகள் உருவாதல் போன்றவைகளிலிருந்து வலிமைமிக்க மனிதக் குழுவொன்று எழுந்தது. போர், நாடுபிடித்தல், அரசாங்கம் ஆகிய அரசரின் காரியங்களில் செய்த உதவியையொட்டி இவர்களின் அதிகாரமிருந்தது. அரசரின் முடிசூட்டு விழாவின்போது இவர்கள் 'அப்ஹிதோஜனன்'[76] (Abhito Janan), அதாவது, இவருடன் இருப்போர் என்று இவர்கள் பாராட்டப்பெற்றனர். கிராமணியைப்போல் இவர்களில் பலர் அரசரின் ஆட்சிப் பணிக்கு அமர்த்தப்பெற்று, பிராமணங்களின் காலத்தில் ரத்னிஸ் எனக் கருதப்பெற்றனர் என்பதை நாம் பின்னர் பார்க்கலாம். நாட்டில் பெரும் அதிகாரத்தைச் செயற்படுத்தினர் என்பதிலும், அரசரைத் தெரிவுசெய்வதில் செல்வாக்குப் பெற்றனர் என்பதிலும் வியப்பில்லை. ஆகவேதான் இவர்களுடைய உதவியை அரசர் நம்பியிருந்ததை வெளிப்படையாகக் கூறினர்.[77] எனவே, வேதகாலத்தின் முற்பகுதியில் அரசர் மக்களால் தெரிவு செய்யப்பெற்றார் என்று சொல்லலாம்; ஆனால், காலப்போக்கில் அரசுகள் உருவாக்கப்பட்டன, அரசாங்கங்கள் அமைக்கப்பட்டன. முதலில் அரசர் ராஜகிருத்தர்களால் தெரிவு செய்யப்பட்டுப் பின் மக்களால் ஏற்றுக்கொள்ளப் பெற்றார்.[78]

## சமிதியும் சபாவும்

அரசர் உண்மையில் மக்களின் பொதுநல சேவையில் அக்கறைகொண்டிருந்ததால், எல்லாராலும் ஏற்றுக்கொள்ளப்

74 R.V., ii, 43, 6 ; R.V., iv, 42 ; R.V., v, 53, 7 ; A.V., iv, 8 and 22 ; A.V., iii, 3 & 5.

75 R.V., x, 173, 1 ; 124, 8 ; A.V., iii, 3, 5 ; 4, 2.

76 A.V., iii, 5, 6 & 7.

77 Etan Krinvobhito Janan, A.V., iii, 5, 6 & 7.

78 V.I., Vol. II, p. 211.

பட்டபின், சமிதியையும் சபாவையும்[79] கலந்துகொண்டார். இவையிரண்டின் முழுமையான உடன்பாட்டைப்பெற இவர் நாடியிருக்கலாம் என்று நாம் ஊகிக்கலாம்.[80] இவையிரண்டில், சபை, மூதறிஞர்கள், செல்வாக்குள்ளவர்களின் அவையாக இருந்தது. சிறப்பான சமயங்களில் கூடுகிற மக்கள் சபையாக சமிதி இருந்தது. அரசியல், அரசியல் அல்லாதவைகள் எல்லாம் சமிதியில் விவாதிக்கப்பட்டன.[81] சட்டமியற்றல், இதன் கடமைகளில் ஒன்ருக இருந்திருக்கலாம்.[82] ஆனல், இத்தகைய சமயங்கள் மிகக் குறைவே. சபா நீதிமன்றமாகச் செயல்பட்டிருக்கலாம்,[83] பொதுக் காரியங்களை நிறைவேற்றிவைக்கும் இடமாகவும் இது இருந்திருக்கலாம். அரசாங்கத் தொடர்புடையவைகள் சபாமுன் வந்திருக்கலாம். ஆனல், அரசாங்கத்தின் கொள்கையை சபை எவ்வளவுதூரம் மாறுதல் செய்யும் என்று சொல்வது கடினமாகும். எவ்வாருயினும், அரசர் தெரிவுசெய்யப்பட்டார் என்ற செய்தியிலிருந்தும், இராஜகிருத்தர், கிராமணி ஆகியோர் உதவிஞர்கள் என்பதிலிருந்தும், இவர்களும் அரசரைப் போல் அரசாங்கத்தின் கொள்கையோடு அக்கறை கொண்டிருந்தனரென்றும், பொதுநலனுக்குரியவைகளை விளைவாட்சிக்குட்படுத்தினரென்றும் கூறுதல் தவருகாது. இவர்களில் சிலர் பெரும்பாலும் சபாவின் உறுப்பினர்களாக இருந்தனர். ஆனல், சபையில், போர் அமைதிபற்றியும், நிதி, பொதுநலம்பற்றியும் விவாதிக்கப்பட்டனவென்று அதர்வ வேதத்தின் சில ஏட்டுரைப் பகுதிகளைச் சுட்டிக்காட்டி அறிஞர் பெனி பிரசாத்[84] இதை மெய்ப்பிக்கும்பொழுது இவரோடு நாம் உடன்படமுடியவில்லை. சபையில் போர்பற்றி விவாதித்ததாக இவர் குறிப்பிடுகிற ஏட்டுரைப் பகுதிகளில் அதர்வ வேதம், நூல் ஆறு 75, 10 பகைவர்களை அகற்றுவதற்கான மந்திரங்களாகும்; இதைப்போல், நூல் ஏழு, 52. அமைதிபற்றிய விவாதம் ஒன்றைக்கொண்டிருக்கவில்லை. ஆனல், பொது அமைதிக்கும் இணக்கத்திற்கும் இது மந்திரமாகும். நூல் மூன்று, 29 சபாவில் நிதிபற்றிய விவாதத்தைக் குறிப்பிடவில்லை ஆனல், வேள்விப் படையலால் மறு உலகில் வரிவிதிப்பிலிருந்து விலக்குப்பெறலாம் என்று கூறுகிறது; நூல் ஆறு, 107, சபையின் பொதுநலம்பற்றிய விவா

79 R.V., ix, 92, 6 ; R.V., x, 97, 6 ; R.V., viii, 4, 9 ; A.V„ vii, 12, 1.
80 R.V., x, 166, 4; 191, 3; A.V., vii, 12, 1.
81 A. A. Macdonell, 'Vedic Index,' Vol. II, p. 431; K. P. Jaiswal, 'Hindu Polity.' Vol. I, p. 13
82 A.A. Macdonell, 'Vedic Index', Vol. II, p. 431.
83 R.V., x, 71, 10; K. P. Jaiswal, 'Hindu Polity,' Vol. I, p. 18; A.A. Macdonell. 'Vedic Index,' Vol. II, p. 428.
84 Beni Prasad, 'Ke State in Ancient India', pp. 42—43.

தத்தைக் குறிப்பிடவில்லை; மனிதர்களையும் கால்நடைகளையும் காக்கும் மந்திரமாகும் இது. மெய்யாக நமக்குக் கிடைக்கும் மூலநூல்களின் தன்மையால் சபா, சமிதியின் பணிகளை முடிவு செய்வது இயலாததாகும்.

## அரசரின் பணிகள்

எவ்வாருயினும், அரசரின் பணிகளைப் பொறுத்தமட்டில் நாம் உறுதியான நிலையில் இருக்கிறோம். போரில்[85] இவர் தலைவராகவும், நெருக்கடியான வேளைகளில் மக்களின் காவலராக[86]வுமிருந்தார். இவருடைய நிலையைப் பேணுதற்காக இவர்களின் பணிவையும் நன்கொடைகளையும்[87] கோரிப்பெற்றுர். இருப்பினும், மக்கள் எப்பொழுதும் விருப்பமுடன் தம் பரிசுகளையும் வணக்கமுறையையும் செலுத்தவில்லை;[88] இவ்வாறு செய்ய அவர்களை இவர் கட்டாயப்படுத்திஞர். பிராமணர்களைக் காக்கும் பொறுப்பை இவர் குறிப்பாக ஏற்றுக்கொண்டார்.[89] நீதிபதியின் கடமைகளை இவர் நிறைவேற்றிஞர்; நாட்டில் அமைதியையும் ஒழுங்கையும் நிலையுறுதி செய்ய ஒற்றர்களை அமர்த்திஞர்.[90] அரச அதிகாரத்தின் நிலையற்ற தன்மை அல்லது குற்றங்கள் அடிக்கடி ஏற்பட்டமை காரணமாக ஒற்றர்களைப் பயன்படுத்தவேண்டியிருக்கலாம். மக்களின் நலத்தை அடைவதற்கு இவைகள் துணைப்பொருள்களாக இருந்திருக்கவேண்டும். அரசர் குற்றவியற் சட்டத்தைச் செயற்படுத்தியும் பரவலாகத் துணிவுத் திறனையும் பெற்றிருக்கக்கூடும். குற்றவியல் சட்டத்தைச் செய்பவராகவும் இவர் இருந்திருக்கலாம். சிவில் நீதியைப் பொறுத்தவரை, பல துணைச்செய்திகள், இதை அரசர் செயற்படுத்தியதைச் சுட்டிக் காட்டுகின்றன. நிலத்தில் தனியார் உடமை,[91] நீர்ப்பாசன நடைமுறை,[92] வயல்களின் அளவீடு,[93] ஆகியவை சமூக நீதியின் சில முறை இருந்ததைத் தெளிவாகக் காட்டுகிறது. ஏனெனில், சமூகப் பொருளாதாரத்தின் ஒரு சிக்கலான முறையை இச் செய்திகள் குறிப்பிடுகின்றன. அரசாங்க இசைவின்றி இவைகள்

[85] R.V., iii, 43, 5.

[86] R.V., i, 67, 1.

[87] R.V., iv, 5, 8.

[88] R.V., i, 65; 4; iv, 50, 9

[89] R.V., iv, 50, 9

[90] R.V., i, 25, 13; R.V., iv, 4, 3; R.V., vi, 67, 5.

[91] Krishna Yajurveda (Keith trans.) ii, 3, 3.

[92] R.V., vii, 49, 2; A. V., 1, 6, 4; A.V., xix, 2, 2.

[93] A.V., i, 110, 5.

இருக்கமுடியாது. நாம் பார்த்ததைப்போல், மேலும் சபா ஒரு கிராம நீதிமன்றமாகும். எனவே, சில வேளைகளில் அரசர் நீதி பதியாகச் செயலாற்றினர் என்று உறுதியாக முடிவுசெய்ய லாம்.[94] சட்டங்கள் இயற்றுதல் இவரது அதிகாரத்திற்கப்பாற் பட்டதாக இருந்திருக்கவேண்டும்;[95] ஆனல், விளைவிலிருந்து தெரிவதைப்போல் சமூகத்தின் பழக்கங்கள், வழக்காறுகள் ஆகிய தர்மத்தை, அதாவது, சட்டத்தை இவர் நிலைநிறுத்தினர். வளங்குறைந்த பிராமணருக்கு நன்கொடை அளித்தல் இவரது கடமைகளில் தலையாயதாகும். (R. V., iv, 50, 09).

## அரசரின் இறைமை

அரசரின் இவ்வதிகாரங்களும், இவரது அரசாங்கத்தின் பணி களும் இந்தக் காலத்தில் அரசினர் இறைமைக் கோட்பா டொன்று தெளிவற்று வளர்ச்சியடைந்ததைக் குறிப்பிடுவதாகத் தோன்றுகிறது. அதாவது, வேதகாலத்திய க்ஷத்ரா (Ksatra)[96] அல்லது க்ஷத்ரஸ்ரீ[97] ஒன்று தோன்றி வளர்ந்தது. க்ஷத்ரியர் அல்லது அரசரோடு இது தொடர்புபடுத்தப்பட்டது.[98] க்ஷத்ரஸ்ரீ க்ஷத்திரி யரைச் சேர்ந்தது; ஏனெனில், இவர் சட்டத்தை நிலைநிறுத்து பவராக இருந்தார். ரட்சய கோபராகவும் ராஷ்டிரகோபராக வும், அதாவது, ராஷ்டிர முதரயராகவும் இருந்தார்[99] மக்களின் பாதுகாவலராகவும், பாயுர் விஷவாகவும் இருந்தார் (R. V. iv, 4, 3). அரசர் இறைமை அல்லது அரசர் அதிகாரத்தின் மெய்ப் பிப்பாக இது இருந்தது. அதாவது, இறைமையின் பொருள டக்கம் அதிகாரமாகும்; இந்த அதிகாரத்தால்தான் அரசர் சட்டத்தை, அதாவது, ஆரியக் கோட்பாட்டின் பிழிவாகிய ரிதம் அல்லது படையலின் (வேள்வியின்) உட்கருத்தை நிலைநிறுத்த வேண்டும். ஆரியரை ஆரியரல்லாதாரிடமிருந்து ரிதம் வேறு படுத்தியது; அன்ரிதத்தை (Antra) ஆரியர் அல்லாதார் மேற் கொண்டனர். ரிதம் நிலைபெறுவதற்காக, அன்ரிதத்தை ஒழிக்க மித்திரனும் வருணனும் தொழுது வேண்டப்பெற்றபொழுது, இவர்களுடைய எடுத்துக்காட்டை, இவர்களைப் போன்ற பூமியில் உள்ள அரசர் பின்பற்ற எதிர்பார்க்கப்பட்டதை நாம் அறியக்

94 A.A, Macdonell, 'Vedic Index,' Vol. II, p. 213.

95 Ibid.

96 R.V., 1, 24, 6 ; 136, 1; R V., iv, 17, 1 ; R.V., v, 62, 6, etc. ; A.A. Macdonell, 'Vedic Mythology,' p. 24.

97 R.V., 1, 25; 5 R.V., vi, 26, 8.

98 R.V., iv, 12, 3 ; 42, 1 ; R.V., v, 69, 1; R.V., vii, 64, 1 ; R.V., viii, 25, 8; R.V., x, 109, 3 ; A.A. Macdonell, 'Vedic Mythology,' p. 24.

99 R.V., vii, 66, 13 ; R.V., vii, 64, 2 ; R.V, x, 173, 2.

கூடும். புவியரசர் ஆரியர் அல்லாதாரை வென்று கீழ்ப்படுத்துவதால் ஆரிய வழிபாட்டு மரபை, வேள்வியை, நிலவச் செய்வார் என்று இது குறிப்பிடுகிறது. அரச அதிகாரத்தின் மெய்ப்பாடு இதுதான். அரசர் க்ஷத்ரஸ்ரீயைப் பெற்றிருந்தார். ஏனெனில், ஆரிய வழிபாட்டு மரபாகிய ரிதத்தின் பாதுகாவலர் இவரானுர்.

பகைவர்களுக்கெதிராகத் தம் மக்களுக்குப் பாதுகாப்பு அளித்தார் என்ற பொருளிலும், இவர்களுக்குள் அமைதியைப் பேணினுர். கோபாஜனசியா(Gopajanasya)என்ற பொருளிலும் அரசர் நாட்டின்-ராஷ்டிரத்தின் காவலராகவும் இருந்தார் (R.V. iii, 43, 5). ஆகையால், இவரை அவர்கள் விரும்பினுர்கள். விஷஸ்த்வா சர்வா வாஞ்சந்து (Visastva Sarva Vanchantu Rig Veda., x, 173, 1) வேதகால அரசர்கள் அடிக்கடி ஆரியர்களுக்கு எதிராகவும், ஆரியரல்லாத பகைவர்களுக்கெதிராகவும் சண்டையிடவேண்டியது நன்கறிந்ததே. ஆகையால், அதிகாரம் அரசரின் உண்மையான சொத்தாகும். இவரது அதிகாரம் பயனுடையதாக இருந்த அளவிற்கு இவர் மதிக்கப்பெற்றுர். ஆகவே, நாட்டில் (அசபட்ன, சபட்ன) போட்டியின்றியும் போட்டியிடுகிறவர்களைக் கொல்லுபவராகவும் இருக்க இவர் விரும்பினுர்.

மேலும், அரசர் மக்களுக்கு உள்நாட்டமைதியை உறுதி செய்தார். இருக்குவேதத்தில் நூல் ஏழு, 89, 5-ல் இதை எப்படிச் செய்வது என்பது விளக்கப்படுகிறது. வருணனின் சட்டத்திற்கு, தர்மத்திற்கு மாறுக அறியாமையால் செய்த குற்றங்களுக்காக (துரோக) மனிதர்களை தண்டிக்கக் கூடாதென்று வருணனை இதில் வேண்டினர். பூமியில் என்ன நடந்திருக்கின்றதென்பதன் பிரதிபலிப்பு இதுதான். வருணன் கடவுளர்களுக்குள் தர்மத்தைப் பேணியதைப்போல் அரசரும் மனிதர்களுக்குள் தர்மத்தைப் பேணினுர். இதை மீறியவர்களை அரசர் தண்டித்தார்.

## அரச அதிகாரத்தின்கீழ் தருமமும் துரோகமும்

இப்பொழுது தருமம், வழக்கங்கள், வழக்காறுகள் ஆகியவற்றின் பொருள் விளக்கத்தையும் சமூகத்தில் புனிதமானவைகளையும் சமயச் சார்பற்றவைகளையும் பெற்றிருக்கலாம். ஏனெனில், இருக்குவேதம், iii, 17, 1-ல் வழக்கம் என்ற பொருளில் தருமம் பயன்படுத்தப்பட்டுள்ளது; இருக்குவேதம், vii, 89, 5-ல் நெறிமுறை என்ற பொருளிலும், இருக்குவேதம், x, 56, 3-ல் பொதுவில் சட்டங்கள், கடமைகள் என்ற பொருளிலும், இருக்குவேதம், viii, 98, 1-ல் கடமை என்ற பொருளில் அல்லது எது சரி என்ற பொருளிலும் தருமம் பயன்படுத்தப்பட்டுள்ளது. வேத

காலப் பழக்கங்களும் வழக்கங்களும், புனிதமான சமயச் சார்பில்லாதவைகளும் திட்டவட்டமாகத் தருமங்கள் என வழங்கப்பட்ட முடிவை இந்த ஏட்டுரைப் பகுதிகளின் பொதுவான பொருள் சுட்டிக்காட்டுகிறது. வருணனைப்போல் அரசரும் ஒற்றர்களின் உதவியால் மனிதர்களுக்குள் தருமத்தைப் பேணினார். ஆகையால், அரசர் பாயுர்விஷாவாக, மக்களின் காவலராக இருந்தார் (R. V. iv, 4, 3.) பொருளடக்கத்தில், பழக்கத்தில், வழக்கத்தில் இத் தருமம் சமூகத்தின் சட்டத்தின் மிகப் பழமையான வடிவமாகும்.

துரோகம், அதாவது, தருமத்தை மீறுவது, எதைக்கொண்டிருந்ததென்பதை—சமூகத்தில் மிகப் பழமையான சட்ட வடிவத்தைப் பேணுபவராக அரசர் இருந்தார் என்பதை உறுதிப்படுத்துவதற்காக மேலும் ஓர் ஆய்விற்கு இது இட்டுச்செல்லலாம். வேதகால சமூகத்தில் வேள்வி நடத்தாமலிருக்கவில்லையென்றாலும், அப்படி வேள்வி நடத்தாமை துரோகங்களில் ஒன்றாகும் என்று கற்பனை செய்யலாம். ஆனாலும் 'சமூக விரோதப் போக்குகள்' எனப்பெற்ற கிளர்ச்சிகள் அடிக்கடி ஏற்பட்டிருக்க வேண்டும்; இச் சமூக விரோதப் போக்குகள் சமூகத்திற்கு எதிரான குற்றங்கள் அல்லது துரோகங்களாகும். எடுத்துக்காட்டாக, நாட்டுப்புறப் பகுதிகளில் நிலத்தையும் ஆநிரையையும் கவரும் நிகழ்வுகள் இருந்திருக்கவேண்டும். நீர்ப்பாசனம் பயன்படுத்தப்பெற்று வந்ததால், நீரைத் தவறாகப் பயன்படுத்தல், அடுத்திருக்கும் வயலின் பயிர்களை வேண்டுமென்றே நாசம் செய்தல் போன்ற செய்திகள் அரசரிடம் சென்றிருக்கலாம். நெடுஞ்சாலைகளில் இருந்துகொண்டு திருடர்கள் வழிப்பறி செய்து துணிகளைத் திருடியதை நாம் அறிவோம் (R. V. i, 65, 1; 191, 5; iv, 38, 5; v, 15, 5) சூதாட்டத்தால் கடன்பட்டிருந்த நிலையும் இருந்தது (R. V. vii, 118,1). வறுமையும் பட்டினியும் முன்னரே தோன்றிவிட்டன; எனவே, ஈகை மிகவும் போற்றப் பட்டது; கஞ்சத்தனம் கண்டிக்கப்பட்டது (R. V., x. 117, 2; 107, 5, 9, etc.) சமூக ஒழுக்கநிலை சில கட்டுப்பாடுகளை விதிக்கத் தூண்டின. ஏனெனில், சூதாடுகிறவனின் மனைவி மற்ற மனிதர்களின் கள்ளத்தொடர்புகளுக்கு இலக்கானாலும் (R. V. x, 34, 4), பெண்கள் மறைவாகப் பிள்ளைகளைப் பெற்றுவிட்டுச் சென்றாலும் (R.V. ii, 29, 1). இவர்கள் நிச்சயமாக ஆதரிக்கப்பட்டிருக்கமாட்டார்கள். சகோதரர்களுக்கிடையில் சண்டை, தகப்பனுக்கு அடங்காமை, கணவன் மனைவியரிடையேயான வஞ்சக ஒழுக்கம் ஆகியவை விரும்பத்தகாதவையென வற்புறுத்தப்பெற்றன (A. V., iii, 30, 2 & 3; R. V., x, 34, 5; R. V., x. 40, 6). கொலைகளும் இருந்திருக்கின்றன. சொல்லப்பட்ட துரோகங்கள்

இவைகள்; சொல்லப்படாத இன்னும் பிறவும் இருந்திருக்க லாம். ஆனல், இவைகளுக்கெல்லாம் சில வகையான சமூகக் கட்டுப்பாடு தேவையாயிற்று; நீதி வழங்கப்பெற்ற முறையின் உருவை இச் சமூகக் கட்டுப்பாடு பெற்றது. வேதகால சமூகத் தில், பிணையமீட்பு, சமயப் பரிகாரம் போன்ற இம் முறைகள் கரடுமுரடானவைகளாக இருந்தன. தருமத்திற்கேற்ப இவை கள் வழக்கமானதாக இருந்தாலும் இவ் வழக்கமான நீதிமுறை களாகிய தருமம் நிலைபெறவேண்டுமென்பதற்காக அரசர் தம் அதிகாரத்தை அடிக்கடி செலுத்தவேண்டியிருந்தது; எடுத்துக் காட்டாக,ஒரு கொலைவழக்கில் குற்றவாளி.தம் வைரதேயத்தைச் செலுத்தாமல்இருக்கலாம்;கூடாஒழுக்கம்பற்றிய வழக்கில் குற்ற வாளி போதிய இழப்பீடு அளிக்கத் தவறலாம்;அல்லது மாறுபட்ட குலங்கள் அல்லது இனங்கள் ஆகியவை மாறுபடும் நீதிமுறைக ளோடு கூடிய கட்சிகளைச் சேர்ந்த வழக்குகள் இருக்கலாம். இத்தகைய சமயங்களில் அரசரின் அதிகாரம் தவருது பயன்படுத் தப்படவேண்டும். தம் அதிகாரத்தாலும், ஒற்றர்களின் உதவி யாலும் அரசர் பயனுள்ள முறையில் துரோகத்தைத் தண்டித்து தருமத்தை, அதாவது, பழக்கவழக்கங்களை நிலைநிறுத்துவார். இந்த வழியில்தான் அரசர் துரோகத்தைத் தண்டித்து தருமத்தை நிலைநாட்டினர். வெறும் வழக்கமான நீதிமுறைகளை மட்டும் தருமம் கொண்டிருக்கவில்லை. நேர்மையானதையும் நல்லதையும் இது கொண்டிருந்தது. தம் அதிகார வலிமையால் அரசர் இதை நிலைநாட்டினர். ஆகையால், மனிதர்களுக்குள் இவர் இறையாக இருந்தார்—விராஜானி ஜனசய (R. V., x, 174, 5). இந்த இறைக்கும் குடிமக்களுக்குமிடையிலான உறவு நல்லெண்ணமும் பற்றுறுதியுமாகும்—விசஸ்தவ சர்வவாஞ்சந்து. ஆகையால்—மக்களுக்குள் அரசபதவி என்றும் இடம்பெற வேண்டும்—துருவா இராஜா விசாமயம் (Dhruva raja Visa-mayam; R. V., x, 173, 4).

## சமயச் சார்பற்ற அரசபதவி

ஆகவே, இக் காலத்தின் மிகச் சிறப்பான வளர்ச்சி, ராஷ்டி ரத்தைப்போல் அரச பதவியும் நிலைபெற்ற ஒரு நிறுவனமா யிற்று; ராஷ்டிரத்தின் உயிராக அரசபதவி இருந்தது. மானிடத் தேவைகளிலிருந்து இது தோன்றியது. மானிடத் தேவைகளைப் போல் இது நிலைபேறு உடையதாக இருந்தது. இது எப்படி எழுந்தது என்பது இவ்வாறு விளக்கப்பெற்றது. 'தேவர்களும் அசுரர்களும் போரிட்டுக்கொண்டிருந்தனர்'...... அசுரர்கள் தேவர்களை வென்றனர். நாம் தலைவர்களைப் பெற்றிராத காரணத்தால்-அராஜத்ய-அசுரர் நம்மைத் தோல்வி

யுறச் செய்தனர்' என்று தேவர்கள் கூறினர். நாம் ஓர் அரசரைப் படைக்கலாம். எல்லாரும் உடன்பட்டனர்.'[100] ஆரியருக்கும் ஆரியர் அல்லாதாருக்கும் நடந்த போரின் மருட்சி உண்டாக்கும் பிற்காலப் பதிவாகவும் இப்போர் வேதகால முற்பகுதியில் அரசபதவி தோன்ற உதவியது. இருந்தபோதிலும், ஒரு முக்கியத் தேவையின் காரணமாக, அதாவது, போரில் ஒரு தலைவரின் தேவை காரணமாக எழுந்த அரசபதவியின் குணவியல்பை இது எடுத்துக்காட்டுகிறது. ஆகவே, வேதகால அரச பதவியின் பொருள் அதிகாரமாகும்.[101] ரிதத்தின் பகைவர்களை அழிக்க வல்லதாகவும், தருமத்தை நிலைநாட்டி மக்களுக்குக் காவல் அளிப்பதாகவும் உள்ளது இந்த அதிகாரம்.[102] ஆகையால், வேத காலத்தில் அரசபதவி பெரும் புகழ், பெருமை, கீர்த்தி ஆகியவைகளோடு தொடர்புபடுத்தப்பெற்றது. இதனால் ஒரு சமயம், புருக்களின் அரசர் திராசதஸ்யு தமக்குத் தெய்வத் தன்மை கோரினர்.[103] இருப்பினும், அரசபதவி பொதுமக்கள் தொடர்புடையதாகவும் சமயச் சார்பு அற்றதாகவுமிருந்தது. பிராமண காலத்தில் இது அடைந்த புனிதத் தன்மை அல்லது சமயத் தோற்றம் இதற்கில்லை. ஆனால், துரோகத்தைத் தண்டித்து தருமத்தையும் இறுதியில் ராஷ்டிரத்தையும் அதாவது, அரசை நிலைநாட்டுகிறவரும் ஆரிய வழிபாட்டு முறையை நிலைநிறுத்துகிறவரும் அரசர் என்னும் கோட்பாடு, பழங்கால இந்திய வரலாற்றின் இனிவரும் காலத்திற்கெல்லாம் விதி வகுத்தது.

100 Ai, Br. Bk. i, 14.

101 வலிமைபெற்றவராக அக்னி குறிப்பிடப்பட்டார், R.V., iv, 12, 3. அரண்களை அழிப்பவராக அரசர் விளக்கப்பட்டிருக்கிறார், Macdonell, 'Vedic Index,' II, p. 212

102 R.V., iii, 43; R.V., iv 4, 3; R.V., vii, 13; R.V,, x, 173, 2,

103 R.V., iv, 42,

# 3. சமயப் பாதுகாப்புப் பொறுப்பின்கீழ் அரசபதவி

## (கி. மு. 1000—700)

### பிராமண காலத்தின் தனிச் சிறப்புகள்

வேதகால முற்பகுதி முடிவுறும்பொழுது இதுவரை இந்தோ ஆரியர்களின் கிழக்கெல்லையாக இருந்த சரஸ்வதியை இவர்கள் கடந்தார்கள். கங்கை சமவெளிக்குள் சென்று பரவ இவர்கள் தயாராக இருந்தனர். இவர்களுடைய வரலாற்றில் இது குறிப்பிடற்குரிய கட்டமாகும். ஏனெனில், இவர்களின் கிழக்கு நோக்கிய முன்னேற்றத்தோடு சமூக, அரசியல் நிறுவனங்களில் மாற்றங்கள் ஏற்பட்டன. சாதிகள் முறையில் சமூகத்தின் வேறுபாடு, மற்ற எல்லாச் சமூக நிறுவனங்கள்மீது சமயத்தின் படிப்படியான சிறப்புப் பெறவும் இறுதியாக அரசின்மீது இதன் ஆதிக்கம் சமூக—அரசியல் சிக்கலை உண்டாக்கியது. வருங்காலத்தில் இந்த ஆட்சிமுறையில் இதன் அடையாளத்தை இது விட்டிருக்கிறது. இக் காலத்தில் இலக்கிய எழுத்துச் சான்றாகிய பிராமணங்களின் பரந்த சமயச் சடங்குமுறைச் சட்டத் தொகுப்பில் இவைகள் பிரதிபலிக்கின்றன. இவைகளையொட்டி இக் காலத்தைப் பிராமண காலமென நற்பெயரிடலாம். போதிய அளவில் இது ஒரு முன்னேற்றக் காலமாகும். சமயப் பாதுகாப்புப் பொறுப்பில் அரசு அமைப்பிலும் செய்கடமையிலும் வளர்ச்சியடைந்தது. அரசபதியின் முற்காலத்திய கருத்துப் பொருளிலும் அளவிலும் வளர்ச்சியடைந்தது. சமூகம் செயல்முறை சார்ந்த வளர்ச்சிபெற்றது மட்டுமன்றி, இணைப்பிற்கும் விரிவாக்கத்திற்கும் புதிய வாய்ப்புகளை இது அளித்தது. இந்தோ-ஆரியர் வாழ்க்கையின் அரிதான செயல்கூடும் நிலைகளைப் புதிய சிந்தனை முறைகளும் புதிய செயற்பாட்டுக் களங்களும் முன்குறித்துக் காட்டுகின்றன. இந்தியாவின் சமூக, மனவளர்ச்சியில் மிகச் சிறப்பான காலங்-

களில் ஒன்றாகிய பிராமண காலத்தின் முதன்மையான சிறப்பியல்புகள் இவைகளாகும்.[1]

## ஆரியர்கள் விரிவடைதல்

இக்காலத்தின் மிகச் சுவையான உட்கதைகளில் ஆரியர்களின் படர்ச்சி ஒன்றாகும். கி. மு. 1000-ல், இவர்கள் 'சரஸ்வதியின் கரைகளை வந்தடைந்து, யமுனை—கங்கை வரையில் பரவினர்'.[2] இப்பொழுதும் முன்னைப்போல் இவர்கள் தஸ்யுக்களின் எதிர்ப்பைத் தடுத்து நிறுத்தவேண்டியிருந்தது. சுஸ்ன (susna), குயவ,[3] சம்பர (Sambara), அற்புத (Arpuda),[4] கரஞ்ச, பர்ணய, வங்கிருதர்[5] போன்ற தஸ்யுத் தலைவர்களில் சிலர் அடக்கப்பட்டாலும், இவர்களுடைய இனம் அழிந்து மறைந்துவிடவில்லை. சந்தரும் மார்கரும்,[6] கிலாதரும், அகுலியும்[7] போன்ற மற்றவர்களும் இருந்தனர். ஆதிக்குடிகள்பற்றி ஆரியரின் பேரச்சம், சதபதப் பிராமணத்தின் பல ஏட்டுரைப் பகுதிகளில் வெளியிடப்படுவதைக் காணலாம்.[8] ஆரியர்கள் இடையறாது தஸ்யுக்களின் தொல்லைக்குள்ளானார்கள் என்பதில் ஐயமில்லை. கடுமையான போராட்டமின்றி தஸ்யுக்கள் தம் உடைமை எதையும் விட்டுக்கொடுக்க விரும்பவில்லை.[9] தம் கருமை நிறம், பயங்கரத்தோற்றம், காட்டுமிராண்டித்தனமான பழக்கங்கள், திருந்தாப்பேச்சு, கொடூரமான ஊனைகள், திடீர் தாக்குதல்கள் போன்றவை இவர்களின் சிந்தனையை இடைவிடாமல் கலைத்தன.[10] அயித்தரேய பிராமண காலத்தில் சரஸ்வதியின் கரை வேள்விக்குப் புனிதமான இடமாக இருந்தது.[11] ஆனால், சதபதப் பிராமணம் இயற்றப்பெற்றபொழுது ஆரியர் கிழக்கில் நெடுந்தூரம் முன்னேறினர். வடக்கு வங்காளத்தில் உள்ள கரத்தோயா அல்லது அவுத்

1 Sat. Br., Introduction, p. ix, (S.B.E., Vol. xii).

2 Muir, Sans. Text Series, Vol. II, p. 397.

3 R.V., vii, 19, 2. Sanskrit Text Series.

4 R.V., i, 51, 6.

5 Ibid, i, 53, 8.

6 Taitt. Sam., vi, 4, 10, 1. Sat. Br., iv, 2, i, 4 & 6 சதபத பிராமணத்தின் சந்தரும் மார்கரும் இருக்கு வேதத்தின் ii, 30' 8. இன் சந்திகர் எனப் பெயர் பெற்ற இனத்தின் குருக்கள் அல்லது தலைவர்களாக இவர்கள் இருக்கலாம்.

7 Sat Br. i, 1, 4, 14; கிலாதரும் கிராதரும் ஒன்றே. அகுலிகனோடு இவர்கள் அசுரர் என விவரிக்கப்பெற்றிருக்கிறார்கள், Panch, Br., B, 11.

8 i, 2, 2, 16: i, 2, 5, 18; i, 3, 4, 13, etc,

9 SeeWeber, Ind. Studies, i, 186 & ii, 243.

10 Muir, 'Sanskrit Text Series' Vol.II, 6, 393

11 Risayoh vai Sarasvatyam Satramasata Ai, Br., ii, 19.

திற்கும் வடபீகாருக்கும்[12] இடையில் உள்ள காண்டாக் என்று பலவாறு அடையாளம் கண்டுணரப்படும் சதானீராவை[13] இவர்கள் அடைந்தனர். கணிசமான காலத்திற்கு ஆரியர்களின் கிழக்கு நோக்கிய முன்னேற்றத்தை இது குறிப்பிட்டதெனலாம். ஆனால், சிறிது சிறிதாக சதானீராவையும் கடந்தனர். எனவே, 'இப்பொழுது இதற்குக் கிழக்கில் பல பிராமணர்கள் இருந்தனர். இப் பகுதி நன்றாகப் பண்பட்டிருந்ததென்று சதபத பிராமணம் கூறுகிறது.[14] புவிப்புறவியல் கூறுகள் காரணமாகத் தெற்கில் இவர்களின் முன்னேற்றம் தடைப்பட்டது. ஆந்திரர், புந்திரர், சபரர், புலினிடர், முட்டிபர் ஆகியோர் ஆரிய நாட்டின் கோடிகளில் வசித்தனரென்றும், இவர்கள் எல்லையில் வசித்த இனங்களாக கருதப்பெற்றனரென்றும் அயித்தரேய பிராமணத்திலிருந்து[15] நாம் அறிகிறோம். இதே நூல் விதர்ப்ப நாட்டின் அரசர் பீமனை[16] பெரிய அரசர்களில் ஒருவரென்றும், இவர் எல்லா இடங்களிலிருந்தும் திறை பெற்றார் என்றும் கூறுகிறது. கி. மு. மூன்றாம் நூற்றாண்டில் ஆந்திரரும் புலினிடரும் தென்னாட்டினர் என்பதை இப்பொழுது நாம் அசோகரின் கல்வெட்டுகளிலிருந்து[17] அறிகிறோம். ஆபஸ்தம்பிய தர்ம சூத்திரத்தை கி. மு. 600—300[18]-க்கும் இடையில் செய்த ஆபஸ்தம்ப தனிமுறைக்குழு ஆந்திர நாட்டில் தோற்றுவிக்கப்பெற்றிருக்க வேண்டுமென்று கூறப்படுகிறது.[19] இக் காலத்தை நாம் சரியென்று ஏற்றுக்கொண்டால், ஆரியர் பண்பாட்டிற்கு ஆந்திரர் மாறத் தொடங்கிய காலத்தை அடைவதற்கு மற்றொரு நூற்றாண்டு அனுமதிக்கப்படலாம். ஆகையால், இவர்கள் இன்னும் தஸ்யுக்களாகக் கருதப்பட்டதில் வியப்பில்லை.[20] ஆனால், ஆரியரின் தெற்கு நோக்கிய முன்னேற்றம் விரைவாக இல்லையென்றால் கிழக்கு நோக்கிய முன்னேற்றம் வேறுவிதமாக இருந்தது. அயித்தரேய பிராமண காலத்தில் கிழக்கில் இருந்த கிராமங்களில் மக்கள் செறிந்து வசித்ததை நாம் காணுகிறோம்.[21] இன்னும்

[12] Muir, 'Sanskrit Text Series,' vol. II. p. 404.

[13] Sat. Br. i, 4, 1, 10. See weber, Ind. Stud, I, p. 170. கிழக்கில் ஆரியரின் படர்ச்சியில் மூன்று நிலைகள் இருக்கின்றன. (1) பஞ்சாபிலிருந்து சரஸ்வதிக்கு, (2) இங்கிருந்து சதானிராவிற்கு, (3) மேலும் கிழக்கில், என்பது இவருடைய கருத்தாகும்.

[14] I, iv, 1, 15 & 16

[15] vii, 18

[16] vii, 34

[17] R. Ed. v.

[18] Kane, 'History of Dharma Sastra,' pp. 45 & 46.

[19] S.B.E. Vol. II, Introduction, xxxii-xl`ii.

[20] Ai. Br., vii, 13

[21] Ai. Br. Translated by Keith, p. 193

பின்னுல் சதபத பிராமணம் ஜனகரை சாம்ராட் எனக் கூறு கிறது. அதாவது, விதேகத்தின் பேரரசர் எனக் கூறுகிறது. இந்த உண்மைகளிலிருந்து இப்பொழுது ஆரியர்களின் எல்லே பஞ்சாப், இமயமலே ஆகியவற்றிலிருந்து வங்காளத்தின் எல்லேப் பகுதிகளுக் கும், தெற்கில் ஆந்திரநாடு வரைக்கும் பரவியதென்று நாம் முடிவு செய்யலாம்.

## ஆரியப் படர்ச்சியின் விளேவு

ஆனுல், ஆரியரின் விரிவடைவு, ஆரியர் அல்லாதாரின் விடாப்பிடியான எதிர்ப்பைத் தடுத்து நிறுத்தாமல், அல்லது இவர்களின் சமூக வாழ்க்கையிலும் சிந்தனேயிலும் மிகக் குறிப் பிடத்தக்க மாற்றங்களேப் புகுத்தாமல், ஏற்பட்டிருக்கமுடியாது. சரஸ்வதிக்கப்பால் இவர்கள் பரவியதும் பிரமவர்த்தம் அல்லது ஆரிய வர்த்தம் எனப் பெயர்பெற்ற நாட்டிற்கு இவர்கள் வந்தனர்; அதாவது, கங்கை, யமுனே ஆறுகளுக்கு இடையில் இவை இரண்டும் கலக்கும் இடம்வரை உள்ள நாடாகும். இந்து வரலாற்றின் இனிமேல் வருகின்ற காலத்திற்கெல்லாம், இந்த நாடு பெற்றிருந்த பெருமைக்கும் தூய்மைக்கும் இந்தியாவின் மற்றெந்தப் பகுதியும் சமமாகாது. ஆரியவர்த்தம், அதாவது, ஆரியரின் பெருநீர்ச்சுழி என்ற பெயரால் காரணம் சுட்டிக்காட் டப்படுகிறதெனத் தெரிகிறது. ஆரியர் அல்லாதாரிடமிருந்து கீழ்ப்படியாத உறுதியான எதிர்ப்பை ஆரியர் தடுத்து நிறுத்தி யிருக்கவேண்டும். இந் நாடு, இந்தியாவின் மிகச் செழிப்பான கவர்தற்குரிய பாகமாக இருப்பதோடு, பெரும் திறமுறைச் சிறப்பு டையதாக இருக்கிறதை உணரும்பொழுது நிகழக்கூடியது உறுதிப்படுகிறது.[22] இந்த நாட்டைக் கைப்பற்றி வடஇந்தியா வின் படையெடுப்பாளர் தெற்கில் அல்லதுகிழக்கில் தடையின்றிச் செல்லலாம்: ஒருபுறம், பீகாருக்குள்ளும் வங்காளத்திற்குள்ளும், மறுபுறம், மாளவத்திற்குள்ளும் குஜராத்திற்குள்ளும் செல்ல வழி திறக்கிறது. இந்திய வரலாற்றின் பின்விளேவு நிகழ்வுண்மைகள் இதற்குச் சான்று கூறும். ஆகவே, ஆரியர் அல்லாதார் இந்த நாட்டிலிருந்து துரத்தப்பட்டு இறுதியில் வெளியேற்றப்படுவ தற்கு முன் மிக்க உறுதியான முறையில் இவர்கள் போரிட்டிருக்க வேண்டும். ஆனுல், இந்த நாட்டைக் கைப்பற்றுவதற்காக ஆரியர் கள் மேற்கொண்ட பேராற்றல் மிக்க முயற்சி இவர்களின் பார் வையில் இதனுடைய தகவு பெருகிற்று; வெற்றிகொண்டபின் இங்கு இவர்கள் உண்மையில் தங்கி வசிக்கையில், இந்த நாட்டின் தகவையும் நன்மைகளேயும் இவர்களும் உணர்ந்திருக்கலாம். இந்-

[22] C.H.I., pp. 21—22.

நாடு கைக்கொள்ளப்பெற்ற பிறகு கிழக்கிற்கும் தெற்கிற்கும் பாதை எளிதாயிற்று. ஆரியர் கிழக்கு நோக்கியும் தெற்குநோக்கியும் பரவுகையில், இந்நாடு மெய்யாக மத்திய நாடாயிற்று. அதாவது, ஆரியரின் அதிகார எல்லையின் மையமாயிற்று. இங்கு ஆரியர்தம் இரத்தப் பண்பாட்டுத் தூய்மையைத் தக்கவைத்துக் கொள்ளமுடியும். இங்கு எல்லாம் மானிட வாழ்க்கைக்குச் சாதகமாக இருந்தது. வடமேற்குக் கோடியிலும், தெற்குக் கிழக்குக் கோடியிலும் இருந்த மக்களின் ஊழ்க்கூறாக இருந்ததைப்போல், எதிரிகளோடு போரிடும் வாய்ப்பு இங்கு இல்லை. மேலும், சிறிது உழைப்பால் போதிய அளவு வாழவும் வழங்கவும் இம் மக்கள் உற்பத்தி செய்யலாம். இயற்கையாகவே, இங்கு மக்கள் பல்வேறு தொழில்களுக்கான ஓய்வு பெற்றிருந்தனர். நெடுந்தொலைவு சென்று பரவியவர்களைவிட இவர்கள் பண்பட்ட பாங்குகளைப் பெற்றிருந்தவர்களாகவும், பெருமளவு இரத்தப் பண்புத் தூய்மையைத்தக்கவைத்துக் கொண்டவர்களாகவுமிருந்தனர். எனவேதான், இந்தக் காலத்திலும், இதைத் தொடர்ந்து வரும் காலத்திலும், இந்நாடு ஆரியப் பண்பாட்டின் மூலத் தோற்றுவாயாக இருந்தது. நாட்டின் மற்றப் பாகத்திற்கு இது விதி வகுத்தது.

## சாதியின் எழுச்சி

இப்பொழுது ஆரியர்களின் இவ்விரிவடைந்த நிலைக்கு இவர்களுடைய மிக உயர்ந்த அமைப்பாற்றல்கள் தேவைப்பட்டிருக்க வேண்டும். இவர்களுடைய விரிவு வழிவகை மெதுவானதுதான் என்பதை நாம் ஏற்றுக்கொண்டாலும், இவர்களின் சப்தசிந்து நாட்டிலிருந்துமேலும் இவர்கள் பரவியதால் இவர்களின் எண்ணிக்கை சிறிது சிறிதாகக் குறைந்தது. இரண்டு வகையில் இது எதிர்ச் செயலாற்றியது. ஒன்று, திறமையான அமைப்பை இது ஊக்கமளித்து வளரச்செய்தது ; திறமையான அமைப்பு எப்பொழுதுமே தனித்துறைப் பயிற்சியைப் பணியில் தவிர்க்க முடியாதபடி ஆக்கிற்று. ஆரியரல்லாதாரின் விடாப்பிடியான எதிர்ப்பின் காரணமாக அடுத்தடுத்து நிகழ்ந்த போராட்டமும் இதன் பாழான தன்மை, போரிடும் கலையிலும், படையல் கலையிலும் தனித்துறைப் பயிற்சியை வற்புறுத்தியது. ஏனெனில், வீரர்கள் என்ற முறையில் க்ஷத்திரியர்கள் போரிட்டனர். கடவுளர்களின் நட்பாதரவுகளை வேண்டிப்பெற குருமார்கள் தொழுதனர், படையல் செய்தனர். மேலும், இடங்களை வென்று கைப்பற்றியது புதிய இடங்களை ஆரியர்களின் உடைமையாக்கியதால் பழைய எதிரிகள் அமைதியான தொழில்களில் ஈடுபட்டனர், எனில், இந்த நிலங்கள் பண்படுத்தப்படவேண்டும்.

இவற்றின் பெரும் பொருள்வளங்களை வேண்டிப் பயன்படுத்த வேண்டும். வேளாண்மை, வணிகம், தொழில் ஆகியவற்றின் கலையில் தனித்துறைப் பயிற்சி இதற்கும் தேவைப்பட்டது.

எனவே, வேதகால நெகிழ்ச்சியான சமுதாயப் பிரிவுகள் படிப்படியாக சாதிகளாகக் கெட்டிப்படத் தொடங்கின. வேத காலம் முடிவடையும்பொழுது கூட அல்லது குறைய தெளிவான உருவில் மூன்று அமைவுற்ற சமுதாய வகுப்புகள் தோன்றின; இவை இப்பொழுது சாதிகளாகக் கெட்டிப்பட்டன. இம் மூன்று சாதிகளோடு வென்று அடிமைப்படுத்திய ஆதிக் குடிகளிலிருந்து இன்னுமொரு சாதி சேர்க்கப்பட்டது. வெற்றியாளர்கள் அமைதியுற்றபொழுது வெற்றிகொண்ட ஆதிக் குடிகளோடு என்ன செய்வதென்ற பிரச்சினை எழுந்தது. இவர்களை எவ்வளவு வெறுத்தாலும், இவர்களின் தொடர்பை இயன்றவரை தவிர்க்க முடியவில்லை. பல நூற்றுண்டுகள் உருண்டோடிய பின், இவர்களின் இன வேறுபாடுகள் மறைந்ததும் இவர்கள் விட்டுக் கொடுக்கும் பண்புடையராயினர்.

'தொல்குடி சார்ந்த இந்திய இனம் அல்லது முற்காலத்தில் இந்தியாவில் குடியேறிய ஆரிய இனத்தின் ஒரு கிளை அல்லது பிராமண வெற்றியாளர்களால் வென்று அடக்கப்பட்ட ஓர் இனத்தை, சூத்திரர் ஆகிய நான்காம் சாதி கொண்டிருந்ததென் பது பேராசிரியர் ரோத் (Roth) என்பாரின் கருத்தாகும்.[23] இது எதுவாயினும், ஆரியர் தம் சமூக அமைப்பில் பழங்குடியினருக்கு ஓர் இடமளித்ததோடன்றி, இவர்களுக்குப் படிப்படியாக மிகச் சிறந்த சிறப்புரிமைகள் சிலவற்றை மெய்யாகவே இவர்கள் விட்டுக்கொடுத்தனர். 'மிக நன்ருகத் தெரிந்த நிகழ்வுகளில் ரதகாரர்' (Rathakaras) ஒன்றுகுமெனப் பேராசிரியர் மாக்ஸ் முல்லர் குறிப்பிடுகிருர். 'மூன்று உயர்சாதிகளைச் சேராத ஒரு நிசாத (Nisada) தலைவராக இருந்தாலும், நிசாதஸ்தபதி, பெரும் வேள்வியில் சேர்த்துக்கொள்ளப்பெற்ருர். எடுத்துக்காட்டாக, காவேதகுகாசரு (Gavedhukacaru).[24] மேலும், வேள்வி நடத்தும் பெரும் சிறப்புரிமையைச் சூத்திரர் பெறலாம் என்ற உண்மை சதபத பிராமணத்திலிருந்து தெரியவருகிறது.[25] எனவே, நான்கு சாதிகள் உருவானதன் காரணங்களில் ஒன்று ஆரியரின் வெற்றியும் விரிவுமாகும்.

23 Muir, 'Sanskrit Text Series,' Vol. I, p. 292.

24 Ibid., p. 366.

25 I, 1, 4, 12.

## பிராமணங்கள், சடங்குவெறி ஆகியவற்றின் எழுச்சி

மேலும், இன்னொரு வழியில் இவர்களின் விரிவு எதிர்ச்செயலாற்றியது. தாயகத்து மக்களுக்குள்ளிலிருந்து: வீசி எறியப்பட்ட சிறிய ஆரிய மக்கள்தொகை, மாறுபட்ட வழக்கங்களோடும் நடைமுறைகளோடும் தம் சொந்தப் பண்பாட்டை இழந்துவிடுகிற தீங்கிற்கு ஆளாகும் நிலையிருந்தது. மெய்யாக, தம்முடைய மரபு, பழக்கவழக்கங்கள் ஆகியவற்றை மறக்கத்தொடங்கி இவர்கள் யாரோடு தொடர்புகொண்டார்களோ அவர்களுடைய பழக்க வழக்கங்களை அறியாமலே மேற்கொள்ளத் தொடங்கினர். ஆரியர் வசித்த எல்லைப் பகுதிகளில் அல்லது தொலை ஒழுக்கமான மாவட்டங்களில் வசித்தவர்களின் நிலை சிறப்பாக இப்படித் தானிருந்தது. எடுத்துக் காட்டாக, பஞ்சாபின் மக்கள் சமய மாறுபாடான மனப்போக்குகளைக் காட்டிக்கொடுத்துவிட்டனர்.[26] பீகாரில் வசித்தவர்கள் பெருமளவு ஆரியரல்லாதாரின் பண்பாட்டை ஏற்றுக்கொண்டு, பழங்குடியினரின் இரத்தம் விஞ்சி மேம்பட்டிருந்தமையால் நடுநாட்டில் வசித்த ஆரியர்கள் இவர்களை வெறுப்புடன் நோக்கினர். உள்நாட்டு இனங்களின் நெருக்கத்தை ஆரியர் இங்கு உணர்ந்திருக்கவேண்டும்; இவர்களோடு கலந்துவிடும் அளவிற்கு இவர்கள் (ஆரியர்கள்) வந்திருக்கவேண்டும். இதனால்தான், இக் கிழக்குப் பகுதிகள் குறைபாடான முறையில் பிராமண மயமாக்கப்பட்டனவென்று டாக்டர் கெயித் கூறுகிறார். இதைப்போல் ஒரு நிலையில், இவர்கள் தம் பண்பாட்டையும் சமயத்தையும் இழந்துவிடலாமென்ற அச்சம் ஆரியர்களின் மனத்தை அலைக்கழித்தது. நடு நாட்டிலிருந்தவர்களும் அல்லது இதிலிருந்து வெகுதொலைவிலிருந்த பகுதிகளில் வசித்தோரும் இவர்களின் சமூக மரபுரிமைக் கூறுகளைத் தேடிச் சேர்க்கும், தொகுக்கும் தேவையை உணர்ந்தனர். வேதகால வழிபாட்டின் முதன்மையான சடங்குகளையும் வினைமுறைகளையும் இச் சமூக மரபுமுறை கொண்டிருந்தது. ஏனெனில், இவ்வினை முறைகளைப் பெற்றிராத ஆரியர் அல்லாதாரையும் ஆரியரையும் இதுதான் பிரித்துக்காட்டியது, 'ஒரேபடித்தான வழிபாட்டு முறையின் தேவை',[27] பேராசிரியர் எக்லிங் (Eggeling) கூறுவது போல் உணரப்பெற்றது; 'வழிபாட்டின் சடங்குமுறை முழுவதையும் முறையாக ஒழுங்குபடுத்தும் முதல் முயற்சிக்கு இது வழி செய்தது. அத்வரையு (Adhvaryu) அல்லது வேள்வியின் பொருள் சார்ந்த பகுதியை நிறைவேற்றுபவர்; உதகாத்ரி (udgatri) அல்லது பாசுரங்களை ஓதுபவர்; ஹோட்ரி அல்லது புனிதமான

[26] C.H.I., p. 117

[27] Sat. Br. S.B.E., Vol. XII.

வேள்வி வழிபாடுகளைப் படிப்பவரும் பிராமணரும் அல்லது இச் செயல் நிறைவேற்றம் முழுவதற்கும் மேற்பார்வையாளரும் ஆகிய நான்கு பிரிவு குருமார்களுக்கு வேள்விபற்றிய கடமைப் பணிகளை இது உறுதியாகப் பகிர்ந்தது.'[28] வேள்விப் பணிகளின் இத் திட்டவட்டமான பகிர்ப்பும், இம் முறைப் பாடும், வேள்விக் கலையில் தனித்துறைப் பயிற்சி பெற்றவர்களைப்போல், வழி பாட்டு முறைகள் ஆரியரல்லாதாரின் வழக்கங்கள் ஆகிய நெறிச் சிக்கலில் இக் கடமைகளை இழந்துவிடுகிற அல்லது மறந்துவிடுகிறவர்கள் வருமிடர் துணிந்து ஏற்றுக்கொண்டு செயலில் இறங்குவதற்காகவே இக் கடமைப் பணிகள் வரையப்பெற்றுள்ளன. வேதகால வழிபாட்டு முறைகளை விளக்கவும் சீரமைக்கவும், விவரிக்கவும் இது வழிசெய்தது. மிகச் சிறந்த அறிவு, பழைய பண்பாட்டை அப்படியே தக்கவைத்துக்கொண்டிருப்பவர்களின் கற்பனை, இதே சமயத்தில், பெருமளவு ஓய்வையும் நூலறிவையும் பெறல் ஆகியவை இப் பணிக்குத் தேவையாயிற்று. 'நன்முகப் பேசியவர்களும்'[29] 'வேள்வியைக் குறைவின்றி நிறைவேற்றியவர்களும்' இருந்த இடமாகிய நடு நாடு[30] இத் தகைய மக்களைக் கொண்டிருந்தது இவர்கள் எல்லாருமன்றி, வேள்விக் கூட்டுமன்றத்தை ஒரு சாதியாக உருவாக்க முற்பட்டுக் கொண்டிருந்த பிராமணர்கள் இப் பணியை மேற்கொண்டனர்; இதன் விளைவு பிராமணங்களின்[31] படைப்பாகும். வேதகால வழிபாட்டு முறைகளின் நுட்ப விளக்கங்களையும், விரிவான சட்டத் தொகுப்புகளையும், மந்திரங்களின் பொருள்பற்றிய ஊகங்களையும் இவை கொண்டிருந்தன.[32]

இவ் இலக்கியத்தின் வளர்ச்சியோடு ஆரிய சமயம், சமுதாயம் ஆகியவற்றின் வரலாற்றில் ஒரு புதிய யுகம் தோன்றியது. சமூக, சமயத் தேவைகளின் நுட்ப விவரங்களும் பரவலான முக்கியக் கூறுகளும் இறுதியாக முடிவுசெய்யப்பட்டன. இப்பொழுது இவைகளை நாம் பெற்றிருக்கும் உருவில் பிராமணங்கள்கொண்டு வரப்பெற்றுள்ளபொழுது, கல்பம் முழுவதும்( அதாவது, வேள்விச் சடங்குகளைச் செய்யும் முறைகளை), சில சிறிய கருத்துகளைத் தவிர, முடிவுசெய்யப்பட்டதுமன்றி, பெரும்பாலான வழிபாட்டு முறைகளின் புதைமறைவான, உருவக வடிவான பொருள் முடிவு செய்யப்பட்டது[33] குறிப்பிடத்தக்கதாகும், 'உருவக வடிவின் பொருள் விளக்கம், ஊகஞ்செய் அறிவு'. ஆகியவற்றிற்கான

28 Ibid., p. xx.

29 C.H.I., Vol. I, p. 118.

30 Ai. Br., viii, 14.

31 Oldenberg, Buddha, p. 395.

32 Dr. Haug's 'Introduction to the Ai, Br.' pp. 3—4.

33 Ibid., p. 7.

பெருமளவு விருப்பால் இவைகளின் உட்பொருள் மாசுபடுத்தப் பட்டன. இருப்பினும் இதற்குச் சிறிது நியாயம் இருக்கிறதாகத் தோன்றுகிறது.[34] தம்முடைய முற்கால மரபுகளையும், வழிபாட்டு முறைகளையும், சமயச் சடங்குகளையும் பேணவேண்டுமென்னும் பேராவலாலும், இதேமுறையில் இவைகளை வருங்காலத்திற்குத் தரவேண்டுமென்பதாலும், முற்றிலும் மக்கள் சார்ந்த அல்லது சமயம் சாராததும்,சமயம் சார்ந்ததுமானவைகளைப் பிரித்துணர ஆரியர்கள் விரும்பவுமில்லை, முடியவுமில்லை. இவர்களுடைய முற்கால வழக்கங்கள், வழிபாட்டு முறைகள், சமயச் சடங்குகள் ஆகியவற்றின் ஒவ்வொரு சிறிய பிரிவும் இப்பொழுது உட்பொருள் நிறைந்ததாக இவர்களுக்குத் தெரிந்தது. முன்னோர் வழிபாட்டிற்கும், கடந்த காலத்தோடு தூய்மை சேர்ப்பிற்கும் வழிகாட்டும் இந்த உணர்வு, ஆரியர்களின் மரபுரிமை இயல்புகளை மாற்றியமைத்தது. ஆனால், இவர்களின் பழைய மரபுகள், வழிபாட்டு முறைகள், சமயச் சடங்குகள் ஆகியவைகளில் பல இப்பொழுது மாற்றப்பட்டிருக்கின்றன. இவை நன்றாக அறிந்து கொள்ளப்படவுமில்லை. ஆரியவர்த்தத்தின் மக்கள் இவர்களின் வேதகால மரபுகளையும் வழிபாட்டு முறைகளையும் முற்றிலும் தூய்மையாக வைத்திருக்கவில்லை; சில வழிபாட்டு முறைகளையும் சமயச் சடங்குகளையும், வழக்கங்களையும், மரபுகளையும் இவர்களும் மறந்திருக்கலாம் அல்லது அரைகுறையாக நினைவு வைத்திருக்கலாம். ஒவ்வொரு வழிபாட்டு முறையையும் சடங்கையும் விளக்கும் தீவிரமான முயற்சியை இது குறிப்பிடுகிறது. வேதகால வழிபாட்டோடு அல்லது மக்கள் பொழுதுபோக்கோடு ஒரு சடங்கு உண்மையில் தொடர்புடையதா, ஒரு குறிப்பிட்ட வழக்கம் மெய்யாகவே சமய இயல்புடையதா, அல்லது வியத்தகு விளைவுகளைத் தோற்றுவிக்கும் ஆற்றல் உடையதா என்பது பெரிதன்று; இவைகள் எல்லாவற்றையும் சமமாக நடத்தி, விளக்கி, பின் இவைகளோடு கூடிய தூய்மைப் பெருமையோடு மக்களுக்களிக்கப்பட்டன. இராஜசூயம், வாஜபேயம் போன்ற மக்கள் தொடர்புடைய வழிபாட்டுமுறைகள், அல்லது அசுவமேதம் போன்ற புதிர்விளைவுகளையுடைய வழிபாட்டு முறைகள் ஆகியவற்றிற்கு சமயத் தோற்றமளிக்கப்பட்டது;[35] பெரு வேள்விகளின் பேருருவை இவை பெற்றன. எனவே, பெரு விளைவிற்குரிய தூய்மையை இவை பெற்றன. புறக்கூறுபாடுகள் அல்லது சமயச் சார்பற்ற கூறுபாடுகள் இவைகளுக்குள் நுழைந்துவிடாமல் தனிப் பயிற்சி பெற்றவர்களால் மட்டுமே சரிநுட்பமாக நடத்தப்படவேண்டுமென்பது வலியுறுத்தப்பெற்றது. எனவே, வழிபாட்டு முறைப்

34 Winternitz, 'History of Indian Literature,' p. 188.
35 C.H.I., pp. 141-2.

பாட நூல்கள் அல்லது பிராமணங்கள், பொருள் விளக்கம் சார்ந்த,புராண இலக்கியம் சார்ந்த அல்லது வாதத்திற்குரியதும், சமய நூலுக்குரியதும் அல்லது பொருள்களின் இயல்புபற்றிய மெய்யுணர்வு சார்ந்த ஊகங்கள் போன்ற வேள்வி நடைமுறை நெறிகளையும் (விதிகளும்) விளக்கங்களையும் (அர்த்தவாதங்களையும்) கொண்டிருந்தன (உபநிடதங்கள்).[36]

வேதகாலப் பண்பாட்டைப் பேணுவதில் பிராமணங்கள் எவ்வளவு பயனுடையனவாக இருந்திருந்தும், சமூக, சமய வளர்ச்சிப் பரப்பைச் சுருக்குவதற்கு இவைகள் பொறுப்புடையனவாக இருக்கின்றன. நல்லமுறையில் ஆக்க நோக்கங்களுக்காக செலுத்தக்கூடிய ஒரு வகுப்பின் ஆற்றல்களை இவர்களின் சடங்குமுறைச் சிக்கல் பயன்படுத்திக்கொண்டது. எடுத்துக்காட்டாக அசுவமேத வேள்வியைக் கூறலாம். இருக்குவேத காலத்தின் போது,[37] இதை நடத்த ஆறு குருமார்கள் (ஹோட்டா, அத்வரியு, அவயாஜ, அக்னிமிந்தா, கிரபகிரபஹ, சமஸ்தர்) தேவைப்பட்டனர். பிராமணங்களின் காலத்தில் பெருஞ் செலவிற்குரிய, நீண்ட சடங்குகளில் இது ஒன்றாக வளர்ந்துகொண்டிருந்தது. 'மிக எளிய சோம வேள்வியாகிய அக்னிஷ்டோமம் (Agnistoma) நடத்துவதற்கு பிராமணங்களின் காலத்தில் பதினாறு வினையாற்றும் குருமார்கள் தேவைப்பட்டனர்.'[38] உண்மையில் ஆரியர்களின் சமூக வாழ்க்கைச் சடங்குகள், வழிபாட்டு முறைகளோடு இழைவிக்கப்பெற்றிருந்தது; ஆரியர்களின் ஆக்கவினைத் திறங்களையெல்லாம் அழித்துவிட இவை முற்பட்டன.

வேதகால ஆரியரின் கிளர்ச்சிமிக்க, நெருக்கடியான வாழ்க்கை தடைப்படுத்தப்பெற்றது. தன்னுடைய சொந்தப் பாதைகளுக்குள்ளே சுற்றியலைந்து மெதுவாக இது செல்லத் தொடங்கியது. இவ் வழிகள் பிராமணங்களின் படைப்புகளாகும். பிராமண வழிபாட்டு முறையை ஒவ்வோர் ஆரியரும் ஏற்குமாறும், பிராமணக் கருத்துகளால் தம் வாழ்க்கையை ஒழுங்குபடுத்திக்கொள்ளவும் அழைக்கப்பட்டார். இணங்காமை அழிவைக் குறித்தது. ஏனெனில், இது ஆரியரல்லாதாருடன் கலத்தலைக் குறிக்கும். 'கறுப்புக் கால்வழி வந்த'[39] ஆரியரல்லாதாரின் சமயக் கோட்பாட்டு முறை,வருணம் ஆகியவற்றின் மீது ஆரியர்கள் கொண்டிருந்த பெருவெறுப்பையும், இவர்களோடு கலந்துவிடு




36 Macdonell, 'History of Sanscrit Literature,' p. 202.
37 R.V., I–162–5.
38 Introduction to Ai. Br. p. 3. (Dr. Haug's trans.)
39 R.V., i, 101, 5; R.V., ii, 11, 18; R.V., iv, 28, 4; R.V., ... R.V., iv, 16, 9, etc.

பேரச்சத்தையும் மனத்திற்கொண்டால், முழு வினைத் திறத்தையும் இவ் விணக்கத்தின் பயன்பாட்டில் தவறாத நம்பிக்கையையும் முழுமையாக உணர்ந்துகொள்ளலாம். வழிபாட்டு முறைகளின் நிறைவேற்றம்,பேணுகைமட்டுமன்றி இங்குப் பயன்படுத்தப்படும் சொற்களின் சரியான உச்சரிப்பின்மீது ஏன் இத்தகைய சோர்வற்ற அக்கறையும் கவனமும் அளிக்கப்பட்டனவென்பதை இவ் வெறுப்பும் பேரச்சமும் விளக்குகின்றன.[40] மேலும், மிக உயர்ந்த ஆக்க அதிகாரங்களை யக்ஞம் அல்லது வேள்வி செயற்படுத்தியதாக நீண்டகாலமாகவே கருதப்பெற்றது.[41] எண்ணற்ற வழிபாட்டு மரபுகளையும் சமயச் சடங்குகளையும் யக்ஞம் கொண்டிருந்தது. ஆகவே, பழங்கால வழிபாட்டு முறைகள், சடங்குகள் ஆகியவைகள் பிராமணங்களில் தொகுக்கப்பெற்று, விளக்கப்பெற்று, விரிவாக்கப்பெற்றபொழுது இவைகள், மிகத் தூய்மையான இயல்பையும் மிக உயர்ந்த ஆக்க ஆற்றல்களையும் பெற்றிருந்தன; ஆரியரல்லாதரால் விழுங்கப்படாமலிருப்பதிலிருந்து ஆரியரின் சமயக் கோட்பாட்டையும் வருணத்தையும் பேண இச் சடங்குகளும் வழிபாட்டு முறைகளும் நடத்தப்பட்டன என்று கருதப்பெற்றபொழுது வழிபாட்டு முறைச் சமயம் அல்லது சடங்குவெறி தோன்றியது. வழிபாட்டுமுறைக் கலையிலும் பொருளிலும் தனிப்பயிற்சி செய்ததால், பிராமணர்களுக்கு உயர்தனி மதிப்பு நிலையையும், மிக உயர்ந்த ஆன்மீக அதிகாரத்தையும் மக்கள் வழங்கினர். இந்தோ–ஆரியர்கள் இவர்களுக்குச் சமுதாயத்தில் முதன்மையளித்தனர். பிராமணனை மதித்த அரசரும், வேலையில் அமர்த்திக்கொண்ட அரசரும் பெரு வாழ்வு வளம் பெற்றனர் என்று இருக்குவேதம் கூறுகிறது;[42] இவர்கள் மட்டுமே மிகப் பயனுடைய முறையில் கடவுளர்களோடு இடையிட்டுப் பரிந்து பேச முடியும் என்றும் கூறுகிறது.[43] ஆனால், அதர்வவேதம் இவர்களின் பெருஞ் சிறப்பைக் காட்டுகிறது. குருமார்களின் பிரார்த்தனையால் அழிவில்லா முழு அதிகாரம் கிடைக்கிறது;[44] இதே வழியில் நாடுகள் கிடைக்கின்றன. எதிரிகள் தோல்வியுறுகின்றனர்;[45] பிராமணர்மீதான எந்தத் தொல்லை, தீங்கு அல்லது நிந்தை செய்வோர் அரசரானாலும் அழிவர்.[46] 'இருவகையான

40 Muir, I, pp. 293—94, Ragozin, V. I, p. 386.
41 R.V., i, 93, 5; R.V., x, 90, 7—16; R.V., x, 92, 10.
42 R.V., iv, 50, 8 & 9.
43 R.V., iii, 53, 9 & 12; R.V., vii, 33, 2 & 3 & 5; R.V., vii, 83, 4.
44 A.V., iii, 19, 1.
45 A.V., iv, 40, 2.
46 A.V., v, 18, 1-7; A.V., v, 9, 3-5; A.V., v, 19, 12—15; etc.

கடவுளர்கள் இருக்கின்றனர், மெய்யாகக் கடவுளர்களாக உள்ள கடவுளர்கள்; புனித வேதங்களைக் கற்றுக் கற்பிக்கும் பிராமணர்கள் மானிடக் கடவுளர்கள்'[47] என்று வலியுறுத்தப்பெறும் பொழுது உச்சகட்டம் அடையப்பெறுகிறது. இது சதபத பிராமணத்தில் இருக்கிறது. இன்னும் முன்னால் தைத்திரீய சம்ஹிதையில், இரண்டு வகையான கடவுளர்கள் இருக்கிறார்கள் என்று அறிகிறோம். அதாவது, இவர்களின் இலராந் தன்மையில் வழிபடும் கடவுளர்களும், இவர்களின் உளராம் தன்மையில் வழிபடும் கடவுளர்களுமாவர். பிராமணர்கள் பின்கூறிய வகுப்பைச் சேர்ந்தவர்கள்.[48]

இப்படியாக, சப்த சிந்துத் தாயகத்திற்கு வெளியே ஏற்பட்ட ஆரியரின் விரிவு, நெகிழ்ச்சியான நிலையில் இருந்த வேதகால இன வகுப்புகள் சாதிகளாக வலுப்பெற உதவின. இரண்டாவதாக, வேதகால சமய வழிபாட்டு முறைகளும் சமயச் சடங்குகளும், பழக்கங்களும் மரபுகளும், ஒரு சடங்கு நெறிமுறையாக விரிவடைவதில் முடிவுபெற்றது. இக் காலத்தின் சமயமாகிய வேள்விச் சடங்குவெறி அமைப்பில் இவைகள் சேர்ந்து ஒரு வாழ்க்கையை எதிர்நோக்கி யிருந்தன. இந்த வாழ்க்கையின் விவரங்கள் வரையறை செய்யப்பட்டு விளக்கப்பெற்றன. உண்மையில், இந்தச் சமயத்தின் சூழலில் வாழ்க்கையின் பல்திறமான தனிச்சிறப்புகள் வெளிப்பட்டன. இந்தச் சூழமைவில் மட்டும் தான் இந்தோ-ஆரிய ஆட்சி அமைப்புமுறை ஆராயக்கூடும். ஏனெனில், இதனுடைய தன்மையையும் வளர்ச்சிப் போக்குகளையும் வேள்விச் சடங்குநெறிதான் போதிய அளவில் இயக்குகிறது.

## பிராமணச் சடங்குவெறியும் அரசும்

பலவகையான சமய வழிபாட்டு முறைகளில் சில வேதகால வழிபாட்டோடு தொடர்புடையனவென்பதையும், எனவே, இவைகளின் தோற்றம் சமயச் சார்புடையனவாக இருந்தன வென்பதையும் முன்னரே கண்டோம். வேதகால வழிபாட்டோடு தொடர்பில்லாத மற்றவைகளுமிருந்தன. எனவே, இவை பொது மக்கள் தொடர்பில் தோன்றின. அரச பதவியோடு தொடர்புடைய சடங்குகளையும் வழிபாட்டு முறைகளையும் பின் குறிப்பிட்டவகையில் சேர்க்கலாம். இவைகளில் மிக முக்கியமானவை இராஜசூயம், வாஜபேயம், அசுவமேதம் ஆகியவை; அரசர் தம் தரத்திற்கும் அதிகாரத்திற்கும் ஏற்ப இவைகளில் ஒன்றையோ

[47] Sat. Br., 11, 2, 2, 6.
[48] Taitt. Sam. i, 7, 3—1.

பலவற்றையோ நடத்தவேண்டியிருந்தது. இவற்றை இவர் விட்டுவிட முடியாது. எனெனில், இவர் தம் நாட்டை இழக்க நேரிடும்.[49] ஏனெனில், ஜனமேஜெயா, பரிக்ஷித், சார் யாதமானவர், அம்பஸ்தியர், சுதாஸ் பைஜவனர், அங்க, பரத தயுஸ்யந்தி போன்ற அரசர்கள் இத் திருமுழுக்காட்டும் சடங்கை இராஜசூயத்தைச் செய்தனர்; இதனால், 'நாடு முழுவதும் சுற்றி, எல்லாப் பக்கங்களையும் முற்றிலும் வெற்றிகொண்டனர்'.[50] இதை அறிந்த துருமுக பாஞ்சாலர், அத்தியராதி ஜானம்தபி போன்ற அரசர்கள் இதே செயல்களைச் செய்தனர்.[51] எனவே, இவர் அரசுகட்டில் ஏறியதை அபிடேகத்தால் அல்லது திருமுழுக் காட்டுச் சடங்கால் கொண்டாடப்படவேண்டும். இவரது அதிகாரம், தனிமதிப்பு நிலைஉயர்வு ஒவ்வொன்றிற்கும் இந்நோக் கத்திற்கெனக் குறிப்பிடப்பட்டதொரு வேள்வியை இவர் நடத்த வேண்டும். எடுத்துக்காட்டாக, திருமுழுக்காட்டப்பெற்ற அல்லது முடிசூட்டப்பெற்றபின், பரத, தயுஸ்யந்தியும் அங்கரும் நாட்டை வென்றனர். இவர்களுடைய வெற்றிகளைக் கொண் டாட ஓர் அசுவமேத வேள்வி செய்தனர்.'[52] இராஜசூய வேள்வி நடத்தியதால் அரசராக விரும்பியவர் அரசரானார். வாஜபேய வேள்வியால் இவர் பேரரசரானார்; அரசரது பதவி தாழ்ந்தது, பேரரசரின் பதவி உயர்ந்தது[53] என்பது சதபத பிரா மணத்தின் முடிவாகும். 'அரசரின் திருமுழுக்காட்டிற்கான அடிப்படையாகவே மக்கள் தொடர்புடைய ஒரு சடங்குமுறை' இராஜசூயமாகும்;[54] வாஜபேயத்தின் மக்கள் சார்புடைய இயல்பு இதில் தனிச் சிறப்புற்று விளங்கிய, ஒரு காலத்தில் முதன்மை யான, இதர பந்தயமாகும்; பரிவுடைய மந்திரத்தின் எளிய சடங்கின் விரிவாக்கம்தான் அசுவமேத வேள்வி.[55] இவைகள் இப்பொழுது பிராமணச் சடங்குமுறையில், அங்கமாகிவிட்டன; இவைகளை நடத்துதல் கட்டாயமாகிவிட்டது. அரச பதவி யோடு இவைகள் தொடர்புகொண்டுவிட்டன; இவற்றின் நிறை வேற்றத்தால் அரசபதவி தம் சமய இசைவாணையைப் பெற்றது. இப்பொழுது இவற்றை நடத்துவதற்கு எண்ணற்ற குருமார் களின் சேவையும் பல ஆண்டுகளும் தேவைப்படும் அளவிற்கு இவைகள் நுட்பமாகச் செய்யப்படுகின்றன. இவைகள் பெருஞ் செலவு பிடிக்கிறதாகவும், பயபக்தியுடன் கூடியதாகவும் இருந்த தைப்போல் சமயச் சடங்குகளும் வழிபாட்டு முறைகளும் நீண்ட தொடர்ச்சியானதொரு முழுச் செயல்முறையாக இருந்தன. இவ் வரசியல் வழிபாட்டு முறைகளின் அல்லது அரசருக்குரிய வேள்வி

49 Ai. Br., viii, 23.
50 Ibid., 21, 22 & 23.
51 Ibid., 23.
52 Ibid., 22 & 23.
53 Sat. Br., V. I, I, 13.
54 C.H.I., pp. 141—42.

களின் சமயச் சார்புடைய உட்கருத்துகள் அரச பதவியின் குணவியல்பை மாற்றியமைத்தன; நாம் கடந்த அதிகாரத்தில் பார்த்ததைப்போல் இவ்வரச பதவி சமயச் சார்பற்றதாக இருந்தது. இப்பொழுது இது முற்றிலும் சமயச் சார்பற்ற நிறுவனமாக இல்லை; அரசபதவி சமயத்தோடு தொடர்பு கொண்டும், இதனுடைய ஏற்பினை இது பெற்றும் ஒருவாறு இது சமயக் குணவியல்பைப் பெற்றுக்கொண்டது.

இக் காலத்தில்தான் ஆரிய வாழ்க்கையில் சமயம் ஆட்சி செய்தது. பல்வேறு சாதிகளுக்கும் இனங்களுக்கும் வகுத்தளிக்கப்பெற்ற வேதகாலச் சமய வழிபாட்டு முறைகளையும் சடங்குகளையும் ஆசார ஒழுங்குடன் நிறைவேற்றுவதில் சமயம் அடங்கியிருந்தது. இயற்கையாகவே, அரசபதவியை நிறுவிய அல்லது தொடங்கிய சடங்குகள் அரசபதவிக்கு ஒரு புனிதமான குணவியல்பைக் கொடுத்தன. ஆனுல், இதனுடைய சொந்த வண்ணங்களாலே அரசபதவியை அணிவிக்கையில் அல்லது இதைப் புனிதமாக்குகையில்,சமயம் இதன்மீது ஆதிக்கம் செலுத்தியது; அரச பதவியின் மீதான ஆதிக்கம் ராஷ்டிரத்தின் அல்லது அரசின்மீதான ஆதிக்கமாயிற்று. எனவே, கவனக் குறைவாக சமயத்தின் செயல்எல்லைக்கு அரசு இழுத்துக்கொள்ளப்பட்டது; இதனுடைய பாதுகாப்புப் பொறுப்பில் அரசு நெடுங்காலமிருந்தது.

இப்பொழுது அரசபதவியும் அதிகாரமும் அல்லது அரசபதவி ஒரு நிறுவனமாக இதன் பயனுடைய தன்மையை ஓர் அமைப்பிலிருந்து பெற்றுக்கொண்டது. அதாவது, அரசாங்கத்திடமிருந்து இதைப் பெற்றுக்கொண்டது. இதுவும் அரசபதவியைப்போல் ஒரு புதிய தனிச் சிறப்பைப் பெற்றது. அரசபதவியின் நிறுவன அடிப்படையைப் பின்னுல் ஆய்வதற்கு விட்டுவிட்டு, இதைத் தொடர்ந்த சடங்குகளின் விவரங்களை இப்பொழுது நாம் ஆராயலாம். எடுத்துக்காட்டாக, அரசரின் முடிசூட்டு விழா அல்லது சமூகத்தில் அரச பதவியின் செயற்பாட்டிற்கு முக்கியமான சமய இசைவாணையின் தனிச் சிறப்பியல்பை விளக்குவதற்காக இவர் அடைந்த மேதகுநிலை.

இது சற்றுச் சிக்கலான சடங்கென்று இராஜசூயத்தைப் பற்றிச் சொல்லப்பட்டிருக்கிறது. மற்ற வழிபாட்டு முறைகளோடு பலவகையான எண்ணற்ற சோமவேள்விகளின் நிறைவேற்றமும் இதில் அடங்கும். மறுபுறம், வாஜபேயம் அல்லது 'வலிமைப்பானம்', ஒரு தனித்த சோமவேள்வி எடுக்கக்கூடிய பலவகையான உருவங்களில் இதுவும் ஒன்றென ஏற்றுக்கொள்ளப்

பட்டிருக்கிறது....சோமவேள்வியின் மற்றவகைகளைப்போலன்றி, ஓர் அரசியல் சடங்கென இராஜசூயத்தைச் சொல்வதுபோல், இதைக் குறிக்கும் இதனுடைய முனைப்பான கூறுகள் சிலவற்றை இது பெற்றிருக்கிறது.[55] அபிஷேகம், புனரபிஷேகம், மகாபிஷேகம் ஆகிய மூன்று வகைகளை இராஜசூயம் கொண்டிருக்கிறது. இவ்வெல்லாச் சடங்குகளிலும் முதன்மையானது, அரசர் தலையில் திருநீர் தெளித்தலாம். இதுதான் அபிஷேகமெனப்பெறுகிறது.[56] அபிஷேகம் அல்லது அரசரின் திருமுழுக்காட்டுதல். அரச பதவிக்கும் சமயத்திற்குமிடையிலான உறவை மிகத் தெளிவாக வெளிக்கொணருகிறது. திருமுழுக்காட்டுவதற்குமுன், பிராமணரின் நிலைக்கு அரசர் உயர்த்தப்படவேண்டும்;[57] 'வருணனைப்போல் மெய்யிலும் பொய்யிலும்' 'உண்மையான அரசரிலும்,' இவர் 'உண்மை வேள்வியாகவும் உண்மைச் சமயமாகவும்' இருக்க வேண்டும்.[58] 'அரச பதவிக்காக, மேலாட்சியுரிமைக்காக, மேதகவான ஆட்சிக்காக, மேலாதிக்க நிலைக்காக, தனிமுதன்மைக்காக, ஒப்புயர்வற்ற நிலைக்காக நான் அரசபதவி ஏற்கிறேன்' என்று கூறி, அரசர் அரியணையேறுகிறார்.[59] பின் திருமுழுக்காட்டும் விழா நடைபெறுகிறது. பின் இவர் சுராபானம் அருந்துகிறார்.[60] இதைத் தொடர்ந்து வரும் முடிசூட்டுவிழா உறுதிமொழிச் சடங்கின் மிகச் சிறப்பான பகுதிகளில் ஒன்றாகும். அரசர் நம்பிக்கை மோசம் செய்யமாட்டாரென,பல பக்தியூட்டும்முறையில் குருவை நோக்கிக் கூறுகிறார். அதாவது, இவருடைய நடத்தையும் இவருடைய அரசாங்கத்தின் போக்கும் பிராமண சமயத்தோடு இணங்கி இருக்கும் என்பதாகும்.[61] இவற்றிற்குப் பின் அரசர் 'க்ஷத்திரியர் என அறிவிக்கப்பெறுகிறார்; இல்லையெனில், இவர்தம் வலிமையைக் காட்டவியலாது.'[62] அரச பதவியின் சமயத் தொடர்புடைமையை இச் சடங்குகள் அறிவித்து உறுதிபடுத்தப் பயன்படுகின்றன. மெய்யாகவே, இராஜசூயத்தின் தொடக்கத்திலேயே இது குறிப்பிடப்பட்டிருக்கிறது.' 'பிரஜாபதி வேள்வியைப் படைத்தார்' என்று கூறப்பெற்றது வேள்வியின் படைப்பிற்குப் பின் புனித அதிகாரமும் தலைவரதிகாரமும் படைக்கப்பெற்றன.[63] 'அரசபதவி தலைமை அதிகாரம்' வேள்வியால் புனித

[55] 'Introduction to Sat. Br., S.B.E.' xli, p. xi.

[56] Haug's Introduction to Ai. Br., p. 66.

[57] Ai. Br., vii, 23.

[58] Satyasava, Satyadharma, Satyante-Varunah and Satyaraja, Tai. Br. I, vii, 10, 1—6.

[59] Ai, Br., viii, 6.

[60] Ibid., 7 &8.

[61] Ibid., 15.

[62] Ibid., 17.

[63] Prajapatir Yajnam Asrijata, Yajnam Sristam anu brahmaksetre asrijyetam, Ai, Br., vii, 19.

அதிகாரத்தை இது நாடவேண்டியிருக்கும்.[64] அரசபதவியைப் பொறுத்தவரை இராஜசூயத்தின் தனிச் சிறப்பியல்பு சுருக்கமாக இதுதான்.

வாஜபேய வேள்வியின் முதன்மையான கூறுகள், சுராபானம் அருந்துவதும், இரத பந்தயமுமாம்; இதற்குப் பின் அரசர் அரியணை ஏறுகிறார். உதும்பரமரத்து அரியணையின்மேல் ஆட்டுத் தோலை விரித்துக்கொண்டு, அத்வர்யு, 'இது உம்முடைய அரச பதவி' என்று கூறுகிறார். இதனுடன் அரசருக்குரிய அதிகாரத்தை இவர் அளிக்கிறார். இராஜசூய வாஜபேய வேள்விகளின் முதன்மை யான இயல்புகள் இவைகளே. அசுவமேத சிரௌத்ராமனி (Srautramani)[65] வேள்விகளும் இருந்தன; ஓர் அரசர் பதவியி லிருந்து அகற்றப்பெற்றபொழுது பின்னது நடத்தப்பெற்றது. ஐதரேய பிராமணம் இராஜசூய வேள்விக்குத் தனிச் சிறப் பளித்து, இந்தப் பொருமையுறத்தக்க சடங்கை நடத்தியவர் களின் பெயர்களைக் கூறுகிறது.[66] அசுவமேத வேள்வியைச் செய்த பதின்மூன்று அரசரின் பெயர்களைச் சதபத பிராமணம் கூறுகிறது.[67]

எனவே, க்ஷத்ரா அல்லது அரசதிகாரம், அதாவது, 'தலைமை அதிகாரம்', பிரம அல்லது தெய்வ அதிகாரம், அதாவது, 'தூய அதிகாரத்'தை பிராமணர்களால் செலுத்தப்பெற்ற சமய அதிகாரமென்பது பல சான்றுகளால் உறுதியாகிறது. ஆகை யால், கொள்கையளவில் சமய அதிகாரத்தின்கீழ் அரசியல் அதிகாரம் செயற்படவேண்டும். சமய அதிகாரத்திற்கு இது நம்பிக்கை மோசம் செய்யலாகாது. எனவே, அரசு ஒரு துணை நிறுவனமாயிற்று. சமயம், முதன்மையாகமட்டுமன்றி, சமூகத் தின் முழுமையானதும் எங்கும் நிறைந்ததுமாகவும் இருந்தது. இக் காலத்தின் இந்தோ-ஆரியரின் ஆட்சி அமைப்பொழுங்கின் மேல் பிராமண சடங்குநெறியின் பயன் இத்தகையதாக இருந் தது.

## சாதிகளின் தொடர்புடைய நிலை

அரசின்மீதான பிராமண சடங்குமுறையின் விளைவை நாம் இதுவரை சுட்டிக்காட்டினோம். இந்தக் காலத்தின் அரசின் பணி, உருவம் ஆகியவற்றை ஆராயத் தொடங்குமுன், சமூக

[64] Ibid., 21 & 22.
[65] A. Hillebrandt, Ritual Litteratur, p. 159--161.
[66] Ai. Br., vii, 21, 22, 23.
[67] Sat. Br., xiii, 5, 4.

வகுப்புகளின்மீது பிராமண சடங்குமுறையின் இயக்கத்தை நாம் உறுதிசெய்துகொள்ளலாம். இதனுடைய எழுச்சி, சாதிகளின் தொடர்புடைய நிலையை வரையறை செய்ய உதவிற்று. சான்றாக, 'வேள்வியில் படையல் செய்த பொருள்களை நான்கு சாதிகளில் பிராமணர்கள்மட்டுமே பயன்படுத்தும் உரிமைபெற்றிருந்தனர்'[68] என்று கருதப்பெற்றது. 'புரோகிதரைப் பெற்றிராத ஓர் அரசர் படைத்த உணவைக் கடவுளர்கள் உண்ணமாட்டார்கள்' என்று சொல்லப்படும்பொழுது, இராஜன்யருக்குமேல் பிராமணரின் உயர்வு மேலும் சுட்டிக்காட்டப்படுகிறது. இக் காரணம்பற்றித்தான் அரசர் ஒரு பிராமணரை முன்னுக்குக் கொண்டுவரவேண்டும்.[69] க்ஷத்திரியரோடு தொடர்புபடுத்தும்பொழுது பிராமணர் எப்பொழுதுமே மேலாகக் கருதப்பெற்றனர்.[70] பிராமணரும் க்ஷத்திரியரும் வைசியர்களைவிட உயர்ந்தவர்கள்.[71] வைசியர்கள் மற்றவர்களுக்குத் திறைப்பொருள், 'மற்றவர்களால் உண்ணப்பட வேண்டியபொருள்,' 'விரும்பினால் ஒடுக்கப்படவேண்டியவர்கள்'; 'சூத்திரர்கள் மற்றவர்களின் பணியாள், விரும்பினால் அகற்றப்படவேண்டியவர்கள், கொல்லப்பட வேண்டியவர்கள்.'[72] ஆனால், சாதிகளின் தொடர்புநிலை இவ்வாறு விளக்கப்பட்டாலும், இங்குப் பெருமளவு நெகிழ்ச்சி இருந்தது. இந் நிகழ்விற்கப்பால், 'நேர்ந்துவிடப்பெற்றபொழுது, இராஜன்யர் பிராமணரின் நிலையை அடைகிறார்,'[73] இளவேனிற் காலத்தில் இவர் வேள்வியைத் தொடங்கினால் இவர் ஒரு பிராமணராகிறார்.[74] வேள்வியின்பொழுது இவர் இராஜன்யர், அல்லது வைசியர், பிராமணரென விளக்கப்படவேண்டும்.[75] ஒவ்வொரு மனிதனும் தன்னுடைய சாதியை மாற்றிக்கொள்ளும் தகுதித் திறனை சமூகம் மௌனமாக ஏற்றுக்கொள்ள வழி இருந்ததாகத் தெரிகிறது. இல்லையென்றால், இரண்டு அல்லது மூன்றாவது தலைமுறையில் க்ஷத்திரியரின் குழந்தைகள் எப்படி பிராமணர்களாக, வைசியர்களாக, அல்லது சூத்திரர்களாக ஆகியிருக்கமுடியும்?[76] ஆரிய வேள்வியின் ஒரு சிறப்புரிமைக்கு எப்படி ஒரு சூத்திரர்

[68] Ai. Br., vii, 19, 1.

[69] Ai. Br., viii, 24.

[70] Ai. Br., vii, 15; Ai. Br., viii, 9, 6; Sat. Br., v, 1, 1, 12; v, 4, 4, 15, etc.

[71] Ai. Br., ii, 33; Sat. Br., vi, 4, 4, 13; Panch. Br., ii, 8, 2.

[72] Ai. Br., vii, 29, (Dr. Keith's translation).

[73] Ai. Br., vii, 23.

[74] Sat. Br., xiii, 4, 1, 3.

[75] Katyayan Sutra, vii, 4, 12.

[76] Ai. Br., vii, 29.

சேர்த்துக்கொள்ளப்படலாம்?[77] இது சாத்தியமாயிற்று; ஏனெனில், சாதியின் அடையாளச் சின்னமாகப் பணி இருந்ததே யன்றிப் பிறப்பன்று. மூன்று புரோகிதர்களையும் இவர்களால் நியமிக்கப்பெற்ற மூன்று பேர்களையும் தெரிந்திருக்கும் பிராமணர், இப் பதவிக்கு நியமிக்கப்பெறவேண்டும்; இதை அறியாதவர்கள் ஏற்கப்படலாகாது.'[78] மேலும், 'கல்வி அறிவுடையவர்தான் பிராமணரிஷி.'[79] அடிமைப் பெண்ணின் மகனென்று ஒதுக்கித் தள்ளப்பெற்றவராக இருந்தாலும்,[80] கவச அய்லுசரின் (Kavasa Ailusa) அறிவுக்காக பிராமணர்களால் மதிக்கப்பெற்றார். ஒரு க்ஷத்திரியராகிய ஜனகர், பிராமணரின் நிலைக்கு உயர்த்தப்பெற்றார்.[81] இந்தக் காலத்திலுங்கூட, பிறப்பு மட்டுமன்றிப் பணி சாதியை உறுதிப்படுத்தும் இயல்பாக கருதப் பெற்றது.

## பிராமணர்களுக்கும் க்ஷத்திரியர்களுக்கும் இடையில் போட்டியுணர்ச்சி

பணிபற்றிய இக் கோட்பாட்டின் பொருத்தமான இணைந்தியலும் பொருள், குறிப்பிட்ட சாதிகளுக்குள் எழுந்த கூட்டாண்மை உணர்வாகும். இந்த உணர்வு எண்ணிக்கையில் பெரியதாகவும், தொழில் பலதரப்பட்டதாகவும் இருந்ததால், வலிமையானதொரு கூட்டுணர்ச்சியை அனுமதிக்க இயலாத மூன்றாவது வகுப்பாகிய வைசியர்களைக் காட்டிலும் முதலிரண்டு வகுப்புகளாகிய பிராமண, க்ஷத்திரியரிடம் இந்த உணர்ச்சி வலிமையுடையதாக இருந்தது. ஓரளவு குறைந்த வகைகளைச் சேர்த்துக்கொண்ட, மரபுவழிவந்த வாழ்க்கைத் தொழிலைக் கொண்டிருந்த பிராமண, க்ஷத்திரியர்கள் விரைவில் 'முடிவுற்ற நிறுவனமாக' இவை ஒவ்வொன்றும் அமைந்தது.[82] ஒரு முழு நிறுவனமாக இயங்குகிற உணர்வு நிலையும், இவைகளின் அதிகாரமும் இவைகள் இடையே நலனற்ற போட்டியுணர்ச்சிக்கு வழி செய்தன. முதலில் ஒன்றுக்கொன்று இணைந்து நிறைவாக்க அமைக்கப்பட்ட இவ்விரு வகுப்புகளுக்கிடையில் பிணக்கு எழுந்தது.[83] பிராமணர்களின் உயர்வின்கீழ் க்ஷத்திரியர்கள் கெட்டவிளைவுகளை அனுபவித்தனர். இங்கும் அங்கும் உள்ளுரமற்ற எதிர்ப்பொலி

77 Sat. Br., i, 1, 4, 12. வேள்விமுறையின் மாற்றத்தை விளக்கி, 'ஹவிசிக்ருத்-ஹிகி' (Haviskrd-ehi), அதாவது, 'திருப்படையல் அளிக்கின்றவர்களே, வருக; சூத்திரர் வேள்வி செய்யும் நிகழ்வில் ஓடிவருக என்றமுறை இருக்கும். சத. பிரா.

78 Ai. Br., viii, 27.

79 Taitt. Sam., vi, 6, 1, 4.

80 Ai. Br., ii, 19.

81 Sat. Br., xi, 6, 2, 10.

82 V.I. Vol. ii, p. 264.

83 Sat. Br., iv, 1, 4, 4 & 5.

யைக் கேட்டனர். காலப்போக்கில் இது அளவிலும் வலிமையிலும் வளர்ச்சியடைந்தது. ஒரு சமயத்தில் அரசர் விசுவந்தரா வேள்வியிலிருந்து குருமார்களை வெளியே துரத்திவிட்டார்.[84] மற்றொரு சமயத்தில், அஜாதசத்ரு, ஜனகர் போன்றவர்கள் பிராமணர்களுக்குச் செயல்முறைப் போதனை செய்தனர்.[86] சிறிது சிறிதாக பிராமணர்கள் அரசர் குழாத்தொடு செல்பவர்களாகக் கருதப்பெற்று,[87] அரசருக்குப்பின் மதிக்கத்தக்கவர்களானார்கள்.[88] இவ்விரண்டு உயர் வகுப்புகளுக்கிடையில் வளர்ந்துவரும் இப் போட்டியுணர்ச்சி சமூகத்தில் விரிமையப் போக்குடைய தன்மைகளின் நுழைவைக் குறிப்பிட்டன. பிற்காலத்தில் ஓர் உட்பிளவின் உச்சகட்டத்தை இது அடைந்தது. இது பெரும்பாலும் க்ஷத்திரியர்களால் கொண்டுவரப்பட்டது. சமூகக் கருத்தில் ஒரு தனிப்பட்ட போக்கை இது தெளிவாக்கிக் காட்டியது. இணைப்பாக்கம்,எளிமை ஆகியவற்றால் இது சிறப்பிக்கப்பெற்றது. இது, இதனுடைய ஆழம், தாராளம் ஆகியவற்றால்தான் சமநிலை பெற்றது. இவ்விணைப்பாக்கமும் தாராளவுணர்வும் சமூகப் பொருத்தப்பாட்டிற்கும் சமயச் சீர்திருத்தத்திற்குமான கருத்துகளைக் கோரின. சமண, பௌத்த சமயங்களாகிய இந்தியாவின் இரண்டு புதிய சமயங்களிலும் இக் கருத்துகள் இடம் பெற்றிருந்தன.

## இனங்களின் மறுபிரிவும் புதிய அரசுகளின் அமைப்பும்

இந்தோ-ஆரியரின் அரசின் பணி, உருவம் ஆகியவற்றின்மீது இவர்களின் விரிவின் விளைவை நாம் இப்பொழுது ஆராயலாம். இக் காலத்தின் தொடக்கத்தில் இனங்களின் மறு பிரிவும் புதிய அரசுகளின் அமைப்பும் முதன்மையான இயல் நிகழ்ச்சியாகும். உசினரர்கள், வசஸ, குருபாஞ்சாலர் போன்ற இதற்குமுன் கேள்விப்படாத எண்ணற்ற இனங்கள் காணப்பட்டன. 'நடு நாட்டில்' இவர்கள் தங்கி வசித்ததாகத் தெரிகிறது; இதற்கு வடக்கில் இருந்த பகுதியில் உத்தர குருக்களும் உத்தரமத்ரானர்களும் இருந்தனர்.[89] நடுநாட்டில் இருந்தவர்களோடான தொடர்பில் மேற்கு நாட்டின் நீசியரும் அபாசியருமிருந்தனர்.[90] இவர்களின் தனித்துவம் உறுதியற்றது. இருப்பினும், சிந்து வெளி, பஞ்சாப் ஆகிய இடங்களில் இவர்கள் நீடு தங்கி வாழ்ந்

84 இத் தலைப்பின் முழு விவாதத்திற்கு Dr. Muir's Original Sanskrit Text Series, Vol. I, Ch. IV பார்க்கவும்.

85 Ai. Br., vii, 27.

86 Sat. Br., xiv, 5, 1, 1; Ibid., 9, 1, 1; Sat. Br., xi, 6, 2; 1.

87 Sat. Br., i, 2, 3, 2. 88 Sat. Br., v, 4, 2, 7.

89 Ai. Br., viii, 14. 90 Ibid.

தனர் என்று தெரிகிறது.[91] மேற்கு நாடுகளின் மக்களுக்கு மாறாகக் காசியர்கள், கோசலர், விதேகர், மகதர்[92] போன்றோரைக் குறிக்கும் பிராச்சியர்[93] எனப் பெயர்பெற்ற கிழக்கத்தியர்களுமிருந்தனர். இறுதியாக, போஜர்கள்[94] எனப்பட்ட சத்வந்தர்கள்[95] தெற்கில் இருந்தனர். ஒரு காலத்தில் இவர்கள் பரதர்களின் பகைவர்களாக இருந்தனர்.[96] இதற்குத் தெற்கில் விதர்ப்பர்கள் வசித்தனர்; இவர்களின் அரசராகிய பீமர் ஒரு மேல்நிலை அரசர்.[97] இவர்களுக்கப்பால் ஆந்திரர் வசித்தனர். பிராமண காலத்தின் முக்கிய மக்களில் இவர்கள் சிலர்.

இவர்களுடைய வளர்ச்சியின் வரலாற்றை வரைவது கடினமாகும். ஆனால், விரிவு, இணைப்பு ஆகிய இரட்டைச் செயல்முறை இந்த முடிவை உண்டாக்கியிருக்க வேண்டுமென்பது மிக உறுதியாகத் தெரிகிறது. சான்றாக, குருபாஞ்சாலர்கள் பல இனங்களின் கூட்டாவர். இருக்குவேதகால பரதவர்கள்[98] இக்காலத்தில் குரு பாஞ்சாலரோடும்,[99] இப்படியே இருக்குவேத கிருவி[100]களும் சிரிஞ்செயர்களும்[101] கலந்துவிட்டதாகத் தோன்றுகிறது. ஐதரேய பிராமணத்தின்படி,[102] உத்தர குருக்கள் இமயமலைக்கப்பாலும், காஷ்மீரில்[103] குருபாஞ்சாலரின் ஒரு கிளையும் வசித்தனர். விதேகர், அங்கர் ஆகியோரின் மூலக்கூறுகள் மிக உறுதியற்றவை. இப் புதிய இனங்கள் புதிய அரசுகளை அமைத்துக்கொண்டன. இவர்களின் பெயர்களை இவ்வரசுகள் பெற்றன. சான்றாக, குரு, பாஞ்சாலர், காசியர், உஷினரர், வசர், போஜர் ஆகியோரின் நாடுகள் இருந்தன. புதிய நாடுகளின் அமைப்பு, புதிய இடங்களை முன்னிலைக்குக் கொண்டு வந்தது. 'குருதலை நகராகிய ஆசந்திவன், மகத தேசத்திலுள்ள பாஞ்சாலத்தின் தலைநகராகிய காம்பில, கௌசாம்பி வாரணாவதி யாற்றின் கரையிலுள்ள காசியர்களின் தலைநகராகிய காசி ஆகியவைபற்றி மிகத்தெளிவான குறிப்புகள் இருக்கின்றன. பிற்காலத்தில் வாரணாவதியிலிருந்து வாரணாசி பெறப்பட்டது.

91 V. I., Vol. I, p. 456.
92 Ai. Br., viii, 14 ; Sat. Br., i, 7, 3, 8 ; Sat. Br., xiii. 8, 1, 5; 2, 1.
93 Oldenberg, Buddha, p. 939 – குறிப்பு.
94 Ai. Br., viii, 14.
95 K. P. Jaiswal, 'Hindu Polity', Vol. I, p. 39.
96 Ai. Br., ii, 25.
97 Ai, Br., vii, 34.
98 R.V., iii, 33, 11 & 12 ; R.V., vii, 33, 6; etc.
99 Oldenberg, Buddha, p. 406.
100 Sat. Br., xiii, 5, 4, 7.
101 C.H.I., p. 118.
102 Ai. Br., viii, 14.
103 V.I., Vol. I, p. 84.

பாலைவனத்தில் சரஸ்வதி மறைந்த இடமாகிய விநசனத்தைப் பற்றியும், ஆறு மறுபடியும் தோன்றுகிற நாற்பத்து நான்குநாள் பயணத்தூரமாகிய பிலக்ஷ பிரசரவனமாகிய(Plaksa Prasravana) இடம்பற்றியும் இக் காலத்தில் நாம் முதன்முறையாகக் கேள்விப் படுகிறோம்.[104]

## பெரிய முடியரசு நாடுகளின் எழுச்சி

இப் புதிய முடியரசுகளின் முதன்மையான கூறுபாடு இவை களின் பெரிய உருவம். சப்தசிந்து நாட்டில் எழுந்த, வீழ்ந்த வேதகால முடியரசு நாடுகளைவிட இவை மிகப் பெரியவையாகும். ஆரிய இனங்களின் விரிவாலும், இணைப்பாலும், கங்கையாலும் அதன் கிளையாறுகளாலும், பாசனம் பெற்ற நாட்டின் இயற் பியல் சார்ந்த கூறுகளாலும் இந்தக் காலத்தின் முடியரசு நாடு கள் தோன்றின. கங்கை, யமுனை ஆறுகளின் பரந்த சமவெளி களில் மனிதனின் தாராளமான நடமாட்டத்தைத் தடை செய்ய இயற்கை எவ்விதக் கடுமிடல் தடுப்புகளையும் எழுப்பவில்லை. இதன் விளைவாக இனங்கள் பரவ விரும்பின. செழிப்பான நிலத் தின் பரவலான பகுதிகளைக் கட்டுப்படுத்தவும் விரும்பின. பெரிய முடியரசு நாடுகளின் அமைப்பு இதன் விளைவாகும். இப் பெரிய முடியரசு நாடுகள் தோன்றியதும், தனி முதன்மைக்கான இவர்களின் போராட்டத்தைக் குறிப்பிட்ட மோதலின் காலம் தோன்றியது. இம் மோதலின் விளைவாக, இறுதியில், மோரியர் காலத்தில்போல், ஒரு பேரசு எழுந்தது. இயற்பியல் தடைகள் பலவாகவும் பலதரப்பட்டனவாகவுமிருந்த பஞ்சாபில், ஆரியா வர்த்தத்தின் வடக்கில், பிஹாரின் வடக்கில், அதாவது,நாட்டின் மற்றப் பகுதியில் மிகச் சிறிய அரசுகள் தோன்றி,அரசியல் வாழ்க் கையின் பெரிய வளக் கொழிப்பைக் காட்டின. இவைகளில் சில இனமரபு சார்ந்த சிலவராட்சிகளாக இருந்தன. ஆனால், அர சரால் ஆட்சி செய்யப்பட்ட கங்கைச் சமவெளியின் பல அரசுகள் இனங்களின் பெயர்களைப் பெற்றிருந்தன. ஆகவேதான் கடமை ஒப்படைப்புச் சடங்கில் தேர்வு செய்யப்பெற்ற அரசர் ‘இந்த இந்த மக்களின்’ அரசரென விளிக்கப்பெற்றார்.[105]

## அரசின் வகைகள்

அரசியல் நோக்கங்களுக்காகப் பல்வேறு வகையான பிரிவு கள் தோன்றியவாகத் தெரிகிறது. சாம்ராஜ்ஜியம், பௌஜ்யம், சுவராஜ்ஜியம், வைராஜ்ஜியம், இராஜ்ஜியம்[106] போன்ற அரசின்

[104] C.H.I., Vol. I, pp. 117 & 118.
[105] Sat. Br., V, 4, 2, 3.
[106] Ai. Br., viii, 14 & 12.

புதிய வகைகளின் பெயர்களாகிய அரசியற் சொற்கள் பலவற்றை நாம் பெறுகிறோம். இருப்பினும், இவைகளின் சரிநுட்பமான பொருள்பற்றிப் பெருமளவில் கருத்து வேறுபாடு இருக்கிறது. சாம்ராஜ்யா என்பதை 'மேலுரிமையரசு' எனவும், பௌஜ்யாவை 'மேதக ஆட்சி' எனவும், சுவராஜ்யாவைத் 'தன்னாட்சி' யெனவும், வைராஜ்யாவை 'இறைமை' எனவும், ராஜ்யாவை 'அரசாட்சி'யெனவும்[137] டாக்டர் கீத் கருதுகையில், இவைகளை ஒன்றுக்கொன்று பிறிது விலகிய பல அரசியலமைப்புகளென ஜெய்ஸ்வால் பொருள் விளக்கம் செய்கிறார். சாம்ராஜ்யம், 'முடியரசுகளின் கூட்டு எனவோ அல்லது ஒரு மேம்பட்ட அரசைச் சூழ்ந்த ஒரு கூட்டுப்பேரரசு'[108] எனவோ இவர் பொருள் செய்கிறார். மாறுபட்ட அரசியல் அமைப்பு வகைகளை இச் சொற்கள் குறிப்பிடுவதை நேர்மையாக ஏற்றுக்கொள்ளலாம். டாக்டர் கீத் குறிப்பிடுவதுபோல், சாம்ராஜ்யம் என்பது பேரரசின் நெகிழ்ச்சியான ஒருவகை என்பதாகும். இதில் ஓர் அரசின் மேதகுநிலை அல்லது மேலரசுநிலை ஏற்றுக்கொள்ளப்பட்டது. இதேபோல் சுவராஜ்யம், தன்னாட்சி இன அரசுகள் அல்லது சிலவராட்சிகளில் பெறும், ஒருவகையான தன்னாட்சியாக இருந்திருக்கலாம். இராஜ்ஜியம் என்பதின் பொருள் தெரிந்ததே; ஓர் அரசை ஓர் அரசர் ஆள்வதாகும்.

இவ்வகையான அரசுகள் இருந்த இடங்களை ஐதரேய பிராமணம் சுட்டிக்காட்டுகிறது. கிழக்கத்திய நாடுகளில் அரசியல் அமைப்பு சாம்ராஜ்ஜியம் எனவும், தெற்கில் சத்வந்தர்களுக்குள் பௌஜ்யமெனவும், மேற்கில் நீசியர்களுக்கிடையில் சுவராஜ்ஜியமெனவும், வடக்கில் இமயமலைகளுக்கப்பால் உத்தர குருக்களுக்குள்ளும் உத்தர மத்ராஸ்களுக்குள்ளும் வைராஜ்ஜியமெனவும், நடுநாட்டில் குருபாஞ்சாலர்களுக்குள் இராஜ்ஜியமெனவும் பெயர் பெற்றிருந்தவென்று நாம் அறிகிறோம்.[109] 'கங்கை யமுனைக்கு இடைப்பட்ட நிலத்தையும் மகதத்தையும் தவிர' நாடு முழுவதும் குடியரசாக இருந்ததென்று ஜெய்ஸ்வால் முடிவு செய்கிறார்.[110] இந்த அரசுகளின் சரியான நிலையும் தன்மையும் உறுதி செய்யப்படுமுன் ஏற்றுக்கொள்ளமுடியாத விதிவிலக்கற்ற ஒரு கூற்றாகும். இருப்பினும், நாம் பெற்றிருக்கும் அற்பமான, உறுதியற்ற சான்றின் காரணமாக இதை உறுதிப்படுத்துவது மிகவும் கடினமாகத் தோன்றுகிறது. ஆனால் கங்கை, யமுனைக்கு இடைப்

107 Rig. Brahmanas, translated by Keith, p. 329.
108 K. P. Jaiswal, 'Hindu Polity', Part I, pp. 39-40; 92, 94; 137, 138.
109 Ai. Br., viii, 14.
110 K. P. Jaiswal, 'Hindu Polity', Part I, pp. 137-138.

பட்ட நிலத்தையும் மகதத்தையும் தவிர நாடு முழுவதும் குடியரசாக இருந்தாலும் இல்லாவிட்டாலும், பிராமணங்கள் இயற்றப்பட்டபொழுது நாட்டில் முடியாட்சி உறுதிப்பட்டு வளர்ந்து கொண்டிருந்தது மிக்க உறுதியாகும். பிராமணங்களின் காலத்தில் இது பெரிதும் ஏற்பிசைவு பெற்ற அரசியல் அமைப்பாகும். சமூகம், சமயம் ஆகியவற்றின் மிகச்சிறந்த கவனத்தை இது பெற்றது இதனுல்தான், நாம் முன்கண்டதுபோல், அரசபதவி ஒப்படைப்புச் சடங்குகள் சமயத் தனிச் சிறப்பைப் பெற்றன. இராஜசூயமும் வாஜபேயமும் ஈடுஇணையற்ற அரசியல் வேள்விகளாக இருந்தன.

## முடியாட்சியல்லாத அரசு

நாட்டில் முடியாட்சியல்லாத அரசுகள் இருந்தனவாகவும், ஆரிய எல்லைக்குள்ளான பாகம் அல்லது நடுநாட்டு மக்களின் ஆதரவை இவைகள் பெற்றிருக்கவில்லையென்பதும், இந் நாடு பிராமணங்களைப் படைத்து, மற்றப் பகுதிக்கு விதி வகுத்ததெனவும் தெரிகிறது.[111] ஆரியப் பண்பாடு, வண்ணம் ஆகியவற்றின் தூய்மையை இந்த ஏற்பமைதியுடைய பகுதி, தக்கவைத்துக் கொண்டதாகக் கருதப்பெறுகிறது. இவைகளுக்கு முடியாட்சி அணிசெய்தது இந்தியாவின் மற்றப் பகுதிகளில் முடியாட்சியல்லாத அரசுகள் செழித்தோங்கின என்று ஜெய்ஸ்வால் வலியுறுத்துகிறுர். தெற்கில் நர்மதைக்கப்பால், பல மலைகளாலும் காடுகளாலும் பிரிக்கப்பட்டு சத்வந்தர்கள் இருந்தனர்; அதாவது, பௌஜய அரசாங்க வகையைப் பெற்றிருந்த யாதவர்கள் இருந்தனர். எத்தினிய ஆர்க்கன்களைப்போல இங்குப் பல தலைவர்கள் இருந்ததும், இத்தலைமை மரபுவழி உரிமையற்றதும் இதன் தனிச் சிறப்பியல்பாகும். 'போஜத் தலைவர்களிடம் இறைமை நிலை பெற்றது.'[112] மேற்கில் நெடுந்தொலைவில், குடிபுகுபவர்கள் தொடர்ச்சியாக வந்துகொண்டிருந்த இப் பகுதியில் இருந்த அரசாங்கம் சுவராச்சியம் அல்லது தன்னுட்சியெனப் பெயர் பெற்றது. சுயேச்சையாக வசித்துவந்த மக்களிடையே தன்னுட்சி அல்லது தன்னரசாங்கம் தனி இயல்புடையதாக இருந்தது. இத்தகைய மக்களின் இருப்பிடமாகச் சிந்துவெளி இருந்ததை இனிவரும் அதிகாரங்களில் காணலாம் இக்காலத்தின்பொழுது பர்சியத் தாக்குதல் ஏற்படவில்லை; ஆனுல், இங்கிருந்த மக்களோடு குடிபுகுபவர்கள் தாராளமாகக் கலந்து உறவாடியது, அரசியல் நடைமுறையில் இரு வேறுபட்டுச் செல்கிற

[111] V. I., Vol. I, p. 165.

[112] K. P. Jaiswal, 'Hindu Polity', Part I, p. 90.

போக்குகளைப் படைத்தன. தன்னுட்சி இனங்களாக இவர்கள் இருந்திருக்கமுடியும். இவர்களுள் எல்லோரும் சமம். தலைவர் அல்லது சவாராத், சமமானவர்களில் மிகவுயர்ந்தவர்.[113] மேற்கில் இருந்ததைப்போல், உத்தர குருக்களுக்குள்ளும் உத்தர மத்ராசர்களுக்குள்ளும் முதன்மையாக ஆரிய ஆட்சிப் பரப்பின் வடகோடியில் வைராஜ்ஜிய வகை செயற்பட்டுவந்தது. இங்கு அரசர் இல்லாதிருந்திருக்கலாம். மக்களனைவரும் அரசபதவியின் கொள்கலமாக இருந்தனர். ஐதரேயம் கூறுவது போல், இங்கு மூன்றுவகையான மாறுபட்ட முடியாட்சியல்லாத அரசாங்கங்கள் இருந்தன. 'என்றும் நிலையான வசிப்பிடம்'[114] எனப் பெயர்பெற்ற, அதாவது, இணையில்லா ஆரியநாடு, ஆரியவர்த்தம், அதாவது, குருபாஞ்சாலர், வசர், உசினரர் போன்றவர்களின் நாடுகளுக்கு வெளியே செழித்தோங்கியது; ஆரிய நடுநாட்டில் காணப்பெற்ற முடியாட்சி அரசியல் படிவத்திலிருந்து இவை விலகிச் சென்றவையாகும். பிராமணங்களும் இக்காலத்திய இந்துக்களின் ஏறத்தாழ எல்லாப் புனித நூல்களும் இங்கு இயற்றப்பெற்றதால், இந் நூல்களிலிருந்து முடியாட்சியல்லாத வகைகள்பற்றிய விரிவான தகவலை எதிர்பார்ப்பது இயலாததாகும். அரசபதவியின் பல்வேறு தரங்கள்,[115] அரசரின் பணிகள்,[116] அரசபதவி ஒப்படைப்புச் சடங்குகள், இன்னும் பல விவரிக்கப்பட்டிருக்கின்றன.' 'குருபாஞ்சால அரசர்கள் இராஜசூய வேள்வி நடத்தின[117]'ர் என்றும் நாம் அறிகிறோம்; இதை மற்றப் பகுதிகளில் உள்ளவர்களும் பின்பற்றவேண்டுமென்பதாகும், இக் குறிப்பின் நோக்கம். ஆனால், இந்தியாவின் மற்றப் பகுதிகளைப்பற்றி எதுவும் சொல்வதற்கில்லை.

## முடியாட்சி அரசின் அமைப்பு

முடியாட்சி அரசுகளின் அமைப்பைப் பொறுத்தவரையில் இங்கு நம்பத்தக்க தகவல் இன்மையோடு இதனுடைய குழப்பமான இயல்பும் ஒரே அளவில் இருக்கிறதென்று குறிப்பிடல் துன்பம் நிறைந்ததாக இருக்கிறது. தகவல் குறைவாகவும் குழப்பமானதாகவும் இருந்தாலும், முந்திய அதிகாரத்தில் குறிப்பிட்டதைக் காட்டிலும் நிலைமை மிக வளர்ச்சியடைந்திருந்ததை இது சுட்டிக்காட்டுகிறது. முடியாட்சி அரசின் மையக்கருவாக இப்பொழுது அரசரும் அவருடைய அமைச்சரவையும் இருந்தன.

113 K. P. Jaiswal, Hindu Polity, Part 1, I.
114 Ai. Br., viii, 14.
115 Sat. Br., v. 1, 1, 13.
116 Sat. Br., ix, 3, 3, 10; Sat. Br., v. 4, 4, 5; Ibid., 2, 1, 25.
117 Ibid., 5, 2, 5.

சிறிய இன அரசுகளில் செயற்படக்கூடிய, வேதகாலத்தின் தொடக்கத்திலிருந்த மக்கள் தொடர்புடைய சபைகள் படிப்படியாக மறைந்து, இவைகளிருந்த இடத்தில் இரத்தினிகளைக் கொண்ட மிக்க வசதியான நிறுவனமும் அரச அமைச்சர்களின் அவையும் தோன்றின. முக்கியமான அரச கடமைகளுக்காக இரத்தினிகள் கூட்டப்பெற்றனர்; இராஜசபா[118] ஓர் அரச நீதி மன்றமாகும். இதில் அரசரின் படைத்தலைவர்கள், புகழ்பெற்றவர்கள், ஆட்சிப் பொறுப்பில் இருக்கும் அரசருக்குரிய அமைச்சர்கள் போன்ருேர் இருந்தனர். இந்த அரச சபை இப்பொழுதும் தெளிவாகத் தெரியும்படி வளர்ந்திருந்தது. இதை அரசர் எப்பொழுதும் கலந்துகொண்டார். அதர்வ வேதத்தில் வரும் இராஜக்கருத்தர் என்னும் நிறுவனம், இப்பொழுது இராஜகர்தார்[119] என்னும் சிறப்பிற்குரிய பெயரைப் பெற்றது. இவர்களில் சிலர் இரத்தினிகள், அரச அமைச்சர்கள்.

இரத்தினிகள் அல்லது அணிமணிகளைக் கொண்டுசெல்வோர் பல்வேறு சமயங்களைச் சேர்ந்த பல்வேருன முரண்கூறுகளைக் கொண்ட நிறுவனமாக இருந்ததாகத் தெரிகிறது. (i) சேனுனி-படையின் தலைவர்; (ii) புரோகிதர்-குரு; (iii) மகிஷி-அரசி; (iv) சூத-நிகழ்ச்சித் தொகுப்பாளர்; (v) கிராமணி-கிராமத்தின் தலைவர்; (vi) க்ஷத்ரி (Ksatri)-அரண்மனை அகவினைஞர்; (vii) சம்கிரஹிதர்-பொருளகத் தலைவர்; (viii) பாகதூக-வரி வசூலிப்பவர்; (ix) அக்ஷவாபர்-அரசின் கணக்கு வைப்புகளின் பொறுப்பாளர்;[120] (x) கோவிகர்த்தர்-சிற்பி; (xi) பலகல (Palakala)-விரைதூதர் போன்ருேர் இவர்களாவர். இவர்களில் சிலர் அரசின் முக்கியமான அதிகாரிகள். ஜெய்ஸ்வால் குறிப்பிடுவது போல், சமூகத்தின் பல்வேறு வகுப்புகளின் பிரதிநிதிகளாக இவர்கள் இருந்திருக்கலாம்.[121] எப்பொழுதுமே புரோகிதர் ஒரு பிராமணர்; கிராமணி அல்லது வைசியகிராமணி, வைசியர்களின் பிரதிநிதியாக இருந்தார்; பலகலா (Palakala) சூத்திரரின் பிரதிநிதியாகவும், மிக உயர்ந்த அரசர் க்ஷத்திரிய வகுப்பின் பிரதிநிதியாகவும் இருந்தார் எனச் சொல்லப்படுகிறது. அரசரின் பதவி ஒப்படைப்பு விழாவில் இரத்தினிகள் முக்கியப் பங்கு பற்றினர் குருவால் செய்விக்கப்பெற்ற முடிசூட்டு விழாப் பிராமணத்தை இவர்கள் முன்னிலையில் அரசர் எடுத்துக்கொண்டார். எனவே இவர்கள் இராஜகர்தாரர்கள் எனப் பெயர்பெற்றனர். கிரா

118 Sat. Br., iii, 3, 4, 14.

119 Ai. Br., viii, 17.

120 K. P. Jaiswal, 'Hindu Polity,' Pt. II, p. 19.

121 K. P. Jaiswal, 'Hindu Polity,' Pt. II, p. 20.

மணியுல் கட்டியங் கூறுவோரும் அரசரைச் சாராத மன்னர்களைப் படைக்கும் ஆற்றலுடையவர்கள்[122] என்பதை சதபத பிராமணம் நமக்கு அறிவிக்கிறது. அரசரைச் சார்ந்த, அரசரைச் சாராத மன்னரைப் படைக்கும் ஆற்றலுடைய இரண்டு வகுப்புகள் இருந்ததை இது காட்டுகிறது. மகிஷி, உறுதியாக முன்னதைச் சேர்ந்திருந்தார். 'இரண்டு (கார்கபத்திய, ஆகவானிய) நெருப்புகளையும் தீ மூட்டுவதற்கான இரண்டு சுள்ளிகளின்மேல்' எடுத்துக்கொண்ட பிறகு ஒரு நாளுக்கு ஓர் இரத்தினியாக எல்லா இரத்தினிகளின் வீடுகளுக்கும் சென்றார் என்ற நிகழ்வால், அரசரின் முடிசூட்டு விழாவில் இரத்தினிகளின் சிறப்பு வெளிக்கொணரப்பெறுகிறது.[123] பதினோர் இரத்தினிகள் இருந்ததால் இதற்குப் பதினொரு நாட்களாயின. இதற்குப்பின் இவர் அவர்களின் அரசரானார்; அவர்களை இது பற்றுறுதியுள்ளவர்களாக்கிற்று.[124] இயற்கையாக, இவர்கள் அரசரை மக்களுக்கு அறிவித்தனரென்று நாம் கருதலாம்.[125] இரத்தினிகள் அரசரின் நண்பர்கள் அல்லது தொண்டர்கள். அரசாங்கத்தை நடத்துவதில் இவர்கள் அரசருக்கு உதவினர்.

## மரபுவழி அரசபதவி

அரசபதவியின் குண இயல்பில் இவ் வளர்ச்சிகள் ஒரு மாற்றத்தை முன்குறித்துக் காட்டுவதாகத் தெரிகிறது. நாட்டில் ஒரு நிருவாகத்தின்வளர்ச்சியை இரத்தினிகள்இருத்தல் குறித்துக் காட்டுகிறது. முடியரசுகள் உருவத்தில் வளர்வதோடு நிருவாகத்தின் அதிகாரம் புலப்படாமல் வளர்கிறது. அரசருக்கும் அமைச்சரவைக்கும் ஆட்சிப் பணியில் பெரு எண்ணிக்கையில் அலுவலர்கள் இருந்திருக்கவேண்டுமென்று உறுதியாக முடிவுசெய்யலாம். இராஜமாத்ரா, அதாவது, அரசரின் பகர ஆள்பற்றியும் நாம் அறிகிறோம். தற்கால ஆளுநர் அல்லது மாவட்டத் தலைவர் வகை அலுவலர்களாக இவர்கள் இருந்திருக்கலாம். ஆகையால், மாநிலங்களையும் மாவட்டங்களையும் கொண்ட அரசுகள் தோன்றியனவாகத் தெரிகிறது. ஆட்சி நிறுவனம் ஒன்று அமைக்கப் பெற்றிருந்ததை இவைகள் எல்லாம் குறிப்பிடுகின்றன. அதிகாரத்தை ஒருமுனைப்படுத்த இது அரசருக்கு உதவியிருக்க வேண்டும். இம் மையப்பாடு மேன்மேலும் நிறைவுறும்பொழுது இவரது பதவி மரபுவழியாக முற்பட்டது. வேதகாலத் தொடக்கத்தில் பெரும்பாலும் தேர்ந்தெடுப்பிற்குரியதாக இருந்த அரச

122 Sat. Br., iii, 4, 1, 7.
123 Sat. Br., v., 3, 1, 1—11.
124 Ibid., 3, 1, 12.
125 Ai. Br., viii, 17.

பதவியின் இடத்தை இப்பொழுது மரபுவழி அரசபதவி எடுத்துக் கொண்டது. ஏனின், அரசரின் மகன் இவருடைய கால்வழியை நிலைபேறுடையதாக்கவேண்டுமென்றும்,[126] 'பத்துத் தலைமுறையினரின் முடியரசு'[127] ஒன்றுபற்றியும் சதபத பிராமணத்தில் சொல்லப்பட்டிருப்பதை நாமறிவோம். ஆகவே, பெரிய முடியரசுகளின் எழுச்சியோடு அரசபதவியும் மரபுவழியைப் பின்பற்றியது. மெய்யாக அரசரின் அதிகார வளர்ச்சியை இது குறிப்பிடுகிறது.

## பெரிய குடியரசு நாடுகளில் கிராமத் தன்னாட்சி

அரச அதிகார வளர்ச்சி ஓரளவிற்குக் கிராமத் தன்னாட்சியைப் பாதித்தது. கிராமத்தின் தன்னாட்சி நிறுவனங்கள் செயலற்றுப்போய்விட்டன என்பதில்லை; கிராம சபை தொடர்ந்து செயற்பட்டது. ஆனால், கிராமத்தின் தலைவராகிய கிராமணி கருத்தில் அரசரைப் படைப்பவராக இருந்தாலும், இவர் திட்டவட்டமாக அரசரின் பணியாளரானார்.[128] அரசாங்கத்திற்கும் மக்களுக்கும் இடையில் இவர் இடையீட்டாளராகச் செயலாற்றியிருக்கலாம். கிராமத் திறைப்பொருளை அரசரின் அலுவலர்களுக்குச் செலுத்த இவர் பொறுப்புடையவராக இருக்கலாம் கிராமத்தின் அமைதிக்கும் ஒழுங்கிற்கும் இவர் பொறுப்புடையவராக இருந்திருக்கவேண்டும். உண்மையில், கிராமத்தில் அரச அதிகாரத்தையும் அரசாங்கத்தில் கிராமத்தையும் இவர் பிரதிபலித்தார். பிரிட்டிஷாரின்கீழ் ஒரு சிறிய கொடுங்கோலரானவர் இவர் என்ற முடிவிற்கு இது நம்மை இட்டுச் சென்றுவிடலாகாது. கிராம சபை உண்மையிலேயே வலிமைமிக்கதொரு நிறுவனம். சமூக ஆதரவும் பொதுக் கருத்தும் இதற்கு எப்பொழுதும் துணைநின்றன. மக்களால் தேர்ந்தெடுக்கப்பெற்ற அலுவலர் என்பதைக் காட்டிலும் அரசரின் நியமனம் பெற்றவர் கிராமணி என்ற அளவிற்குக் கிராமத் தன்னாட்சியை அதிகாரத்தின் மையப்பாடு பாதித்ததாகத் தெரிகிறது. இப் பதவி சில வேளைகளில் மரபுவழி வந்ததாகவும், சில வேளைகளில் நியமனம் செய்யப் பட்டதாகவும் தேர்ந்தெடுக்கப்பெற்றதாகவும் இருந்தது.[129] இப்பதவியைப் பெரிதும் விரும்பிய வைசியர்கள் இதை எப்பொழுதும் பெற்றதில்லை. இது நீங்கலாக, கிராமம் மற்ற வழிகளில் மேம்பாடு காட்டியது. சாலைகள் அமைத்துக் கிராமங்கள்

126 Sat. Br., v, 4, 2, 8.
127 Sat. Br., xii, 9, 3, 3.
128 Sat. Br., iii, 4, 1, 7.
129 Vedic Index., Vol. I, p. 247

இணைக்கப்பெற்றன. இப்பொழுது கிராமங்களின் எல்லைகள் நன்ருகக் குறிக்கப்பெற்றுள்ளன.[130] கிராமங்களுக்கிடையேயும் மத்திய அதிகாரத்திற்கும் நாட்டுப்புறத்திற்கும் இடையேயும் தொடர்பின் வலிமையான தேவையொன்று எழுந்துள்ளதை இவையெல்லாம் மெய்ப்பிக்கின்றன. நல்ல அரசாங்கத்தைப் பெரிய அரசுகளில் உறுதிப்படுத்த இது தேவையாகும். கிராமப் பிரிவுகளின் தெளிவான வரையறையும் தேவையாகிறது.

## அரசைக் காத்துப் பேணும் அரசர்

முறையான ஏற்பை அரசர் இரத்தினிகளிடமிருந்து பெற்ருர் என்று சொல்லப்படுகிறது. இவர்கள் அமைச்சர்களாக இருந்ததோடு, சமூகத்தின் பல்வேறு வகுப்புகளின் பிரதிநிதிகளாகவும் இருந்தனர். ஆனுல், இவர்கள் எல்லோரும் அரசின் அமைச்சர்களாக இருந்திருக்கமுடியாது. சேனுனி, புரோகிதர், க்ஷத்திரி, சம்கிரஹிதர், பாகதூகா, அக்சாவாப ஆகியோர் அமைச்சர்கள். புரோகிதரைத் தவிர இவர்கள் அரசின் பல்வேறு துறைகளின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றனர். இரத்தினிகளின் பட்டியலில் சட்டம், நீதி ஆகியவற்றிற்கு அமைச்சரில்லை. ஆகையால், 'சட்டத்தின் காவலராக இருந்த' அரசர் சட்டம், நீதி ஆகியவற்றின் பொறுப்பில் இருந்ததாகத் தெரிகிறது. வேதகால மரபைத் திருத்தி, சட்டத்தின் தலைவராகிய வருணன், அரசரைச் சட்டத்தின் தலைவராக்குகிருர்; ஒருவர் சட்டத்தின் தலைவராகும் (தர்மபதியாகும்)[131]பொழுது உண்மையில் அரசு தனி முதன்மை பெறுகிறதென்று இப்பொழுது வலியுறுத்தப்பெறுகிறது.

வேதகாலத்தில் அரசர் 'மக்களின் காவலராகவும் ராஷ்டிரத்தை நிலைநாட்டுபவராகவும் இருந்தார்.[132] இதைப்போல், இப்பொழுது இவர் அரசரைக் காத்துப் பேணுபவர்.[133] ஒரு குறிப்பிட்ட இனத்தின் அரசராக இவர் இப்பொழுது பெரிய அரசுகளை ஆட்சி செய்கிருர்.[134] இப் பெரிய அரசுகள் ஒரு தனிப்பட்ட இனத்தை—குருக்கள், உசினரர் ஆகியோரைப்போல் மட்டும் கொண்டிருக்கவில்லை. வேதகால அரசுகளைப்போல் இவைகள் ஓரின அரசுகள் அல்ல. ஒரு மேம்பட்ட இனம் இருந்திருக்க

130 Sat. Br., xiii, 2, 4, 2 & 4.

131 Sat. Br., v, 3, 3, 9.

132 R.V., iii, 4, 3, 5,—Gopalan Janasya; R.V., x, 173-2—Rastra madharaya.

133 Sat. Br., ix, 4, 1, 1. Rastra-bhrt.

134 Sat. Br., V, 4, 2, 3. cf. Payurnisa, R.V., iv, 4, 8.

வேண்டும். இவர்களின் அரசர் அரசின் அரசரானதோடு இங்கு வசித்த மற்ற இனங்களின் அரசருமாவார்.

ஆனால், அரசர் தம் மக்களின் தலைவராக எதையெதை யெல்லாம் வென்று கைப்பற்ற முடியுமோ அவற்றைக் கைப்பற் றினார். ஏனெனில், மாறாக நாடு முழுவதன் தலைவராகக் கருத் தளவிலாவது மக்கள் கருதப்பெறமாட்டார்கள். ஆனால், மக்களின் இப்பெயர் கவர்ச்சியற்றது. இந்தச் சமயத்தில் அமைப் பின் முதன்மையான அடிப்படை இனம் சார்ந்ததுமில்லை; குலம் சார்ந்ததுமில்லை. ஆனால், சமூக அரசியல் சார்புடையது. இந்தோ-ஆரிய சமூகத்தின் சாதி அடிப்படை சிறிது சிறிதாக மற்றெல்லா நலன்களையும் ஈர்த்துக்கொண்டது; அரசியல் தேவைகள் அரசைத் தோற்றுவித்தன. இவை இரண்டும் இன அமைப்பை ஒழித்துவிட்டன. எவ்வாறாயினும், மக்களின் கருத் தளவிலான இச் சிறப்பு அரசரின் தனியாட்சியின்மீது ஒரு பெரிய தடுத்து நிறுத்தும் ஆற்றலாக இருந்தது. சான்றாக, மக்களின் ஒப்புதலோடுதான் அரசர் ஒரு குடியிருப்பை ஒதுக்கி வழங் கலாம்[135] என்று குறிப்பிட்டது. ஆனால், இப்பொழுது இவர் 'விசை உண்பவர்,' அதாவது, மக்களை எதிரிகளிடமிருந்து காப்பாற்றிய இவர் மக்களிடமிருந்து திறை திரட்டும் உரிமை பெற்றிருந்தார். வேதகால அரசரைப்போல் இவரும் பிராமணர்களின் சிறப்புரிமைகளைப் பாதுகாத்தார். அவ ரைப்போல் சட்டத்தின் காவலராகவும் இவர் இருந்தார்.[136] இப் பொறுப்புகளின் காரணமாக இவர் அரசரைக் காத்துப் பேணுபவர் என்று பெயர்பெற்றார்—ராஷ்டிரபிர்த்;[137] பரவலான சுயேச்சையையும் துவக்கத் துணிவையும் பெற்றிருந்த இவர் பெரிதும் மதிக்கவும் பெற்றார் ; துன்பமும் அடைந்தார். பிராம ணர்களைப் பொறுத்தவரையில் இவர் திறை இறுத்தது சர்ச்சைக் குரியதானாலும், வேதகால அரசரைப்போல் மக்கள் விருப்போடு அளிப்பதை நம்பியிருக்க முடியவில்லை.[138] இவர் இன்னும் இராணுவத்தைக்[139] கட்டுப்படுத்தும் தலைமை அதிகாரத்தைத் தம்மிடமே வைத்திருக்கிறார். ஆகவே, நீதியோடும் ஆட்சி யோடும் தொடர்புடைய சட்டத்தை நிலைநிறுத்தும் அதிகாரம், வரியை வசூலிப்பதிலும் இராணுவத்தைக் கட்டுப்படுத்துவதி லும் குறைபாடுகள் இருந்துங்கூட, அரசரை மிக்க வலிமை யுடையவராக்கிற்று.

135 Sat. Br., vii, 1, 1, 4.
136 Ai. Br., viii, 17.
137 Sat. Br., ix, 4, 1, 1.
138 Ai. Br., vii, 29; Sat. Br., xi, 2, 6, 14; Sat. Br., v, 4, 2, 3.
139 A.B., vii, 16—Senanyam.

## அரசரின் இறைமை

குறைபாடுகள் இருந்துங்கூட அரசர் இறைமையுடையவரென்றும், இவர் சட்டத்தின் காவலர் என்றும், எனவே, இவர் குற்றம் செய்ய இயலாதென்றும், சட்டங்களின் கடப்பாடுகளிலிருந்து இவர் விலக்குப் பெற்றவரென்றும் வலியுறுத்தப்பெறுகிறது. சட்டக் கடப்பாடுகளிலிருந்து இவர் பெறும் விலக்கை இவருடைய பதவி ஒப்படைப்பின்போது ஒரு சடங்கால் அழகாகக் குறித்துக் காட்டப்பட்டிருக்கிறது. 'அத்வரயுவும் இவரது உதவியாளர்களும்', பின்புறம் குச்சிகளால் மெல்ல இவரைத் தட்டுகின்றனர். குச்சிகளால் இவரைத் தட்டுவது இவர்கள் அரசரை நீதிபற்றிய தண்டனையில் (dandabadha) பாதுகாப்புடன் இட்டுச் செல்கின்றனர்; இதிலிருந்து அரசர் தண்டனை விலக்குப் பெறுகிறார்.[140] அரசபதவியின் இத் தனிப்பெருஞ் சிறப்பும் அரசரின் இம் மிக உயர்ந்த சிறப்புரிமையும் வெறும் வஞ்சச் சொற்களுமில்லை அல்லது வெறும் சடங்குப் பொருளுமில்லை. இக் காலத்திய அரசியல் கருத்துகளோடு ஒப்பிடத்தக்க உறுதியான காரணங்களால் இது தோற்றுவிக்கப்பெற்றது. இவர் அதண்டியர், அதாவது, நீதிசார்ந்ததண்டனைக்குஅப்பாற்பட்டவர். ஏனெனில், எல்லாச் சொல்லுக்கும் செயலுக்கும் இவர் காரணமாவதில்லை. ஆனால், 'இவர் எது சரியோ அதைப் பேசவேண்டும்; எது சரியோ அதைச் செய்யவேண்டும்.'[141] ஏனெனில், 'புனிதச் சட்டத்தை இவர் நிலைநாட்டுபவர்,'[142] 'சட்டத்தின் காவலர்,'[143] தலைமையதிகாரத்தின்[144] அல்லது இறைமையின் அடையாளச் சின்னம். ஆங்கில அமைப்புவழிக் கோட்பாட்டின்படி 'அரசர் குற்றம் செய்ய இயலாதெ'ன்பதைப்போல் இந்தக் கோட்பாடும் தோன்றுகிறது. சட்டத்தின் காவலராகவும் புனிதச் சட்டத்தை நிலைநாட்டுபவராகவும் அரசர் இருப்பதால், இந்து அரசர் குற்றமெதையும் செய்யமுடியாது. இது நேர்மையாக எதிர்பார்க்கத் தக்கது; அரசியலமைப்புச் சார்ந்த பாதுகாப்பன்று. அரசர் குற்றம் செய்ய இயலாது. ஏனெனில், இவருடைய தகுதித்திறன் வரம்பிற்குட்படுத்தப்பெற்றிருந்தது. சட்டத்தின் செயற்பாட்டிலும் ஆட்சி இயற் காரியங்களிலும் இவரது தகுதித்திறன் பயனுடையதாக இருந்தது. தளர்வின்றிக் கூறினால், இவர் சட்டத்தை நிலைநிறுத்துபவர். சட்டம் தன்னைப் பயனுடையதாக்கிக்கொள்ளத் தன் சொந்த வழிகளை வகுத்துக்கொண்டது.

140 Sat. Br., v, 4, 4, 7 (Eggeling's translation).

141 Ibid. 4, 4, 5.

142 Sat. Br., v. 4, 4, 5.

143 Ai. Br. viii, 17.

145 Ibid.

மக்களின் சமய உணர்வுகள், நெறிமுறைக் கட்டுப்பாடுகள் ஆகிய வற்றின்மீது இது நிலைபெற்றது. இதன்பின் சமூகத்தின் பேரதி காரமிருந்தது. உண்மையில் சமூகம் சட்டத்தின் தோற்று வாயாக, அதாவது, இறுதியில் சட்ட உருவத்தை மேற்கொண்ட சமூகப் பழக்கவழக்கங்களாக இருந்தது. இவ்வாறு தோன்றி ஆதரவு பெற்ற சட்டம், கூடுதலான ஆதரவாகிய அரச அதிகா ரத்தின்மீது சார்ந்திருந்தது. சட்டந்தான், ஒரு வழியில் அரச அதிகாரத்தின் செயல்முறைகளை விதிமுறை செய்தது. சட்டத் தின் வரம்புகளுக்குள் அரசர் இருக்கும்வரை இவர் குற்றம்செய்ய இயலாது; சட்ட வரம்புகளுக்குள் இவர் இருக்கும்வரை சமயம் இவருக்குத் துணைநின்றது. அரசர் சட்டத்தை நிலைநிறுத்து பவர். ஏனெனில், அரச அதிகாரம், அல்லது தலைமை அதிகாரம், அல்லது இறைமையைச் சட்டம் நிலைநிறுத்தியது. இத்தறுவாயில் அரச இறைமை சமயச் சலுகையின் ஒரு குறிக்கோள் ஆகிறது. சட்டக் கருத்தின் குறிப்பீட்டால் இக் கருத்தை மேலும் தெளிவுபடுத்தலாம்.

சதபத பிராமணம், சட்டம் 'உண்மை'[145]யென்று கூறிற்று. இவ் வுண்மையைத்தான் சமயம் சாற்றியது. இது மனிதர் களால் மேற்கொள்ளப்படவேண்டும். இது தருமமாகும். அரசர் மனிதரின் தலைவராக இருந்ததால், இவர் தருமத்தின் அல்லது சட்டத்தின் காவலராகக் கருதப்பெற்றார் என்பது உய்த்துணரக் கூடிய ஊகமாகும். சட்டத்திலிருந்து எழுகின்ற இறைமை யின் அடையாளமாக இன்று சட்டமிருக்கிறது. பிராமண காலத்தில் அரச இறைமையின் சின்னமாகச் சட்டமிருந்தது. ஆனால், அரச இறைமையிலிருந்தன்றி வேறு மூலங்களிலிருந்து இது எழுந்தது. இதனால்தான், அரசர் 'சட்டத்தின் காவலராக வும்,'[146] 'அரசைக் காத்துப் பேணுபவராகவும்'[147] இருந்தார்; எனின், செய்யவேண்டிய பணிகளை அரசர் நல்ல முறையில் செயற் படுத்துவதில் அரசரின் இன்றியமையாமை இருக்கிறது.[148] இவர் நிருவாகத்தின் தலைவர். இயல்பாக, சட்டம், சமூகத்திலிருந்து தோன்றுகிறது; சமூகம் சமயத்தின் ஆட்சியில் இருப்பதால், சட்டம் சமயத்தின் தோற்றம் பெறுகிறது. அரசு சமயத்தோடு இணைக்கப்பட்டிருப்பதுபோல் சட்டமும் இணைக்கப்பட்டிருக் கிறது. அரசியல் நிறுவனம்தனக்கெனச் சொந்தமான இருப்பைப் பெற்றிராது. உண்மையில் சமூகத்தால் உட்கொள்ளப்பட்டிருப் பதுபோல்தான் பொதுச் சட்டமும்; அதாவது, அரசின் சட்டம், சமூகப் பழக்கங்கள், சமய மரபுகள் ஆகியவற்றோடு இரண்டறக்

[145] Sat. Br., vi, 7, 3, 11.
[146] Ai. Br., viii, 17.
[147] Sat. Br., ix, 1: 1.
[148] Ai. Br., viii, 12.

கலந்திருந்தது. தலைமை அதிகாரம் அல்லது இறையின் அதிகாரம், அதாவது, க்ஷத்திரியரின் அதிகாரம் நிருவாக அதிகாரமாக இருந்தது; ஐதரேய பிராமணத்தின்படி அரசர், 'பிராமணம்', 'சட்டம்', 'ஒழுங்கு' ஆகியவற்றின் காவலர். எனவே, இக் காலத்தில் நிருவாகத் தனி முதன்மை சமயத்தால் விட்டுக் கொடுக்கப்பெற்றதாகும். அரசரின் தனியாட்சியை இது இயலாததாகச் செய்தது. ஆனால், அரசின் தாராளமான வளர்ச்சியையும் இது இயலாதாக்கிற்று சமூகம் முழுவதிலும் நிலவிய ஒரே ஒரு தனியாட்சிதான் இக் காலத்தில் இருந்தது. இது சமயத்தின் ஆட்சியாகும். அரசர், அரசின் பாதுகாவலர்; சமூகத்தின் பாதுகாவலரல்லர். சமயத்தின் இயல்பு இதுவாக இருந்தது. இறைமைபற்றி கொண்ட இத்தகைய கருத்து அரசபதவியின் ஒரு புதுக் கோட்பாட்டை உருவாக்கியது.

## அரசபதவிபற்றி பிராமணக் கோட்பாடு

இத் தறுவாயில், அரசபதவியின் ஆட்சி அதிகாரமும் நெறிமுறைத் தகுதித்திறனும் சமய இசைவாணையால் கட்டுப்பாடு விதிக்கப்பெற்ற கோட்பாடு, அரசபதவியின் தோற்றக் காரணத்தை வெளிப்படுத்தக்கூடிய ஒரு குறிக்கோளை எதிர்நோக்கித் தொடங்கும். அதாவது, குறிக்கோள் அரசர், அரச பதவியின் மெய்ப்பிப்பாக இருப்பார். அரசபதவியின் தோற்றத்தையும் எண்பிப்பையும் விளக்குவதால் ஓர் அரசியல் மரபைப் படைப்பது கருத்தாகும். மக்கள் தொடர்புடைய ஓர் ஏற்பாட்டிற்கான சமூகத் தேவையின் காரணமாக அரசபதவி தோன்றிற்று. மக்களின் பணியை நல்ல முறையில் நிறைவேற்றக்கூடியவர்தாம் இப் பதவியைப் பெற்றவர் என்று அறிவுரை கூறப்பட்டது.[149]

கடவுளர்களிடையே முதலில் அரசபதவி தோன்றியது. மேலுலகில் இது தோன்றுவதற்கான சூழ்நிலைகள், இயல்பாகவே பூமியில் நடந்ததன் எதிரொலியாகும். அசுரர்களுடனான தேவர்களின் மோதலில் தேவர்களின் நிலையை விளக்குவதில் இக் கோட்பாடு தொடங்குகிறது. பூசலால் தேவர்கள் ஒற்றுமையின்றி இருந்தனர்; 'நம்முடைய வேற்றுமையால் அசுரர்கள் பெரு வலிமை பெறுவர்' என்று நினைத்தார்கள். பிரிந்தவர்கள் கூடி முடிவுசெய்தார்கள்...'வருக, நாம் நம் உடல்களை அரசர் வருணன் வீட்டில் விட்டுச் செல்வோம். இவைகளோடு இவர் ஐக்கியப்படமாட்டார். இதை இவர் மீறுவார்; தொல்லை கொடுக்க முற்படுவார்'. 'அப்படியே ஆகட்டும்' (இவர்கள் மறுமொழி கூறினர்). இவர்கள் தம்

[149] Ai. Br., viii, 12.

உடல்களை அரசர், வருணன் வீட்டில் விட்டுவைத்தனர்; இது இவர்களின் முழுமையான ஒப்பந்தமாயிற்று...'.[150] விருந்தினர் படையலைக் கடவுளர்கள் நிறைவேற்றியபொழுது பிணக்குண்டாயிற்று என்று மறுபடியும் நாம் அறிகிறோம். விட்டுக்கொடுக்க மனமில்லாத இவர்கள் நான்கு மாறுபட்ட கட்சிகளாகப் பிரிந்தனர்....இவர்கள் பிரிந்தபொழுது அசுர ராக்கதர்கள், இவர்கள் பின் வந்து இவர்களிடையே புகுந்துகொண்டனர். இது இவர்களுக்குத் தெரிந்தது. 'திண்ணமாக, தீங்கான நிலையில் நாம் இருக்கிறோம். அசுரர்கள் நம்மிடையில் வந்துவிட்டனர்; நாம் எதிரிகளுக்கு இறையாவோம். நாம் ஓர் உடன்பாட்டிற்கு வந்து நம்மில் ஒருவரின் தனித்தகுதிக்கு விட்டுக்கொடுப்போம்'! இந்திரனின் தனித்தகுதிக்கு அப்படியே விட்டுக்கொடுத்தனர். 'நலம், இந்த உடன்பாடு என்றும் இறவாமல் நம்மோடு இருக்க நாம் வழிவகுப்போம்!' தம் விருப்பத்திற்குகந்த உருவங்களையும் விரும்பத்தக்க அதிகாரங்களையும் சேர்த்து, ஒன்றன்பின் ஒன்றாக அளித்து, 'நம்முடைய இந்த உடன்பாட்டை மீறுகிறவர் எவராயினும் நம்மிலிருந்து வெளியேறட்டும்; காற்றில் பரவட்டும்!' என்று கூறினர்.[151]

புகழ்பெற்ற சமுதாய ஒப்பந்தக் கோட்பாட்டிற்கு அரசபதவிபற்றிய இந்த விவரம் எப்படி ஒற்றுமையாக இருக்கிறதென்பது தெளிவாகும். அரசுக்கு முந்திய நிலை வாழ்க்கையின் கேடுகளிலிருந்து விடுதலை பெறுவதற்காக, அரசரைப் படைக்க ஓர் ஒப்பந்தம் செய்துகொண்ட இதே கருத்தை நாம் இங்குக் காணுகிறோம். ஹாப்ஸின் கருத்தைப்போல், இந்துக்களின் அரசியலுக்கு முந்திய நிலை வாழ்க்கையும் முடிவிலாப் போராட்டமாக இருந்தது. இயற்கை நிலையில் வசித்த அரசியலுக்குமுன் இருந்த மனிதர்கள் செய்ததுபோல், ஓர் உடன்பாட்டால், ஒருபொதுவான கொள்கலத்தில், தேவர்கள் தம் 'விருப்பத்திற்குரிய உருவங்களையும் விரும்பத்தக்க அதிகாரங்களையும்' இட்டனர். இதன்பின் ஹாப்ஸ் நினைத்ததுபோல், உடன்பாடு 'என்றும் இறவாதாயிற்று'. இந்த உடன்பாட்டை மீறுபவர் எவராயினும், காற்றில் விடப்படுவார். எனவே, சமுதாய ஒப்பந்தக் கோட்பாட்டில் உள்ளதைப்போல், அரசபதவி அல்லது இறைமையின் தோற்றத்தை நாம் பெற்றிருக்கிறோம். அழிக்கமுடியாத உடன்பாடு, தன் விருப்பில் விட்டுக்கொடுக்கப்பெற்ற சமூகத்தின் திரண்ட அதிகாரங்களைக் கொண்டிருக்கும் அரசபதவியின் தன்மை ஆகிய இரண்டு கருத்துகளும் முற்கால இந்தியர்களுக்கு

[150] **Ai. B., i, 24. (Dr. Keith's Translation).**

[151] **Sat. Br., iii, 4, 2.**

ஒரேமாதிரியான பொருளேக் கொடுத்தன. பிராமண காலத்திய இந்தோ–ஆரியர் சமயம்பற்றியவைகளுக்குத் தம் விருப்பாற்றலே எல்லேக்குட்படுத்தவில்லே. அரசுபற்றியவைகளில் இவர்கள் பற்றுக்கொண்டிருந்தனர். அரசின் தோற்றக் காரணத்தை அறிவதில் இவர்கள் ஊக்கம் செய்தனர்; மானிடத் தேவைகளிலிருந்து, அதாவது, சமூகப் பூசலே ஒழித்துச் சமூகத்தில் அமைதியைப் பெறுவதிலிருந்து தோன்றியதென்று இவர்களே விளக்கினர். இதை (அரசபதவியை)ச் சமயத்தோடு தொடர்புபடுத்துவதால் இதற்குத் தூய்மையும் பயபக்தி உணர்ச்சியும் கொடுக்கப்பெற்றிருந்தாலும், அரசபதவி அதன்வழி அரசு முற்றிலும் மானிட நிறுவனமாயிற்று. ஆனுல், அரசபதவி, சான்ருக, இதன் தோற்றத்தின் ஒரே ஒரு கூருகும்.

அரச அதிகாரத்தை மெய்ப்பிப்பதில் மற்றக் கூறு அடங்கியுள்ளது. அரச அதிகாரத்தின் கொள்கைப்படியான தோற்ற விளக்கம் என்ன ? அரசபதவியின் உரிமை மெய்ப்பிப்பு என்ன ? இதை சதபத பிராமணம் மிக நன்ருக விளக்கியுள்ளது. ஒருவராய் இருக்கும் அரசர் பலரை[152] ஏன் ஆளவேண்டுமென்று இது கூறுகிறது. லாஸ்கியின் கருத்தின்படி, 'மக்களின் பெருந்திரள் ஒன்று இதன் ஒரு சிறிய பகுதி எண்ணிக்கையினருக்குத் தம் விருப்பில் அடிமைபபடும். இவ்வுறுதியான, முனேப்பான உண்மையை விளக்கும் காரணங்கள்' இவைகளாகும். எல்லாக் காலங்களிலும் எல்லா நாடுகளிலும் அரசியல் கருத்தின் கடுஞ்சிக்கல் இதுவாகும். இந்தோ–ஆரியர்கள் இதை இப்படித்தான் விளக்கினர். இராஜன்யர் அல்லது அரசர் ஆட்சிசெய்கிருர். ஏனெனில், இவர் 'மிக வெளிப்படையாகப் பிரஜாபதியாக (படைப்புகளின் தலேவராக) இருக்கிருர்.'[153] அரசபதவிக்கும் எனவே, அரசிற்கும் சமயம் வழங்கிய ஆதரவின் தகவு இங்குத்தான் இருக்கிறது. பிரஜாபதியின் இதேபோன்ற தன்மையை இவர் கொண்டிருந்தார். சான்ருக, உயிரினங்களின் தெய்வத் தலேவரின் இயல்பை இவர் பங்குபற்றுகிருர். 'எப் பணியையும் நனிசிறக்கச் செய்பவராகிய இவர், மிக்க திடம் வாய்ந்தவராகவும், மிக்க வலிமையுடையவராகவும், மிக்க வீரமுடையராகவும், மிக்க நிறைவாகவும் இருக்கிருர்.'[154] மக்களுக்குள் அரசர் மிகு நலன்களேப் பெற்றிருக்கிருர்; எனவேதான் இவர் ஆளுகிருர். பிரஜாபதி கடவுளர்களுக்குள் இருப்பதுபோல் இவர் மக்களுக்குள் இருக்கிருர். பூமியில் அரசர் மனித உருவிலான கடவுள் என்ற அற

152 Sat. Br., V, 1, 5, 14, 153 Sat. Br., v. 1, 5, 14.

154 Ai. Br., viii, 12.

வுரையால் முடிவடைந்த இந்த அரசியல் மரபின் தொடக்கம் இதுதான். நீண்ட நெடுங்காலத்திற்குப்பின் இது நடக்கவேண்டியது. ஆனால், இப்போதைக்கு அரசபதவிபற்றிய இப் பிராமணக் கோட்பாடு, அரசியல் கருத்திலும் வினைமுறையிலும் கணிசமான முன்னேற்றத்தை உறுதியாகக் குறிப்பிட்டது.

## பிராமண காலத்திய முடியாட்சி

மொத்தத்தில், முடியாட்சியின் முனைப்பான வளர்ச்சியைப் பிராமண காலம் குறிப்பிட்டதெனத் துணிவாகச் சொல்லலாம். 'அரசைக் காத்துப் பேணுபவராக' அரசரானார். அரசபதவியும் மரபுவழிக்குரியதாயிற்று. 'அரண்காப்புப் பெற்ற கோட்டைகளை'[155] அரசர் பெற்றிருந்தார். ஒரு குறிப்பிட்ட சில மக்களுக்குள்[156] அரசர் 'சமூகத் தனிப்பெருமையும்' 'ஆளும் அதிகாரமும்' பெற்றிருந்தார். அரச பதவிக்கும் அரச உருவிற்கும் விரிவான சடங்குகள் பயபக்தி உணர்ச்சியையூட்டின. பிற்கால முழுமையான முடியாட்சி வளர்ச்சிக்கு இவைகள் முன்னேற்பாடுகளாகும். இக் காலத்தில் குடியாட்சியின் கூறுகள் (அ) கங்கை, யமுனைச் சமவெளிகளில் ஆரியர் பரவுதல், (ஆ) சமயத்தோடு அரச பதவியின் தொடர்பு ஆகியவற்றிலிருந்து வளர்ந்தன. புதிய இடங்களைக் கைப்பற்றியது அரசரின் அதிகாரத்தையும் சிறப்பையும் வளர்த்தது. ஆனால், சமயத்தின் ஆதரவால் அரசர் பெருமையும் மதிப்பும் பெற்றார். இதன் அடையாளமாக அரச பதவி ஒப்படைப்புச் சடங்கு இருந்தது. சமயத்தின் ஆதரவு மறைவானதோர் அபாயமாக இருந்தது. ஏனெனில், இது முடியாட்சி சமயத்திற்குக் கீழ்ப்படிதலை உணர்த்திற்று. தனியாட்சியாக மாறியிருக்கக்கூடிய அரசரின் அதிகாரத்திற்கு இது மெய்யானதோர் எல்லைவரம்பாகும். ஆகவே, நம் ஆய்வுக் கருத்திலிருந்து, சான்றாக, அரசின் வளர்ச்சியிலிருந்து நாம் அறியவேண்டியது யாதெனில், அரச அரசாங்கம் இதனால் ராஷ்டிரம் அல்லது முடியாட்சி அரசின் உயர்வுக்கும் அரசபதவியின் பெருமைக்கும் உதவியது பொருள் சார்ந்த அதிகாரம், சமய ஆதரவு ஆகியவற்றின் இணைப்பாகும். முடியாட்சியை பிராமணங்கள் ஏன் புகழ்ந்தன என்பதை சமய ஆதரவு விளக்குகிறது; ஏனெனில், நடுநாட்டில் இது பழக்கத்தில் இருந்ததோடு இணையற்றஅரசியல் நிறுவனமாகவும் இருந்தது. இயற்கையாகவே முடியாட்சியல்லாத அரசாங்க வகைகளாகிய சுவராஜ்யம், வைராஜ்யம்,

[155] Ai. Br. 1, 23.

[156] Sat. Br. ix, 3, 1, 13.

பௌஜியம் போன்றவை கடமை திறம்பியதால் மறைந்தன. இவைகளைப்பற்றி பிராமணங்களில் ஒன்றும் சொல்லப்படவில்லை; வடக்கு, தெற்கு, மேற்குப் பகுதிகளின் நிறுவனங்கள் இவை. நடுநாட்டின் மக்களாகிய வசஸ், உசினரர், உத்தரபாஞ்சலர் போன்றோரிடமிருந்து முற்றிலும் மாறுபட்ட அரசியல் மரபுகளை இவைகள் கொண்டிருந்தன. இதனுல்தான் ரிஸ் டேவிஸ், 'கூடுதலான அல்லது குறைவான வலிமையுடைய முடியாட்சிகளோடு அடுத்தடுத்து முற்றிலும் அல்லது திருத்தப்பெற்ற சுயேச்சையோடு குடியரசுகள் தொடர்ந்து அழியாது வந்தன என்பதைப் பழைய பௌத்தப் பதிவுகள் வெளியிடுகின்றன'வென்று கூறுகிறார்.[157]

[157] Buddhist India, p. 2.

# 4. சமயத்தின் புரவலராக அரசர்

## (கி.மு. 700—400)

### 'தடையில்லாச் சிந்தனை'யின் காலம்

பிராமண சமயத்தின் எழுச்சியைத் தொடர்ந்த காலமும், பௌத்தசமயம் பரவுவதற்கு முந்திய காலமும் இந்தியச் சிந்தனை, அரசியல் ஆகியவற்றில் மிக உறுதியற்ற காலங்களாகும். இதன் தொடக்கத்தில் நமக்கு முற்றிலும் ஒளி கிடைக்கவில்லை; குறிப்பாக நாம் இருட்டில் துழாவவேண்டியிருந்தது. புத்த சமயத்தின் எழுச்சிக்குப் பிறகு இந்த இருட்டுச் சிறிது சிறிதாகக் குறைகிறது. அலெக்சாந்தர் படையெடுப்பு, மோரியப் பேரரசு காலத்தில் இது மறைந்துவிட்டதாகத் தெரிகிறது. இக் காலத்தின் பரப்பு கி.மு. ஏழாம் நூற்றாண்டிலிருந்து கி.மு. நான்காம் நூற்றாண்டுவரையிலான மூன்று நூற்றாண்டாகும்.

இக் காலத்தின் மிகச் சிறப்பான கூறுகளில் ஒன்றுமுற்றிலும் 'தடையில்லாச் சிந்தனை' இங்கு நிலவியதாகும். 'மிகத் தனிமுதலான, துணிவான ஊகக் கோட்பாடாகிய ஏற்பமைதிகொண்ட வேதாந்தக் கருத்திலிருந்து மிகப் பரவலான கருத்து வேறுபாடு,[1] ஆரியரின் ஆட்சி எல்லையாகிய கிழக்கு,மேற்குக்கோடிகளான இந்தியாவின் இருபுறக் கோடிமண்டலங்களில் மையங்கொண்டிருந்தது. இதற்கு முந்திய, அதாவது, பிராமண காலம் தீவிரமான சடங்கு வெறிக்காலமானால், இந்தக்காலம் ஆழ்ந்த சிந்தனைக்காலமாகும்; அல்லது ஆர். ஜி. பந்தர்கர் சொல்லியதுபோல், சிந்தனைக் கிளர்ச்சிக் காலங்களில் ஒன்றாகும். சடங்குவெறிக்கெதிராக எதிர்ச்செயல் ஒன்றிருந்தது. சடங்குகளைப் பொருளாகக் கொண்டிருந்த சமயத்தின் தகுதியை மக்கள் ஐயுற்றனர். இந்தச் சிந்தனைக் கிளர்ச்சியிலிருந்து ஏற்பமைவில்லாத கோட்பாட்டில் பற்றுடைய இரண்டு கோட்பாட்டு முறைகள் எழுந்தன. இவற்றில் அறுபத்

[1] Rys Davids, 'Buddhism, p. 34.

திரண்டைப் பேராசிரியர் ரிஸ் டேவிட் நினைவுபடுத்துகிறார்.[2] கங்கைச் சமவெளியில், அதாவது, 'என்றும் நிலைபெற்ற நடுநாட்டில்'[3] சுவையான கருத்தின் புதிர்நெறியொன்று வெளிவந்தது. இதை (அ) ஆன்மவாதம், (ஆ) பலதெய்வ வழிபாடு, (இ) அனைத்திறைக் கொள்கை, (ஈ) துவைதம் ஆகியவற்றின்கீழ் வகைப்படுத்தலாம். கடைசி மூன்றும் பிராமணங்கள், உபநிடதங்கள் சாம்கியங்கள் ஆகியவற்றில் இடம்பெற்றிருக்கின்றன. 'புத்த சமயத்தின் வாழ்க்கைக் கோட்பாடு முதலில் எடுத்துரைக்கப் பெற்ற அந்தக் காலத்தில் இதைக் காணலாம்.[4]' இந்தியச் சிந்தனை வரலாற்றில் இது ஓர் இடைமாறுபாட்டு நிலையாகும். இடைமாறுபாட்டுக் காலங்களைப்போல், இதில் ஐயப்பாடுகளும், ஊகங்களும், கருத்து மோதல்களும் நிறைய இருந்தன. ஆரியர் தாம் முதலில் தங்கியிருந்த இடத்திலிருந்து நெடுந்தொலைவு பரவியிருந்தனர்; இவர்கள் புதிய மரபுகளைப் படைத்ததுபோல் பழைய மரபுகள் பலவற்றை மறந்துவிட்டனர்; புதிய சமயக் கோட்பாட்டு முறைகளோடு பொருதனர். இதன் பயனாக ஒரு புதிய சமயம் தோன்றியது. இதுதான் பிராமண சமயம். வாழ்க்கைக்கு விரிவும் வகைத்திரிபும் தேவைப்படுகையில் இந்தச் சமயம் இதைச் சுருக்கமுயன்றது. இயற்கையாக ஓர் ஆழ்ந்த இடைவேளையும், அமைதியாக வினவுதலும், வாழ்க்கையின் புதிய தகவுகளின் உருவாக்கமும் இங்கிருந்தன. வாழ்க்கையின் இறுதியான பிரச்சினைகள் விளக்கப்படவேண்டியிருந்தன. மற்றெதையும்விட, 'வியக்கத்தக்க பெரும் எண்ணிக்கையான மனிதர்களின் ஆர்வமிக்க பொறுமையையும் அளவான கவனத்தையும் இது ஈடுபடுத்தியது'.[5]

## சடங்கு வெறிக்கு எதிரான கிளர்ச்சி

ஆக்கப் பயன்களை நோக்கிய திடமான மனஞ்சார்ந்த செயற்பாட்டுக் காலமாக இது உண்மையில் இருந்தது. இதிலிருந்து பல்வேறு சமயக் கொள்கைகளும் மெய்யுணர்வுக் கோட்பாடுகளும் தோன்றின. முல்லை சார்ந்த ஒதுக்கிடங்களிலிருந்து மெய்யுணர்வாளர்கள் எடுத்து விளக்கிய உபநிடதக் கருத்துகள் ஆரியரின் சிந்தனையில் ஒரு புதிய நிலையை உண்டாக்கியது. வாழ்வு, இறப்புப் பிரச்சினைகள்பற்றிய பழங்கால மூதுரைகளில் மனநிறைவு கொள்ளாத விழிப்பான திறந்த சிந்தனையாளர்களின் முதன்மையான படைப்பு இவைகளாகும். இறுதியாக இந்தக்

2 Ibid, pp. 31—33.
3 Dhruvayam Madhyamayam disi, as the Ai. Br. Put it.
4 Ibid., pp, 35—37,
5 Rhys Davids, 'Buddhism,' p, 37

கருத்துகளிலிருந்து சாம்கியமும், சாம்கியத்திலிருந்து பௌத்தமும் சமணமும் தோன்றின. முழுக்க முழுக்க உலோகாயதிகளோடு நாத்திகர்களுமிருந்தனர். மொத்தத்தில், ஏற்றுக் கொள்ளப்பெற்ற வாழ்க்கையின் நற்பண்புகள் அல்லது இருக்கும் பொருள்களுக்கு எதிரான மறுப்பு அல்லது கிளர்ச்சி உணர்வை இவை வெளிப்படுத்தின. ஆனால், பிராமண சடங்குவெறி அல்லது வேதகாலப் பலதெய்வ வழிபாடு பற்றிய புதிய போக்கின் பண்பை விரித்துரைக்கும் வெறும் எதிர்ப்புணர்ச்சியாக மட்டும் இது இருக்கவில்லை. ஆழ்ந்த மறைவாக இயங்குகிற தாராளச் சிந்தனையும் இருந்தது. வாழ்க்கையை வழிபாட்டு முறைகள், சடங்குகள் என்ற வட்டத்தில் சுருக்கிய எல்லாத் தடைகளையும் அழிக்கமுயன்றதுமட்டுமன்றி ஒரு புதிய வாழ்க்கை முறையைச் சீரமைக்கவும் முயன்றது. இங்குத்தான் இதனுடைய ஆக்க இயல்பு தெளிவாகிறது. இப் புதிய தாராளச் சிந்தனை துணிவு உணர்ச்சியால் துடித்தது. வாழ்க்கையின் புதிய செயற்கூட்டு நிலைகளைக் கண்டுபிடிக்க இது விரும்பியதுபோல், இவைகளை எடுத்து விளக்குவதன் புதிய முறைகளையும் விரும்பியது. இக் காலத்திற்கு எல்லையற்ற ஆற்றலை இது புகுத்தியது. இது இந்தக் காலத்தின் பிற்போக்கான உணர்ச்சியில் இந்தக் கிளர்ச்சியின் முதன்மையானதோர் அருஞ்செயலாகும்.

## தாராளப் பண்புக் கொள்கைக்கும் பழம்பண்புப் பாதுகாப்புக் கொள்கைக்குமிடையில் முரண்பாடு

ஆனால், இப் பிற்போக்கான உணர்ச்சி இதன் இணையை விரைவில் சந்தித்தது. இதனுடைய தாக்காற்றல் சமூக வாழ்க்கையின் பிராமணக் கட்டுக்கோப்பின் அடித்தளங்களை அசைக்கத் தொடங்குகையில், இந்தக் கட்டுக்கோப்பைக் காத்த பழமைப் பண்புகளின் ஆற்றல்களை பிராமண சமயம் கட்டவிழ்த்து விட்டது. இந்தச் சிந்தனைகள் கல்ப சூத்திரங்களாக உருவெடுத்தன. இவை சிரௌத, கிரிய (grihya), தர்ம சூத்திரங்களைக் கொண்டிருந்தன. பிராமண சமயத்தால் எதிர்நோக்கப்பெற்ற வாழ்க்கை முறையில் மனித நடத்தையின் சரிநுட்ப விவரங்களை ஒழுங்குப்படுத்தவும் வரையறை செய்யவும் இவை முற்பட்டன. புதிய சக்திகளின் நெருக்கத்தால், பிராமண வாழ்க்கை முறையிலிருந்து விலகிச் செல்வதை இவை தடுத்து நிறுத்த முயன்றன. பழைய ஆரிய மரபுநிலைகளை வைத்துப் பேணும் முயற்சிகளை இவை வெளிப்படுத்தின. ஆனால், வாழ்க்கையைக் கட்டுப்படுத்துவதற்கும், அதன் எல்லைகளைச் சுருக்குவதற்கும், அதன் வளர்ச்சியைத் தடைசெய்வதற்கும் இது உதவியது. இப் பழமைப் பண்புணர்வு, தாராளப் பண்புணர்வோடு வேறு வழியற்ற போராட்

டத்திற்கு வழிசெய்தது. இவ்வாறு நோக்கின், புதிய சக்திகளின் அழுக்கத்தைக் குறைப்பதில் கல்ப சூத்திரத்தின் தகவு இருந்த தாகத் தோன்றுகிறது.

## கல்ப சூத்திரங்கள்

கரணங்கள் எனப்பட்ட பல்வேறு வேதகால வாதங்களின் சார்பின்கீழ் கல்ப சூத்திரங்கள் எழுந்தன. வேள்விச் சடங்குமுறை, வீட்டுச் சடங்குமுறை, அன்றாட வாழ்க்கையின் (சமயாகாரிக) பழக்கங்களை சிரௌத்த, கிரிய, தர்ம சூத்திரங்களின் தலைப்பின்கீழ் முறையே இவை விளக்கின. நினைவுகொள்ள எளிதான நூற்பா உருவில், இல்லறத்தில் உள்ளவர்களைப் பொறுத்தவரையில் குருவும், அரசரைப் பொறுத்தவரையில் குடிமக்களும் பிராமண சமூக வாழ்க்கை முறையில் ஒதுக்கி வழங்கப்பெற்ற கடமைகளோடு ஒப்ப இவை வசதிசெய்தன. பிராமணங்களின் சடங்குமுறை பற்றியவைகளின் தொடர்ச்சியாக சிரௌத்த சூத்திரம் அமைந்தது. பிராமணங்களிலிருந்து வீட்டுச் சடங்குமுறைகள் முற்றிலும் விலக்கப்பட்டன. ஆகவே, 'சிரௌத்த சூத்திரத்தின் ஆசிரியர்கள் அன்றாட வாழ்க்கையின் சமய வினைமுறைகளை ஒருங்கமைத்தபொழுது மக்கள் தொடர்புடைய மரபுச் சான்றையே இவர்கள் நம்பியிருந்தனர்.'[6] தர்ம சூத்திரங்களும் மரபுகள் அல்லது ஸ்மிருதிகளின்மேல் நிறுவப் பெற்றன. சமயச் சார்புடைய சட்டத்தை 'முழுமையாக விளக்கும் இவை மிகப் பழைய இந்திய இலக்கியங்களாகும். ஆனால், சட்டத்தின் சமயச் சார்பின்மையை அரைகுறையாகவும் சுருக்கமாகவும் மட்டுமே இவை விளக்குகின்றன.'[7] இவைகளெல்லாம் பிராமண சமூகத்தின் மனிதனின் முழு வாழ்க்கையை எதிர்நோக்கின. இப்பொழுது பிராமண காலத்தில் இருந்ததைவிட வேள்வி வழிபாட்டு முறைகள் இன்னும் விரிவடைந்தன. வீட்டுச் சடங்கு முறைகளும் விரிவடைந்து மானிடவாழ்க்கையின் முழு வீச்சையும் கொண்டிருந்தது. தாயின் கருப் பையில் உயிர் தோன்றுவதிலிருந்து தொடங்கி இவை மரணத்திற்கப்பால் நீண்டன. சமூக வேறுபாடு, சமயத்தின் கடமைப் பொறுப்புகள் ஆகியவற்றின் வளரும் சிறப்பின் விளைவாக அன்றாட வாழ்க்கையின் பழக்கங்கள் எண்ணற்றவைகளாயின. இவ் வேள்வி, வீட்டுச் சடங்குகள், மரபுகள், அன்றாடச் சமய வினைமுறைகள் ஆகியவற்றின் திரண்ட பெரும்பகுதி செயலாட்சிக்கொவ்வாமல் வளர்ந்தது. இவைகளின் வாய்மைத் தகவு ஐயுறப்பட்டபொழு

[6] Macdonell, 'History of Sanskrit Literature', p. 249.
[7] Ibid., p, 258.

தும், பிராமண சமூகம் கீழறுக்கப்பட அச்சுறுத்தப்பட்டபொழுதும் முறையாக ஆய்வுக் கட்டுரைகளாக இவைகளைத் தொகுப்பதற்கு தளரா முயற்சிகள் எடுக்கப்பட்டிருக்கவேண்டும். ஒரு வசதியான வரம்பிற்குள் இவைகளைக் கொண்டுவர, நூற்பா அல்லது சூத்திரங்கள் எனப்பட்ட இலக்கிய உருவில் இவைகள் தொகுக்கப்பட்டன. பிராமணங்களின் வாசகங்கள் மீது அல்லது பொதுவான மரபுகள்மீது இவை தோற்றுவிக்கப்பட்டிருப்பினும், இப் பல்வேறு சூத்திரங்கள், பல்வேறு பிராமணங்களுக்கும், இறுதியாகப் பல்வேறு வேதங்களுக்கும் பிற்சேர்க்கைகளாக அமைக்க இவைகளெல்லாம் ஒன்றுசேர்க்கப்பெற்றன. இவ்வாறு இணைக்கப்பெற்றவை வேதங்களின் தூய்மை பெற்றன. ஆரிய மரபுரிமையையும் வேதகாலப் பண்பாட்டையும் தாராளப் பண்புக் கொள்கையின் சக்திகள் சிதைக்க முற்பட்டதும், முறையே சட்டத்தின் வலிமைபெற்ற வேள்விச் சடங்குகளை, வீட்டுக் கடமைப் பொறுப்புகளை, பொது மரபுகளை, சிரௌத்த, கிரிய, தர்ம சூத்திரங்களென முறையான ஆய்வுக் கட்டுரைகளில், அதாவது, இப் பண்பாட்டின் மரபுரிமையின் எல்லாக் கூறுகளையும் வசதியான உருவில் வேதகாலப் பிரிவின்கீழ் ஒன்ருகச் சேர்த்துத் தொகுத்ததால், பழமைப் பண்புச் சக்திகள் இதைக் காக்க முயன்றதும் இக் காலத்தில்தான்.

## உபநிடதங்கள்

இவைகளுக்கு மாருக உபநிடதங்கள் இருந்தன. இவை பிராமணங்களிலிருந்து அகத்தூண்டுதலைப் பெற்று பிராமணச் சடங்கு வெறியைச் சிறுமைப்படுத்தின.[8] ஆகையால், ஏற்புடைய சமயம் சார்ந்த கருத்தை இவைகள் பகைத்துக்கொண்டன. இரகசியக் கோட்பாடுகளெனக் கருதும்படி இவைகள் முற்றிலும் இரகசியமாகக் கற்பிக்கப்படவேண்டும்.[9] உபநிடதங்கள் ஒன்பதுவகைத் தத்துவங்களைக் கொண்டிருந்தன. இவைகளில் ஆறு ஏற்புடைச் சமயங்களாகக் கருதப்பெற்றன. ஆனல், இந்த ஆறில் நான்கு 'தொடக்கத்திலிருந்தே நாத்திகம் சார்ந்தனவாக இருந்தன. இதில் ஒன்று இப்படியே கடைசிவரை இருந்தது.' 'ஏற்புடைய சமயநெறிகளில் மிக முக்கியமானவை அனைத்திறைமைக் கொள்கைசார்ந்த வேதாந்தமாகும். வேதகால இறுதியிலிருந்து பிராமண சமயத்தின் விஞ்சிய ஆற்றலுடைய தத்துவமாக இருந்து வந்த உபநிடதக் கோட்பாடுகளை இது கொண்டிருந்தது. நாத்திக சாம்கியமும் உலக வரலாற்றில் முதல் தடவையாக மானிட

[8] Ibid., p. 218.
[9] V. I., Vol. I, pp. 91—92.

மனத்தின் முழுமையான சுயேச்சையை வலியுறுத்தியது. பகுத்தறிவின் உதவிகொண்டு இதனுடைய பிரச்சினைகளைத் தீர்க்க முயன்றது. இரண்டு புறக் கோட்பாடான முறைகளாகிய பௌத்த, சமண சமயங்கள் சாம்கியாவின்மீது நிறுவப்பெற்றிருந்தன; இவை வேதங்களின் சான்று வலிமையை மறுத்தன. பிராமண சாதி முறையையும் சடங்கு நெறியையும் மறுத்தன.'[10] இவைமட்டுமல்ல. 'ஏற்புடைய சமயங்களையும் பிராமண சமயமல்லாத இரண்டு சமயங்களை அடுத்து உலோகாயதம் என்ற ஓர் உலோகாயதம் சார்ந்த வாதம் தழைத்தோங்கியது. இக் கோட்பாட்டைத் தோற்றுவித்தவரின் பெயரிலிருந்து இதைச் சாரவாகம் என்பர்.'[11] மிக்க புரட்சிகரமாகவும் வலிந்து மேற்சென்று தாக்குகின்ற ஏற்பமைதியில்லாத கோட்பாடாகவும் இருந்தது. ஏனெனில், இது வேதங்களையும் பிராமண சமயச் சடங்குமுறைகளையும் வெளிப்படையாகக் கண்டனம் செய்தது. 'வேதங்கள் வீணர்களின் தொடர்பிலாக் கட்டற்ற உணர்ச்சிக் கற்பனை வாய்ந்த செய்யுள்கள் தாமென்றும், பொய், முரண்பாடு, கூறியது கூறல் ஆகிய மூன்று வழுக்களில் தோய்க்கப்பட்டனவென்றும், வேதத்தின் ஆசிரியர்கள் போலிகள் என்றும், இவர்களுடைய கோட்பாடுகள் ஒன்றுக்கொன்று அழிவுத்திறன் வாய்ந்தவையென்றும், பிராமணங்களின் சடங்குநெறிகள் பிழைப்பிற்கான வழிகளாகமட்டுமே பயனுடையவையாக இருந்தன'[12]வென்றும் சாரவாகர்கள் கூறுகின்றனர். இக் கோட்பாடுகளின் எழுச்சியும் பரவலும் ஆரிய இனத்தின் ஏற்பமைதியுடைய பிரிவைக் கணிசமாக அச்சுறுத்தியிருக்கவேண்டும்; தம் வேதகால சமயக் கோட்பாட்டு முறையை இதற்கு வரவிருக்கும் அழிவிலிருந்து காப்பாற்ற இவர்கள் மிகக் கவலைகொண்டிருக்கவேண்டும். இந்தக் கவலைதான், 'பிராமண சமய வழிபாட்டு முறையை முறையான கையேடுகளாகத் தொகுப்பதற்கு முதல் தூண்டு திறத்தை அளித்தது;'[13] எங்கும் சுழன்றுவரும் புதிய முரண் சமயக் கருத்துகளோடு பிராமண சமயத்தை ஒரு கடுமையான போருக்கு இது தூண்டியது.

கி.மு. ஏழாம் நூற்றாண்டிலிருந்து நான்காம் நூற்றாண்டு வரையிலான இக் காலத்திய இந்திய வாழ்க்கையின் பின்னணி இதுவாகும். இச் சமூகச் சக்திகளின் சூழலில் பழங்கால இந்திய ஆட்சியமைப்பு முறையின் பணி, உருவம் ஆகியவற்றின்மேல்

[10] Macdonell, 'History of Sanskrit Literature', pp. 385–386.

[11] Ibid., p. 405.

[12] Ibid., pp. 406–407.

[13] Ibid., p. 244.

இவைகளின் செயற்பாடுகள் எதிர்செயலாற்றியதன் அளவில் இந்தோ-ஆரிய ஆட்சி அமைப்பொழுங்கு முறையை ஆய்தல் வேண்டும்.

### அரசின்மீது இதன் பயன்

இதற்கு முந்திய காலத்தில், இந்தோ-ஆரியரின் பழமைப் பண்பிலிருந்து உருவாகிய பிராமண சமயம் அதன் அதிகாரத்தை அரசன்மீது சுமத்தியதென்பதை நாம் முன்னரே பார்த்தோம். அரசரில் அரசு திருவுருக் கொண்டிருந்தமையால், இது அரசுக்கும் கூடத்தான். அரச குமாரரைத் திருமுழுக்காட்டுவதால் பிராமண சமயம் இவருக்கு இறைமை அதிகாரத்தை வழங்க முற்பட்டது, ஐரோப்பாவின் சார்லமேன், மற்றப் பேரரசர்கள் ஆகியோரின் முடிசூட்டு விழா மத்திய காலத்தின் அரசியல் சிந்தனையில் செய்ததுபோல், உலகியல் சார்ந்த அதிகாரம் ஆன்ம வியல் சார்ந்த,அதாவது,சமய அதிகாரத்தின் கொடை என்பதை இந் நிகழ்வு குறித்தது. பௌத்த, சமண சமயங்களும், இவை களைப் போன்ற மற்ற முரண்சமயக் கருத்து முறைகள் ஆகிய புதிய கோட்பாடுகளின் எழுச்சியோடு இப்பொழுது பிராமண சமயத்தின் அடிப்படையான கருத்துகளும் மறுதலிக்கப்பட்டன; இயற்கையாகவே அரசின்மீதான பிராமண சமயத்தின் உரிமைப் பங்கும் மறுதலிக்கப்பட்டிருக்கவேண்டும். ஆனால், பிராமண சமயம் இந்தத் தற்செயல் நிகழ்வைத் தடுத்து நிறுத்தியது. இந்தக் காலத்திய சமூக எதிர்ப்புப் போக்குகளை எதிர்த்துப் போராட கல்ப சூத்திரம் வகுக்கப்பெற்றது. சமூக விரோதம் என்பது பிராமண சமூக அமைப்புத் திட்டத்திற்கு மாறானது எனப் பொருள்படும். இந்தத் திட்டத்தில் வழிபாட்டு முறை களும் சடங்குகளும் ஒரு சிறப்பான பங்குபெற்றன. ஆகையால், இவைகளை நடத்தும் முறைகள்பற்றிய தகவலை எளிதாகப் பெற வழிகள் வகுக்கப்பட்டன. கட்டளைகள் சுருக்கமான நூற்பா உருவில் இருந்ததால், சடங்குகளின் சிக்கலான சுழற்சியை எளிதாகவும் நினைவுகொள்ளவும் கைவரப்பெறவும் முடியும். சிரௌத்த சூத்திரமாகத் தொகுக்கப்பட்டுள்ள சிரௌத்த சடங்குத் தொகுதியில் அரச அல்லது அரசியல் வேள்விகள் சேர்க்கப்பட்டிருந்தன. எனவே, உண்மையோ, கற்பனையோ இப்பொழுது சமயத்திலிருந்து அரசர் தம் அதிகாரத்தைப் பெற்றார் என்பது பெரிதாய் வலியுறுத்தப்பெற்றது. இதைத் தவிர, முதல் முறையாகத் தரும சூத்திரங்கள், சட்டத்தின் கட்டுப்படுத்தும் சக்தியுடைய பழக்கங்களையும் வழக்கங் களையும் தொகுக்க முயன்றன. இவற்றிற்கு இணங்கிப்போதலும் மற்றவர்களையும் இப்படிச் செய்ய வற்புறுத்துவதும் அரசரின்

கடமையாக இருந்தது. அரசரின் நடத்தையையும் இவருடைய அதிகாரத்தின்கீழ் உள்ளவர்களின் நடத்தையையும் ஒழுங்குபடுத்தியது இச் சட்டத் தொகுப்பேயாகும். ஆகவே, இதற்கு முந்திய காலத்தில் இறைமையின் அடையாளச் சின்னத்தை, அதாவது, பிராமண சமயத்திடமிருந்து மகுடத்தை அரசர் பெற்றிருந்தால், இந்தக் காலத்தில் இதனிடமிருந்து சட்டத்தைப் பெற்ருர்; இறைமை அதிகாரத்தைப் பயனுடையதாக்குவதற்கு இச் சட்டம் கருவியாகும்.

ஆகவேதான், இந்தோ-ஆரியரின் சமூக மரபுரிமைக் கூறுகளைப் பேணும் ஆர்வத்தில் பிராமண சமயம் சமூகத்தின்மேல் இதன் கட்டுப்பாட்டை வலுப்படுத்தியதுமன்றி, அரச அதிகாரத்தையும் அரசு அல்லது ராஷ்டிரத்தின் அதிகாரத்தையும் வலுப்படுத்தியது. தர்ம சூத்திரங்கள் அரசரின் கடமைகளை வரையறை செய்தபொழுது இது நிறைவேற்றப்பெற்றது. சமூகத்தின் நான்கு பிரிவுகளுக்கும் வகுத்தளிக்கப்பெற்ற பணிகளோடு இவைகளைப் பேணுதலும்,[14] நான்கு பிரிவுகளுக்கும் வகுத்தளிக்கப்பெற்ற பணிகளும், அரசரின் பணிகளும், பொதுச் சட்டத்தின்[15] விதிகளாகக் கருதப்பெற்ற சமயத்தின் கட்டளைகளைப் பேணுதலும் அரசரின் கடமையாக இருக்கையில், சமயத்திற்கு அரசு, அதாவது, அரசர் அடிபணிந்திருந்தது முழுமையாயிற்று. குறைந்த அளவு, கோட்பாட்டில் இப்படித்தானிருந்தது; சமூக அமைப்பின் காவலர்களாகிய, அதாவது, முதன்மையாகப் பிராமணர்கள், இரண்டாவதாக க்ஷத்திரியர்கள் ஆகியோரின் எளிதான பிடிக்குள் பிராமண சமயத்தை எதிர்நோக்கியிருக்கும் இடரான பிரச்சினையின் கோட்பாட்டியலான இத் தீர்வைக் கொண்டுவருவதற்கு இதனுல் இயன்றதை :இது முயன்று உண்டு பண்ணியது. ஆனுல், இக் காலத்தின் சிக்கலான பிரச்சினைகளும் புதிய சமயக் கோட்பாடுகளின் உறுதியான அறைகூவலும் இவ்வளவு எளிதானதொரு தீர்வைப் போதுமானதாக ஏற்றுக் கொள்ளவில்லை. பிராமண சமயத்தின் ஆக்கத் திறன்களின் சிதைவை இந் நிகழ்வு காட்டிக்கொடுத்துவிட்டது. முரண் சமயங்களுக்கு இது ஒரு வாய்ப்பாயிற்று. இவைகள் புதிய தகவுகளை வகுத்தன. பிராமண சடங்குவெறியோடும் சாதி நிறுவனத்தோடும் இவை ஒத்துப்போகவில்லை. எனவே, பழமைப் பண்புச் சக்திகள் மிக விரிவாக உருவாக்கிய இச் சமூக நிறுவனங்களின் திடநிலையை இவைகளின் வெற்றி காலப் போக்கில் மாறுகப் பாதித்தது. பிராமண சமயத்தின் அடித்

[14] Gautama Dharma Sutra, xi, 9; Apastamba, II, 27, 18.

[15] C.H.I., p. 228.

தளங்கள் தகர்க்கப்பட்டால், பின் அரசர் சமய ஆதிக்கத்தி லிருந்து விடுதலை பெறுவார். ஆனால், புதிய சமயங்கள் அரச ரோடு சுறுசுறுப்பாக ஒத்துழைக்கும்பொழுதுதான் இது நிறை வேற்றப்பெறலாம். உண்மையில் என்ன நடந்தது என்றால், ஒரு புதிய சமூக அமைப்பை முன்னவை நிறுவ விரும்பியபொழுது இவை அரசரின் உதவியை நாடின. புத்தரும் மகாவீரரும் தம் குறிக்கோளுக்கு அரசர்களின் ஆதரவை நாடினர். அரசர்களும் இதைத் தம் விடுபாட்டின் வழியாக ஏற்றுக்கொண்டனர்.

ஆனால், அரசரின் உதவிக்காக முறையிட்ட முரண் சமயங் களில் இதுமட்டுமன்று; அரசபதவிபற்றி பிராமண சமயத்தி னுடைய விஞ்சிய நிலை இருந்தபோதிலும், முரண்சமயக் கோட் பாடுகளையும் சமூக விரோதப் போக்குகளையும் எதிர்த்துத் தடுத்து நிறுத்துவதற்காகவும் அரசரின் ஒத்துழைப்பு மிகவும் தேவையென்பது சிறிது சிறிதாக உணரப்பெற்றது. பிராமண சமயத்திற் கெதிராக முரண்சமயங்களின் முறையீடும், முரண்சமயங்கள் தமக்குரிய இடங்களைத் தக்கவைத்துக்கொள் வதற்கெதிராக பிராமண சமயத்தின் முறையீடும், அரச ஆதர விற்கான இவ்விரண்டு முறையீடுகளின் தவிர்க்கமுடியாத விளைவு, அரசரின் புகழும் இதனால் அரசின் பெருமையும் வளரத் தொடங்கியதாகும். அரச அதிகாரம் அல்லது அரசின் அதிகாரம் மேம்பட்டு நிற்பதற்குப் பதிலாகச் சமயம் படிப்படியாகச் சார்பு நிலைக்குத் தாழ்த்தப்பெற்றது. அரச அதிகாரத்தின் உயர்வின் இவ் வளருகின்ற பொருளுக்கு, முடியாட்சியல்லாத குறிக் கோளின்மீது முடியாட்சியின் வெற்றி பங்குகொண்டு உதவியது.

## முடியாட்சிக் கருத்துகளுக்கும் முடியாட்சியல்லாத கருத்துகளுக்கும் இடையில் மோதல்; பின்னது மதிக்கப்படவில்லை

ஏற்கெனவே முடியாட்சி, முடியாட்சியல்லாத அரசுகள் நிலை பெற்றிருந்தன; இவை எதிர்மாறான நிலையைத் தோற்றுவித்தன; ஆனால், இப்பொழுது இவ்வெதிர்மாறான நிலை இன்னும் தெளிவா யிற்று. இதற்கிடையில் முடியாட்சி அரசுகள் அமைப்பிலும் திறமையிலும் வளர்ச்சியடைந்தன என்ற காரணத்தினால், வலிமையற்றனவும் நன்றாக அமையப்பெறாதனவுமான முடி யாட்சி அரசுகளைக் கீழடக்கவும் ஒளிமங்கச் செய்யவும் இவைகள் முயன்று கொண்டிருந்தன. இதன் விளைவாகப் பல காரணங்களை முன்னிட்டு முடியாட்சி அதிகாரம் பெற்றது. காலம் முன்னேறி யதும், இந்தியாவில் முதல் பேரரசின் அடித்தளம் நிறுவப்பெற் றது. அதிகாரத்தை இழந்துகொண்டிருந்த முடியாட்சியல்லாத

அரசுகள் இந்திய அரசியல் வாழ்க்கையில் பின்னணிக்குத் தள்ளப் பட்டன. கி.மு. ஆறும் நூற்றூண்டில் இவைகள், 'மலைகளுக்கும் கங்கைக்கும் இடையிலுள்ள கோசலத்திற்குக் கிழக்கேயுள்ள நாடு முழுவதையும்'[16] வாகிகா நாட்டையும், அதாவது, பஞ்சாபையும் இடங்கொண்டன.[17] தோராயமாக இந்த மண்டலங்களில், நாம் முன்னரே குறிப்பிட்ட, தடையிலாச் சிந்தனைக் கிளர்ச்சி தோன்றி வளர்ந்தது என்பது குறிப்பிடத்தக்கதாகும். இந் நிகழ்வுப் பொருத்தத்திற்குக் காரணம் என்னவாயினும், மிக்க வலிமையுடைய முடியாட்சி அரசுகளின் மெல்லிசைவால் முடி யாட்சியல்லாத அரசுகள் இந்த மண்டலங்கள் தம்மிலூன்றிய செயற்பாடுகளின் வாழ்வுமுறையைப் பின்பற்றின. பெரும் பாலும் மன்னர்கள் வெறுப்புத் தெரிவிக்கும் வகையில் இவ்வரசு களை நோக்கினர்; இவைகளைக் கீழ்ப்படுத்தி இணைத்துக்கொள்ள வும் நினைத்தனர். எனவே, அரசியல் செயல்முறையின் கருத்து களில் ஒரு முரண்பாட்டை இக் காலம் குறிப்பிட்டது. இதைப் பொறுத்தவரை, சமுகச் சிந்தனையின் தாராள, பழமைப் பண்புப் போக்குகளின் முரண்பாட்டோடு இது ஒத்திருந்தது. அலெக் சாந்தரின் படையெடுப்போடு அரசியல் கருத்துகளின் இம் மோதல் உச்சநிலையை எட்டியது. வெளியார்த் தாக்குதல்களைத் தாங்கிக்கொள்ள இயலாமை ஏற்கெனவே முடியாட்சியல்லாத அரசுகளைத் தாழ்த்திவிட்டன. பஞ்சாப் முழுவதையும் வென்ற டேரையசின் தாக்குதலும் அலெக்சாந்தரின் படையெடுப்பும் இவைகளின் செருக்குக் குலைப்பை முடித்துவைத்தனவென்பது மெய்ப்பிக்கப்பட்டுள்ளது. பிற்கால நிகழ்ச்சிப் போக்கு, முடி யரசு அல்லாத அரசுகளின் தவிர்க்கமுடியாத வீழ்ச்சிபற்றிச் சிறிதும் ஐயப்படவில்லை. மோரியப் பேரரசின் எழுச்சியோடு, முடியாட்சியல்லாத கருத்தின் நொடிப்பு வெட்டவெளிச்ச மாயிற்று; முடியாட்சியின் வெற்றியும் நிறைவுபெற்றது.

## வடஇந்தியாவில் முடியாட்சியும் முடியாட்சியல்லாத அரசுகளும்

இப்பொழுது கி.மு. ஏழாம் நூற்றூண்டின்மேல் திரை உயரும் பொழுது, வடஇந்தியாவில் நாம் பதினாறு அரசுகளைப் பெற்றிருக் கிறோம்.[18] இந்த நூற்றூண்டில் வடஇந்தியாபற்றிய செய்திகளை மட்டும் நாம் பெற்றிருக்கிறோம். தக்காணத்தைப்பற்றி ஒன்றும் உறுதியாகத் தெரியவில்லை. வடக்கில் இமயமலையாலும், தெற்

[16] C.H.I., 175.

[17] K. P. Jaiswal, 'Hindu Polity', Pt. I, p. 34.

[18] Anguttara, i, 213; iv, 252, 256, 260. Vinaya Texts, Pt. II, p. 146.

கில் விந்திய மலையாலும், மேற்கில் சிந்து நதிக்கு அப்பால் 'உள்ள மலைகளாலும், கிழக்கில் தெற்கே திரும்பும் கங்கை நதியாலும்'[19] இப் பதினறு அரசுகள் உள்ள பகுதி சூழப்பட்டிருக்கிறது. இவைகளில் சில முடியரசுகள்; மற்றவை முடியரசுகள் அல்ல. ஆனல், இவைகள் எல்லாம் இங்கு வசித்த மக்களின் பெயர்களைக்கொண்டிருந்தன.

இப்பொழுது இந்த அரசுகளில் வஜ்ஜியரும் (Vajjis) மல்லரும் (Mallas) சிலவராட்சியையும், அங்கர், மகதர், காசியர், கோசலர், செதியர், வம்சர், குரு, பாஞ்சாலர், மக்கர், சௌரசேனர், அவந்தியர், காந்தாரர், காம்போஜர் போன்ற இனங்கள் முடியாட்சியையும் பெற்றிருந்தன. குறிப்பிடப்பட்ட இரண்டைத் தவிர அங்குப் பல சிலவராட்சி அரசாங்கங்கள் இருந்ததாகத் தெரிகிறது. சும்சுமார் குன்றின் பாகரும் (Bhaggas), அலகப்பாவின் பூலிகளும், கேசபுதத்தின் கலமரும், இராமாகாவின் கேலியரும், பிப்பலிவனத்தின் மோரியரும், கபிலவஸ்துவின் சாக்கியரும் இருந்தனர்.[20] ஐந்தாம் நூற்றுண்டில் வாழ்ந்த பாணினிக்கு இவர்களில் சிலரைத் தெரியும்.[21] சான்ருக, விருஜிகள்,[22] பாகர்கள்[23]பற்றிய குறிப்புகளைமட்டுமே நாம் பெறுகிறேம். மேற்கூறப்பட்ட வஜ்ஜிகளுடனும் பாகர்களுடனும் இவர்களை அடையாளம் கண்டுணரவேண்டும். இவ் வுறுதிப்பாடுகளைத் தவிர மற்றும் பல சிலவராட்சிகளைப் பாணினி கூறுகிருர். சான்ருக விர்கர் (Virkas),[24] தாமனியரும், ஆறு திரிகர்தரும் (Trigarttas),[25] யவ்தேயர்,[26] பார்சவர் (Parsvas),[27] மத்ரர் (Madras),[28] இராஜன்யர்,[29] அந்தக விருஷ்ணி,[30] மகாராஜாக்கள்[31] இவர்கள் பௌத்த இலக்கியங்களில் கூறப்படவில்லை. இவைகள் பிற்காலத்திய வளர்ச்சியாக இருக்கக்கூடும்; அல்லது இவ் வினங்கள் இக்காலத்தில் வசித்திருந்தால், ஏழாம் நூற்றுண்டின்போது ஒப்பீட்டடிப்

[19] Buddhist India, p. 29.

[20] Mahaparinibbana Sutta, S.B.E., Vol. XI, pp. 131—135; Buddhist India, p. 22; C.H.I., p. 175.

[21] Winternitz, 'History of Ancient Indian Literature', p. 42.

[22] Panini, iv, 2, 130.

[23] Ibid., 1, 175.

[24] Panini, v, 3, 115.

[25] Ibid., 3, 116. திரிகர்த்தர் ஆறு இனங்களின் இணைப்பாவர்; சான்ருக, கவுண்டோ பரதர், தாண்டகி, கௌஸ்தகி, ஜாலமணி, பிரமகுப்தர், ஜானகி.

[26] Ibid., 3, 117.

[27] Ibid.

[28] Panini, iv, 2, 130.

[29] Ibid., iv, 2, 52.

[30] Panini, vi, 2, 34.

[31] Panini, iv, 3, 97.

படையில் இவர்கள் சிறப்பில்லாதவர்களாக இருந்திருக்கலாம். உண்மை எதுவாயினும், இதை உறுதிசெய்ய வழிகள் இல்லை. நாடு முழுதும் சிதறிக் கிடந்த பல சிலவராட்சிகள், பிராமணங்களுக்குப்பின் வந்த காலத்தில் வேதகால ஆரியர்கள் வழக்கில் இருந்த தன்னாட்சி மரபுகளைப் பெற்றார்கள் என்ற முடிவைச் சுட்டுகின்றன. இவைகளைப்பற்றி ஐதரேய பிராமணம் சடைக் குறிப்பைமட்டுமே விட்டுச் சென்றிருக்கிறது எனில்,வேறுவிதமாக கி.மு. ஏழாம் நூற்றாண்டிற்கும் ஐந்தாம் நூற்றாண்டிற்கும் இடையில் இருந்த பல சிலவராட்சிகளை விளக்குவது கடினமாகும். எவ்வாறாயினும், முடியாட்சிகளோடு சுயேச்சையான தன்னாட்சி இனங்கள் இருந்தனவா என்பதுபற்றி பிராமணங்கள் நமக்கு முன்குறிப்புத் தரவில்லை. இவைகள் முடியாட்சியைப் பாராட்டின; இதை ஒரேவகையான அரசாங்கமெனத் தோன்றும்படி செய்தன. ஆகவே, முடியாட்சியல்லாத அரசாங்கங்கள் கடமை திறம்பியதால் மறைந்தன. முடியாட்சி அல்லாத அரசுகள் தன்னாட்சிப் படைவீரர்களின் ஆக்கமென்பது காரணமாகத் தோன்றுகிறது. இதில் குடும்பத் தலைவர்கள் அனைவரும் சான்றாக மூத்தோர்கள் பலர், ஒருவரல்லர், ஆட்சி செய்தனர். க்ஷத்திரிய நிறுவனங்களுக்கு மாறாக பிராமண சமயத்தின் இம் முரணிசைவு நயந்தான் உண்மையில் பிராமண சமயம் இதைப் புறக்கணிப்பதற்குக் காரணமாகும். அரசியல் கருத்தில் இப் பகைமை சமூக வெறுப்பால் மிகைப்படுத்தப்பெற்று, பௌத்த, சமண சமயங்கள் இரண்டு க்ஷத்திரிய இளவரசர்களால் தோற்றுவிக்கப்பெற்றதென்னும்பொழுது, மிகத் தெளிவான உருப் பெற்றது. இவைகளின் க்ஷத்திரியத் தோற்றம்தான் பல அரசர்களும் தன்னாட்சி இனங்களும் இச் சமயங்களுக்கு உடனடியாகத் துணையாதரவுதரக் காரணமாயிற்று.

## முடியாட்சி அரசுகள் க்ஷத்திரியர்களால் படைக்கப்பெற்றவை

கூட்டாண்மை நிறுவனங்களையும் முடியாட்சியல்லாத அரசுகளையும் அமைத்துக்கொண்ட தன்னாட்சி இனங்கள் எனப் பெயர் பெற்றவைகள் க்ஷத்திரிய சாதியைச் சேர்ந்தவைகளாக அல்லது இராஜன்யர்களாக இருந்தார்கள் என்பது பௌத்த இலக்கியங்கள், பாணினி, கிரேக்கப் பதிவுகள் காட்டும் மேற்கோளிலிருந்து தெளிவாகிறது. புத்தரின் உடல் தகனம் செய்யப்பட்டபின், வைசாலியின் லிச்சாவிகளும், அல்லகப்பாவின் பூலிகளும், கபிலவாஸ்துவின் சாக்கியர்களும், ராமகாமாவின் கோலியர்களும், பாவாவின் மல்லர்களும், பிப்பாலிவன மோரியர்களும், 'புனித புத்தர் க்ஷத்திரிய சாதியைச் சேர்ந்தவர், நாங்களும் க்ஷத்திரிய

சாதியைச் சேர்ந்தவர்களே'[32] என்ற காரணத்தினால் திருச்சின்னங்களில் ஒரு பகுதியைக் கேட்டனர். விர்கர்களின்[33] சம்ஹத்தையும், தாமினிகளையும்,[34] திரிகர்த்தர்களின்[35] சங்கம் அல்லது கூட்டையும், யவ்தேயர்களையும்,[36] ஆயுதஜீவிகளின் வகையைச் சேர்ந்த பர்சவர்களையும்,[37] அதாவது, ஆயுதங்களைப் பயன்படுத்திய அல்லது இராணுவ பயிற்சி பெற்றவர்களையும்[38] பாணினி மேலும் கூறுகிறார். இறுதியாக, பஞ்சாபின் சில சுயேச்சையான 'இனங்களின்' கடுமையான எதிர்ப்பை அலெக்சாந்தர் எதிர்த்துச் சமாளிக்கவேண்டியிருந்தது நன்கறிந்ததே. சூத்திரகர், மாளவர் ஆகிய ஆக்சிதரகையும் (Oxydrakai) மல்லாயும் (Malloi) 'இந்தியா முழுவதிலும் மிகப் பேராற்றல் உடையவர்களாக'[39] இருந்ததாகச் சொல்லப்படுகிறது. ஆக்சிதர்கை என்பாரைச் சிறப்புச் செய்த இதே போராற்றலையும்[40] வீரத்திற்கு மிக உயர்ந்த பெருமையையும் காத்தியர்கள் (Catheans)(க்ஷத்திரியர்கள்) பெற்று மகிழ்ந்தனரென்றும் வலியுறுத்தப்பெறுகிறது. இவைகள் எல்லாம் உறுதியாகத் தன்னாட்சி இனங்களே. ஆகவே, க்ஷத்திரியர்களின் முடியாட்சியல்லாத அரசாங்கமுறைகள்தான் சிறந்த நிறுவனங்கள் என்ற முடிவை இத் திரண்ட சான்று சுட்டிக்காட்டுகிறது. ஏற்பமைதியுடைய சமயக் கருத்தைப் பகைக்க இந்த உண்மை போதுமானதாகும்.

## முடியாட்சியல்லாத அரசுகள் உண்மையாகவே சிலவராட்சியாக இருந்தன

ஆயினும், இந்த அரசுகளில் க்ஷத்திரியர்மட்டுமே வசித்தனரென்றும் வேறெவரும் வசிக்கவில்லையென்றும் குறிப்பிடப்படவில்லை. சான்றாக, லிச்சாவிகளின் ஆணைக்குட்பட்ட நிலப்பகுதி இருந்ததென்பதும், இதில் ஆட்பட்டவர்கள்[41] வசித்தனரென்பதும், இதைப்போலவே சாக்கியர்களும் கோலியரும்[42] பெற்

[32] S.B.E. Vol. XI, pp. 131—135.

[33] Vrkattenyan, iii, V, 115.

[34] Damanyadi-trigartta-Sasthacchah, V, iii, 116.

[35] Ibid.

[36] Pârsvadiyaudheyadivyamananyau, V, iii, 117. Sutra, V, iii, 114 —கோடு இவற்றை எடுத்துக்கொள்ளவேண்டும்.

[37] Ibid.

[38] K. P. Jaiswal, 'Hindu Polity', Part I, p. 36:

[39] Curtius, ix, Ch. IV; McCrindle, 'Invasion of India by Alexander', p. 234.

[40] Arrian, V, 22, 2.

[41] Mahavagga, vi, 30, 3. 'எம் தலைவ, வைசாலியையும் இதற்குட்பட்ட நிலத்தையும் நீங்கள் அளிப்பதாயின் நான் இந்த உணவை விட்டுவிடமாட்டேன்'.

றிருந்தனரென்பதும் நாம் அறிந்ததேயாகும். பாணினி குறிப்பிடும் புகழ்பெற்ற வாகிஹர் குடியரசுகளில் (பஞ்சாபிலுள்ள) க்ஷத்திரியர்களைத் தவிர இங்கு மற்றப் பல சாதிகளும் இருந்தன.[43] ஒரு கணம் அல்லது குடியரசின் மக்கள்மட்டும் இத் தனிப்பட்ட குண இயல்பை அளிக்கவில்லை; உண்மையில் ஆளும் வகுப்புதான் இக் குண இயல்பை அளித்தது. ஏனெனில், க்ஷத்திரியர்களாக இருந்த ஆளும் உயர்குடி மக்களால் இக் கணங்கள் மாறாமல் ஆளப்பட்டுவந்ததாகத் தெரிகிறது. எடுத்துக்காட்டாக, சாக்கியா், கோலியர் ஆகிய குடியரசு இனங்களின் தொழிலாளர்களுக்கிடையே ஒரு சண்டை ஏற்பட்டபொழுது, தொழிலாளர்கள் தம் அரச குடும்பங்களின் தோற்றம்பற்றிப் பழிதூற்றத் தொடங்கியதையும் பின் இவர்கள் இதை மன்ற உறுப்பினருக்குச் சொன்னதும், இவர்கள் (மன்ற உறுப்பினர்கள்) 'இதை இவர்களுடைய இனங்களின் அரசர்களுக்குச் சொன்னதையும்பற்றி நாம் அறிகிறோம்.'[44] புத்தர் இறந்தபின் அவருடைய உடலை ஒரு பாடையில் கொண்டுசெல்லவேண்டியபொழுது, 'மல்லர்களுக்குள் எட்டுத் தலைவர்கள் குளித்துப் புத்தாடை அணிந்துகொண்டனர்.'[45] மேலும், 'ஆளும் குடும்பமாகிய 7.707 லிச்சாவிகள் வைசாலியில் வசித்தனரென்றும், இவர்கள் எல்லோரும் வாத எதிர்வாதங்களில் கலந்துகொண்டன'[46]ரென்றும் மரபு கூறுகிறது. கிரேக்க விவரத்தைப் பொறுத்தவரை, பியசுக்குக் கிழக்கே வலிமைவாய்ந்த முடியரசு ஒன்றிருந்தது; இதில் மக்கள் திரளை உயர்குடியினர் ஆட்சி செய்தனர்; இவர்களுடைய அதிகாரத்தை நேர்மையோடும் அளவோடும் இவர்கள் செயல்படுத்தின[47]ரென்று அரியன் (Arrian) கூறுகிறார். சூத்ரகரும் மாளவருமாகிய இரண்டு 'இனங்களும்' இவர்களின் வீழ்ச்சிக்குப் பின், அலெக்சாந்தருடன் அமைதிப் பேச்சுவார்த்தை நடத்த நூறு அரச தூதர்களை' அனுப்பினர்.[48] தன்னாட்சி செய்துவந்த

[42] Jataka, No. 536, Kunala Jataka, Vol. V, p. 219. சாக்கியர், கோலியர் ஆகியோரின் பெண் அடிமைகள் தண்ணீர் எடுக்க ஆற்றுக்கு வந்தபொழுது..... இதன் காரணமாகச் சண்டை ஏற்பட்டபொழுது சிறிது சிறிதாக இரு நகர்களின் மக்களாகிய பண்ணைக் குடிகளும், தொழிலாளர்களும், பணியாளர்களும், கிராமத் தலைவர்களும், மன்ற உறுப்பினர்களும், அரசப் பதிலர்களும் திரண்டு சண்டைக்குத் தயாரானார்கள்.

[43] Panini, V, 3, 114—117. வாஹிக நாட்டின் சங்கங்களைப் பொறுத்தவரை தட்ஹித விதிகளைக் கொடுக்கிறார். இந்த விதிகளின்படி, ஒரு குறிப்பிட்ட சங்கத்தின் உறுப்பினர்களைச் சொன்னதும், இவர்கள் பிராமணர்களா அல்லது க்ஷத்திரியர்களா அல்லது இவைகளைத் தவிர வேறு சாதிகளா என்பதைச் சொல்லமுடியாது.

[44] Cowell, Jatakas, Vol. V, p. 219.

[45] Mahaparinibbana Sutta, S.B.E., Vol. XI, p. 123.

[46] Cowell, op. cit, Jataka, No. 301, Vol. III, p. 1.

[47] Arrian, V, 25; McCrindle, 'Invasion of India by Alexander,' p. 121.

[48] Curtius, Bk. ix, Chaps. 7, 8; McCrindle 'Invasion of India by Alexander', pp. 248—251.

மக்களாகிய அம்பஸ்தர்கள், 'போரிடுவதில்லையென்ற தம் மூத்தோரின் அறிவுரையை ஏற்றுக்கொண்டனர்.'[49] மறுபுறம், பத்தாள அரசு, 'ஸ்பார்டானின் அரசியலமைப்பைப்போல் ஓர் அரசியலமைப்பு வரைந்துகொண்டது. இதன்படி, இந்த இனத்தில் போர்த்தலைமை, இரண்டு வேறுபட்ட குலங்களின் மரபுவழி வந்த அரசர்களிடம் நிலைபெற்றது. மூதறிஞர் சபை நாடு முழுவதையும் மேதகு அதிகாரத்தோடு ஆட்சிசெய்தது.'[50] ஆகவே, கணங்கள் எனப் பெயர்பெற்றவை உண்மையில் சிலவராட்சிகளாக இருந்தனவென்றும் இது ஒவ்வொன்றிலும் ஆளும் ஓர் உயர்குடியாட்சி இருந்ததென்றும் கூறுகிறது.

## கூட்டாண்மைக் கழகங்கள் அரசியல் சார்புடையனவும் அரசியல் சார்பில்லாதனவும்

பழங்கால இந்தியாவில் பல்வேறுவகையான கூட்டாண்மைக் கழகங்களை விவாதிக்க இந்த முடிவு சிறிது விலகிச்செல்வதை அனுமதிக்கலாம். சிறப்பாகத் தொழிற் சங்கங்களின் குண இயல்புகளைப் பெற்றிருக்கும் இராணுவ, வணிக நோக்கங்களால் வேறுபடுகிற கூட்டாண்மைக் கழகங்களுக்கும் இறைமை அதிகாரங்களால் தனிச்சிறப்புப் பெற்றிருக்கும் கலப்பில்லாத அரசியல் நிறுவனங்களுக்கும் இடையில் குழப்பம் விளைவிக்கும் போக்கு ஒன்று உள்ளது.[51] பியஸ் ஆற்றங்கரையிலிருந்த பெரிய குடியரசின் மக்கள் 'விவசாயிகள் என்றும் போரில் வீரமுள்ளவர்கள்' என்றும் அரியன் (Bk. V, 25) கூறும்பொழுது,[52] ஜெய்ஸ்வால், இவர்களைக்[53] கூட்டாண்மை இனங்களில் ஒன்றென அடையாளம் காணுகிறார். கௌடில்யரின் கருத்தின்படி இவர்கள், இராஜன் (Rajasabdopajivinah)[54] என்ற பட்டத்தை ஏற்கும் பழக்கத்தைப் பின்பற்றியவர்களுக்கு மாறாக 'வேளாண்மையையும் போர்க்கலையையும் பின்பற்றியவர்களாவர். கௌடில்யர் தம் நூலில் இவர்களைப்பற்றிப் பின்வருமாறு கூறுகிறார்:

(அ) காம்போஜ-சுராஷ்டிர—க்ஷத்திரிய—சிரின்யாதயோ—வார்த்தாசஸ்த்ரோபஜீவிநு.

Kamboja - Surastra — Ksatriya — Srenyadayo — Vartasastropajivinah.

[49] Ibid., p. 252.

[50] Ibid., p. 356.

[51] Jaiswal, 'Hindu Polity', Pt. I, pp. 36, 67.

[52] McCrindle, I.I.A., p. 121.

[53] Jaiswal, 'Hindu Polity', Pt. I, pp. 36, 67.

[54] Kautalya, 'Arthasastra', Text, Bk. xi, p. 378.

(ஆ) லிச்சிவிக — விருஜிக — மல்லக — மத்ரக — குக்குர — குருபாஞ்சாலாதயோ ராஜ-சப்தோபஜீவிஞ.
Lichivika—Vrjika— Mallaka— Madraka—Kukura — Kurupancaladayo raja-sabdopajivinah.

இப்பொழுது, சங்க விருத்தம் என்ற தலைப்பைக்கொண்ட பகுதியில் இது இருக்கிறது. அதாவது, ஒரு படையெடுப்பாளரும் வெற்றியாளரும் எப்படி ஒரு கூட்டாண்மை அமைப்பை வெற்றி கொள்ளவேண்டும் என்னும் தறுவாயில் சங்கங்கள்பற்றிய சுருக்க விளக்கமிது. இச் சூழமைவில் மேலே கொடுக்கப்பட்டிருக்கும் ஏட்டுரைப் பகுதியைப் படித்தால் இதன் பொருள்: (அ) காம்போஜம், சுராஷ்டிரமாகியவைகளின் க்ஷத்திரியர்களின் சேர்னிக்கள் (கூட்டாண்மைக் கழகம், தொழிற் சங்கம் போன்றவை) வணிகம், வேளாண்மை, படைப்பயிற்சி போன்ற தொழில்களில் ஈடுபட்டிருக்கையில், (ஆ) லிச்சாவிகள், விருஜிகள், மல்லகர்கள், மத்ரகர்கள், குக்குரர்கள், குருபாஞ்சாலர் போன்றோர்கள் அரசரின் பட்டங்களைப் பெற்றிருந்தனர். இவைகளின் அரசியல் குண இயல்புகளால் வேறுபடுத்திக் கண்டறியப்பட்ட இரண்டு வகையான தன்னாட்சி அமைப்புகளை இங்கு கௌடில்யர் வேறுபடுத்திக்காட்ட விரும்பவில்லை. ஆனால், இரண்டும் தனிப்பட்ட கூட்டாண்மை நிறுவனங்கள். ஒன்று, அரசியல் அல்லாத நோக்கங்களுக்கும் மற்றொன்று அரசியல் நோக்கங்களுக்கும் நிறுவப்பெற்றது. பணத்தை நாடிய நோக்கத்தோடு மனிதர்கள் வணிகம், வேளாண்மை, போர்ப்பயிற்சி போன்ற தொழில்களை ஏற்றுக்கொண்டதால், அரசியல் அல்லாத வகை வேறுபடுத்திக் காட்டப்பெற்றது. சேர்னி என்ற சொல்லை அரசியல் இயல்பு இல்லாத தொழிற்சங்கம் அல்லது கூட்டாண்மைக் கழகம் என்ற பொருளில் பயன்படுத்தியதிலிருந்து இது தெளிவாகிறது. எனில், பின்வரும் வரியில் இதே பொருளில் மற்றச் சொற்களோடு இந்தச் சொல்லையும் நாரதர் பயன்படுத்துகிறார். பாசந்தி நைகம-சேர்னி பூக-விராதகணாதிசு (Pasandi--Naigama-Sren Puga-Vrataganadisu, Bk. x. 2).

வியவகார மயூகாவின் கருத்துப்படி, பாசந்தி என்பதற்கு வணிகத்தையும் மற்றத் தொழில்களையும் பின்பற்றுபவர்கள் என்று பொருள். ஆனால், வேதம் சார்ந்த வாழ்க்கை முறைக்கு மாறானது என்று பொருள்; நைகம என்பவர்கள் வேதமுறை வாழ்க்கைக்கு எதிரானவர்களல்லர்; பல சாதிகளைச் சேர்ந்த, ஆனால், ஒரே தொழிலில் உள்ளவர்களின் கூட்டு நிறுவனம்தான் சேர்னி; பூகம் என்பது பல சாதிகளையும் பல தொழில்களையும் சேர்ந்தவர்களின் கூட்டாண்மை நிறுவனம்; விராதம் என்பது நெருங்கிய

உறவினரின் குழு; கணம் என்பது இவைகள் எல்லாவற்றின் கூட்டாட்சியாகும். ஆகையால், இங்கு க்ஷத்திரிய செர்னி என்பது க்ஷத்திரியர்களின் தொழிற் சங்கம் அல்லது கூட்டாண்மை நிறுவனம் எனவும் பொருள்படலாம். யூக,[55] விராத,[56] ஆயுத ஜீவி சங்கங்கள்[57] காணப்பெற்றமைக்குப் பாணினி தெளிவான மேற்கோள்களைக் கொடுக்கிறார். இவைகளில் புகழும் விராதமும் உறுதியாகத் தொழிற்சங்கக் கருத்தைக் கொண்டிருக்கின்றன; ஆயுத ஜீவிகள் சங்கமும் தொழிற் சங்கமே. இவர்களும் போரைத் தொழிலாகக் கொண்டவர்களே. படை வீரர்களின் தொழிற்சங்கங்கள்[58] இருந்தமையை ஜாதகத்தின் சான்று குறிப்பிடுகிறது. ஒருவேளை இத்தகைய தொழிற்சங்கங்களின் க்ஷத்திரியர்கள் தம்மைக் கூலிகளாக விற்றுக்கொண்டனர். உண்மை எதுவாயினும், க்ஷத்திரிய செர்னி என்பதற்கு இராணுவத் தொழிலைப் பின்பற்றுபவர்களின் கூட்டாண்மை என்பது உறுதியான பொருளாகும். ஆகவே, பழங்கால இந்தியாவில் மக்களின் பொது வாழ்க்கை இரண்டு வழிகளில் சென்றது—ஒன்று, வணிக அடிப்படையில் அமைந்த கூட்டாண்மை நிறுவனங்கள் உட்பட அரசியல் அல்லாதவை. இதில் ஒவ்வொன்றும் இதன் மதிப்பளவைப் பெற்றிருந்தது. இரண்டு இறைமை அதிகார இயல்புகளால் வேறுபடுத்தப்பெற்ற கூட்டு நிறுவனங்கள் அல்லது அமைப்புகளைக்கொண்ட அரசியல் சார்புடையன. இறைமையான அரசியல் கூட்டாண்மைக் கழகங்கள் கணம் அல்லது சங்கம் என்ற பெயரைக் கொண்டிருந்தன. அரசியல் அல்லாதவைகள் செர்னி, யூகம் போன்றவை. ஒன்று மற்றொன்றாக உருமாற்றம் கொள்வது நிலவும் அரசியல் நிலைகளையும் இவைகளின் சொந்தமான குணவியல்பையும் சார்ந்திருந்தது. படை வீரர்களின் தொழிற் சங்கங்கள்தாம் ஒருவேளை மிக எளிதாக இறைமை அதிகாரத்தைப் பெற்றன. அதாவது, க்ஷத்திரிய செர்னிகள் ராஜஸபோதபஜீவினவாகின்றன (Rajasabdopajivinah). சுருங்கக் கூறின், இவை க்ஷத்திரிய செர்னிகள் அல்லது இன அமைப்புகளிலிருந்து வளர்ந்திருந்தாலும், பெரும்பாலும் எல்லா முடியாட்சியல்லாத அரசுகளும் க்ஷத்திரியர்களால் தோற்றுவிக்கப்பெற்றுப் பேணப்பெற்றன. பிராமண இலக்கியம் ஏன் இவைகளைப் புறக்கணித்தது என்பதை இது விளக்கலாம்.

[55] V, 3, 112.

[56] Ibid., 3, 113.

[57] Ibid., 3, 114.

[58] Cowell, op. cit., IV, p. 145.

## சில சிலவராட்சிகளின் நடைமுறை

முரண் சமயக் கோட்பாடுகள், முரண் சமய இலக்கியம் (Buddhism and Jainism) ஆகியவற்றின் தோற்றத்தோடு 'பெருமைப்படுத்தப்பெருத'தும் 'பாடப்பெருத'துமான சங்கங்கள் அல்லது மாவீரர் சாதியின் முடியாட்சியல்லாத அரசுகள் ஆகியவை பலராறி நிலையில் தோன்றின. பௌத்த இலக்கியத்தில் சாக்கியரின் பெருமை நிறைந்திருக்கிறது. இவர்களில் ஒருவராகப் பெரும்புகழ் புத்தர் தோன்றினர். இச் சாக்கியர்கள் ஆட்சி செய்யும் ஓர் உயர்குடியினர் (க்ஷத்திரியர்); இவர்கள் 50 மைல் நீளமும் 40 மைல் அகலமும் உள்ள ஒரு நிலப்பரப்பின்மீது அதிகாரம் செலுத்தினர்கள்.[59] இங்கு வசித்த மக்கள் சாக்கியரையும், இவர்களின் அடிமைகளையும், தொழிலாளர்களையும் சாக்கியர்களாகவும் இவர்களின் அடிமைகளாகவும், தொழிலாளர்களாகவும் இல்லாதவர்கள் பலரையும் கொண்டிருந்தது. ஆனல், அரசாங்கத்தை இச் சாக்கியர்தாம் நடத்தினர். இவர்கள், ஏறத்தாழ ஒரு சிலவராட்சியை அமைத்துக்கொண்டார்கள்; இவர்களுடைய 'தலைவர்கள்' அல்லது அரச குடும்பங்களில்[60] அதிகாரமிருந்திருக்கலாம். சாக்கியர் குடும்பங்களின் பெண் ஒருத்தியைக் கோசல அரசர் விரும்பி, இந் நோக்கத்துடன் கபிலவாஸ்திற்கு ஒரு செய்தியை அனுப்பியபொழுது 'சாக்கியர்கள் ஒன்றுகூடி கலந்தாலோசித்தனர்' என்று நாம் அறிகிறோம். இறுதியில் மகாநாமன் என்ற ஓர் அரசர் ஓர் அடிமைப்பெண்ணிற்குப் பிறந்த தம் மகள் வாசபகாதித்தியா என்பவளை அனுப்பி ஏமாற்றினர். பின்னர் வாசபகாதித்தியா இளவரசர் விதூதப என்பவருக்குத் தாயானபொழுதும் இவளுடைய சொந்தத் தகப்பனைப்பற்றிக் கேட்டபொழுதும், 'என் மகனே, உன் மூதாதைகள் சாக்கிய அரசர்கள்'[61] என்று சொன்னாள். ஆகையால், அரசுத் தலைவராக இருந்தவர்கள் சாக்கிய இளவரசர்கள் என்பது இதிலிருந்து தெரிகிறது. கபிலவாஸ்து நகரில் குலத்தலைவர்கள், மன்ற உறுப்பினர், அரச பகர ஆட்கள் ஆகியவர்களுடன் அடிமைகள், தொழிலாளர்கள், பணியாட்கள் ஆகியோரும் இருந்ததாகக் குணாள ஜாதகம் மேலும் கூறுகிறது. நடைமுறை ஆட்சியின் பொறுப்பில் மன்ற உறுப்பினர்கள் இருந்ததாகத் தெரிகிறது எனின், பொதுப் பயன்பாட்டுப் பணிகள் நிறைவேற்றத்தை இவர்களில் சிலர் மேற்பார்வையிட்டனர் என்று சொல்லப்படுகிறது.[62] மன்ற உறுப்

[59] Buddhist India, p. 20.
[60] Kunala Jataka, No. 536; Cowell, op. cit., Vol. V, p. 219.
[61] Cowell, op. cit., Vol. IV, pp. 92—93.
[62] Kunala Jataka, No. 536, Cowell, op. cit., Vol. V, 219.

பினர்கள் பதவியிலும் தரத்திலும் உயர்ந்த தலைவர்களுக்கு அறிக்கை வழங்கவேண்டும். குலத் தலைவர்கள், மன்ற உறுப்பினர், அரசப் பகர ஆட்கள், அரசர்கள் ஆகியோர்தாம் ஆளும் வகுப்பாக அமைந்தனர்.[63] இவர்களைத் தவிரக் குடிமக்களும் இருந்தனர்.

சமஸ்தா (Samstha) எனப் பெயர்பெற்ற தேசிய சபை ஒன்றிருந்தது. இங்குப் பேராசிரியர் ரிஸ்டேவிட்ஸின் கருத்துப்படி, இளையோரும் முதியோரும் கூடிப் பொதுக் காரியங்களைச் செய்து முடித்தனர். இந்த சமஸ்தாவில் குலத் தலைவர்கள், சபை உறுப்பினர், அரச பகர ஆட்கள், அரசர்கள் ஆகியோர் இடம் பெற்றிருந்தனர். அவ்வப்போது தேர்ந்தெடுக்கப்பெற்ற ராஜா ஒருவர் இதன் கூட்டத் தொடர்களுக்குத் தலைமை தாங்கினார். கூட்டத் தொடர் இல்லாதபொழுது இவர் அரசின் அதிபராக (தலைவராக) இருந்தார். மேல் குறிப்பிடப்பட்ட அரச பகர ஆட்கள் ஆட்சியை நடத்துவதற்கான இவர்களின் பிரதிநிதிகளாக இருக்கவேண்டும்.

புத்தரின் மாமனின் இளைய மகனாகிய பாத்தியா என்பவர் ராஜாவாக ஒரு சமயம் இருந்தார் என்று நாம் அறிகிறோம்; மற்றொரு சமயம் புத்தரின் தகப்பனார் சுத்தோதனர் இந்தத் தகுநிலையைப் பெற்றிருந்தார்.[64] எல்லோரும் குறிப்பிட்டபடி அமர்ந்த பின்னர் எடுத்துக்கொள்ள வேண்டிய வினையைத் தலைவர் சபைக்கு அறிவித்தார் (தகவல் கொடுத்தார். அதாவது, ஜனப்தி). ஓர் உறுப்பினரால் கொண்டுவரப்பெற்ற தீர்மானத்தோடு (பிரதிஜன) பின் முறையான முதிர் சிந்தனை தொடங்கியது. இதன் பிறகு உறுப்பினர் தம் கருத்தைத் தெரிவிக்க அனுமதிக்கப்பெற்றனர். முழு உடன்பாடு இருந்தால் தீர்மானம் நிறைவேற்றப்படும். பின் பதிவாளர்கள் இதைக் குறித்துக் கொள்வர். இல்லையென்றால், கைதேர்ந்த அறிவு பெற்றவர்களைக் கொண்ட தனித்தன்மைகளைக் கொண்ட ஒரு நிறுவனத்திடம் கருத்தறிவதற்கு இது அனுப்பப்பெற்றது. சாக்கியரின் இனச் சபையாக இருந்த இச் சமஸ்தாவில் சாக்கியரைத் தவிர வேறெவரும் உறுப்பினராய் இருந்திருக்க வியலாது. ஆனால், 'முதன்மையான நகரில்' இந்த சமஸ்தகாராவைத் தவிர மேலே

[63] அரச பகர ஆட்கள் 'அரசரைப்போல் அல்லது தலைவரைப்போல்' அல்லது தாழ்ந்து இருக்கவேண்டும். ஆனால், இவர்கள் எல்லாம் சாக்கிய குலத்தவர்களே.

[64] C.H.I., p. 177, 'Dialogues of Buddha,' Vol. I, p. 113, 'Sarvam Sakyaganam Sannipatyaiva mimaransate Raja Suddho anah... ...Sakya Ganena Sardham Samkya-gare nisannobhut'. Quoted from Lalita Vistara by Jaiswal, 'Hindu Polity,' Vol. I, p. 50.

குறிப்பிட்ட (காட்டும, சமகம, கோமதுச, சித்தவதி, மெட்ட லுப, உளும்ப, சக்கர், தேவதம் போன்றவை) மற்றச் சில நகர்களில் இவைகளைப்பற்றி நாம் அறிகிறோம். ஒவ்வொரு கிராமத்தின் தலக்காரியங்கள் குடும்பத் தலைவர்களின் சபையில் நிறைவேற்றப் பெற்றன. இக் கூட்டங்கள் சோலைகளில் நடத்தப்பட்டன. இன்றுபோல் அன்றும் ஒவ்வொரு கிராமத்தின் நீண்ட சமதள மான வண்டல் வெளிச்சோலைகள் ஒரு தனிப்பட்ட இயல்பாக அமைந்தன.[65] கிராமத்தின் எல்லாக் காரியங்களிலும் இச் சபை ஆட்சியாற்றல் பெற்றிருந்தது. கிராம சபையின் இசைவின்றி கிராம நிலங்களை விற்கவும் ஈடுவைக்கவும் இயலாது. கிராமத் தன்னாட்சிஅரசாங்கத்திற்கும் மத்திய அரசாங்கத்திற்கும் கிராமத் தலைவராகிய கிராமணி ஓர் இணைப்பாக இருந்தார். இவர் அர சாங்க அலுவலர்களோடு தொடர்புகொண்டும் இவர்களுக்கு கிராமத்தாரின் குறைபாடுகளையும் எடுத்துரைத்தார். 'இவ ருடைய பதவி மரபுவழி வந்ததாகவோ கிராமசபையால் கொடுக் கப்பெற்றதாகவோ இருந்தது.'[66] கிராமத்தில் அமைதியையும் ஒழுங்கையும் நிலைநிறுத்தும் பொறுப்புடையவராக இவர் இருந் திருக்கலாம்; எனில், ஒரு திருட்டுப் போனால் இதை இவர் ஈடு செய்யவேண்டியிருந்தது.[67] அரசாங்க அலுவலர்கள் முன்னிலை யில் கிராம நிலங்களின் ஒழுங்கான அளவீடு இருந்ததாகத் தெரி கிறது.[68] மொத்தத்தில், சாக்கியர் ஆண்ட நாட்டில் இருந்த கிராமங்கள் ஒவ்வொன்றிலும் 'சிறிய தன்னாட்சிக் குடியரசுகளைப்' போன்றவை இருந்ததாகத் தெரிகிறது.[69]

எல்லாச் சுய ஆட்சி இனங்களின் இவ்வகையான அரசாங்கம் இந்த உருமாதிரியானதாக இருந்திருக்கவேண்டுமென்று தோன்று கிறது. முன் கண்டதுபோல், இவை ஒவ்வொன்றும் ஆட்சி செய் யும் ஓர் உயர்குடியாகும். கோலியர் பெருமளவு சாக்கியரைப் போல் இருந்தனர். இவர்களைப்போல்தான் மல்லர்களுமிருந் தனர். இவர்களுடைய ஆட்சியில் சில வேறுபாடுகள் இருந்திருக் கலாம். 'பணியாட்கள் அல்லது காவலரின் ஒரு தனி நிறுவனம் கோலிய மத்திய அதிகாரிகளுக்குப் பணியாற்றியது'. வன் முறைக்கும் அச்சுறுத்திப் பணம் பறிப்பதற்கும் இது அவப்பேறு பெற்றிருந்தது. 'மல்லர்களும் இதேபோன்ற அலுவலர்களைப் பெற்றிருந்தனர். ஒவ்வொரு குலமும் ஒருவாறு இதேபோன்ற

[65] Rhys Davids, Buddhist India, p. 20.

[66] Ibid., pp. 47, 48.

[67] Jataka, No. 257; Cowell, op. cit., Vol. II.

[68] Jataka, No. 467, Cowell, op .cit., Vol. IV, p. 105.

[69] Rhys Davids, Buddhist India, p. 21.

கீழ்நிலைப் பணியாட்டொகுதியைப் பெற்றிருந்திருக்கலாம்.'[70] லிச்சாவிகளும் ஆளும் உயர்குடிமக்களே. இவர்களும் 'ஆட்படுத்தப் பெற்ற நிலப்பரப்பு' மீது அதிகாரம் செலுத்தினர்.[71] இவர்கள் ஒரு தேசிய சபையைப் பெற்றிருந்தனர். இதை இவர்கள் சட்ட சபை என்றனர் (house of law);[72] பொதுமக்களின் நலனுக்குரியவைகள் இங்கு விவாதிக்கப்பெற்றன. இங்கு 7,707 அரசர்கள் இருந்தனர். இவர்களில் ஒவ்வொருவரும் தம்மைக் கருத்தளவிலாவது ராஜா என்று அழைத்துக்கொண்டனர். இவர்களுக்குள்ளிருந்த சிலர் அரசராகவும், சிலர் அரச பகர ஆட்களாகவும் தெரிந்தெடுக்கப்பெற்றனர். இதற்குச் சான்றுகள் இருப்பதாகத் தெரிகிறது. ஏனெனில், ஜாதகங்கள் ஒன்றில், லிச்சாவிகளுக்குள் ஆறு முதியோர்களை'[73] புத்தர் குறிப்பிடுகிறார். மேலும் பல புகழ்பெற்ற லிச்சாவிகள் நகர மன்றில் கூடினார்கள்[74] என்று நாம் அறிகிறோம். தம்முடைய புனிதத் திருக்குளத்தைக் காப்பதற்காக லிச்சாவிகளல்லாத ஒரு காவற்படையை இவர்கள் பயன்படுத்தியதாகவும் சொல்லப்படுகிறது.[75] இவர்களின் படைத் தலைவராக 'சிஹ' (Siha) என்பொருவர் இருந்தார்.[76] ஒவ்வொரு லிச்சாவியும் படைத்தலைவர் பதவிக்கு உரிமை பெற்றிருந்தாலும் இங்கு ஒரு படைத் தலைவர் இருந்ததையும் இவர்கள் ஒரு படையை வைத்திருந்ததையும் இது காட்டுகிறது.

சிறிது காலத்திற்கு லிச்சாவிகள் வஜ்ஜிகளுடன் ஒரு கூட்டாட்சியை ஏற்படுத்திக்கொண்டனர். பின்னர் ஆறாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில் மல்லர்களோடும் ஒரு கூட்டாட்சியை அமைத்துக்கொண்டனர். மற்றோர் அரசோடு இணையும் பொழுது இவை பெரும்பாலும் வெல்லமுடியாததாக இருந்தன வென்பதை மெய்ப்பித்தன. மல்லர்களுக்கும் லிச்சாவிகளுக்கு மிடையில் பொதுவான கூட்டரசுச் சபை ஒன்றிருந்தது. இதில் பதினெட்டு உறுப்பினர் இருந்தனர். ஒவ்வோர் இனமும் ஒன்பதுபேரைத் தேர்ந்தெடுத்தனுப்பியது. ஆனால், கூட்டரசின் உருமாதிரியில் இதுமட்டுமன்று; அந்தகவிருசிகளும் ஒரு கூட்டை அமைத்துக்கொண்டதாகக் கூறப்படுகிறது.

70 Rhys Davids, Buddhist India, p. 21.
71 Mahavagga, vi, 30, 3.
72 J.A.S.B. (1838), vii, p. 996.
73 Sigala Jataka, No. 152, Cowell, op. cit., Vol. II, p. 7.
74 Mahavagga, vi, 31, 1 & 2; S.B.E., Vol. XVII, pp. 108—109.
75 Jataka, No. 465; Cowell, op. cit., Vol. IV, p. 94.
76 Mahavagga, vi, 31, 1 & 2; S.B.E., Vol. XVII, pp. 108—109.

## முடியாட்சியை நோக்கிய பொதுவான போக்குகள்

முடியாட்சியல்லாத அரசுகளில்கூட தனியாட்சி மரபுகள் வளர்ந்துகொண்டிருந்தனவென்பதைச் சுருக்கமான மறு ஆய்வு நமக்குக் காட்டியுள்ளது. மெய்யாகவே, குடியரசு இனங்களெனப் பட்டவை ஆளுகின்ற உயர்குடியினராட்சி அல்லது சிலவராட்சி யாக இருந்தன. தனியாட்சிக் கருத்தை நிறுவ நாடு முழுவதான போக்கு ஒன்று இருந்தது. முடியாட்சிக்கும் முடியாட்சியல்லாத வையின் ஆட்சிக்கும் இடையிலான பகுதி மிகக் குறுகியதாக இருந்ததென்றும் தெரிகிறது. நாட்டின் முடியாட்சிகளின் மறு ஆய்விற்குப் பிறகு இதை உணரலாம்.

பிராமண காலத்தில் பெரிய அரசுகள் எப்படிப் படிப்படி யாகத் தலைமை நிலைக்கு வந்தனவென்பதையும் எப்படி இவை பெரும்பாலும் இனங்களின் பெயர்களைப் பெற்றனவென்பதையும் கடந்த அதிகாரத்தில் நாம் பார்த்தோம். சான்ருக, காசிகள், குருபாஞ்சாலர், வசஸ், உசினரர் போன்றவர்களின் முடியரசு நாடுகள் இருந்தன. இதற்கிடையில் இராஜகிர்கத்தைத் தலைநக ராகக் கொண்ட அங்க நாட்டைப் போன்ற புதிய நாடுகளும் தோன்றின.[77] கங்கைத் தாழ்வெளியில் இம் முடியரசுகள் தோன் றிய பிறகு இவைகளுக்கிடையிலும், காசி, கோசலம், அங்கம் மகதம், சௌரசேனம், அவந்தி ஆகியவைகளுக்கிடையிலும் ஒரு போராட்டம் தொடங்கியது. ஆனுல், தனி முதன்மைக்கான போட்டி காசிக்கும் கோசலத்திற்கும் இடையில்தான் நடந்த தாகத் தெரிகிறது.[78] இப் போட்டி ஏழாம் நூற்றுண்டின் நிகழ்ச் சித் தொகுப்புகளை நிரப்புகின்றது.

வட இந்தியாவில் முதலில் காசியும், பின் கோசலமும், இறுதி யில் மகதமும் தனி முதன்மை நிலைக்கு உயர்ந்ததாகத் தெரிகிறது. காசிக்கும் கோசலத்திற்கும் இடையில் இருந்ததைப்போல் மகதத் திற்கும் அங்க நாட்டிற்குமிடையே தனி முதன்மை நிலைக்கான போராட்டம் இருந்ததாக கம்பேய ஜாதகம் கூறுகிறது (Cowell, Jatakas, Vol. IV). இதன் அரசர்களில் ஒருவர் வட

[77] Mahaparinibbana Sutta, S.B.E., Vol. XI, p. 99. எனில், தலைவ, காம்பா, இராஜககம், சாகேதா, கோசாம்பி, பெனுரிசு ஆகியவைகளைப்போன்ற நகர்களும் அங்கு இருக்கின்றன.

[78] Mahavagga, x, 2, 3; viii, 2 fn. 'காசியரசர் பிரமதத்தர் தம்முடைய நால் வகைப் படைகளையும் அணிவகுத்துக்கொண்டு கோசலத்தின் அரசர் திகிட்டியுடன் போருக்குச் சென்ருர். பின் காசியரசர் பிரமதத்தர் கோசல அரசரின் படைகளையும், வாகனங்களையும் நாட்டையும், பொருள் அகங்களையும், பண்டகசாலைகளையும் வென்று கைப்பற்றிக்கொண்டார்.' S.B.E., Vol. XVII, p. 294. கோசலநாட்டு அரசர் பசேனுதியின் ஆட்சி, 'காசிக்கும் கோசலத்திற்கும் விரிவடைந்தது', vii, 2, fn. 2; Ibid.

இந்தியாவின் எல்லா முடியரசு நாடுகளையும், இறுதியில் 'தக்கசிலை நாட்டையும்'[79] கீழ்ப்படுத்தும் அளவிற்கு வலிமை பெற்றிருந்தார். மற்றோர் அரசர், ஒரு பெரும்படையுடன் 'கோசல அரசருக்கு எதிராகச் சென்று சவத்திக்கு வந்து போருக்குப் பின் நகரில் நுழைந்து அரசரைச் சிறைப்பிடித்தார்.'[80] ஆனால், இதற்காக கோசலத்தின் அரசர்கள் சிறிது சிறிதாகப் பழிதீர்த்துக் கொண்டனர். கோசலத்தின் அரசர் தாபசேனன் 'காசியரசரைக் கைப்பற்றி'னார்.[81] காம்சா என்ற மற்றொரு மிக வலிமை வாய்ந்த அரசர் காசிநாடு முழுவதையும் தம்கீழ்ப்படுத்தினார்.[82] பிம்பிசாரரின் (537—485 கி.மு.) கூர்மதி வாய்ந்த அரச தந்திரத்தின் விளைவாக இக் காலத்தில் மகதம் தனி நிலைக்கு எழுந்து கொண்டிருந்தது.[83] வரிசையாகப் பல நற்பேறு தருகின்ற மணவினைகளைச் செய்தார். தம்முடைய அண்டை நாட்டினருடன் நட்புடனிருந்தார். மகா கோசல அரசரின்[84] மகளை மணந்தார். லிச்சாவித் தலைவர்களில் ஒருவரான[85] சேதகரின் மகளையும், விதேக நாட்டின் இளவரசியையும்[86] இவர் மணந்துகொண்டார். உஜ்ஜெய்னி நாட்டரசர் பிரதியோதா (Pradyota) நோயுற்றிருந்த சமயத்தில் தன் சொந்த வைத்தியராகிய ஜீவகரை அனுப்பி இவர் உதவினார்.[87] அண்டை நாடாகிய அங்கத்தைக் கைப்பற்றியவர் இவராக இருந்திருக்கக்கூடும்.[88] அரசர் பிம்பிசாரர் தன் மகனுக்கு மிகச் செழிப்பான நாட்டை விட்டுச் சென்றார்; தந்தையைக் கொன்ற மகனாகிய அஜாதசத்ரு அண்டை நாட்டோருடன் போர் நடத்தி எத் திசையிலும் நிலங்களை வென்று கொண்டார்.[89] மகத அரியணைக்கு அஜாதசத்ருவும் கோசல அரியணைக்கு பசேனதியும் வந்தது, வட இந்தியாவில் தனி முதன்மை நிலைக்கு இவர்களுக்கிடையே தொடர்ந்து ஒரு போராட்டத்தைத் தொடங்கியது. இதற்கிடையில் கோசல

79 Jataka, No. 353. Cowell, op. cit., Vol. III, p. 106.

80 Jataka, No. 336, Ibid., p. 76.

81 Jataka, No. 303, Ibid.

82 C.H.I., p. 180.

83 Dhammapada, S.B.E., Vol. X, Introduction, p. xlvii.

84 Jatakas, Nos. 283 and 492; Cowell. op. cit., Vols. II & IV.

85 Jacobi, Jaina Sutras Pt. I, xii—xv.

86 Maha-Parinibbana-Sutta, S.B.E., XI, p. 1.

87 Mahavagga, S.B.E., Vol. XVII, pp. 186—87.

88 Campeyya Jataka, No. 506; Cowell, op. cit., Vol. IV, Page 281; Mahavagga, V. i, 1-2; S.B.E., Vol. p. 1.

89 இவர் வைசாலியைக் கைப்பற்றியதற்கு—Maha Parinibbana Sutta, S.B.E., ix, Mahavagga, VI, 28, 7:, 8; காசியைப்பற்றி, Jatakas, Nos. 283 & 492.

முடியரசு சாக்கிய அரசை விழுங்கிவிட்டது.[90] இதே சமயத்தில் அவந்தி அரசர் பிரதியோதர், கோசாம்பி நாட்டின் அரசர் உதெனருடன் போரிட்டதை நாம் அறிகிறோம்.[91] பிரதியோதரின் மகன் பலகரென்பவர் கோசாம்பியைக்[92] கைப்பற்றிக் கொண்டதையும் நாம் அறிகிறோம். கங்கைச் சமவெளியில் இப்பொழுது மூன்று அரசுகள் இருந்தன. இவை ஒவ்வொன்றும் மற்றவற்றின் இழப்பைப் பயன்படுத்திக்கொண்டு தம் செல்வத்தைப் பெருக்கிக்கொள்வதில் முனைப்பாக இருந்தன. மகதத்திடம் கோசலம் தோல்வியடைந்தபின் அவந்தி மகதத்தோடு எதிர்த்து நின்றது.[93] ஆனால், அரசியல் பற்றுர்வ இக் கிளர்ச்சியின் விளைவாக, ஒரு புதிய முடியாட்சிக் கருத்து எழுந்தது. அதாவது, இந்தியா முழுவதின்மீதான இறைமை, பேரரசுக் குறிக்கோள் அல்லது பேரரசாட்சி ஜாதகக் கதைகளில் வெளியானதைக் காணலாம்.[94] பாரசீகரின் படையெடுப்பிலிருந்து இக் குறிக்கோள் மேலும் தூண்டுவிசை பெற்றது. தரயஸ் (கி.மு. 522—486). சர்க்சீஸ் (Xerxes) (கி.மு. 486—465) ஆகியோரின்கீழ் பாரசீகர்கள் தம் ஆட்சி அதிகாரத்தை, பெஷாவர் முழுவதிலும் காபூல், காந்தஹார், சிந்துவெளியின் கீழ்பாகம் ஆகியவற்றின்மீது செலுத்தினர்.[95] இவர்களுடைய வெற்றியின் போக்கு பாணினியால் குறிப்பிடப்பட்ட வாஹிக கணங்களை அகற்றியது. வாஹிக கணங்களைப் பாரசீகர்களும், வாஜிகளை மகதர்களும், சாக்கியர்களைக் கோசலரும் கீழ்ப்படுத்தினர். அதிகாரத்திற்கும் மேதகு நிலைக்கும் தனிப்பட்ட முடியாட்சி அரசுகளின் எழுச்சி ஆகியவை வட இந்தியாவில் முடியாட்சியல்லாத குறிக்கோளைக் கேவலப்படுத்த முற்பட்டன. இது இகழ்ச்சிக்குள்ளான அளவிற்கு முடியாட்சிக் குறிக்கோள் பெரிதாக்கப்பெற்றதாகிய புதிய பேரரசுக் குறிக்கோள் உயர்மதிப்புப் பெற்றது. மற்ற எந்த வகை அரசாங்கத்தின்மீதும் முடியாட்சியின் வெற்றியை இது மெய்யாகக் குறிப்பிட்டது.

## உலகளாவிய பேரரசு

ஜாதகங்களிலும் தரும சூத்திரங்களிலும் குறிப்பிடப்பட்டுள்ள முடியாட்சி அரசுகள் சிறியனவாகத் தோன்றவில்லை.

[90] Bhaddasala Jataka, Cowell, op. cit., Vol. IV, pp. 92—96.

[91] C.H.I., p. 185.

[92] Raichaudhuri, Political History of Ancient India, p. 131; Tawney, (tr.), Kathasarit Sagara, Vol. II, p. 484.

[93] C.H.I., p, 185; Raichaudhuri, op. cit., p. 131.

[94] Cowell, op. cit., Vol. III, p. 21; Dhonasakha Jataka, Ibid., p. 106.

[95] C.H.I., pp. 337—340.

முடியாட்சிகளுக்குள் தனி முதன்மை நிலைக்கான போராட்டத்தின் விளைவாக எப்படிப் பெரிய முடியரசுகள் தோன்றினவென்பதை ஜாதகங்களில் நாம் கண்டோம். சிலவராட்சிகளை வென்று அடக்கியபின் இவைகள் அதிகாரத்திலும் பரப்பிலும் வளர்ச்சியடைந்தன. காசியும் கோசல அரசும் ஒரே அரசின்கீழ் இருந்ததை நாம் கண்டோம்;[96] காசி அரசர் நாடு முழுவதிலும் இறைமை பெற விரும்பினர்.[97] கோசலம், காசி முழுவதையும், இந்திய நாட்டையும் உலகளாவிய பேரரசின் புகழையும்[98] பெறுவதில்தான் மிக உயர்ந்த அரசியல் பேராவல் இருந்தது பலநாடுகளைக் கொண்டிருந்த பரந்தஅரசுகளை தருமசூத்திரங்கள். அறிந்திருந்ததாகவும் தெரிகிறது. சான்ருக, நீதி செலுத்துவதன் சரியான முறையைச் சுட்டிக்காட்டி 'நாடுகளின் சட்டங்கள்'[99] மதிக்கப்படவேண்டுமென்று கௌதமர் கூறுகிருர். பௌதாயனரும், 'நாடுகளின் விதிகளை' வலியுறுத்துகிருர்.[100] மரபுரிமைச் சட்டத்தை விவாதிக்கையில், குறிப்பிட்ட நாடுகளில் பின்பற்றப்படுகிற வழக்கங்கள்பற்றிய சட்டத்தை[101] ஆபஸ்தம்பர் குறிப்பிட்டிருக்கிருர். இறுதியாக அரசரின் கடமைகளைச் சுருக்கிச் சொல்லும்பொழுது 'நாட்டின் எல்லாச் சடங்குகளுக்கும் அரசர் செலுத்தவேண்டு'மென்று[102] வைசிஸ்தர் விரும்புகிருர். ஆகவே, தற்செயலாகத் தலச் சட்டங்களின் சிறப்பை வலியுறுத்துகையில், இந் நான்கு சட்டத் தொகுப்புகளும் அரசர்களின் ஆள் நிலப்பரப்புகளில் 'நாடுகளை'யும் உட்படுத்துவதைக் குறிப்பிடுகின்றன. மேதாதிதி (Medhatithi) போன்ற உரையாசிரியர்கள் போன்றவர்கள் கொடுத்திருக்கும் 'நாடுகளின்' எடுத்துக்காட்டுகள் குரு, காப்பிசர், காஷ்மீரம் போன்ற மற்றவைகளையும் கொண்டிருக்கின்றன. இப்பொழுது அரசரின் ஆட்சிப் பரப்புகள் சிறிதாகவும் ஒரே இனத்தவர்கள் வசிப்பதாகவும் இருந்தால், பின் இத்தகைய அறிக்கை அல்லது விதியமைவு இங்குப் பொருத்தமற்றதாக இருக்கக்கூடும். பெரும்பாலும் அரசர்களின் ஆள்நிலப்பரப்புப் பல நாடுகளைக் கொண்டும் பெரிதாகவும் இருந்தன. எனவேதான் சாதிகள், குடும்பங்கள்

96 Jataka, No. 336; Cowell, op. cit., Vol. III, p. 77; Ekaraja Jataka, No. 303.

97 Jataka, No. 353; Ibid., p. 106.

98 Sahya Jataka, No. 310; Ibid., p. 21, pp. 9—10; Mahavagga, viii, 2, fn. 2.

99 xi, 20; S.B.E., Vol. II, p. 237.

100 I, 1, 2, 6; S.B.E., Vol. XIV, p. 147.

101 II, vi, 15, 1; S.B.E., Vol. II, p. 137.

102 XIX, 7; S.B.E., Vol. XIV, p. 96.

ஆகியவற்றின் தனிப்பட்ட சட்டங்களை மட்டுமன்றி நாடுகளின் சட்டங்களையும் மதிக்கும்படி அரசர்கள் ஆணை பெற்றூர்கள். இப்பொழுது இப் பரந்த மாநில அரசுகள் எப்படி அரசர்களால் ஆளப்பெற்றதென்பதைப் பார்ப்போம்.

## அரசபதவி அதிகார வளர்ச்சி

முடியரசுகளின் வளருகின்ற பருமனேடு அரசரின் அதிகாரமும் வளர்ந்துகொண்டிருந்தது. அரசரின் அரசாங்கங்கள் தெரியும்படி திறமையிலும் அமைப்பிலும் வளர்ச்சிபெற்று வந்தன. செயற்பாட்டின் புதிய துறைகளும் தோன்றிக்கொண்டிருந்தன. முடியாட்சியின் இக் காலத்திய தலைசிறந்த சிறப்பு, சமயத்தின் பெரிய வரம்பு ஒன்றைமட்டுமே ஏற்றுக்கொண்டதாகும். அரசரின் அதிகாரத்தைக் குறைப்பதற்கு வேறெதுவுமிருக்கவில்லை. இல்லையெனில் அரசரின் அதிகாரம் எல்லையற்றதாக ஆகி இருக்கும். ஆகவே, இதற்கிடையில் பெரிய மாநில அரசுகளின் தோற்றத்தோடு மரபுவழி அரசபதவி நிலைபெற்ற நிகழ்வாகி விட்டது.[103] முழு வல்லாட்சிக்கு இதுதான் முதல் படியாக இருந்தது. வேதகாலத்தில் இருந்ததைப்போல் அல்லது பிராமண சமயத்தின் காலத்தில் இருந்ததைப்போல் இவருடையஅதிகாரம் பொதுமக்கள் சபையின் விருப்பாற்றலால் அல்லது இரத்தினிகளின் செல்வாக்கால் வரையறுக்கப்படவில்லை. இந்தக் காலத்தில் அமைச்சர்கள் அல்லது அரச அவையினர் அரசரைத் தெரிவு செய்யலாமென்றூலும், இறக்கும் அரசரின் விருப்போடுதான் இதைச் செய்யலாம். இருப்பினும் தெரிவு ஆளும் அரச குடும்பத்திற்குள்தான் இருந்தது. அரசரின் மைந்தர்கள் எல்லோரும் 'வெண்கொற்றக்குடைக்கு உரிமை பெற்றிருந்தனர்' என்பது கோட்பாடாக இருந்ததாகத் தெரிகிறது.[104] இவருடைய அரசாங்கத்தின் பரவலான கருத்துகளை நுணுக்கமாக ஆராய்ந்தால் எப்படி அரசரின் அதிகாரம் வளர்ந்துகொண்டிருந்ததென்பதையும் முழுமையான அதிகாரமாக முற்பட்டுக்கொண்டிருந்ததையும் அறிந்துகொள்ளலாம்.

[103] Cowell, op. cit., Vol. IV, pp. 62, 67, 105; Vol. V, p. 128. காசி அரசர் பிரமதத்தர் தம் மகனைச் சந்தேகித்து: 'இங்கிருந்து என்னை விட்டகன்று தற்போதைக்கு நீ விரும்புகிற இடத்தில் வசித்து என்னுடைய மரணத்தின்போது மரபுவழி முடியரசைப் பெற்றுக்கொள்க என்று அவரிடம் கூறினூர்?' Bhuridatt Jataka, No. 543; Cowell, op. cit., Vol. VI, p. 80.

[104] Cowell, op. cit., Vol. IV, p. 84. அரசர் மரணப்படுக்கையில் இருக்கும் சமயம் அரச அவையினர்: எம் தலைவ, நீர் இறந்தபின் வெண்குடை யாருக்குக் கொடுக்கப்படவேண்டும்? என்று கேட்டனர். 'நண்பர்களே என் மைந்தர்கள் எல்லாம் வெண்குடைக்கு உரிமைபெற்றவர்கள். ஆனூல், உங்கள் மனத்திற்குப் பிடித்தவருக்கு நீங்கள் கொடுக்கலாம்' என்று சொன்னூர்.

## 'சாதிகளையும் வகுப்புகளையும் காப்பதற்கு அனைவர் தலைவராகிய' அரசர்

அரசருக்கும் இவருடைய அரசுக்கும் உள்ள தொடர்பைக் குறிப்பிட தரும சூத்திரங்கள், 'பிராமணர்களைத் தவிர அரசர் எல்லோருக்கும் தலைவர்',[105] எனவே, தம் குடிமக்களுக்குத் தந்தையைப் போல் பாதுகாப்பு அளிக்கவேண்டு[106]மென்று விதி செய்கின்றன. 'பிராமணர்களைத் தவிர எல்லோரும் இவரை வணங்க வேண்டும்; இதே வேளையில் பிராமணர் இவரைப் பெருமைப் படுத்தவேண்டும்.'[107] பிராமணர் இவரைப் பெருமைப்படுத்த வேண்டுமென்பதும் மற்றவர்கள் இவரை வழிபடவேண்டுமென்பதும் இவருக்கு இறைமைத் தன்மையை வழங்குவதில் முடிவுற்ற நடைமுறையின் தொடக்கத்தைக்குறிப்பிடுகிறது.[108] வரி விதிக்கும் உரிமையையும் இவர் இப்பொழுது பெற்றார்;[109] இவருடைய வருவாயாக மக்களின் வருமானத்தில் ஆறில் ஒரு பங்கைக் கோரிப் பெறலாம்;[110] இவர் இன்னும் பல வழிகளில் வரி விதிக்கலாம்;[111] வரியை இவர் அதிகரிக்கலாம்.[112] அரசர் படைத் தலைவர்; இவர் தாமே படையைப் போருக்கு நடத்திச் செல்ல வேண்டும்.[113] நிலைப் படைகளை இவர் வைத்திருந்ததாகத் தெரிகிறது.[114] நிர்வாகம் நீதி உள்பட இவர் அரசாங்கத் தலைவர் என்ற முறையில் எல்லா உயர் பதவிகளுக்கும் ஆட்களை அமர்த்துகிறார்; இதே வேளையில் உயர் அலுவலர்கள் தம் கீழாட்களை அமர்த்தினர்.[115] சட்டம் செய்வதைப் பொறுத்தவரை கடுமையாகக் குறைக்கப்பட்டிருந்தாலும் மிக உயர்ந்த சட்ட அதிகாரங்களை இவர் செயல்படுத்தினார். எப்படியெனில், இவருடைய அவசரச் சட்டங்கள், சட்டங்களின் ஒரு வகையாகத் தான் இருந்தன. மற்ற வகைகள், சமயத்தின் விதிகளைக் கொண்டிருந்தன. இவை மானிட வாழ்க்கையின் எல்லா இயல்புகளையும் கொண்டிருந்தன. இருந்தபோதிலும், இப்பொழுது இறைமையின் சில மிகச் சிறந்த இயல்புகளை இவர் பெற்றார்.

105 Gautama, XI, 1.
106 Baudhayana, I, 10, 18, 1; Vasistha, XIX, 1; Gautama, XI, 9, etc.
107 Gautama, XI, 7, 8.
108 Mahabharata, Santi Parva, Secs. 40, 41 & 68.
109 Apastamba, II, x, 26, 9.
110 Baudhayana, I, x, 18, 1; Vasistha, Ch. I, 42.
111 Vasistha, XIX, 28; 'கைவினைஞரிடமிருந்து மாத வரியைப் பெறுவார்'.
112 Maha-Assaroha-Jataka, No. 302; Cowell, op. cit., Vol. III.
113 Gautama, x, 13–17.
114 Vasistha, XIX, 17–20; Cowell, op. cit., Vol. VI, p. 14.
115 Apastamba, II, 10, 26, 4 and 5.

பொதுச் சட்டத்தின் பெரும் பகுதியான சமயக் கட்டளைகளால் அரச அதிகாரம் வரையறுக்கப்பட வில்லையென்றால், இதனுடைய விளைவு முழு வல்லாட்சியின் முழுநிறைவாக இருந்திருக்கவேண்டும். இவரது விரிவான அதிகாரங்கள் இருந்தும், இவை கூறகிற படி 'நீதிக்கொப்ப சாதிகளையும் வகுப்புகளையும் காப்பதற்கும்', 'தம்மைக் கட்டுப்படுத்திக்கொள்ளாதவர்களைக் கட்டுப்படுத்துதற்கும்'தான் அரசர் இருந்தார்.[116] சமூக வகுப்புகளைக் காப்பதற்கும், நான்கு சாதிகள், தம் கடமைகளிலிருந்து விலகிச் செல்லும் எல்லாவற்றையும் தண்டிப்பதற்கும் இவருடைய அதிகாரம் செயல்படுத்தப்பட வேண்டியிருந்தது.[117] சுருக்கமாக இவர், உலகத்தில் நெறிமுறையை நிலை நிறுத்தவேண்டியிருந்தது. அதுவும் 'வேதங்களில் நல்ல தேர்ச்சி பெற்ற பிராமணர்களின் உதவியோடு நிலை நிறுத்தவேண்டும்.'[118] இங்கு, அரசிற்கும் சமயத்திற்கும் உள்ள தொடர்பை நாம் காணுகிறோம். புரோகிதர் அல்லது அரச குரு தாமே, அரசரைவிடச் சிறப்புப் பெறுவிட்டாலும் அரசரைப் போன்றதொரு முக்கியமான நிறுவனமாகிவிட்டார். ஏனெனில், வழிகாட்டக் குருவின்றி அரசரும் இவருடைய அரசும் துன்பத்திற்குட்படும்.[119] ஆகையால் ஒரு குரு, கற்றறிந்தவராகவும் நற்குடிப் பிறந்தவராகவும், நாநலம் படைத்தவராகவும், நேர்த்தியான உருவமைந்தவராகவும், நற்பண்பினராகவும்,[120] 'எல்லாச் செயல் வினைகளிலும் தலைசிறந்தவராகவும் இருக்கவேண்டும்'.[121] 'இவரது செயல் துறைக் கட்டளைகளுக்கொப்ப அரசர் நடக்கவேண்டும்'.[122] குருமார்களின் கட்டளைகளை மீறியவர்கள் இவரால் முடிவு செய்யப்பட இவரிடம் அனுப்பப்படவேண்டும்.[423] எனவே, குருவின் ஆன்மிகத் தலைமையை இவர் ஏற்கவேண்டியிருந்தது. இவர் வழியாகச் சமயத்தின் கட்டளைகளை அரசர் ஏற்கவேண்டியிருந்தது. சட்டத்தைப்போல்அந்தஅளவிற்குச் சமயம் மெய்யாகவே அரசை ஆட்சி செய்தது. அரசர் செயல்படுத்தின சட்டம் சமயத்தின்

116 Gautama, XI, 9, 28; Cf. Vasistha, XIX, 8; Apastamba, II, x, 27, 18.

117 Apastamba, II, x, 27, 18; Vasistha, xix, 8.

118 Gautama, VIII, 1.

119 'பிராமணர்களால் உதவப்பெற்ற க்ஷத்திரியர்கள் துன்பத்திற்குள்ளாவதில்லை'—Gautama, XI, 14. 'க்ஷத்திரியர்களுடன் இணைந்த பிராமணர்கள் கடவுளர்களையும் மனிதர்களையும் பேணுகின்றனர்'—Gautama, XI, 27. 'பிராமணர் வீட்டுக் குருவாக அமர்த்தப்பெற்ற ஒரு நாடு செழிக்கும்'—Vasistha, XIX, 4.

120 Gautama, XI, 12.

121 Baudhayana, I, x, 18, 7.

122 Ibid., x, 18, 8.

123 Apastamba, II, v, 10, 12—14.

முத்திரை பெற்றிருந்தது. இது சமயத்தால் இயக்கப்பெற்றது. எனில் இப்பொழுது வேதங்களில்,[124] அதாவது மரபுகளில்,[125] அல்லது சிஷ்டர்களின் செயல் முறைகளில் அல்லது நல்ல, ஒழுக்க முள்ளவர்களின்[126] அல்லது இவைகள் எல்லாவற்றிலும் சட்டம் தன்னுடைய மூலக் கூறைப் பெற்றிருந்ததாகக் கருதப்பெற்றது. சர்ச்சைக்குரிய வழக்குகளில், பத்து, ஐந்து, மூன்று பேர்களைக் கொண்ட சபை அல்லது 'ஒரு குற்றமற்ற மனிதர்' செய்த முடிவு[127] ஏற்றுக்கொள்ளப்படவேண்டும். 'பிராமணர் சட்டமென்னும் தேர் ஏறி வேதமென்னும் வாள் பிடித்து விளையாட்டாகவேனும் வெளியிட்டது மிக உயர்ந்த சட்டமென அறிவிக்கப்பட்டது.'[128] வெளி நிறுவனம் ஒன்றிலிருந்து அரசர் சட்டத்தைப் பெற்றார் என்பதும் இவர் கட்டுப்பாடு செய்ய முடியாத மூலத்திலிருந்து பெற்றார் என்ற உண்மை இவரது அதிகாரத்திற்கு ஒரு தடையாகப் பயன்பட்டது. புறம்பாக, இவருடைய அரசாங்கத்தில் செயற்பாட்டில் சமயம் நுழைந்தது. பிராமணர்கள் சட்டத்தின் காவலர்கள் ஆகையால் இவர்களுடைய வழக்குகளில் நீதித்துறை பல சலுகைகளை அளிக்கவேண்டியிருந்தது. எடுத்துக்காட்டாக, பிராமணரைத் தவிர வேறெவரும் பிறன்மனை நயத்தற்கு உடல் ஒறுப்பு தண்டனை பெறுவர்.[129] உண்மையைச் சொல்லப் போனால், எந்தக் குற்றங்களுக்கும் ஒரு பிராமணர் உடல் ஒறுப்பு தண்டனை பெறமாட்டார்', பெருங்குற்றத்திற்கான ஒரு பிராமணர் அல்லாதார் மரண தண்டனை பெறும் வழக்குகளில் ஒரு பிராமணர் உடல் ஒறுப்பு தண்டனையோடு தப்பிவிடுகிறார்.[130] அரசரின் வரிகளிலிருந்து இவர் விலக்குப் பெறுகிறார்,[131] மேலும் அரசர் இவரை ஆதரிக்கவேண்டும்.[132] ஒரு பிராமணரின் சொத்தை அரசர் பறிமுதல் செய்ய முடியாது.[133] எனவே, சட்டத்தின் கட்டுப்பாடுகளிலிருந்தும் வரிவிதிப்பிலிருந்தும் பிராமணர் விலக்குப் பெற்றிருந்தார். பிராமணர்களுக்கு அடுத்து முன் மதிப்பிற்குரிய ஆதரவைப் பெற்றவர்கள் க்ஷத்திரியர்.

[124] Baudhayana, I, I, I. I; Vasistha, I, 4; Gautama, Ch. I, 1.
[125] Gautama, I, i, 1, 3; Vasistha, I, 4.
[126] Baudhayana, I, i, 1, 4—6; Vasistha, 1, 5, 6.
[127] Baudhayana, I, i, 1, 7 – 9.
[128] Ibid., i, 1, 13.
[129] Baudhayana, II, ii, 4, 1.
[130] Baudhayana, I, x, 14, 17 & 18.
[131] Vasistha, Ch. I, 49; Apastamba, Ch. II, x, 26, 10
[132] Gautama, X, 9.
[133] Baudhayana, I, V, 11, 15 16.

இவருக்கும்கூட நாட்டின் சட்டங்கள் தளர்த்தப்பட்டன, இவருக்கு அடுத்து வைசியர்கள் இருந்தனர்.[134] சட்டத்தால் சூத்திரர் கடுமையான முறையில் நடத்தப்பெற்றனர். சட்டத்தைச் செயல்படுத்துவதில் கருத்திற்கொள்ளப்பெற்ற முதன்மையான கருத்து ஒருவரின் சமூக அந்தஸ்தாகும்.[135] இச் சமூகத் தனி மதிப்பு நிலை சமயத்தால் உறுதி செய்யப்பட்டது. சாதிக் கடமைகளுக்கு சமயம் ஒப்புதல் அளிக்கவேண்டும்; ஒருவர் தம் கடமைகளிலிருந்து விலகிச் சென்றால் இவர் தம் சமூகத் தனி மதிப்பு நிலையை இழந்து விலக்கப்பெற்றவராவர்.[136] எனவே, இப்படித்தான் சமயம் சட்டத்தை அளித்ததுமன்றி இதன் செயற்பாட்டையும் மெய்யாகவே கட்டுப்படுத்தியது. அரசிற்கும் சமயத்திற்கும் இடையேயான இந்த உறவை மனத்திற் கொண்டு ஒரு முடியாட்சி அரசின் அரசாங்க நிறுவனத்தை நாம் ஆராயலாம்.

## அரசரின் தனியாட்சி

ஒரு முடியாட்சி அரசின் அரசாங்க நிறுவனத்தின் இயக் காற்றல் அரசர், ஆட்சி இயல் முறை முழுமைக்கும் இவர் உரத்தையும் திறமையையும் அளித்தார். கோட்பாட்டளவில் இவர் வாழ்க்கை சமூக நலத்திற்காக ஒப்படைக்கப்பட்ட வாழ்க்கையாகும். 'தீய மனம் படைத்தவர்களைத்' திருத்துவது இவர் கடமையாகும்.[137] அல்லது வாஸ்கியின் கருத்துப்படி, சமூக விரோதப் போக்குகள் அனைத்தையும், எல்லாச் சமூக, ஒழுக்க குற்றங்களையும்[138] போதிய அளவு தண்டிப்பதால் அகற்றுவதும் இவரது கடமையாகும். தம்முடைய குடிமக்களின் 'நல வாழ்க்கையை' இவர் பாதுகாக்கும்பொழுதுதான் இவருடைய நாட்டில் கிராமங்களாயினும் காடுகளாயினும் திருடர்களின் அபாயம் இல்லாதபொழுதுதான் அரசர் இதை நிறைவேற்று கிறார்.[139] ஆனால், செயலுக்கும் கோட்பாட்டிற்குமிடையே பெரும் வேறுபாடு இருந்தது. சட்டக் கோட்பாடு வலியுறுத்தி யதுபோல் பழங்கால இந்திய அரசர்கள், தம்மை அர்ப்பணஞ்

[134] இப் பொருள்பற்றிய குழுத் தகவலுக்கு, Gautama, Ch. xii: Apastamba, II, x, 27; Baudhayana, I, x, 18, 19 ஆகிய நூல்களைப் பார்க்க.

[135] Gautama, XII, 51.

[136] Gautama, Ch. XXI, 4—'விலக்கப்பட்ட சாதியென்பது பிராமணர்களின் சட்டப்படியான தொழிலைப் பின்பற்றும் உரிமை இழப்பு என்று பொருள்படும். எப்படி ஒருவர் ஒதுக்கப்பட்ட சாதியானர் என்பதற்கு Gautama, XXI, 1—14 பார்க்கவும்.

[137] Vasistha, Ch. XX, 3.

[138] Ibid., Ch. XXI; Ch. III, 4; Rajavada Jataka, No. 151, Cowell, op. cit., Vol. II. 'ஒழுக்கத் தவறுபற்றிய ஒரு கடினமான வழக்கில் ஒரு நாள் கோசல அரசர் தீர்ப்புக்கூறினார்'.

[139] Apastamba, II, 25, 15.

செய்கிற, நடுநேர்மையுடைய, அறிவுக் கூர்மையுடையவர்களா இருக்கவில்லை.[140] மெய்யாகவே இவர்கள் சில சமயங்களில் கொடுங்கோல் ஆட்சிபுரிந்தனர்; பொதுவாக மக்களின் செழிப்பும் கடினமான சமூக, சமயக் கடமைப் பொறுப்புகளும் மக்களையும் மன்னர்களையும் கட்டுப்படுத்திய காரணத்தால், இவர்களுடைய கொடுங்கோன்மையின் வேதனைக் கடுமை அகற்றப்பட்டது. பெரும்பாலும் 'அரசர் இரண்டு அல்லது மூன்று தடவை வரியை உயர்த்தலாம்.'[141] அரசரின் அலுவலர்கள் 'வயல்களை அளந்தபிறகு', புதிய அரசர்கள் பதவிக்கு வந்தபின் இது செய்யப்பட்டிருக்கலாம்.[142] நீதிமுறைமையைப் பொறுத்தவரையில், ஒரு குறிப்பிட்ட வழக்கில், ஒரு தனிப்பட்ட அரசர் 'விசாரணை செய்யாது, இவன் ஒழியட்டும், கம்பத்தின்மேல் இவனைக் கழுவேற்றுங்கள்' என்றுமட்டுமே சொன்னதாக நாமறிகிறோம்;[143] கோட்பாட்டளவில் ஒரு குற்றமற்றவன் தண்டிக்கப்பட்டால், அரசர் இதற்காகக் கழுவாய் தேடவேண்டும்.[144] அரசரின் கடமை, பயிற்சி, ஆளுமை ஆகியவைகளுக்குக் கொடுத்த பெரும் முதன்மை அரச பதவியின் அதிகார வளர்ச்சியைத் தெளிவாக வெளிக்கொணர்ந்தது. மெய்யாக இத் தலைப்புகளில் கொடுக்கப்பட்டிருப்பவை, அரசாங்கம்பற்றிய பெருமளவு ஆய்வுக் கட்டுரைகளைக் கொண்டதாகும். ஒப்பீட்டில் அமைச்சர்கள் சிறப்பின்மையில் ஆழ்ந்தனர். மூன்று தர்ம சூத்திரங்களில் மூன்று முழு அதிகாரங்களும், முந்நூற்று முப்பது பிரிவுகளுக்குமேல் 'அரசரும் இவரது கடமைக'ளுக்கும் ஈடுபடுத்தப்படுகையில் இவர்கள் (அமைச்சர்கள்)[145] குறிப்பிடப்படவில்லை. ஆகவே, கோட்பாட்டில் உள்ளதுபோல் உண்மையாக அரசோடு அரசர் தம்மை ஒன்றே எனக் கருதுகிறார்.

## அரச அரசாங்கத்தின் இயல்புகள்

ஆபஸ்தம்பரின் கருத்திற்கொப்ப, உயர் அதிகாரிகளை அரசர் அமர்த்தினார்.[146] அதிகாரிகள் தம் கீழாட்களைத் தெரிந்தெடுத்து

140 Gautama, Ch. XI, 2—6.

141 Maha-Assaroha-Jataka, Cowell, op. cit. Vol. III, No. 302.

142 Cowell, op. cit., Vol. IV, No. 467.

143 Kanhadipayana Jataka, No. 444, Cowell, op. cit., Vol. II.

144 Vasistha. xix, 42—43.

145 விசிஸ்தர் இரண்டு தடவை இவர்களைக் குறிப்பிடுகிறார். (a) Vasistha xvi, 2—அரசர்கள் அல்லது அமைச்சர்கள் நீதியைச் செயல்படுத்தட்டும் Vasistha, xvi, 20.—இல்லையெனில் அரசர் தம் அமைச்சர்களோடும் குடிமக்களோடும் இதைச் செயல்படுத்தட்டும்.

146 Apastamba, II, 26, 4—7.

அமர்த்துகின்றனர். 'மிகக் கவனமாகத் தெரிந்தெடுக்கப்பட்ட பணியாளர்களால் சூழப்பெற்று அரசர் வசித்தால், அரசர் பிராமணருக்கும் மேலாக இருப்பார்'[147] என்னும் அறிக்கையால் அரசருக்கு உயர் அதிகாரிகளின் சிறப்புக் குறிப்பிடப்படுகிறது. தம்முடைய பணியாளர்களுக்குக் கெடுதலின்றி ஒரு பிராமணருக்குக்கூட அரசர் நிலமும் பணமும் கொடுக்கக்கூடாதென ஆபஸ்தம்பர் விதி வகுக்கிறார்.[148] ஆகையால் அரசர் தம் சொந்தப் பணியாளர்களைத் தெரிவு செய்தாரென்றும் இவர்களை மகிழ்ச்சியோடு வைத்துக்கொள்ளப் பாடுபட்டாரென்றும் தோன்றுகிறது. உயர்அதிகாரிகளில் அமைச்சர்களும் சேர்ந்திருக்கவேண்டும். அரசருக்கு உதவி செய்யப் பல அமைச்சர்கள் இருந்தார்கள் என்பது ஜாதகங்களின் குறிப்புகளிலிருந்து தெளிவாகிறது. பெனரசின் அரசர் ஐந்து அமைச்சர்களைப் பெற்றிருந்தாரென்று இவைகளில் ஒன்று கூறுகிறது.[149] அரச அமைச்சவையினரின் இயல்பான எண்ணிக்கை இதுவாக இருந்திருக்கவேண்டும். ஒவ்வொரு நாளும் அரசர் அரசவை கூட்டினர். இங்குச் சபை உறுப்பினர்களும் வந்திருந்தனர்.[150] இவ்வவையினர் அமைச்சர்களாக இருந்திருக்கலாம் அல்லது இல்லாதிருக்கலாம். ஏனெனில், மகாவாகம், அமைச்சர்களையும் அவையினர்களையும் தனித்தனியே குறிப்பிடுகிறது.[151] மகதத்தில் ஒரே சமயத்தில் சுனிதா, வாசகாரா என்ற பெயருடைய 'இரண்டு முதல் அமைச்சர்கள்' இருந்தனரென்று மகாபரினிபான சுதா கூறுகிறது.[152] இருப்பினும் இந்த அமைச்சர்களின் கடமைகளை உறுதியாக அறிதல் கடினமாகும். அரசின் பல்வேறு துறைகளின் பொறுப்பை இவர்கள் ஏற்றுக்கொண்டிருக்கவேண்டும். கருவூலப் பொறுப்பில் ஓர் அமைச்சர் உறுதியாக இருந்தார். இவர் செத்தி (Setthi) எனப் பெயர்பெற்றார். இவருக்குப் பல அனுசெத்திகள் உதவினர்.[153] அரசர் கருத்தளவில் படையின் தலைவராக இருந்தாலும் ஒரு படைத்தலைவர் இருந்தார். தலைமை நீதிபதியோடு[154] பல நீதிபதிகள்[155] நீதி செலுத்தினர். ஒரு காகதியும் பரிநாயகரும்[156] இருந்தனர். இவர்கள் அரண்மனை மேற்பார்வையாளர் அல்லது பணி

[147] Vas'stha, xvi, 21, 26.
[148] Apastamba, II, 26, 1.
[149] Jataka, No. 528; Cowell, op. cit., Vol. I.
[150] Jataka, No. 533, Cowell. op. cit., Vol. V, p. 184.
[151] S.B.E., Vol. XVII, p. 304.
[152] S.B.E., Vol. XI, p. 18.
[153] Jataka, No. 545, Cowell, op. cit., Vol. V, pp. 203—204.
[154] Jataka, No. 218, Cowell, op. cit., Vol. I, p. 11.
[155] Cowell, op. cit., Vol. II, p. 25.
[156] Mahasudassana Sutta, Ch. I, 41, 46; S.B.E., xi, pp. 257 & 259.

யாள் தலைவர், சடங்குகளின் நாயகம் போன்றவர்களுக்கு ஒப்பானவர்களாக இருக்கலாம். அரசருடைய யானைத் திருவிழாக்களின்[157] சடங்குத் தலைவர் ஒருவரைப்பற்றி நாம் அறிகிறோம்; பொது நோக்கங்களுக்காக ஒருவர் இருந்திருக்கவேண்டுமென்று கருதலாம். ஆகவே, நாம் உண்மையாக ஐந்து அரச அலுவலர்களைப் பெறுகிறோம். அதாவது, கருவூலத் தலைவர், படைத் தலைவர், தலைமை நீதிபதி, பெருந்தகை முகவர், சடங்குகளின் தலைவர் ஆவர். இந்தக் காலத்தில் இவர்கள் அரசரின் அரசாங்கத்தின் இயல்பான கூறுகளாக இருந்தனர். ஒரு முக்கியமான விடுபாடு இருந்ததாகத் தோன்றுகிறது. இது வரி வசூலிப்புத் தலைவராகும். ஆனால், வரி வசூலிக்கும் பொறுப்பில் இருந்த கிராம, நகர அலுவலர்கள் ஒரு தனி அமைச்சரின்கீழ் இருந்திருக்கக்கூடும். ஏனெனில், 'மக்களின் பாதுகாப்பிற்காக கிராமங்களிலும் நகரங்களிலும்' தலைமைஅலுவலர்களை அரசர் அமர்த்தியதாக நாம் அறிகிறோம். 'ஒவ்வொரு கிராமத்திலிருந்து ஒரு குரோச (Krosa) தூரத்திற்கு நாட்டைக் காக்கவும்,' 'சட்டப்படியான வரிகளை வசூலிக்கவும்'[158] இவர்கள் மறுபடியும் தம் பணியாட்களை அமர்த்தினர். வரி வசூலிப்பிற்குத் தனிப்பட்ட கவனம் செலுத்தப்பட வேண்டுமென்று மேலும் கூறப்பட்டது.[159] அரச வருவாய்ப் பொறுப்பிற்காகக் கூடுதலாக ஆறாவது அமைச்சர் ஒருவர் இருந்திருக்க வேண்டுமென்று தோன்றுகிறது பல்வேறு துறைப் பொறுப்பிலிருந்த இவ்வமைச்சர்கள் அரசரின் செயலாளர்களாக இருந்திருக்கக்கூடுமெனத் தோன்றுகிறது. ஆனல், இவர்கள் தம் சொந்தத் தொடக்கத் துணிவோடு செயல்பட இயலாதவர்களாக இருந்தனர். அரசர் எல்லா அதிகாரங்களுக்கும் மூலாதாரமாக இருந்ததுபோல், ஆட்சி இயற்செயற்பாட்டிற்கு இவர் மூல விசையாக இருந்தார். தொடக்கத் துணிவை ஏற்க அல்லது எடுக்க இவர்கள் மெய்யாகவே நினைத்தபொழுது அமைச்சர்கள் இவரது பாராட்டை நாடலாம். அரசர் எப்பொழுதும் தனித்தே செயல்பட்டனரென்று பொருள்படாது. அரசரின் ஆளுமைக்குப் பெருமளவு முதன்மை அளிக்கப்பட்டபோதிலும், அமைச்சர்களின ஆலோசனை இவருக்குத் தேவைப்பட்டது. தூய்மையாக அடக்கம்பெற்ற உணர்வுகளுடன், மிகச்சிறந்தகுணப்பண்புகளைப் பெற்றிருக்கும் நண்பர்களாலும், இவரது ஆட்சியை நிலைநாட்டுவதற்கான வழிகளால் இவர் சூழப்பட்டிருக்கவேண்டும்.[160] தம்

157 Jataka, No. 163, Cowell, op. cit., Vol. II.
158 Apastamba, II, 26, 4—9.
159 Gautama, x, 29.
160 Gautama, Ch. XI, 4; S.B.E., Vol. II, p. 232.

அமைச்சர்களைவிட இவர் நன்றாக வாழக்கூடாது.[161] அரசரின் அதிகாரம், ஆளுமைபற்றிய சட்டத் தொகுப்புகளின் இவ் உரிமைக் கட்டளைகள், அரசரின் தெய்வ வழிபாட்டுக் கோட் பாட்டை நோக்கிய முதற்படிகளாக இருந்தன.

குருமார்கள் வேறு நிலையில் அமைச்சர்களுக்குமேல் இருந் தனர். இவருடைய உதவியோடு அரசர்தம் சமயக் கடமைகளை நிறைவேற்றுவார்.[162] இவரது சமய, உலகியல் சார்ந்த கடமை களை[163] இவர்மட்டும் செய்யமுடியாது. அப்பொழுதுதான் இவ ருடைய அரசு செழித்தோங்கும். எந்த அமைச்சரும் பெற முடி யாத ஒரு தனிச்சிறப்பு நிலையை இவருக்கு இந்த உண்மை கொடுத்தது. ஏனெனில், மற்றவர்களைப் போலன்றிச் 'சட்டத் திலும், ஆட்சி செய்வதிலும் இவர் தேர்ச்சி பெற்றிருந்தார்.'[164]

## சிதைவுச் சக்திகளுக்கெதிராக அரச பாதுகாப்பைச் சமூகம் நம்பி இருக்கிறது

இருந்துங்கூட, இப்பொழுது அரச அதிகாரத்தின் வளர்ச்சி உணரக்கூடிய உண்மையாக இருக்கிறது. ஏனெனில், அமைதி ஒழுங்கு ஆகியவற்றைப் பேணுதற்கு அரசரின் வலிமையிலும் திறமையிலும் பெரிதும் நம்பிக்கை வைக்க மக்கள் பழகிக்கொண் டனர். வரி செலுத்துவோரைமட்டுமன்றி[165] படைக்கப்பெற்ற அனைத்தையும் இவர் காக்கவேண்டியிருக்கிறது.[166] சமூகக் கடமை, ஒழுங்கு ஆகியவற்றிலிருந்து விலகிச்செல்லும் எல்லாவரையும் மரணத்தாலும் இவர் தண்டிக்கவேண்டும்.[167] 'தம் புனிதமான கடமைகளைச் செய்யாமலும் வேதத்தைப்பற்றி அறியாமலும் இரந்து வாழும்'[168] பிராமணர்களைக்கூட இவர் தண்டிக்கலாம். இது குறிப்பிடத்தக்கதாகும் மேலும், சிவில் (உரிமைபற்றிய) கிரிமினல் (குற்றவியல்) நீதிக்கு இவர் தலைவர்; எனவே, தனித்தோ அல்லது இவரது அமைச்சருடனோ,[169] நீதிபதியாக இருந்து செயலாற்றவேண்டும். அரசாங்கச் செயற்கடமைகள் பெருமளவு வளர்ச்சியடைந்தன. தல அரசாங்கம் வலிமைமிக்க

161 Apastamba. II, 25, 10, S.B.E., Vol. II, p. 160.
162 Gautama, Ch. XI; 13; S.B.E., Vol. II, p. 233.
163 Vasistha, Ch.XIX, 6; S.B.E., Vol. XIV, p. 96.
164 Apastamba, II, 10, 14.
165 Gautama, Ch. X, 28. 'வரி செலுத்துவோரைக் காத்தல் அரசரின் கடமை'. S.B.E., Vol. II, p. 227.
166 Gautama, X, 7: S.B.E., Vol. II, p. 225.
167 Apastamba, Prasna, II, Ch. XI, 1—4.
168 Vasistha, iii, 4, S.B.E., Vol. XIV, p. 17.
169 Vasistha, xvi, 2.

ஒரு கூறாக இருந்தது. தம் பகுதிகளின் அமைதி ஒழுங்கு ஆகியவற்றின் பொறுப்பாக கிராம, நகர அலுவலர்கள் இருந்தனர். அந்த எல்லைகளுக்குள், அதாவது ஒரு நகரைச்சுற்றி ஒருயோசனை அல்லது எட்டுமைல், ஒரு கிராமத்தைச் சுற்றி ஒரு குரோசு அல்லது இரண்டு மைல்களுக்குள் திருடப்பட்டதை இவர்கள் திருப்பிக் கொடுத்துவிடவேண்டும்.[170] தம்முடைய அலுவலர்களுக்குக் கிராமங்களை இவர் மானியமாக அளிக்கலாம். இப்பொழுது கிராமத்தின் தலைவன் அரசரால் நியமிக்கப்பெற்றவன்.[171] நீதி வழங்கும் முறை மிக விரிவடைந்திருந்தது. அரசர் அல்லது நீதிபதி எக் கட்சிக்காரருக்கும் சார்புடையவராக இருக்கக்கூடாது.[172] ஒரு குற்றவாளியின் தகுநிலை, இவனுடைய உடல் வலிமை, குற்றத்தின் தன்மை, குற்றம் அடிக்கடி செய்யப்பட்டதா என்பதையும் கருத்திற்கொண்டு தண்டனை அளிக்க வேண்டும்.[173] சாட்சிகளாலும் சோதனைகளாலும் சர்ச்சைக்குரிய வழக்குகளில் உண்மையை உறுதியாய் அறிவதற்கு மிக்க விரிவானதொரு நடைமுறை இருந்தது. நீதி வழங்கும் முறை 'வேதம், புனித சட்டமூலத் தொகுப்புகள், அங்கம், புராணம் ஆகியவற்றால் கட்டுப்படுத்தப்பெற்றது.'[174] இதே சமயத்தில் தலச்சட்டங்களையும் பழக்கங்களையும் கருத்திற்கொள்ளவேண்டும்.[175] சான்று முரண்படுகிற வழக்குகளில் கற்றறிந்த பிராமணர்களின் கருத்தைச் சரியெனஎடுத்துக்கொள்ளவேண்டும்.[176]

அரசரையே மூலவிசையாகப் பெற்ற அரசியல் அமைப்பின் மீது சமூகம் மேலும் மேலும் நம்பிக்கைவைக்கத் தொடங்கியதை மேலே குறிப்பிட்ட மறு ஆய்விலிருந்து காணலாம். சமூகத்தின் வளர்ந்துகொண்டிருக்கும் வேறுபாடு கண்டறியும் இயற்கையான உடனிகழ்வு இதுவாக இருந்தது. நான்கு சாதிகள், இப்பொழுது சாதிகளுக்கிடையேயான மணங்கள், சமூக சமய விரிசல்கள், பொருளாதாரத் தேவைகள் ஆகியவை போன்ற ஒரு நடைமுறையால் பலவாயின; சமூகங்களின் ஓரின அமைதி அழிவால் அச்சுறுத்தப்பட்டது. இரதகாரர் (Rathakara), க்ஷத்திரி (Ksattri), சூத (Suta), நிசாத (Nisada) போன்ற புதிய அல்லது சாதி உட்பிரிவுகளின்[177] எழுச்சி, சமூகப் பொருத்தப்பாட்டுப் பிரச்சினைகளை உண்டாக்கின;

170 Apastamba, II, 26, 5—8.
171 Jataka, Nos. 534, 537. Cowell, op. cit., Vol. V.
172 Vasistha, Ch. XVI, 3.
173 Gautama, Ch. XII, 51.
174 Gautama, Ch. XI, 1—9.
175 Ibid., 20.
176 Gautama, 25.
177 Baudhayana, I, 17

தொழிலை அடிப்படையாகக்கொண்ட நால்வகைச் சாதி முறையில் குழப்பக் கூறுகளைப் புகுத்தின. புதிய வகுப்பினங்கள் இயற்கையாகவே புதிய தொழிலை மேற்கொண்டன. ஆகையால், இச் சமயத்தில், சமூக விரோதப் போக்குகளைச் சமாளிக்க அரசர் கட்டற்ற அதிகாரம் பெற்ருர். 'நாடுகளின் எல்லாச் சட்டங்களுக்கும், சாதிகளின் உட்பிரிவுகளுக்கும், குடும்பங்களுக்கும் கவனம் செலுத்தியபிறகு நான்கு சாதிகளும் தம் தனிப்பட்ட கடமைகளை நிறைவேற்றும்படி அரசர் செய்யவேண்டுமென்றும், கடமை தவறுகிறவர்களை இவர் தண்டிக்கவேண்டுமென்றும் இதனுல்தான் வசிஷ்டர் கூறுகிருர்.'[178] முன் சுட்டிக்காட்டப்பட்டதுபோல், சமூக, ஒழுக்கத் தவறுகளைக் கண்டுபிடித்துத் தண்டிக்க அரசர் தகுதித்திறன் பெற்றிருந்தார். சுருக்கமாக, அரசத் தனிமுதன்மை நிலையில் அல்லது இறைமையில் சமயத்தின் ஒரு தனிக் கட்டுப்பாட்டோடு சமூக சக்திகள் மெதுவாக இதை உருவாக்கச் செயல்பட்டன. சிலவராட்சிகள் முடியாட்சியால் அடக்கப்பட்டன; நாட்டில் குடியரசு மரபுகள் நற்பெயரை இழந்துகொண்டிருந்தன. இத் தறுவாயில், சமண புத்த சமயங்களின் எழுச்சி சமுதாயத்தின் மேம்பட்டதொரு நிறுவனமாக, முடியாட்சி எழுவதற்கு இதன் பணியை எளிதாக்க உதவிற்று. விலக்கப்பட்ட திருமணங்களால் ஏற்பட்ட புதிய சாதிகள் எப்படி ஏற்கெனவே இருக்கும் சமூக அமைப்பு ஆட்டம் கண்டுவந்துகொண்டிருந்தது என்பதையும், இயற்கையாகவே சரி அமைதி நிலையை அப்படியே வைத்துப் பேண சமூகம் அரசரின் துணையை நாடியது என்பதையும் நாம் இப்பொழுதுதான் பார்த்தோம். புதிய சமயங்களின் குழப்பம் விளைக்கும் இயக்காற்றல்களால் இவ் வழிமுறை மேலும் துரிதப்படுத்தப்பெற்றது. இவைகள் சடங்குகளை நீக்கிவிட்டு, இவைகளின் வெற்றிக்காக அரச ஆதரவை நாட முற்படுகையில், அரசர் இயற்கையாகவே பெருமை பெற்ருர். இதற்குப் பெரிய அரசுகளின் எழுச்சி உதவியது.

## இறைமையின் தன்மை

எனவே, முற்பட்ட நம்முடைய ஆய்விலிருந்து இதற்கு முன் பெற்றிராத அளவில் அரச அதிகாரம் ஓரளவு தகுதித்திறனைப் பெற்றுக்கொண்டிருந்தது என்ற முடிவிற்கு நாம் வருகிருேம். வேதம், புனித சட்ட மூலத்தொகுப்புகள், அங்கங்களும் புராணங்களும்,[179] சிஷ்டர் (நல்ல, ஒழுக்கமுள்ளவர்) களின்[180] செயற்பாங்கும் பொதுச் சட்டத்தின் ஆதாரங்களென அறிவிக்கப்பட்

[178] Vasistha, xix, 7&8. [179] Gautama, Ch. XI, 19.
[180] Baudhayana, I, i, 1, 4—6. Vasistha, i, 5&6.

8

டிருந்தாலும், எனவே, சட்டக் கோட்பாட்டின்படி அரசர் இறைமை பெற்றிருக்க இயலாதிருந்தாலும், நடைமுறைத் தொடர்பில் இந்த ஆதாரங்களின் செல்திறன்பற்றிய இவருடைய தீர்ப்பு என்றும் நிலவியது எனில், 'நாட்டின், சாதிகளின் உட்பிரிவுகளின், குடும்பங்களின் சட்டங்களை எல்லோரின் நலன்களுக்கும் பொருத்த இவர் நுணங்கியாராயவேண்டியிருந்தது'.[181] எனவே, சமூகக் கடமைகளுக்கு இதை ஒத்திருக்க இவர் இப்படிச் செய்தார். இவருடைய தீர்ப்பைப்போல் இவரது அதிகார முத்திரை பெற்ற அவசரச் சட்டங்களும் சட்டத்தின் வகையாக அமைந்தது. வெளியாற்றல்களின் தாக்குதலால், அதாவது, புதிய சமயங்களில் சமூக அமைப்பு, புனிதச் சட்டம் ஆகியவற்றின் அடித்தளங்கள் தகர்க்கப்படுகின்ற காலத்தில், இப் புதிய சமயங்கள் சமுதாயத்தைச் சீரமைக்கவும் புதிய தகவுகளை உருவாக்கவும் முற்பட்டன. புதிய சாதிகளும் சாதி உட்பிரிவுகளும் சமூக விரிசல்களைப் புகுத்தின. சமூக அமைப்பால் இவைகளை ஏற்றுக்கொள்ள இயலாததலால், அரச அதிகாரம் தன் சிறப்பை உயர்த்திக்கொள்ள இதற்குக் கட்டற்ற உரிமையும் தொடக்கத் துணிவும் உறுதியாக அளித்தது; பிராமணர்கள், 'தம் புனிதக் கடமைகளைச் செய்யாமலும் வேதத்தை அறிந்துகொள்ளாமலும்'[182] இருந்தபொழுதும், இரந்து வாழ்ந்தபொழுதும், அரசரால் மட்டுமே இவர்கள் திருத்தப்படவேண்டும். இவருடைய அதிகாரத்தில் சமூகம் இத்தகைய நம்பிக்கை வைத்திருந்ததால், இயற்கையாக சமூகத்தின் எல்லாத் தரங்களிலிருந்தும் அரச அதிகாரம் பெருமளவு பணிதலைப் பெற்றது. ஆனால், அரச அதிகாரத்தை பிராமண சமூகம் மட்டுமே நம்பியிருக்கவில்லை. பிராமணர்களைவிட முரண் சமயத்தினர் அரச அதிகாரத்தைச் சார்ந்திருந்தனர். இவர்களுடைய குறிக்கோளை அரசர் கடைப்பிடிக்க இவர்கள் அரசரிடம் முறையிட்டனர்; இவர்களின் சமயத்தை நிலைநிறுத்த அரசின் பற்றுதல் உதவிற்று. சமயம், பட்டத் தொகுப்புகள் ஆகியவற்றின் கட்டுப்பாடுகள் இருந்தாலும், சமூகத்தில் கணிசமான முறையில் அரசு அல்லது அரசருக்குரிய அதிகாரம் தலையாய நிலைக்கு வளர்ந்துகொண்டிருந்தது, இந்தத் தறுவாயில் குறித்துக்கொள்ளவேண்டிய கருத்து. அரச அதிகாரத்தின் தனிமுதன்மை நிலை ஒரு மண்டலத்தில் நிலவியது. இதுவரை சமயத்திற்கு ஒதுக்கப்பெற்றிருந்த பரப்புகளின்மீது அரச அதிகாரத்தின் வரம்புகள் நீளத் தொடங்கின. அதாவது, சமூகத்தில் ஒரு சட்டம் பெறவேண்டிய சமயத்தின் இசைவாணை இப்பொழுது போதியதாகவில்லை. எனில், முன்னிருந்ததைப்போல் சமூகம்

[181] Vasistha, xi::, 7&8. [182] Vasistha, iii, 4.

இப்பொழுது ஓரினம் சார்ந்ததாக இல்லை. இந்தக் காலத்தின் போது எழுந்த புதிய சாதிகளும், அல்லது சாதி உட்பிரிவுகளும், புதிய சமயங்களும் அரச அதிகாரத்தின் ஆதரவைக் கோரின. வெறும் நிருவாக அதிகாரத்தோடு அரச அதிகாரத்தின் அதுவே யாம் தன்மை விலகிற்று. அதாவது, சட்டங்களின் நிறைவேற்றப் பொறுப்பைப் பெற்றிருந்த அதிகாரம் அரசரால் ஆக்கப்பெற்ற தன்று; சமயத்தால் ஆக்கப்பெற்றதாகும். ஆனால், புதிய சாதி களும், சாதி உட்பிரிவுகளும், புதிய சமயங்களும் தோன்றியதன் காரணமாக, மக்களின் சமூக, அரசியல் கடமைப் பொறுப்புகள் பற்றியவைகளில் அரச அதிகாரம் உசித அதிகாரத்தைச் செயல் படுத்தியது. சமயத்தின் அதிகாரமும் தனி மதிப்பு நிலையும் அரசரின் கைகளுக்குப் படிப்படியாக நழுவியதில் அரச அதிகாரத் தின் வளரும் தனிமுதன்மை நிலை இருக்கிறது. தலையாய அல்லது இறைமை அதிகாரமாக அரச அதிகாரம் வளர்ந்துகொண்டிருந்த தென்ற காரணத்தினால், ஆட்சி இயல் அதிகாரங்களுடன் சமூக நிறுவனங்கள்மீது இது பொதுவாக அதிகாரம் சேர்த்துக் கொண்டிருந்தது.

# 5. சமய, சமூக ஒழுக்கங்களைப் பரப்புபவராக அரசர் (கி.மு. 400-100)

## இக் காலத்தின் இயல்புகள்

பழங்கால இந்திய ஆட்சி அமைப்பு ஒழுங்குமுறை, கடந்த காலத்தில் முடியாட்சி வலிமையடைந்ததையும் படிப்படியாக அதிகாரம் மையங்கொண்டதையும் குறித்துக் காட்டியிருந்தால் கி.மு. நான்காம் நூற்றாண்டிலிருந்து மோரிய குலத்தின் இறுதி வரையான இக் காலத்தில் இன்னும் மேலான பயன்களை மக்கள் அடைந்தனர். இருநூறு ஆண்டிற்கு மேலான இந்திய வரலாற்றில் மிக்க ஒளிவிளக்கமும் புகழும் பெற்ற காலங்களில் இக் காலம் ஒன்றாகும். மகா அலெக்சாந்தரின் படையெடுப்பையும் வரலாற்றுச் சார்புடைய முதல் பேரரசையும் இக் காலத்தில் பதிவுசெய்தது. இந்திய ஆட்சிமுறை வளர்ச்சியைப் பொறுத்தவரை, அரசின் அதிகாரத்தின்மேல் இருந்த ஒரே கட்டுப்பாடும் மறையத் தொடங்கியது. இறைமை நிலைக்கு உயர அரசு முயன்றது. இந்திய ஆட்சியின் நடைமுறைப் பகுதி இது; கோட்பாட்டளவில் அரசுபற்றிய கருத்து மிகத் தெளிவாகவும் புரிந்துகொள்ளும் திறனுள்ளதாகவும் இருந்தது. கோட்பாட்டாளர்களால் இதுவரை புறக்கணிக்கப்பட்ட அரசன் புற இயல்பு, அக இயல்போடு சமமான ஏற்பினைப் பெற்றது. வேறுவிதமாகக் சொன்னால், மற்ற அரசுகளோடு தொடர்பு கொண்டிருப்பதாக அரசு கருதப்பெற்றது. முதல் முறையாக அரசுகளுக்கிடையேயான உறவுகளை அரசியற் கோட்பாட்டாளர்கள் விவாதித்தனர். இவைகளுக்கெல்லாம், வெறும் ஊகித்தலை அல்லது அரைகுறையாக உறுதிப்படுத்தப்பெற்ற உண்மைகளை நாம் நம்பியிராமல் சமகாலத்திய, ஐயப்பாட்டிற்கிடம் இல்லாத சான்றுகளைச் சார்ந்திருக்க வேண்டும்.

## மகத நாட்டின் எழுச்சி

இக் காலத்தின் புகழ் மகத நாட்டைச் சுற்றியிருக்கிறது. வட இந்தியாவில் முடியாட்சி அரசுகளுக்குள் நடந்த தனி

முதன்மை நிலை போராட்டத்தின் விளைவாக மகத நாடு வெற்றி யுடன் வெளிவந்ததைக் கடந்த அதிகாரத்தில் நாம் பார்த்தோம். ஆனால், நாடு முழுவதிலும் தலைமை செலுத்துவதற்குமுன், காசி யையும் கோசலத்தையும் பணியவைத்ததைப்போல் அவந்தி நாட்டையும் பணியச் செய்ய வேண்டியிருந்தது. அங்கம், விதேகம், காசி, கோசலம் ஆகியவற்றை மகதத்தின் முதலிரண்டு அரசர்கள் வென்று கீழ்ப்படுத்தினர். பிம்பிசாரர், அஜாதசத்ரு ஆகிய இருவரும் புத்தருடன் கொண்டிருந்த சொந்தத் தொடர் பால் ஒரு நிலையான புகழைவிட்டுச் சென்றிருக்கின்றனர். இலங் கையைச் சேர்ந்த தொடர் வரலாறுகளின்படி, நாகதசகரோடு[1] பிம்பிசாரரின் குலம் முடிவுற்றது. ஏறத்தாழக் கி.மு. 490-ல் சிசுநாகர் என்பவருக்காக இவர் பதவி நீக்கப்பெற்றார். 'அவந்தி யின் பிரதியோத குலத்தின் பெருமையையும் வலிமையையும் அழித்தது இவருடைய (சிசுநாகருடைய) சிறந்த அருஞ்செயல் களில் ஒன்றாகும்.'[2] சிசுநாகர்களுக்குப்பின் நந்தர்கள் ஆட்சிக்கு வந்தனர்; இவர்களில் ஒருவர் அலெக்சாந்தரின் சமகாலத் தவரும், கி.மு. 322-ல் சந்திரகுப்த மோரியரால் பதவியிலிருந்து விலக்கப்பட்டவருமாவார். புராணங்களாலும் இலங்கையைச் சேர்ந்த தொடர்வரலாறுகளாலும் எடுத்துக்கூறப்பட்ட இம் மூன்று குலங்கள் காலவரிசைப்படி முரண்படுவனவாக இருந் தாலும், இந்தியாவில் மகத நாட்டில் மேதகுநிலை ஏற்பட்டதைப் பொறுத்தவரை நாம் உறுதியான சான்றுகளைப் பெற்றிருக் கிறோம். இம்மூன்று குலங்களின் அருஞ்செயல்களைப் பின்வரும் பேராசிரியர் ராப்சனின் (Prof. Rapson) கூற்று நன்றாக விளக்கு கிறது. 'கிரிவிராஜ அரணில், இதனுடைய பழமையான வன் காப்பிடத்திலிருந்து மகத நாட்டின் ஆட்சித் திறத்தின் வளர்ச் சியைச் சில நிலைகளாக இப்படி வரையலாம். பிம்பிசாரர் அங்கத்தை (வங்காளத்தின் மோங்கிரும் பாகல்பூரும்) வென்று கீழ்ப்படுத்தியதோடு (கி.மு. 500) விரிவாக்கம் தொடர்ந்தது. காசி (பெனாரிஸ்), கோசலம் (அவுத்), விதேகம் (வடபிகார்) ஆகியவற்றின்மீது தனி முதன்மை ஏற்படுத்தியது. ஐந்தாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இவருக்குப்பின் ஆட்சிக்கு வந்த வரும் இவருடைய மகனுமாகிய அஜாதசத்ருவின் பணியாக இருக்கலாம். நந்த அரசர் ஒருவரின் வெற்றியின் பயனாக, கலிங் கம் (ஒரிசா) தற்காலிகமாக இப் பேரரசில் சேர்க்கப்பட்டிருக் கலாம். அலெக்சாந்தரின் அதிகாரத்தை ஒருசில ஆண்டுகள் ஏற்றுக்கொண்டிருந்த வடமேற்குப் பகுதியைக் கைப்பற்றிப்

[1] Raichauduri, op, cit., p. 133, C.A.I., p. 134.

[2] Ibid., p. 134.

பேரரசப் பகுதிகளை விரிவாக்கும் பொறுப்பு சந்திரகுப்தருக்குரியதாகவும், கலிங்கத்தை வென்று அல்லது மறுபடி வென்றிகொள்வது அசோகருக்குரியதாகவும் இருந்தது.[3]

## நந்தர்கள்

பேரரசின் தலைமைப் பதவிக்கு மகதத்தின் இப் படிப்படியான உயர்ச்சி ஒரு குறிப்பிடத்தக்க சாதனையாகும். ஆனால், முன்னர் காட்டியதுபோல், மோரியர்களின் நற்பெயருக்கு மட்டுமே இச் சாதனையை ஒதுக்கமுடியாது. நந்தர்களால் ஆட்சி செய்யப்பெற்று முன்னரே இருந்துவந்த 'பேரரசுப் பகுதிகளை' மேலும் நீடித்தது இவர்களின் பங்காகும். நந்தர்கள் பரவலான ஆட்சிப் பகுதியைப் பெற்றிருந்ததை கிரேக்க ஆசிரியர்கள் உறுதி செய்தனர். சான்றாக, கங்கையாற்றின் கரை நெடுகிலும் அக்ரமிஸ் அல்லது ஜாண்ரமிஸ் பேரரசு பரவியிருந்தது; இது, நந்தகுலத்தின் இறுதியான தனநந்த அகுரசைன்யரைத் தவிர வேறில்லை. பிராசி அல்லது பிராசியரைன்[4] அரசராக இவர் இருந்ததாகத் தெரிகிறது. 20,000 குதிரைப் படையினரையும், 200,000 காலாட்படையினரையும், 200 தேர்களையும், 3,000 யானைகளையும் போர்க்களத்திற்குக் கொண்டுவரமுடியும் உண்மையிலிருந்து இவருடைய வலிமையை அறியலாம்; இச் செய்தி அலெக்சாந்தரின் படைவீரர்களின் ஊக்கத்தைக் கெடுத்தது; எனவே, 'இதற்குமேல் தொடர்ந்து செல்லமுடியாதென்று இவர்கள் திட்டவட்டமாக வலியுறுத்தினர்.'[5]

## மூன்று மோரியர்கள்

ஆனால், வலிமையும் செல்வமும் நிறைந்த இம் முடியரசை ஆண்டவர் விரைவில் சீர்கெடுத்தனர்; ஒன்பது நந்தர்களும் 22 ஆண்டுதான் ஆட்சி செய்ததாகக் கூறப்படுகிறது. ஆகையால்தான், நந்தர்களின் இறுதி நந்தரான தனநந்தரின் படைத் தலைவராக இருந்திருக்கக்கூடிய சந்திரகுப்த மோரியரால் இக் குலம் வீழ்ச்சியடைந்தது. இழிகுலத்து முராவின் மகனாக இவர் இருந்தாலும், பிப்பாலிவன மோரியர் இனத்தைச் சேர்ந்தவராக இருந்தாலும்,[6] இவர் பேரார்வம் படைத்தவராக இருந்தார். 'விஷ்ணுகுப்தர், சாணக்கியர், அல்லது கௌடில்யர் என்ற பிராமணரால் தூண்டப்பட்ட இவர், இவருடைய மேலாளரைக்

[3] C.H.I., p. 315. [4] Ibid., p. 468.

[5] Arrian, V, 25, McCrindle, 'Invasion of India by Alexander,' p. 121.

[6] Digha Nikaya, II, p. 167. Pali Mahavamsa-Turnor—Intro., pp. xxxviii—xlii. கெல்கரின் மொழிபெயர்ப்பில் மோரிய குலத்திற்கு மகாவம்சம் சொந்தமாகும் என்று கூறப்படுகிறது.

கொல்ல முயன்றதாகக் கூறப்படுகிறது.' தோல்வியுற்று ஓடிப் பஞ்சாபில் அலெக்சாந்தரை இவர் சந்தித்தார்.[7] அலெக்சாந்தர் திரும்பிச் சென்ற பிறகுதான் இரண்டாவது தடவையாக நந்தர்களை வீழ்த்த முயன்றார். 'முத்திரா ராட்சசம்' நம்மை நம்பச் செய்வதுபோல் இமயமலை சார்ந்த தலைவராகிய பர்வதகர் என்பவர் இவருக்கு இவ் வீரச்செயல் உதவினாரா? அல்லது டாக்டர் தாமஸ் குறிப்பிடுவதுபோல்,[8] போரஸ் உதவினாரா என்பது நமக்கு முக்கியமில்லை. சந்திரகுப்தர் நந்தரைப் பதவியிலிருந்து நீக்கியதிலும் கொன்றதிலும் வெற்றிபெற்றார் என்பதும் அரியணை ஏறினார் என்பதும் பெரும் விளைவிற்குரியதாகும். ஏனென்றால், பழங்கால இந்தியாவில் அரசின் தோற்றத்திற்கான நம் ஆய்விற்கு மோரியப் பேரரசின் தோற்றம் மிகவும் முக்கியமாகும். கிட்டத்தட்ட கி.மு. 323-ல் இக் குலப்புரட்சி உண்டாக்கப்பட்டதாகத் தோன்றுகிறது. இப் புதிய அரசரின் இயல்பு மீறிய திறமை, இவர் பெற்ற விரைவான, பரந்த வெற்றிகளிலிருந்து மிகத் தெளிவாகத் தெரிகிறது. இருபத்தைந்தாண்டு குறுகிய கால அளவிற்குள் தம்முடைய ஆட்சிப் பகுதிகளுக்குத் திறமையான அரசாங்கம் ஒன்றை அமைத்துக்கொண்டதும் இவரது திறமையை வெளிப்படுத்துகிறது. செல்யூகஸ் நிக்கேட்டர் என்பவரால் கொடுக்கப்பட்ட பலுசிஸ்தானம், கொரசான், இக் காலத்திய ஆப்கானிஸ்தானம், பஞ்சாப் முழுவதுமட்டும் இவர் வென்ற நிலப்பகுதிகளாக இராமல், ப்ளூடார்க் கூறுவதுபோல், இந்தியா முழுவதையும் 600,000 பேர்களைக்கொண்ட ஒரு படையோடு வென்றார்.[9] இவர் 'இந்தியாவைப் பெற்றிருந்தார்' என்பது ஜஸ்தின் கருத்தாகும். இவருடைய பேரரசின் பரப்பைப் பொறுத்தவரை, இந்தக் கூற்றுகள் நம்மை உறுதியற்ற நிலையில் விட்டுவிடுகின்றன. எவ்வாறாயினும், கி.மு. 298-ல் அரியணை ஏறிய இவருடைய மகன் பிந்துசாரருக்கு இவர் விரிவான செழித்தோங்குகிற நாட்டைவிட்டுச் சென்றார் என்பது உறுதி. அமித்ரகாடா[10] அல்லது அமித்ரகாதா என்ற பட்டப் பெயரை இவர் ஏற்றுக்கொண்டிருந்தார். சந்திரகுப்தர் நிறுவிய திறமையான அரசாங்கத்தின் காரணமாக இவருடைய பரந்த பேரரசில் தலப்புரட்சிகள் திரும்பத் தோன்றியதை இவருடைய ஆட்சிக் காலம் கண்டது. தக்கசீலப் புரட்சிபற்றி 'திவ்வியாவதானம்' குறிப்பிடுகிறது. மக்களைச் சாந்தப்படுத்த இங்கு அசோகர் அனுப்பிவைக்கப்பெற்றார். 'ஒழுக்கக்கேடான

[7] Plutarch, Alexander, p. lxii, Justin Watson's edn., p. 142.

[8] C.H.I., p. 471.

[9] Plutarch, op. cit., p. lxii.

[10] Raichaudhuri, op. cit., p. 184. அடிக்குறிப்பு 1.

அமைச்சர்களின் நிந்தை' 'இதற்குக் காரணமாக இருந்ததாகத் தோன்றுகிறது.[11] எவ்வகையிலும், இருபத்தைந்து ஆண்டிற்கு மேலாக பிந்துசாரர் செல்வச் செழிப்போடு ஆட்சி செய்தார். இவர் மரணத்திற்குப்பின், இவருடைய மக்களுக்கிடையில் ஒரு வாரிசுரிமைப் போர் ஏற்பட்டிருக்கவேண்டும்; இதில் அசோகர் வெற்றிபெற்றிருக்க வேண்டும். ஆனால், அவுரங்கசீப் செய்தது போல் இவர் தம் சகோதரர்களை அழிக்கவில்லை என்பது உறுதியாகும். இவருடைய ஆட்சியின் இறுதிக் காலம்வரை இவருடைய சகோதரர், சகோதரிகள் பலர்உயிருடன் இருந்தனரென்பதைஐந்தாம் கல்வெட்டு ஆணையிலிருந்து நாம் அறிகிறோம். இந்தியாவின் பெருமைக்கும் புகழுக்கும் உரிய ஒரு பேரரசை அசோகர் ஆட்சி செய்தார். இவருடைய நாற்பதாண்டு ஆட்சிக் காலம் கலிங்கப் போர் ஒன்றைமட்டுமே பதிவு செய்துள்ளது. இப் போர் மனப் போக்கின் திடீர் எழுச்சிக்குப் பின் இவருடைய வாழ்க்கையிலும் ஆட்சி இயற் கொள்கையிலும் ஒரு தனிப்பட்ட மாற்றம் ஏற்பட்டது. புத்த சமயம் உலக ஏற்பைப் பெற்றபொழுதும், அசோகரிடத்தில் ஏற்பட்ட இம் மாற்றத்தால் குறுகிய சிறப்பு அகன்றபொழுதும்தாம் இந்த மாற்றம் எவ்வளவு சிறப்பானதென்பதை நாம் உணருகிறோம். அசோகரிடத்தில் ஏற்பட்டஇம் மாற்றம், இந்திய வரலாற்றில் ஒரு புதிய திருப்பத்தை உண்டாக்கியது. மக்கள் நலத்திற்கான உண்மையான முயற்சியை இவருடையஅரசாங்கம் குணவிளக்கம் செய்தது. இவருடையஅரசாங்கம் உள்ளுரம்வாய்ந்ததாகவும்,பொறுக்கும் பண்புடையதாகவும், இறுமாப்பு வாய்ந்ததாகவும், கடவுட்பற்று நிறைந்ததாகவும், வல்லட்சியாகவும், நல்லாட்சியாகவும் ஒரே சமயத்தில் இருந்தது. வலிமையிலும் வலிமையற்ற நிலையிலும் இதுதான் அசோகர். பேரரசிற்கு இவருடைய மரணம் பேரழிவாயிற்று. இதில் வசித்த பலதரப்பட்ட இனங்களும் சமயங்களும் இப் பெருமை மிக்க அரசரின் இயல்பு மீறிய கடவுட்பற்றிலும் திறமையிலும்ஒற்றுமைச் சின்னத்தைக்கண்டனர்.இவருடைய இடத்தை வேறெவரும் நிரப்பமுடியவில்லை;மத்திய அரசாங்கத்தின் வலிமையின்மையைப் பயன்படுத்திக்கொண்டு ஆந்திரர்களும் கலிங்கர்களும் சுயேச்சை பெற்றனர்; இரியாவிலும்[12] பாக்டீரியாவிலுமிருந்து வந்த தாக்குதல்கள் வடமேற்குப் பகுதிகளைப் பிரித்தன; பரந்த பேரரசில் எஞ்சியிருந்ததை இவருடைய மைந்தர்கள், பேரர்கள்,அல்லது ஆர்வமிக்க பிரபுக்கள்ஆகியோரிடையில் பங்கு

[11] Divyavadana, edited by Cowell & Neil, p. 371.

[12] & [13] சிரியாவின் மன்னர் மகா ஆண்டியோக்கஸ் காபூலைத் தாக்கினர். பாக்டிரியாவின் அரசராகிய டிமெட்ரியஸ் காபூலை வென்று எல்லைப்புற அரசர்களைத் தோற்றுவித்தார்.

போட்டுக்கொண்டனர். கி.மு. 500-லிருந்து பல அரசத் தலை முறைகளை உருவாக்கிய பெரும் பேரரசு இவ்வாறு வீழ்ச்சியுற்றது.

## தகவல் சான்றுகள்

மோரிய அரசாங்க விவரம்பற்றிய நம்முடைய தகவலுக்கு கிரேக்கக் குறிப்புரைகளும், கௌடில்யரின் அர்த்தசாஸ்திரமும், அசோகரின் பேரரசுக் கட்டளைகளும் முதன்மையான சான்று களாக இருக்கும். மோரியர் காலத்திற்குப்பின் கௌடில்யரின் அர்த்தசாஸ்திரம்இயற்றப்பெற்றிருந்தாலும்,மோரியர்காலத்தில் இருந்த நிலைமைகளை உறுதியாக அடிப்படையாகக் கொண்டு தான் இதன் முடிவுகள் இருந்திருக்கவேண்டும். இக் காலம் பற்றிய மிக நம்பத்தக்க சான்றை அசோகரின் பேரரசு ஆணை கள் அளிக்கின்றன. கிரேக்க எழுத்தாளர்களின் பொருட்செறிவு வாய்ந்த ஆய்வுகளைக்கொண்ட எத்தகைய தகவற் சுரங்கமென் பதையும், நாட்டின் அரசாங்கம்பற்றிய தகவலை எந்த அளவிற்கு ஒளிவிளக்கம் செய்கின்றனர் என்பதையும் உணரவில்லையென் றாலும், இவர்கள் நம்பத்தக்கவர்களே. கடந்த அதிகாரத்தில் வரையப்பட்ட இந்திய ஆட்சி முறையின் முந்திய வளர்ச்சியின் துணைகொண்டு இவையெல்லாம் என்ன சொல்லுகின்றனவென் பதை ஆராயவேண்டும்.

புதிய சாதிகளின் (வருணசங்கரா) எழுச்சியின் காரணமாக சமூக முறையில் அமைதி குலைக்கும் கூறுகளின் விளைவாகவும், சடங்குமுறைக்கும் ஏற்றுக்கொள்ளப்பட்ட சமயக் கொள்கைக் கும் எதிராகப் போராட்டம் தொடங்கிய புதிய சமயங்களின் எழுச்சியின் விளைவாகவும் சமூகம் இதனுடைய சரிஅமைதி நிலையைப் பேணுவதற்காக மேன்மேலும் அரசருக்குரிய அதிகா ரத்தைச் சார்ந்திருக்க வேண்டியிருந்ததென்று கடந்த அதிகா ரத்தில் நாம் முடிவுசெய்தோம். சமூகத்தில் ஒழுக்க நலன், பொருள் நலன் ஆகியவற்றிற்கு அரசர் காவலரானார். பெரிய அரசுகளின் எழுச்சி நிலைபெற்ற நிகழ்வானபொழுதும், இத னுடன் அரசரின் செல்வமூலங்கள், அதிகாரம் ஆகியவற்றை இப் பெரிய அரசுகள் இவற்றுடன் கொண்டுவந்தபொழுதும் அரச அதிகாரத்தின்மீதான இத்தகைய சார்பின் இயல்பான விளைவு, இதற்குமுன் அறியாத தகுதித்திறனின் அளவை அரச அதிகாரம் எட்டியதாகும். ஆகையால், தரும சாத்திரங்களின் ஆசிரியர்கள் வகுத்துரைத்ததுபோல், அரசர் சமூக, ஒழுக்கக் குற்றங்களை அறிந்து இவைகளுக்குப் பரிகாரம் செய்கிறார்.

அசோகரிடத்தில் நாம் காணும் அரசரின் மனப்பான்மை மட்டுமே அரசருக்குரிய அதிகாரத்தின் இத்தகைய வளர்ச்சியை

விரிவுபடுத்தும். பரந்த பேரரசின் எதிர்க்கொண்ணு ஏகாதிபதியாகவும், சமயத்தின் தலைவராகவும், சமூகப் போக்கு, ஒழுக்க நெறி ஆகியவற்றின் இயக்குநராகவும், மக்கள் நலனின் தனித்த, தம்மைத் தாமே நியமித்துக்கொண்ட காவலராகவும் இவர் தம்மை ஆக்கிக்கொண்டார். அரச அதிகாரத்தில் இதற்குமுன் கண்டிராத இவ் வளர்ச்சி எந்த ஐயப்பாட்டையும் எழுப்பினுல், கடந்த சிறிது காலமாகச் சமூகத்தில் எழுந்த பிரச்சினைகளை நாம் கூர்ந்தாராயவும் பின்னேக்கிப் பார்க்கவும் வேண்டியதுதான். சான்ருக, நாட்டில் போட்டியிடும் சமயங்களுக்கிடையில் யார் சமநிலை பேணுவது? உபநிடதங்களைக் கற்பிக்கின்றவர்களை, பின் பற்றுகின்றவர்களைப்போல் தாராள இறைநிலை இணைவுப் பான்மையைத் தம் சமயமாகக்கொண்டவர்களின் கோரிக்கைகளை, சடங்குவெறி சார்ந்த சிந்திக்காத மக்கள் கூட்டத்தைப்போல் பழமைப் பண்பு நெறியைப் பற்றிக்கொள்பவர்களின் கோரிக்கைகளோடு எப்படிப் பொருத்துவது? சான்ருக, சிரமணர்களுக்கும் பிராமணர்களுக்கும் கொடுக்கப்படவேண்டிய நடத்துமுறை என்னவாக இருக்கவேண்டும்? இறுதியாக, புதிதாக எழுந்த சூதர்கள், உக்ரர்கள், அம்பஸ்தர்கள், பர்ஸ்வர்கள் ஆகியோரைப் போன்ற பிரிவுகள் அல்லது சாதிகள் நால்வகை சமூகஅமைப்பில் எப்படிச் சேர்த்துக்கொள்ளப்பட வேண்டும்? மிகச் சிக்கலான இப் பிரச்சினைகள் சமூக அடித்தளங்களை ஆட்டங்காட்டிவிட்டன. இத்தகைய நிலை எப்படிக் கொண்டுவரப்பட்டிருக்கும் என்பதை, குடும்ப வாழ்க்கை, ஒழுக்கங்கள்பற்றிய மெகஸ்தனிஸின் குறிப்புகளால் ஓரளவு விளக்கலாம். 'இவர்கள் பல பெண்களை மணக்கின்றனர். ஒரு சோடி மாட்டைக் கொடுத்து இதற்குப் பதிலாகப் பெற்ருேர்களிடமிருந்து பெண்களை வாங்குகின்றன' ரென்று இவர் சொல்லுகிருர். விருப்புடன் உதவுவர் என்ற நோக்கத்தில் சிலரையும், மற்றவர்களை இன்பத்திற்காகவும், வீடுகளைக் குழந்தைகளால் நிறைப்பதற்காகவும் இவர்கள் மணக்கின்றனர். கற்புடன் இருக்கும்படி கட்டாயப்படுத்தவில்லையென்ருல், மனைவிகள் தம்மைப் பரத்தையாக்கிக்கொள்ளுகின்றனர்'[14] என்று கூறுகிருர். குடும்ப ஒழுக்கங்களில் இவ்வுறுதியற்ற தன்மை எண்ணற்ற புதிய சாதிகளைப் பெருக்கியிருக்கலாம்.

ஆனுல், இது காட்சித் தொகுதியில் ஒரு பகுதியேயாம். இதில் எஞ்சியதை அசோகரின் ஆணைகளில் நாம் காணலாம். மற்றவர்களின் சமயங்கள்பற்றி மக்கள் அன்பிணக்கமின்றிப் பேசினர். பிராமணர், சிரமணர், இவர்களில் முதியோர், ஆசிரி

[14] McCrindle, 'Megasthanes and Arrian' (1926), p. 69.

யர்கள், சுற்றத்தார் ஆகியவர்களை இணக்கநயப் பண்பின்றி நடத்தினர். எது எப்படியானாலும், சமூக அமைப்பிலுள்ள குலைவுச் சக்திகளும் சமூக ஒழுக்கநெறியிலுள்ள வளரும்செறிவற்ற தன்மையும் ஒதுக்கிடத்தில் வாழ்கின்ற அறிஞர்கள், புனிதர்கள், சிந்தனையாளர்கள் ஆகியோரின் கூர்மதியைத் திணற அடித்தன. அரச அதிகாரத்தின் நெருக்கத்தால் எல்லா முரண்படு கூறுகளையும் கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டுவந்து நேர்படுத்தலாமென்றும், அரசாங்க அதிகாரத்தால் சமூக விரோத சக்திகளை அகற்றிவிடலாமென்றும் இவர்கள் நினைத்திருக்கலாம். சமயத் துறையில், பொருதுகின்ற சமயங்களுக்கெதிராக ஆதிக்கம் பெறும் ஒரு வழியாக புத்த சமயமும் வைணவ சமயமும் அரச ஆதரவை நாடி ஊடாடி வழிகாட்டின. எல்லாச் சமூக, சமய சக்திகளும் இப்பொழுது சேர்ந்துகொண்டு மற்றெல்லாவற்றிற்கும் மேலாக அரசரை உயர்த்தின; அரசர் ஆளும் அரசை, ராஷ்டிரத்தை நடைமுறையில் இறைமையான நிறுவனமாக உயர்த்த இப்பொழுது சேர்ந்துகொண்டன. இக் கருத்துக்களை மனத்தில் கொண்டு மோரியப் பேரரசுபற்றிய கிரேக்கர்களின் விவரக் குறிப்பை நாம் இப்பொழுது ஆராயத் தொடங்கலாம்.

## அரசபதவி, பாசறை வாழ்க்கை, சமூகப் பழக்கங்கள் பற்றி மெகஸ்தனிஸ்

மெகஸ்தனிஸின் கருத்தறிவிப்பைத் தெரிவித்து, 'இந்தியர்கள் எல்லோரும் சிறப்பாகப் பாசறையில் வசிக்கும்பொழுது செட்டாக வசிக்கின்றனர். ஒழுங்கில்லாப் பெரும் போக்கை இவர்கள் வெறுக்கின்றனர். இதன் விளைவாக நல்லொழுங்கை இவர்கள் கடைப்பிடிக்கின்றனர். சந்திரகோட்டசின் பாசறையில் தங்கியிருந்த 400,000 பேர்கள், எந்த ஒரு நாளிலும் அறிவிக்கப்பட்ட திருட்டுகள் இருநூறு டிராக்மாக்களின் மதிப்பிற்குமேல் செல்லவில்லை என்பதைக் கண்டனர்; இதுவும் எழுதப்பெறாத சட்டங்களைப் பெற்றிருந்த எழுத்தறிவில்லாத மக்கள், வாழ்க்கையில் எல்லாச் செயல்வினைகளிலும் இவர்கள் நினைவை நம்பியிருந்தனர் என்று மெகஸ்தனிஸ் கூறுகிறார். இவர்களின் சட்டம், ஒப்பந்தங்கள் ஆகியவைகளின் எளிமையை இவர்கள் நீதிமன்றத்திற்கு (சட்டத்திற்கு)ச் செல்லாமை மெய்ப்பிக்கிறது'[15] என்று ஸ்டிராபோ கூறுகிறார். அரசுக் கால்வழிபற்றிக் கூறும்பொழுது, 'தந்தைக்குப்பின் மைந்தர்கள் அரசுரிமை பெறுகின்றனர். பகற்பொழுதில் அரசர் தூங்கமாட்டார். இவருக்கெதிரான சதிகளை முறியடிக்க இரவில் இவர் மணிக்கு மணி படுக்கையை மாற்ற

[15] McCrindle, 'Megasthenes and Arrian,' (1926), p. 68.

வேண்டியிருக்கும். போர்க்காலத்தில்மட்டுமன்றி வழக்குகள் விசாரிக்கும்பொழுதும் அரசர் தம் அரண்மனையைவிட்டு வெளியேறுகிறார். தம் தேவைகளைக் கவனிக்கும் நேரம் வரும்பொழுது கூட, செயல்வினை தடைப்பட அனுமதிக்காமல் இவர் நீதிமன்றத்தில் தங்கியிருக்கிறார்...அரண்மனையைவிட்டு வெளியேறும் மற்றொரு நோக்கம் திருப்படையல் அளிக்க, மூன்றாவது நோக்கம் வேட்டைக்குச் செல்லுதலாகும்'...[16] என்று கூறினார்.

அரசபதவியின் தன்மை, பாசறையில் ஒழுக்கம், மக்களின் பொதுவான நேர்மை ஆகியவைபற்றி இந் நூற் பகுதிகள் நமக்கு ஒரு தெளிவற்ற காட்சியை அளிக்கின்றன. மக்களின் சட்டம் சுமிருதிகளைக் கொண்டிருந்ததென்பது தெளிவு. சட்ட ஆய்வுகளில் தனிச்சிறப்புப் பயிற்சிபெற்ற வகுப்பினர் பிராமணர்களாக இருக்கலாம். இவர்கள் நீதிகளாகவும் செயலாற்றினர். அவையினரையும் மதிப்பீட்டாளரையும் கொண்ட மெகஸ்தனிஸின் ஏழாவது சாதிக்கொப்பாக இந்த வகுப்புமிருக்கிறது. 'இது மிகச் சிறிய வகுப்பு. ஆனால், இதன் உறுப்பினர்கள் உயர்ந்த குணம், மெய்யறிவு காரணமாக மிக்க மதிக்கப்பட்டனர். ஏனெனில், இவர்களிலிருந்துதான் அரசரின் ஆலோசகர்களும், அரசின் பொருளாளர்களும், வழக்குகளைத் தீர்த்துவைக்கும் நடுவர்களும் எடுக்கப்பட்டனர். படைத்தலைவர்களும் தலைமைக் குற்றவியல் நடுவர்களும் வழக்கமாக இந்த வகுப்பைச் சேர்ந்தவர்களாக இருந்தனர்'[17] என்று கூறுகிறார். இவர்களின் உதவியோடு மிகச் சிறப்பான கடமைகளில் ஒன்றாகிய 'வழக்குகளில் தீர்ப்பளிக்கும்' கடமையை அரசர் நிறைவேற்றினார். குறிப்பாக சந்திரகுப்தரைப் பொறுத்தவரை, இயலதேவைகள் இதில் தலையிட அனுமதிக்கப்படவில்லை. குறைந்தது சிறிது காலத்திற்குச் சந்திரகுப்தர் பிராமண சமயம் சார்ந்த இந்துவாக இருந்தார். இல்லையெனில், 'வேள்விபற்றி' இவ்வளவு அக்கறையுடன் இருந்திருக்க முடியாது. இவருடைய முதன்மையான பொழுதுபோக்குகளில் வேட்டையாடுதல் ஒன்றாகும். சதிக் கொலைபற்றிய இடையறாத அச்சத்தில் இவர் வசித்தார் என்பதும், 'இவருடைய உயிருக்கெதிரான சதிகளைத் தோல்வியுறச் செய்வதற்கு இரவில் படுக்கையையும் படுக்கையறையையும் மாற்றினாரென்பதும் சந்திரகுப்தருக்கு உண்மையாவதுபோல் வேறெந்த அரசருக்கும் பொருந்தும். அரசபதவி மரபுவழிக்குரியதாகும். ஆனால், முந்து பிறப்புநிலைச் சட்டமெதுவும் இல்லை. கொலையால் அரச அதிகாரத்தைக் கவர்தல் இயல்பான செயலாக இருந்தது. இதற்குச் சமூக, ஒழுக்க இழுக்குக் கிடையாது. இல்லையெனின்,

[16] Ibid., p. 70. [17] Ibid., p. 41.

'குடிபோதையில் இருக்கும் அரசரைக் கொல்லும் ஒரு பெண், இவருக்குப்பின் வரும் அரசரின் மனைவியாக இயலாது.'[18] இத்தகைய நிலையின் இயல்பான விளைவு, இவரைச் சுற்றியிருக்கும் அமைச்சர்கள், அலுவலர்கள் ஆகியோரின் செயற்பாடுகள்பற்றியும், இவரிடமிருந்து தொலைவில் மாநிலங்களில் உள்ள அரச குடும்பத்தின் இளவரசர்கள், மெய்யாக இவருடைய நாட்டில் ஒவ்வொருவர்பற்றியும் எப்பொழுதும் விழிப்புடனும் கவனமாகவும் இவர் இருக்கவேண்டும். சுருக்கமாக, ஒவ்வொன்றையும் கவனிப்பவராகவும், ஒவ்வொருவரையும் அறிந்துகொள்பவராகவும், தம் நடத்தையால் மக்களுக்கு ஓர் எடுத்துக்காட்டாகவும் இவர் இருக்கவேண்டியிருந்தது. இதற்காக ஒரு விசையாற்றலுடைய ஓர் இரகசிய சேவையை இவர் நிறுவவேண்டியிருந்தது. இதன் வலிமையோ வலிமையின்மையோ இவருடைய வாழ்க்கையையும் முடியரசையும் முக்கியமாகப் பாதித்தது. இவரது அரசாங்கத்தின் செயற்பாடுகளில் முந்துதிறத்தையும் இயக்கத்தையும் மேற்கொள்ளுதலைப்போலவே, தம்முடைய நாட்டின் ஒவ்வொரு பாகத்திலும் உள்ளவர்களோடு இவருடைய அரசாங்கம் மிக்க விழிப்புடையதாகவும் எங்கும் நிறைந்ததாகவும் இருப்பதும் இவருக்குப் பெரிய பாதுகாப்பாகும். இவருடைய பாதுகாப்பில் சமூக அமைப்பின் பாதுகாப்பு சார்ந்திருந்தது. எனவே, இது ஒரு நச்சு வளையமாக இருந்தது. இதை ஒளிவு மறைவின்றி ஏற்றுக்கொள்ளுதல் இவருடைய அரசாங்கத்தை உயர்திறமை நிலைக்கு உயர்த்த அரசருக்கு இது உதவியது. பின்னும் கிரேக்க எழுத்தாளர்களின் சான்றால் இந்த முடிவுகள் ஏற்றுக்கொள்ளப்படும்.

## அரசரின் அரசாங்கம்

அரசாங்கத்தின் உருவையும் செயலையும் மெகஸ்தனீஸ் இதை மூன்று பகுதிகளாகப் பிரிக்கிறார். இது ஒவ்வொன்றும் ஒதுக்கி வழங்கப்பெற்ற கடமைகளை அலுவலர் தொகுதி ஒன்று செய்து முடித்தது. 'அரசின் பெரிய அலுவலர்களில் சிலர் சந்தைப் பொறுப்பையும், மற்றவர்கள் நகரப் பொறுப்பையும், மற்றவர்கள் படையினர் பொறுப்பையும் பெற்றிருந்தனர். எகிப்தில் செய்ததைப்போல் சிலர் ஆறுகளை மேற்பார்வை செய்தனர்; நிலத்தை அளவீடு செய்தனர்; தாய் வாய்க்காலிலிருந்து மதகுகள் வழியாகத் தண்ணீர் விட்டதைப் பார்வையிட்டனர்; ஒவ்வொருவரும் சமமாகத் தண்ணீர் பெறவேண்டுமென்று இவ்வாறு செய்யப்பட்டது. இதே அலுவலர்கள் வேட்டை

[18] Ibid., p. 70.

யாளர் பொறுப்பையும் பெற்றிருந்தனர். இவர்களின் தகுதித் திறனுக்கேற்றவாறு தண்டிக்க அல்லது வெகுமானம் அளிக்க இவர் அதிகாரப் பொறுப்பு பெற்றிருந்தனர். இவர்கள் வரிகளை வசூலிக்கின்றனர். தொடர்புடைய தொழில்களை மேற்பார்வை யிடுவதோடு, விறகு வெட்டிகள், தச்சர்கள், கொல்லர்கள், சுரங் கத் தொழிலாளர்கள் ஆகியோரின் தொழில்களையும் மேற்பார்வை யிடுகின்றனர். இவர்கள் சாலை அமைக்கின்றனர்; ஒவ்வொரு பத்து ஸ்டேடியாவிலும் ஒரு தூண் நட்டுக் கிளைவழிகளையும் தூரங்களையும் காட்டினர்.'[19]

## (அ) நாடு

நாட்டுப் பொறுப்பைப் பெற்றிருந்த அலுவலர்கள் நீர்ப் பாசனத்தைக் கவனித்துக்கொண்டனர்; படகுப் பயணத்தைக் கட்டுப்படுத்தினர்; காடுகளைப் பேணி, மக்களுக்குத் தொல்லை கொடுத்த விலங்குகளைக் கொல்ல வேட்டைக்காரர்களுக்கு ஊக்க மளித்தனர். நிலத்தை அளந்து மதிப்பிட்டு வரிகளை வசூலித் தனர்; பல்வேறு கலைகளையும் கைவினைத் தொழில்களையும் ஊக்குவித்தனர்; பொதுப் பயன்பாட்டிற்கான பணிகளை, அதாவது, சாலைகளை அமைத்துப் பேணினர். நாட்டுப் பொறுப் பைப் பெற்றிருந்த இந்த அலுவலர்கள், அரசாங்க அலுவலர் களின் ஒருவகையாக அமைந்தனர்; இவர்கள் நகரப் பொறுப் பில் இருந்தவர்களுக்கும் மாறுபட்டவர்கள்; நகரை அல்லது மாநகரையும் நாட்டையும் சேர்ந்தவர்களாக மக்கள்தொகை யிலும் அரசாங்கத்திலும் பரவலான பிரிவு இருந்ததாகத் தோன்றுகிறது. நாம் அறிந்திருப்பதைப்போல், 'உழவர்கள், தம் மனைவிமக்களோடு நாட்டில் வசித்தனர்; நகருக்குச் செல் வதை முற்றிலும் தவிர்த்தனர்;'[20] இந்திய மக்களில் இரண் டாம் வகுப்பைச் சேர்ந்த இவர்கள் மக்கள்தொகையில் பெரும் பகுதியினராவர்;[21] நகரின் அமளிகளில் பங்குகொள்ள அல்லது வேறு எந்த நோக்கத்திலும் இவர்கள் நகரங்களுக்குச் செல்வ தில்லை'[22] என்று மறுபடியும் கூறப்பட்டது. போரின் காரணமாக இம் மக்களை எல்லாத் தொல்லைகளிலிருந்தும் அழிபாடுகளிலிருந் தும் காத்தல், இந்தியாவில் எல்லா அரசுகளுக்கிடையேயான உறவுகளிலும் பெரிதும் ஏற்றுக்கொள்ளப்பெற்ற கருத்தாகவும், அரசரின் புனிதமான கடமையாகவும் கருதப்பெற்றது; ஏனெனில், இந்த வகுப்பைச் சேர்ந்தவர்கள் கொடையாளர்க

[19] McCrindle, 'Megasthenes and Arrian,' p. 86.

[20] Ibid., p. 39. [21] Ibid., p. 83. [22] Ibid., p. 84.

ளாகக் கருதப்பெற்றனர். கிரேக்கர்கள் மெய்யாகவே நாடு எனக் கருதியதைத் தவறாகச் சந்தை என்று எழுதிவிட்டனர்.

இது நீங்கலாக வருவாய் திரட்டுதல், தனியார் சொத்துடைமை ஆகியவைகளைப் பொறுத்தவரை நகருக்கும் நாட்டுப் புறப் பகுதிக்கும் சில வேறுபாடுகள் செய்யப்பட்டன. அரசருக்கு உழவர்கள் நிலத்தைத் தீர்வை அளித்தனர். ஏனெனில், நாடு முழுவதும் அரசருக்குச் சொந்தமென்றும், தனியார் நில உடைமை பெற அனுமதிக்கப்படமாட்டாரென்றும் நாம் அறிகிறோம். இந் நிலவரியோடு, நிலத்தின் விளைபலனில் நான்கில் ஒரு பங்கை இவர்கள் அரச கருவூலத்திற்குச் செலுத்தினர்.[23] நகரம் நடத்தப்பட்ட விதம் முற்றிலும் மாறுபட்டிருந்தது. ஏனெனில், இங்கு கைவினைஞரும் தொழிலாளரும் வசித்தனர். வெளிநாட்டினர் அடிக்கடி வந்துபோய்க்கொண்டிருந்த தொழில் வணிகக் கேந்திரமாக இது இருந்தது. ஆகையால், நகர்ப் பிரச்சினைகள் மாறுபட்டவை. நகரங்களில் வணிகக் கூட்டு நிறுவனங்களும் தொழிற் சங்கங்களும் இருந்தன. நகரையும் நாட்டையும் கவனித்துக்கொள்ள வெவ்வேறு வகுப்பு அலுவலர் இருந்திருக்க வேண்டுமென்பதில் வியப்பில்லை.

ஆனால், பல்வேறு வகைப்பட்ட அரசாங்கச் செயல்களை ஓர் அலுவலர் பெருங்கூட்டம் நிறைவேற்றியது; இவர்களின் பதவிப் பெயர்களை உறுதியாய் அறிதல் கடினமே; ஆனால், இது கூட அரசாங்கத்தின் மூன்று வகையான செயற்கடமைகளில் ஒன்றாகத்தான் அமைகிறது. இதுவரை கருதியதுபோல், பாடலி புத்திரத்தைப்பற்றியட்டும் குறிப்பாக அன்றி, பேரரசில் நகரப் பொறுப்புடைய அரச அலுவலர் அடுத்து வருகின்றனர். இந் நகர்களின் வேறுபாடு கண்டறியும் இயல்பு, நகராட்சி நிலவியதே யாகும். 'பல தலைமுறைகள் வந்துபோனபின், இறைமை அழிக்கப்பட்டு, நகரங்களில் மக்களாட்சி அரசாங்கங்கள் அமைக்கப்பெற்றன[24] என்று திரும்பத்திரும்பக் குறிப்பிட்டது.' 'பல ஆண்டுகளுக்குப்பின், மக்களாட்சிமுறை அரசாங்கத்தைப் பல நகர்கள் ஏற்றுக்கொண்டன.'[25] ஜெய்சுவால் நினைப்பதுபோல் இவை நகர அரசுகளைக் குறிப்பிடவில்லை.[26]

மெய்யாக, சுயேச்சையான நகர அரசுகள் எதுவும் இருந்திருக்கமுடியாது; நாம் முன்கண்டதுபோல், சந்திரகுப்தர் ஆறு நூறாயிரம் பேர்களுடன் தாக்கி இந்தியா முழுவதையும்

[23] Ibid., p. 29—40. [24] Ibid., Strabo, p. 36. [25] Ibid., p. 37.
[26] Jaiswal, 'Hindu Polity,' Pt. I, p. 84.

வென்றுகீழ்ப்படுத்தினர் என்று ப்ளூடார்க்கு வலியுறுத்துகிறார்.[27] பல தலைவர்களைப்போல், கூட்டாண்மை இருப்பின் காரணமாக நகரங்களும் பரவலான அளவு சுயேச்சையைத் தக்கவைத்துக் கொண்டிருந்தன. பழங்கால இந்தியாவில் வழக்கமாக இருந்ததுபோல், மத்திய நிறுவனம் இவைகளின் தன்னுரிமையைக் குறைக்கவுமில்லை; குழப்பவுமில்லை. கூட்டாண்மை நிறுவனங்களின் தன்னாட்சி என்ற அளவில் இவைகளின் சட்டங்களை அரசர் மதித்தார் என்பதைக் கடந்த அதிகாரத்தில் குறிப்பிட்டோம். ஆகவே, மோரியப் பேரரசில் தனிப்பட்ட ஓர் ஆட்சிப் பிரிவு நகரங்களோடு தொடர்புடையதாக இருந்ததென்று தோன்றுகிறது; நகரங்களின் கூட்டாண்மையும் நகரவை அரசாங்கமும் நகரங்களை வேறுபடுத்திக் காட்டின.

## (ஆ) மாநகர்

'நகராட்சிப் பொறுப்பைப் பெற்றிருந்தவர்கள் ஐவர்களைக் கொண்ட ஆறு நிறுவனங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தனரென்று' நாம் அறிகிறோம். தொழிற் கலைகளுக்குத் தொடர்புடையவைகள் எல்லாவற்றையும் முதல் நிறுவன உறுப்பினர் பார்த்துக் கொண்டனர். வெளிநாட்டவரின் விருந்தோம்பலை இரண்டாவதன் உறுப்பினர் ஏற்றுக்கொண்டனர். இவர்களுக்கு இவர்கள் தங்குமிடமளித்தனர். இவர்களுக்கு உதவியாளர்களாகக் கொடுக்கப்பட்டவர்களின் வழியாக இவர்களின் வாழ்க்கை முறையைக் கண்காணித்தனர். இவர்கள் நாட்டைவிட்டுச் செல்லும்பொழுது இவர்களுக்கு இவர்கள் வழித்துணையாகச் செல்லுகிறார்கள். இவர்கள் (வெளிநாட்டினர்) இறக்க நேர்ந்தால், இவர்களுடைய உடைமைகளை இவர்களின் உறவினர்களுக்கு அனுப்பிவைக்கின்றனர். இவர்கள் நோய்வாய்ப்படும் பொழுது கவனித்துக்கொள்ளுகின்றனர். இறந்தால் இவர்களைப் புதைக்கின்றனர். மூன்றாவது நிறுவனத்தினர் எப்பொழுது, எப்படி இறப்பும் பிறப்பும் ஏற்படுகிறதென்பதை விசாரிக்கின்றனர். இது வரிவிதிப்பதற்காக மட்டுமன்றி, உயர்ந்தோர், தாழ்ந்தோர்களுக்குள் ஏற்படும் பிறப்பும் இறப்பும் அரசாங்கத்தின் கவனத்திலிருந்து தப்பிவிடலாம் என்பதற்காகவும் இவ் விசாரணை செய்யப்பட்டது.[28] நான்காம் வகுப்பு வணிகம், வியாபாரம் ஆகியவற்றை மேற்பார்வையிடுகிறது. இதனுடைய உறுப்பினர் எடைகள், அளவைகள் ஆகியவற்றிற்குப் பொறுப்பு

[27] Plutarch, 'Alexander,' p. 62.

[28] மக்கள்தொகைக் கணிப்பை இவர்கள் முறையாகப் பெற்றிருந்தனரென்று டாக்டர் பார்னெட் குறிப்பிடுகிறார். மக்களின் கண்மூடிப் பழக்கங்களுக்கெதிராக இதனை நிறுவியது அரசரைப் பொறுத்தவரை ஒரு துணிவான முயற்சியாகும்.

உடையவர்கள். பொது அறிவிப்பால் பண்டங்கள் விற்கப் படுவதை இதன் உறுப்பினர் கவனிக்கின்றனர். ஒருவர் இரட்டைவரி செலுத்தாதவரை எந்த ஒருவகைப் பொருளுக்கு மேல் இவர் வியாபாரம் செய்யமுடியாது. ஐந்தாம் வகுப்பினர் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை மேற்பார்வையிடுகின் றனர். பொது அறிவிப்பால் இவர்கள் பொருள்களை விற்கின் றனர். புதியவை தனியாகவும் பழையவை தனியாகவும் விற்கப் படுகின்றன. இரண்டையும் கலப்பதற்கு ஒரு தண்ட வரியுண்டு. இறுதி வகுப்பாகிய ஆறுவது, விற்ற பண்டங்களின் விலையில் பத்தில் ஒரு பங்கை வசூலிப்பவர்களைக் கொண்டதாகும். இந்த வரியைச் செலுத்துவதில் மோசடிக்கு மரண தண்டனை விதிக்கப் பெற்றது. இவர்களின் திரள் கூட்டுத் தன்மையில், இவர்களின் தனித்துறைப் பொறுப்பையும், பொதுக் கட்டடங்களைத் தக்க நிலையில் பேணல், விலையை ஒழுங்குபடுத்துதல், சந்தைகள், துறை முகங்கள், கோயில்கள் ஆகியவற்றின் பாதுகாப்பு போன்ற பொதுநலத்தைப் பாதிக்கின்றவைகளைக் கவனித்துக்கொள்ளும் பொறுப்பையும் பெற்றிருந்தனர்'.[29] நகர ஆட்சியின் இந்த விவரமும், ஆட்சி இயல் கழகங்களின் கடமைகளும் நம்முடைய முந்திய முடிவுகளை உறுதிசெய்கின்றன. நகரத்தின் அரசாங்கம் உள்நாட்டுத் தொழில் கட்டுப்பாடு, வெளிநாட்டு வணிகம், ஆக்க மும் நுகர்வும் ஆகியவைகளோடு அதாவது சுருக்கமாக மக்களின் பொருளாதார வாழ்க்கையோடு முதன்மையாகத் தொடர் புடையதாக இருப்பது குறிப்பிடத்தக்கதாகும். இவைகளைத் தவிர, வணிக நோக்கத்திற்காக வந்த வெளிநாட்டவர்களைப் பார்த்துக்கொள்வதோடு மற்றச் செயற்பாடுகள் இருந்தன. இவர்கள் பொதுக் கட்டடங்களையும் மேற்பார்வையிட்டனர். நாட்டின் வருவாய்களிலிருந்து நகர வருவாய் வளங்கள் மாறு பட்டவை என்பது வெளிப்படையாகும். 'விற்ற பொருள்களின் விலையில் பத்தில் ஒரு பங்கும்,' இறப்பு, பிறப்பு மீதான கட்ட ணங்கள் அதாவது மரபுரிமை வரியும் இதில் அடங்கி இருந்தன.[30]

## (இ) படை

ஆட்சி நிறுவனப் பொறுப்புடைய படை இறுதியில் வரு கிறது. இதுவும் 'ஐந்து உறுப்பினரைக்கொண்ட ஆறு பிரிவுகளைக் கொண்டிருந்தது. கப்பற்படையின் தலைவருடன் ஒத்துழைக்க ஒரு பிரிவு அமர்த்தப்பட்டது. மற்றொன்று மாட்டுத் தீவனங் களையும் படைவீரர்களுக்கு உணவையும், போர்த் தளவாடங்களை யும், மற்றும் படைக்குத் தேவையான பொருள்களையும் ஏற்றிச்

[29] McCrindle, Megasthenes and Arrian (1926), pp. 87—88.
[30] Ibid., p. 87.

சென்ற மாட்டுவண்டித் தொடர் மேற்பார்வையாளரோடு ஒத்துழைக்கவும் அமர்த்தப்பட்டது. முரசுகொட்டும் பணியாளர்களையும், சேகண்டிகளைக் கொண்டு செல்பவர்களையும், குதிரைக்காரர்களையும் இவை அளித்தன. மூன்ருவது பிரிவு காலாட்படையினர் பொறுப்பையும், நான்காம் பிரிவு குதிரைப் படையினர் பொறுப்பையும், ஐந்தாம் பிரிவு தேர்ப்படையினர் பொறுப்பையும், ஆரும் பிரிவினர் யானைப்படையினர் பொறுப்பையும் பெற்றிருந்தனர். குதிரைகளுக்கும் யானைகளுக்கும் அரச லாயங்கள் இருக்கின்றன. போர்க் கருவிகளுக்கு அரசக் கொட்டிலும் இருக்கிறது. ஏனெனில், படையினர் போர்க் கருவிகளைக் கொட்டிலுக்கும், யானைகளையும் குதிரைகளையும் லாயங்களுக்கும் திருப்பிக் கொடுத்துவிடவேண்டும்.'[31] படை மேலாண்மைபற்றிய இந்த விபரம் இயல்பு மீறியதாகும். இக் கழகம் தற்காலப் போர்ச்சபைக்கு ஒப்பாக இருக்கிறது. ஆனல், படையின் ஒவ்வொரு பிரிவின் செயலாட்சியையும் ஒரு பஞ்சாயத்திற்கு ஒப்படைக்கும் கருத்து இதில் இருந்ததாகத் தோன்றுகிறது. இது நகர மேலாண்மையின் ஒரு பிரிவாகும். இதில் மக்களாட்சிக் கூறு ஒன்று இடம் பெற்றிருந்தது. 'அரசரின் செயலில் இருந்த ஒரு'[32] நிலைப்படையை கிரேக்கர்கள் உறுதியாகக் கூறுகின்றனர். 600,000 பேர்களைக் கொண்ட இப் படையோடு 'இந்தியாவைச் சுற்றி இந்தியா முழுவதையும் வென்ருர்.'[33] இதனுடன் அரண்மனையில் சண்டையிடும் இயல்புடைய காவலர்களும் இருந்தனர். இவர்கள் அரசரின் மெய்க்காப்புப் பொறுப்பைப் பெற்றிருந்தனர். 'எல்லாவிதமான கருவிகளோடும்' இவர்கள் அரண்மனையில் அரசரைக் கவனித்தனர். வேட்டைக்கு இவருடன் சென்றனர்.[34]

### விரிவான அரசாங்கம் நிறுவனம்பற்றி கிரேக்கர்கள் கூறுவது

மிக விரிவான ஆட்சி நிறுவனம் இருந்தமைக்கு இந்தச் செய்திக்கோவை சான்று அளிக்கிறது. நாடு, நகர், படை ஆகிய மூன்று முதன்மையான தலைப்புகளை அரசாங்கம் கொண்டிருந்தது. அன்றுட வாழ்க்கையில் தனி மனிதனை அரசாங்கத்தின் அங்கங்கள் எட்டவேண்டுமென்பது கருத்தாகும். பல அலுவலர்களின் சேவை தேவைப்பட்டது. இவர்களைப்பற்றி: "எண்ணிக்கையிலும், மற்ற வகுப்புகளோடு ஒப்பீட்டிலும், 'இது

[31] Ibid., 88.
[32] Ibid., p. 41 and p. 161.
[33] Plutarch, Grecian Lives, Part II, p. 152.
[34] Ibid., pp. 70–71.

ஒரு சிறிய வகுப்பாகும். ஆனால், மேன்மையான அறிவாலும் நேர்மையாலும் இது வேறுபடுகிறது. ஆகவே, ஆளுநர்கள் மாநிலத் தலைவர்கள், துணை ஆளுநர்கள், கருவூல மேற்பார்வை யாளர்கள், படைத் தலைவர்கள், கப்பற்படைத் தலைவர்கள், வேளாண்மையை மேற்பார்வையிடும் கட்டுப்பாட்டு அதிகாரிகள், கமிஷனர்கள் ஆகியோரைத் தெரிவுசெய்யும் சிறப்புரிமையை இது துய்த்து மகிழ்கிறது.'[35] இருந்தபோதிலும் அரசர் தம் அலுவலர்களின் நேர்மையை நம்பியிருக்க முடியாது. செய்திப் போக்குவரத்து வசதிகள் செப்பமுறாத நிலையில் இருந்த காலத்தில் தொலைவும் இயற்பியல் வடிவமைதியும் எண்ணற்ற தடைகளை அளித்தபொழுதும், ஒரு பெரு மாநிலத்தை ஆட்சி செய்ய வேண்டிய அரசர் இரகசிய ஒற்றர் பணியை நம்பியிருக்கவேண்டியிருந்தது. இது உண்மையாகவே அரசரின் கட்டுப்பாட்டுக் கருவியாக இருந்தது. இந்தத் துறையும் பெருமளவு எண்ணிக்கையிலான அலுவலர்களைக் கொண்டிருந்தது, எனவே, இவர்கள் தம்மை ஒரு வகுப்பினர் என்று மெகஸ்தனீசு நினைக்கும் அளவிற்கு இது இருந்தது. இவர்கள் ஆறாவது வகுப்பாக அமைந்தனர் என்று நாம் கண்டோம். இவர்கள் மெய்யாகவே அரசரின் கண்களாகவும் காதுகளாகவும் இருந்தனர். 'நடப்பவைகள் எல்லாவற்றையும் கவனித்து அரசருக்கு இரகசியமாக அறிவிக்கும்' பணி இவர்களுக்கு ஒதுக்கப்பட்டது. சிலர் நகரையும் மற்றவர்கள் படையையும் சோதனையிடும் பணியைப் பெற்றிருந்தனர். முன்னவர்கள் நகரத்தின் பரத்தையரைத் தம் கூட்டாளிகளாகவும், பின்னவர்கள் பாசறையின் பரத்தையரைத் தம் கூட்டாளிகளாகவும் அமர்த்திக்கொண்டனர்.[36] 'இவர்களைப்பற்றி, நாட்டிலும் நகரிலும் நடப்பவைகளை இவர்கள் ஒற்றி அரசருள்ள நாடாயின் அரசருக்கும் மக்களாட்சியாயின் குற்றவியல் நடுவருக்கும் அறிவித்தனர்; தவறான அறிக்கை கொடுத்தல் பழக்கத்திற்கும் வழக்கத்திற்கும் முரணாகும். மெய்யாகவே எந்த இந்தியரும் பொய்க் குற்றச்சாட்டைப் பெறவில்லை'[37] என்று அரியன் கூறுகிறார். கூட்டாண்மைச் செயற்பாடுகளிலிருந்து வேறுபடுத்தப்பெற்ற, பொதுமக்கள் கழகங்கள் ஆட்சிசெய்த நகரங்களில்கூட ஒற்றர்கள் பரவலாக அமர்த்தப்பட்டிருந்தனர் என்பது தெளிவு. இவைகளின் உதவியால்தான் பெரு.நம்பிக்கையோடு அரசர் ஆளவும் ஆட்சி நடத்தவும் முடிந்தது. படையோடு இவர்களும் சேர்ந்து இவருடைய அதிகாரத்திற்குத் தலைமையான ஆதாரமாயினர்.

[35] McCrindle, Megasthenes and Arrian (1926) p. 218.

[36] Ibid., p. 85. [37] Ibid., p. 217.

கிரேக்கர்களின் இக் கருத்தறிவிப்புகள், அரசாங்க அமைப்பு இதன் செயல்படும்முறை ஆகியவைபற்றி நமக்கு நல்லதொரு விளக்கம் தருகின்றன. ஒரு விரிவான ஆட்சி நிறுவனத்தை அரசு வளர்த்தது. இது சமூகத்தின் பலதரமான செயற்பாடுகளோடு தொடர்புகொண்டு இவற்றைக் கவனித்தது. அரசுத் தலைவராகிய அரசர் கருத்திலும் செயலிலும் நீருக்கும் நிலத்திற்கும் அதிபராகவும், நீதிக்கும் நேர்மைக்கும் மூலாதாரமாகவும், சமூகத்தின் வன்கண்மையான அதிகாரத்தின் உறைவிடமாகவும் இருந்தார். டாக்டர் வில்சன் கூறுவதுபோல், இதற்கிடையில் அரசாங்கத்தின் ஆக்கக்கூறுயுள்ள அதிகாரமும் ஆட்சியதிகாரமும் வளர்ச்சியடைந்த நிகழ்விலிருந்து சந்திரகுப்தரின்கீழ் அரசரின் வளர்ச்சி வெளியாயிற்று. நிதி, படை, நீதி ஆகியவற்றை ஒழுங்கு செய்கையிலும், அமைதியையும் ஒழுங்கையும் பேணுகையிலும் மக்களுக்கான நலம் விளைக்கும் பணிகளை இது புறக்கணிக்கவில்லை. வணிகத்தை மேம்படுத்தி இது கட்டுப்படுத்தியது. தோணிப் பயணத்தை ஒழுங்குபடுத்தியது. சாலைகள் அமைந்தது. வேளாண்மைக்கு உதவியது. நீர்ப்பாசனத்தைப் பேணியது. அற நிறுவனங்களைத் தொடங்கியது. பலவகையான தொழில்களுக்கும் உதவிக் கொடையளித்தது. போரின் பேரழிவிலிருந்து வேளாளர்களைக் காக்க இது முயன்றதோடன்றி ஆண்டின் தொடக்கத்தில் வானிலை முன்னறிவிப்பை இது குறித்துக் கொண்டதோடும், 'முன்கூட்டியே என்ன நடக்கும் என்பதை அறிந்துகொண்டதும், வரவிருக்கும் பற்றுக்குறையைச் சரிக்கட்ட வழிவகுத்ததும்,'[38] பஞ்சத்தைத் தவிர்க்க அரசு எப்படி அக்கறை கொண்டிருந்தது என்பதைத் தெளிவாக்குகிறது.

## அர்த்தசாத்திரமும் மோரிய அரசாங்கமும்

இந்த விளக்கம் போதிய அளவு மனத்தில் ஆழ்ந்து பதியத்தக்கதாக இருக்கிறது. அர்த்தசாத்திரம் வரைந்து காட்டியதோடு இதையும் சேர்த்தால், நாம் எதிர்பார்த்தவைகளை இது மிஞ்சிவிடும். ஆனால், மோரிய அரசாங்கம்பற்றிய போதிய கருத்திற்கு நாம் அர்த்தசாத்திரத்தை மேற்கோள் காட்டுகையில், நாம் இப்படிச் செய்வதைச் சிறிது கவனத்தோடு செய்ய வேண்டும். அரசின் குறிக்கோள் செயற்பாணியை இது வரைந்து காட்ட முற்படுகிறதென்பதை நாம் முதலில் நினைவுகொள்ள வேண்டும். ஆகையால், இதனுடைய கோட்பாட்டில்தான் இதன் தகவு அடங்கி இருக்கிறது. ஏனெனில், இயற்கையின் தடைகளும் வழக்கங்களும் கடக்கமுடியாத இடர்களாக இருந்த

[38] Ibid., p. 39.

காலத்தில், சாணக்கியர் அர்த்தசாத்திரத்தில் சொல்வதுபோல், வண்ணார் கூலியிலிருந்து அமைச்சர்கள் இளவரசர்கள் ஆகியோ ரின் நடத்தை வரையிலான எல்லா மானிட அலுவல்களையும் அர சாங்கம் கட்டுப்படுத்திச் செயலாட்சி செய்கிறதென்று கூறுவது அரசாங்கத்தின் ஒரு குறிக்கோளைப் புறநிலைப்படுத்துவதாகும். சாணக்கியரும் மெகஸ்தனீசும் கூறுவதுபோல், அரசர்களும் இவர்க ளுடைய அமைச்சர்களும் வாழ்ந்த நம்பிக்கையற்ற சூழ்நிலையில் இதை நிறைவேற்றுதல் செயல்கூடாத ஒரு துணிகரச் செய லாகும். ஆனால், சாணக்கியர் வரைந்துகாட்டியதில் உணரத்தக்க தோர் அளவு உண்மை இருக்கிறது. மோரிய அரசாங்கத்தால் அளிக்கப்பெற்ற கூறுகளை வைத்துக்கொண்டு ஒரு குறிக்கோள் அரசாங்கத்தைக் கருத்திற்கொள்ள இவர் முற்பட்டிருக்கலாம். அசோகரின் அரசாங்கத்தின் பாணியில் கருத்திற்கொள்ளப் பெற்றதாக இவருடைய ஆட்சி அமைப்பு ஒழுங்குமுறை இருக் கலாம். கட்டுப்பாட்டுச் செயலாட்சிகளில் மட்டுமீறிய ஆர் வத்தை இது கொண்டிருந்தது. அசோகருடைய அரசாங்கம் எங்கும் நிலவும் ஒரு தகுதித் திறத்தை அடைய முயன்றது; ஆனால், கட்டுப்பாட்டின் திறமையான நிறுவனமின்றி உறுதியாக எங்கும் நிலவும் இத் தகுதித்திறத்தைப் பெற இது முயன்றது. அசோகரிடமிருந்து பரந்த அரசியல் காட்சியை இவர் பெற்றுக் கொண்டு, நுட்ப முறையை இவர் தாமே அளித்தார். மையப் படுத்தப்பெற்ற கட்டுப்பாட்டின்மீது அமைந்த உணர்வாற்றல் சார்ந்த தகுதித் திறம்தான் சாணக்கிய அரசின் முத்திரையாகும் குறிப்பாக அசோகரின் அரசாங்கத்தை முழுதாகப் புரிந்து கொள்ளவும், பொதுவாக மோரிய அரசாங்கத்தைப் புரிந்து கொள்ளவும், அசோகரின் ஆணைகளையும் அர்த்தசாத்திரத்தை யும் நாம் அடுத்தடுத்துக் கற்கவேண்டும். ஏனெனில், அசோகரின் அரசாங்கத்தின் உண்மை நிலையைக் கருத்திற்கொள்ள அர்த்த சாத்திரம் நமக்கு உதவலாம்.

ஆனால், அர்த்தசாத்திரத்தின் தகவை இது ஒழித்துவிட முடியாது. அரசதந்திரத்தின் விதியை வரைந்துகாட்டுகிற ஓர் அறிவியல் ஆய்வுக் கட்டுரையாக, மோரிய அரசாங்கத்தின் விபரங்களை எடுத்துக்கொண்டது. இனிவரும் காலத்திற்கான குறிக்கோள் அரசாங்கமொன்றை எதிர்நோக்கியது. எனவே, இதனுடைய காலம்பற்றிக் கொள்கைப் பிடிவாதமாக இருக் காமல், மோரிய காலத்திலும் குறிப்பாக அசோகரின் பேரர சிலும் நிலவிய நிலைகளைச் சார்ந்திருப்பதாக இங்கு அர்த்தசாத் திரம் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. இதன்பின் வரும் அரசாங்கங்களின் போக்கையும் இது இயக்கியதாகவும் கருதப் பெறுகிறது. இதற்கு முன் இருந்ததைப்போன்ற இத்தகைய

அறிவியல் ஆய்வுக் கட்டுரைகளின் போக்கில் இப்பாடப்பொருள் பற்றிய ஆய்வும் சென்றது. இவற்றை மனத்திற்கொண்டு, இதனுடைய ஆசிரியர் வேறுவிதமாகக் கூறினாலும் அரசாங்கக் கோட்பாட்டின் ஓர் ஆய்வுக் கட்டுரையாகவும் முதன்மையாகவும் அர்த்தசாத்திரத்தை நாம் ஆராயத் தொடங்குகிறோம்.[39] ஓர் அறிவியல் ஆய்வுக் கட்டுரை என்ற முறையில், அசோகப் பேரரசின் ஆட்சி இயல் விபரங்களை இது அடிப்படையாகக் கொண்டிருந்ததாகத் தெரிகிறது. ஏனென்றால், இதே விபரங்களோடு கூடிய ஓர் அரசாங்கத்தை இது வரைந்து காட்டுகிறது. எனவே, அசோகரின் காலத்திற்குப்பின் இது எழுதப்பட்டிருக்கலாம்.[40]

## அரசை சமூகம் சார்ந்திருக்கும்படி கௌடில்யர் செய்கிறார்

ஆனால், அர்த்தசாத்திர ஆட்சி அமைப்பொழுக்க முறையின் விளக்கத்தைக் கொடுக்கத் தொடங்குமுன், வேதகாலத்திய ஆட்சி முறையோடு தொடங்கிய அரசியல் வளர்ச்சியின் விளைவாகவும், மோரியப் பேரரசின் தோற்றத்தோடு முடிவடைந்ததையும், சமூக சரிஅமைதி நிலையையும் மகிழ்ச்சியையும் அடைவதற்கு அரசியல் அமைப்பின் முக்கியத்துவத்தை மக்கள் உணரத் தொடங்கியதையும் நாம் மனத்திற்கொள்ளவேண்டும். பழங்கால இந்தியாவில் இது மெய்யாகவே அரசியல் உணர்வின் பொருளாக இருந்தது அர்த்த சாத்திரத்தில் வெளிப்பட்டது. மற்றெல்லா நிறுவனங்களுக்கும் மேலாக அரசாங்கத்தையும் இதன் வழியாக அரசையும் உயர்த்தியதும், அரசாங்க நிறுவனத்தின் மீதுதான் எல்லாச் சமூக அமைப்புகளும் சார்ந்திருந்தனவென்று கோட்பாடு உருவாக்கியதும் இந்த உணர்வுதான். எனவே, 'அரசாங்கத்தின் இந்த அறிவியலில்தான் உலகத்தின் முன்னேற்றப்போக்கு சார்ந்திருக்கிறது.'[41] என்றும், 'நான்கு சாதிகளையும் சமய வாழ்க்கையின் நான்கு வகுப்புகளையும் கொண்டிருக்கும் இம் மக்கள் (சமூகம்), செங்கோல் ஏந்திய மன்னரால் ஆட்சி செய்யப்படும் பொழுது, முறையே தம் தொழில்களிலும் கடமைகளிலும்

[39] Arthasastra II, Ch. X. Sarva-sastranyanukramya, praYoganupalabhya-ca; Kautilyena narendrarthe sasanasya vidhih krita.

[40] இதன் காலம்பற்றிய ஆய்விற்கு Bernhard Von Breloer, Jolly and Schmidt's edition of the Arthasastra. Kautaliya-Studien, 2 Vols., pp. 1–47; A. B. Keith in the J.R.A.S., 1916, pp. 130–138. Jacobi in Ind. Ant., June-July, 1918; Jayaswal in 'Hindu Polity', Part I. Appendix C; R. K. Mukherji's, Introduction to N. N. Law's 'Studies in Ancient Hindu Polity' D. R. Bhandarkar, Annals of the Bhandarkar Institute, VII, pp. 65 ff., etc., ஆகிய நூல்களைப் பார்க்கவும்.

[41] Tasyamayatta lokayatra, Arthasastra, Bk. i, Ch. IV.

என்றென்றும் ஈடுபாடுகொண்டு தம் வழிகளில் செல்வர்.'[42] இதுமட்டுமன்று, தர்மம் அழியும்பொழுது அரசர் தருமத்தை நிலைநாட்டுபவர், அதாவது பிரவர்த்தகராக இருக்கிறார்.[43] சமூக முன்னேற்றத்திற்கான அரச அதிகாரத்தின் சிறப்புபற்றி இச் செய்யுளில் மிக்க ஆற்றலோடு கூறப்பட்டிருக்கிறது. அரசர், தர்மப் பிரவர்த்தகராக இருக்கும் இக் கருத்து இதே பாகத்தை அசோகர் ஏற்றுக்கொண்டிருப்பதை நினைவு கூர்கிறது. ஆனால், இதே உயர்ந்த பங்கை அரசர் பெறவேண்டுமென்றால், ஒரு கடுமையான பயிற்சிக்கு இவர் உட்படவேண்டும்.[44] இவர் கற்றறிந்தவராகவும், தன்னடக்கமுள்ளவராகவும், சுறுசுறுப்புள்ளவராகவும், வீரமுள்ளவராகவும், பற்றுறுதியுள்ள அமைச்சர்களின் சேவையைப் பெற்றிருப்பவராகவும் இருக்கவேண்டும். கல்வியால் பண்பட்டவரும், தம் மக்களைத் தூயவர்களாக்க முற்படும் ஒருவர்தான் உலகம் முழுவதையும் ஆட்சி செய்யக்கூடியவராக இருப்பார்.[45] மேலும், இக் குறிக்கோளின் இரண்டு தோற்றங்களிலும் இதை நிறைவேற்றிய அசோகரின் எடுத்துக்காட்டை நாம் பெற்றிருக்கிறோம். தன்னடக்கமுள்ள வாழ்க்கையை இவர் நடத்தினார், தம் மக்களும் இப்படியே செய்யும்படி செய்தார்.

## கௌடில்யரின் இறைமைக் கருத்து

அரசரின் கடமை மேன்மேலும் தெளிவாகவும் சரிநுட்பமாகவும் ஆனதைப்போல் இவருடைய இறைமைக் கருத்தும் உருவாகியது. இறைமையின் பொருளடக்கம் என்றுமே அதிகாரம் என்பது தெளிவு. ஆனால், இந்த அதிகாரம் எதைக்கொண்டிருந்ததென்பதுபற்றி கௌடில்யருக்கு முன் தெளிவான கருத்து இல்லை. பழங்கால இந்தியாவில் அரசியல் சிந்தனையில் முதன் முறையாக, இறைமையின் ஏழு கூறுகள் தெளிவாக வரையறை செய்யப்பட்டிருந்தன. இவை, சுவாமி, அமாத்தியர், நிலம், அரண், பொருள், படை, நட்பு ஆகியவைகளாகும். அரசின் இன்றியமையாக் கூறுகளாக இவைகள் இருக்கையில், அரசரின் அரசாங்கம் அதாவது ராஜத்துவம், அரசரால் கலந்துகொள்ளப் படவேண்டிய அமைச்சர்களின் ஒத்துழைப்பின்றி நடத்தப்பட

[42] Caturvarnasramo-loko-rajna-dandena-palitah
Svadharma-karmabhirato vartatne svesu vartmasu, Ibid.

[43] Caturvarnasramasyayam lokasya-cara¦raksanat;
Nasyatam sarvadharmanam rajadharmapravartakah, Arthasastra, Bk. iii, Ch. I.

[44] Arthasastra, Bk. i, Chs. V – VIII.

[45] Vidyavinito rajahi prajanam vinayeratah; Ananyam prthivim bhunkte sarvabhutahiteratah; Ibid., Ch. V.

இயலாததாகும்.[46] ஆனால், அரசின் செழிப்பும் செழிப்பின்மையும் முதன்மையாக அரசரைச் சார்ந்திருந்தது. அரசரின் தன்னடக்கம் மிகப்பெரும் சிறப்பாகும். இது இல்லையென்றால், உலக முதல்வர்கூட அழிக்கப்படலாம்; தன்னடக்கத்தில் திறமை பெறுகையில் சிறப்பில்லாத அரசர்கூட உலகம் முழுவதும் அதிகாரம் செலுத்தலாம்.[47] இந்த அமைப்பு முழுவதற்கும் இயக்காற்றல் அளித்த அரசரின் ஆளுமையில் எல்லாம் சார்ந்திருந்தது. இதனால்தான் அரசரின் தக்க பயிற்சியில் பெரும் கவனம் செலுத்தவேண்டியிருந்தது. நடைமுறை ஆட்சிப் பொறுப்பில் இருந்த அமைச்சர்களும் சமமான சிறப்புடையவர்களாக இருக்கையில், இவர்களின் உதவியாலும் ஒத்துழைப்பாலும் அரசாங்கம் நடத்தப்படுவதில்லையா? இவர்களை அமர்த்துவதில் திறமை முதன்மையாகக் கருதப்படவேண்டும்,[48] இவர்களின் நேர்மையையும் பற்றுறுதியையும் முன்கூட்டியே சோதனை செய்யவேண்டும். இரண்டு வகையான அமைச்சர்கள் இருந்திருக்கவேண்டுமென்று தெரிகிறது. சான்றாக, (அ) நடைமுறையில் ஆட்சிப் பொறுப்பைப் பெற்றிருந்தவர்கள்; (ஆ) அரசருக்கு ஆலோசகர்களாக மட்டும் இருந்தவர்கள். முன்னவர்கள், இப்பொழுது நாம் நிருவாக அலுவலர்கள் என்று சொல்லுபவர்களாவர்.[49] பின்னவர்கள், ஒருவகையான காபினெட்டாக, அதாவது மந்திரி பரிஷத்தாக[50] அமைந்தவர்களாவர். இவர்களின் எண்ணிக்கை அரசின் தேவைகளைப் பொறுத்திருந்தது. அரசரின் குடும்ப குரு, ஆசிரியர் ஆகியோருக்குச் சமமான தனிமதிப்பு நிலையிலுள்ள ஒரு பிரதம அமைச்சர் இருந்தார்.[51]

## அரசாங்க அமைப்பு

பல கண்காணிப்பாளர்களால் செயற்படுத்தப்பட்ட பதினெட்டுத் துறைகள்[52] அடங்கிய ஓர் அதிகார வர்க்கத்தை நிருவாகம் கொண்டிருந்தது. இவைகளில் சில (i) வருமானத்தைத் திரட்டும் பொறுப்பில் இருந்த தண்டல்நாயகம் (சமா

[46] Sahayasadhyamrajatvam, etc. Ibid., Ch. VII.

[47] Arivarjah prakrtayah saptaitas svagunodayah,......Nayajnah prithivim kritsnam jayatyeva na hiyate, Arthasastra, Bk. vi, i.

[48] Arthasastra, Bk, i, Ch. VIII.

[49] Ibid., Ch. VIII.

[50] Ibid., Ch. XIX.

[51] Arthasastra, Bk. x, Ch. III.

[52] ......Tirthesvastadasasvapi, Arthasastra, Bk. i, Ch. XII.

ஹார்த்தா—Samahartta); (ii) கருவூலத்திற்குள் வருவனவற்றின் பொறுப்பில் இருந்த பெறுநர் தலைவர் (சன்னிதாதா—Sannidhata); (iii) தணிக்கை நாயகம் (அக்ஷபட்டாள—Aksapatala); (iv) அரசகட்டளைக் கண்காணிப்பாளர்; (v) கருவூலத் தலைவர் (கோசாதியக்ஷா—Kosadhyaksa); (vi) சுரங்கங்களின் பொறுப்பில் இருந்த கண்காணிப்பாளர்கள்; (vii) தங்கம், அணிகலன் ஆகியவைகளின் உற்பத்திக் கண்காணிப்பாளர் (சௌராணிகா—Sauvarnika); (viii) வனப்பொருள், தானிய இருப்பு ஆகியவற்றின் கண்காணிப்பாளர் (கோசதகரா அத்தியட்சகர்—Kosthagaradhyaksa); (ix) படைக்கலச்சாலைக் கண்காணிப்பாளர் (ஆயுதகார அத்தியட்சகர்—Ayudhagaradhyaksa); (x) எடைகள், நிறைகள் ஆகியவற்றின் தணிக்கையாளர் (பௌதவாதியட்சகர்—Pautavadhyaksa); (xi) மானுதியட்சகர் (Manadhyaksa); (xii) சுங்கவரி வசூலிப்பவர் (சுல்காதியட்சகர்—Sulkadhyaksa); (xiii) வேளாண்மை அரசபண்ணை நெறியாளர் (சீதாதியட்சகர்—Sitadhyaksa); (xiv) நெசவு நெறியாளர்; (xv) மதுக்கடை, மது உற்பத்தி ஆகியவற்றின் தணிக்கையாளர் (சுரத்தியட்சகர்—Suradhyaksa); (xvi) விலைமகளிர் தணிக்கையாளர் (கனிகாதியட்சகர்—Ganikadhyaksa); (xvii) இறைச்சிக் கொட்டில் கண்காணிப்பாளர் (சுனுதியட்சகர்—Sunadhyaksa); (xviii) படகுப் பயண, கப்பற்படைப் பொறுப்பு அலுவலர் (நாவாதியட்சகர்—Navadhyaksa); (xix) கால்நடைப் பொறுப்புடைய அலுவலர் (கோதியட்சகர்—Godhyaksa); (xx) அரசரின் தொழுவப் பொறுப்பு அலுவலர் (அசுவாதியட்சகர்—Asvadhyaksa); (xxi) யானைகளின் பொறுப்பதிகாரி; (xxii) இரதப் பொறுப்பலுவலர் (ரதாதியட்சகர்—Rathadhyaksa); (xxiii) காலாட்படை அலுவலர் (பட்டியாதியட்சகர்—Pattyadhyaksa); (xxiv) முத்திரைகள், பத்திரங்கள், பயணச் சீட்டுகள் ஆகியவற்றின் தணிக்கையாளர் (முத்ராதியட்சகர்—Mudradhyaksa); (xxv) மேய்ச்சல் தரை அலுவலர் (விவிதாதியட்சகர்—Vivitadhyaksa); (xxvi) தரிசு நில அலுவலர் (சுனியாதியட்சகர்—Sunyadhyaksa); (xxvii) கண்டக சோதனை ஆணையாளர்கள்; (xxviii) சம்ஸ்தாதியட்சகர் (Samsthadhyaksa); (xxix) பச்சைக் காய்கறிகளின் தணிக்கையாளர்; விற்பனைப் பொருள்களுக்கான தணிக்கையாளர் (பன்யாதியட்சகர்—Panyadhyaksa); இன்னும் பலருமாவர்.

இக் கண்காணிப்பாளர்கள் எப்படிப் பதினெட்டு வகைகளின் கீழ் அதாவது துறைகளின்கீழ் கொண்டுவரப்பட்டனர் என்பதையும், அல்லது அரசின் அமைச்சர்களோடு இவர்களின் உறவு என்ன என்பதையும் உறுதிப்படுத்திக் கூறுவது கடினமாகும். இங்கு

விவரிக்கப்பட்டிருப்பதுபோல் மோரியப் பேரரசில் அதிகார வர்க்கம் இருந்ததா என்பதையும் சொல்வது கடினமாகும். தற்காலத்தில் அரசின் எல்லாப் பணிகளையும் செய்ய இவ்வதிகார வர்க்கம் எதிர்பார்க்கப்பட்டது. சான்ருக, வருவாய்த் துறையின் கீழ் நிலவரி வசூலிப்பு, படகுப் பயணப் பாதைகளின் சுங்கவரி, கைவினைஞர்களிடமிருந்து வரிகள், கடன்கள், வட்டிகள், சாலைத் தீர்வை, விற்ற பொருள்களின் மீதான வரிகள், நகர்ச் சுங்க வரி கள், சுங்க வரிகள் போன்றவைகளையும் நாம் பெற்றிருக்கிறோம். இந்த அரச வருவாய் வளங்களைத் தவிர, சுரங்கங்கள், காடுகள், அரசருக்குரிய பண்ணைகள் போன்றவைகளுமிருந்தன. அடுத்த டுத்து இன்று நாம் தற்காலச் சொல்லால் குறிப்பிடும் தணிக்கை, கணக்குவைப்புத் துறைகள் இருந்தன; அர்த்தசாத்திரத்தின் படி இவை இம்மியும் பிசகாதவாறு செயல்பட்டன. ஏனெனில், வருவாயையும் செலவினத்தையும் உறுதிசெய்ய இவை ஒரே வழிகளாக இருந்தன. பின் அங்குக் காவல்துறையும் ஒற்றர்துறை யும் இருந்தன. அரசரின் அரசாங்கத்தின் தடையிலாச் செயற் பாடும் செழிப்பும் இவைகளின் திறமையைச் சார்ந்திருந்தது. நகரகர் என்ற நகரக் கண்காணிப்பாளர் தம் கீழாட்களாகிய கோபர், ஸ்தானிகரோடு மிக முக்கியமான அலுவலராக இருந் தார். ஆனால், இந் நகரக் கண்காணிப்பாளர்களையும் இவர்களின் கீழாட்களையும்விட எங்கும் பரவியிருந்த ஒற்றர்கள், பேரரசின் மக்களுக்கெல்லாம் ஒரு பாதுகாப்பு உறுதியாகவும் ஓர் அச்சமாக வும் இருந்தனர்.[53] உண்மையில் அரசரைப்போல் இவர்களும் முழு மொத்தத் தகுதி பெற்றிருந்தனர். காலாட்கள், குதிரைகள், போர்த் தேர்கள், யானைகள் ஆகியவற்றைப் படை கொண்டிருந்தது. ஒரு தனி அலுவலர் இவற்றைக் கட்டுப்படுத்தி, செயலாட்சி செய்தார். ஒரு கண்காணிப்பாளரின் கீழ் ஒரு கப்பற்படையுமிருந்தது.* விற்பனை, தரவு பற்றியவைகளைக் கட்டுப்படுத்தும், தொழிலும் தொழிற்சங்கங்களும், இறக்குமதி யும் ஏற்றுமதியும், கடன்களின் மீதான வட்டி வீதங்கள், அடைமா னங்கள் ஆகியவைகளை எடுத்துக்காட்டும் ஒரு நிறுவனத்தைத் தற்கால வணிக, தொழில்துறை பிரதிபலித்தது. தற்கால அரசில் மிகச் சிறந்த நாட்டின் நலத்துறையாகிய பொதுச் சுகாதாரமும் சாக்கடைக் கழிவு மேம்பாட்டுத் துறையும் விடுபட வில்லை.[54] உணவுப் பொருள் கலப்படத் தடுப்பு, சமூகக் குற்றங்

[53] Ibid., Bk. i, Ch. XII.

* கிரேக்க, அர்த்தசாத்திர விபரங்களுக்கிடையிலான வேறுபாடுகளைக் கவனிக்க.

[54] Arthasastra, Bk. ii, Ch. XXXVI—Pamsunyase rathyayamasta-bhago danda... ...Manusyapretanam pancasatpana, etc.

கள் அடியோடு ஒழித்தல், அதாவது கண்டக சோதனை, குடி வகைக் கட்டுப்பாடு, சூதாட்டம், இறைச்சிக் கொட்டில், பரத்தையர் கண்காணிப்புப் போன்றவைபற்றிப் பெருங் கவனம் செலுத்தப்பெற்றது. இவைகள் நீங்கலாக, அரசரைத் தலைவராகக் கொண்டதும் திறமைமிக்க நீதிபதிகளைக் கொண்டதுமான ஒரு விரிவான நீதிமன்றமுறை பேரரசில் இருந்தது. கிராம, மாநில அரசாங்கங்களாகிய தல அரசாங்கமும் இதுபோலவே நன்முக அமைக்கப்பட்டிருந்தது. காபூலிலிருந்து கிருஷ்ணாவரை பரவியிருக்கும் இப்பேரரசில் ஆட்சிஇயல் நிறுவனம் விரிவான போக்குவரத்துத் திட்ட வசதிகளையும், ஒருமுக அரசியல் நோக்கையும், பெரு அலுவலர்த் தொகுதியொன்றின் அமர்த்தலையும் எதிர்நோக்குகிறது. இந்திய ஆட்சிமுறை வளர்ச்சியின் இக் கட்டத்தில் ஒருமுக நோக்கையும் போக்குவரத்து வசதிகளையும் நினைக்க இயலாது. ஆகையால், கௌடிலியர் செய்ய விரும்பியது என்ன வென்றால், உண்மையிலேயே நடைமுறையில் இருந்ததை அடிப்படையாகக் கொண்டதோர் ஆட்சி விதியை எதிர்நோக்கினர். உண்மை நிலையையும் குறிக்கோள் நிலையையும் இது இணைத்தது என்று கருதினாலும், ஆட்சிஇயல் நிறுவனத்தின் இந்த விரிவான பரப்பெல்லை வளர்ச்சியையும் அரசின் சிறப்பில் இது தவருகக் கொள்ளமுடியாததோர் அடையாளமாகும்.

## தல அரசாங்கம்

கிராம, நகரப் பகுதிகளின் அரசாங்கங்கள் (அதாவது தல அரசாங்கங்கள்) பற்றிக் கூறும்பொழுது கௌடிலியர், அரசாங்க நிறுவனத்தின் குறிக்கோள் கூறுபற்றித் தெளிவாகக் கூறுகிமுர். இதனுடைய பயனுள்ள செயற்பாடு இரண்டைச் சார்ந்திருக்கிறது. (அ) விரிவான, பரவியிருக்கும் அமைப்பு; (ஆ) மக்களின் அரசியல் உணர்வு இக்கால நிலையிலிருந்து இவை சற்று விலகியிருப்பதாகத் தோன்றுகிறது. கௌடிலியர் கருதுவதுபோல் இந்தியாவில் இத்தகைய விரிவான பரவிய அமைப்பு இருந்திருக்கமுடியுமா என்பது ஐயப்பாட்டிற்குரியதாகும். இருந்திருக்கமுடியுமென்று வைத்துக்கொண்டாலும், உண்மையான தன்னுட்சியைப் பெற்றிருந்த மக்கள், கட்டுப்படுத்துவதற்கும், ஒழுங்குபடுத்துவதற்கும், மையப்படுத்துவதற்கும் விருப்பமாக இருந்த இவர்கள் அரசாங்கத்தோடு விருப்புடன் ஒத்துழைத்தார்களா என்பது ஐயப்பாட்டிற்குரியதாகும். கௌடிலியரின் கட்டுப்பாடுகள், ஒற்றுடல் ஆகியவற்றின் உயிர்ப்பு மக்களின் அரசியல் உணர்வை ஆராய முற்படுகிறது. விபரங்களை ஆராயும் பொழுது இது தெளிவாகும்.

ஜனபதங்களால் தல அரசாங்கங்கள் அமைந்த, அதாவது நாடு அல்லது முடியரசு நிதிபற்றியவைகளுக்காக நான்கு பாகங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது:[55] இவை ஒவ்வொன்றும் ஒரு ஸ்தானிகரின்கீழ் இருந்தன.[56] துறைத் தலைவர்களாகிய அத்யக்ஷர்கள் வழக்கமாக ஸ்தானிகர்களுக்கு உதவினர். இவர்களுக்குக் கணக்கர்களும் (சம்கியாயகர்—Samkhyayaka), எழுத்தர்களும் (லேக்ககர்—Lekhaka), நாணய ஆய்வாளர்களும் (ரூபதர்ஷகர்), பொருளாளர்களும் (நிவிகிராககர்—Nivigrahaka), படை அலுவலர்களும் (உத்ராதியக்ஷர்) அத்யக்ஷர்களுக்கு உதவினர்.[57]

நகர்களிலும் கிராமங்களிலும் குடியிருப்போர் தம் வீடுகளுக்கு வந்து சேரும் வெளியார்கள்பற்றியும் வெளியேறுவோர் பற்றியும் இவற்றின் பொறுப்பில் உள்ள அலுவலர் கோபர், ஸ்தானிகர், அல்லது நகரகர் ஆகியவரிடம் தகவல் தெரிவிக்க வேண்டும். தேறல் விற்போர், சமைத்த இறைச்சி, அரிசி விற்போர், பரத்தையர், இடர்வரவு நிரம்பிய தொழில்களில் ஈடுபட்டிருப்போரும் இதேபோல் தகவல் அறிவிக்கும்படி கேட்டுக்கொள்ளப்பட்டனர். தீ போன்ற இடர் நேர்வுகளுக்குக் குடும்பத் தலைவர்கள் எப்பொழுதும் தயாராக இருக்கும்படியும் இவர்கள் குடியிருக்கும் இடங்களில் சுகாதாரம் பேணும்படியும் கேட்டுக்கொள்ளப்பட்டனர்.[58] கிராமங்களைப் பொறுத்தவரையில், கிராம சபைகள்—கிராமக் கூட்டங்கள் இருந்தன; மேம்பாட்டுப் பணிகள் அல்லது நீதிக்காரியங்கள் ஆகியவற்றை இவை கவனித்துக்கொண்டன.[59] கிராம முதியோர், கடவுளர்களின் சொத்துகளையும் இளம் வயதினர் சொத்துகளையும் கவனித்துக் கொண்டனர். கூட்டுறவில் கிராமத்தினர் பலவகையான பொதுப் பணிகளைச் செய்தனர்.[60] இவை மக்களின் சில பொதுப் பணிகளாகும். அரசாங்கத்தின் செயற்பாடுகளைப் பொறுத்தவரை எல்லா இடங்களிலும் இது ஒற்றர்களை அமர்த்தியதென்பதை முதலில் குறிப்பிடவேண்டும்.[61] இவர்களுடைய தகவலின் உதவியால் கிராம மக்களின் உயிர்களையும் தொழில்

[55] Ibid., Bk. ii, Ch. XXXV.

[56] Ibid., Evam janapadacaturbhagam Sthanika Scintayet.

[57] Ibid., Ch. IX.

[58] Ibid., Ch. XXXVI.

[59] Arthasastra, Bk. v, Ch. III. கிராம நீதிபதிகள் உழைப்பு ஊதியமின்றிப் பணியாற்றி இருக்கவேண்டும். ஏனெனில், கிராம அலுவலர்களுக்கான ஊதியம்பற்றிய பட்டியலில் நீதிபதிகள் இடம் பெறவில்லை.

[60] Arthasastra, Bk. ii, Ch. I.

[61] Ibid., Ch. XXXV; Arthasastra, Bk. iv, Ch. IV; Arthasastra, Bk. i, Ch. XII.

களையும் அரசாங்கம் கவனித்துக் கொண்டது. 'முடியரசின் கிராமங்களுக்குள் வானப்பிரஸ்தர்களைத் தவிர வேறெந்தத் துறவியும், தலத்தில் பிறக்காத வேறெந்தக் குழுவும், தலத்தில் உள்ள கூட்டுறவுத் தொழிற்சங்கங்களைத் தவிர வேறெந்த வகையான தொழிற்சங்கங்களும் நுழையக்கூடாது. விளையாட்டுகளுக்கும் களியாட்டங்களுக்குமான கட்டடங்களும் கிராமங்களில் இருக்கக்கூடாது. பணம் பெறுவதற்காக இலவசமான உழைப்பிற்காக, பொருள்களுக்காக, தானியங்களுக்காக, பானங்களுக்காக நடிகர்கள், நடனமாடுவோர், பாடகர்கள், முரசடிப்போர், கோமாளிகள், பாணர்கள் ஆகியோர் கிராமத்தினரின் வேலைக்கு எவ்விதமான குழப்பமும் உண்டாக்கலாகாது.'[62]

கிராமத்தின் முதன்மையான அலுவலர்கள் கண்காணிப்பாளர், கணக்கர். கோபர், அதாவது வருவாய்த்துறை அலுவலர், கால்நடை வைத்தியர், வைத்தியர், குதிரை பழக்குவோர், ஏவலாட்கள்,[63] கிராமத் தலைவர்[64] முதலியோர் ஆவர். ஆட்சிக்காகக் கிராமங்கள் தொகுக்கப்பட்டிருந்தன. வரிவிதிப்பிலிருந்து விலக்குப்பெற்றவை, படைவீரர்களை அளித்தவை, தானியம், கால்நடை, தங்கம்போன்ற உருவில் வரிசெலுத்தியவை, இலவச உழைப்பு அளித்தவை, பாலும் பாற்பயன்களையும் அளித்தவை எனப் பலவகையான கிராமங்கள் இருந்தன. வகைபாடு செய்யப்பட்டபின் இத்தகைய கிராமங்கள் நிதிநோக்கங்களுக்காக ஐந்து அல்லது பத்துக் கிராமங்களைக்கொண்ட தொகுதிகளாகப் பிரிக்கப்பட்டன. இத்தகைய ஒரு தொகுதியின் கணக்கை கோபர் கவனித்துக்கொண்டார். கிராமங்களின் எல்லைகளை வரைந்து நிலப்பிரிவுகளைச் சாகுபடி நிலம், காடுகள், கோயில் சொத்து, பாசனக் குளங்கள், இடுகாடுகள், மேய்ச்சல் நிலம், சாலைகள், யாத்திரைக்குரிய இடங்கள் ஆகியவைகளுக்கு இலக்கமிட்டார். அப்படியே இவைகளைக் கொடை, தானம், தருமம் வரிவிதிப்பிற்குரிய சொத்து அல்லது மற்றவைகளெனப் பதிவு செய்துகொண்டார். அரசிறை வசூலிப்பிற்கு வசதியாக வரி செலுத்துபவையெனவும் இறையிலியெனவும் வீடுகள் இலக்கமிடப்பட்டன. மேலும், ஒவ்வொரு குடும்பத்தினரின் வரலாறு, தொழில், வரவு, செலவு ஆகியவை உறுதிசெய்யப்பட்டன. கோபர்களுக்குமேல், பல கிராமத் தொகுதிகளைக் கொண்ட மாவட்டத்தை இதைப்போல் ஸ்தானிகர் நிருவாகம் செய்தார். பிரதேஷ்தர்களெனும் மேற்பார்வையாளர்களும் இருந்தனர்.

62 Arthasastra, Bk. ii, Ch. I.
63 Ibid.
64 Arthasastra, Bk. iii, Ch. X.

இவர்கள் மாவட்ட, உட்பிரிவு, வருவாய் அலுவலர்களின் (கிராமத் தொகுதிகளின் பொறுப்பில் இருந்தவர்களின்) பணியைச் சோதனை செய்வதற்காகத் தண்டல்நாயகத்தால் அனுப்பப்பட்டவர்கள் ஆவர்.[65]

நிதிநோக்கங்களுக்காகக் கிராமங்கள் தொகுக்கப்பட்டதைப் போலவே பாதுகாப்பிற்கும் செய்யப்பட்டது. பத்து, இருநூறு, நானூறு, எண்ணூறு கிராமங்களின் தொகுதிகளின் பாதுகாப்பிற்காக அரண்கள் அமைக்கப்பட்டன. கடைசியில் கூறியது ஸ்தானியம் என்ற பெயரைப் பெற்றது. ஸ்தானிகரோடு தொடர்புடையதாகத் தோன்றுகிறது. மாவட்ட அலுவலராக இருந்த ஸ்தானிகரைப்போல அல்லது தற்காலப் பதவிப் பெயரால் மாவட்ட அலுவலர் தண்டலர் எனச் சொல்லுவது போல் மாவட்ட அரணும் ஸ்தானியம்[66] எனப் பெயர்பெற்றிருக்கலாம். ஒரு மாவட்டம் 800 கிராமங்களைக் கொண்டிருக்க வேண்டுமென்று ஒருவேளை நினைத்திருக்கலாம். பத்து, இருநூறு, நானூறு கிராமங்களைக் கொண்ட ஒவ்வொரு தொகுதியும் சம்கிரஹண, கார்வாதிக, துரோணமுக என்னும் பெயர் பெற்றன.[67]

உள்நாட்டுப் பாதுகாப்பு முறையைத்தான் நீதி ஆட்சியும் பின்பற்றியது. ஸ்தானியம், அல்லது துரோணமுகம் அல்லது சம்கிரஹணம் ஆகியவை இருந்த இடங்களில் அல்லது மாநில எல்லைகள் சந்திக்குமிடங்களில், புனிதச் சட்டங்களில் தேர்ச்சி பெற்ற மூன்று மனிதர்களைக்கொண்ட நீதிபதிப் பட்டியலும், அரச நீதியை வழங்க மூன்று அமைச்சர்களும் இருக்கவேண்டும்.[68] நாம் முன்பு பார்த்ததுபோல், கிராமத்தில் நீதிசார்ந்த பணிகளை நிறைவேற்ற கிராமக்[69] கூட்டமென்ற கிராமச்சபை இருந்தது. இந்த இடங்களில் தர்மஸ்தானிய கண்டக சோதனை[70]யென்ற உரிமை இயல், குற்றவியல் நீதிமன்றங்கள் இருந்திருக்கலாம். சட்டம் நான்கு கூறுகளைக் கொண்டிருந்ததாக அர்த்தசாத்திரம் வலியுறுத்தியது. புனிதச் சட்டம் (தர்மம்), வழக்காறு (வியவகாரம்), நல்லவர்களின் நடத்தை (சரித்திரம்), அரசரின் ஆணை

[65] Arthasastra, Bk. ii, Ch. XXXV.

[66] Ibid., Ch. I.

[67] Ibid.,

[68] Arthasastra, Bk. iii, Ch. I, Dharmastha,......Kuryu.

[69] Arthasastra, Bk. iv, Ch. IV.

[70] Arthasastra, Bk. iii, Chs. X—XX; Arthasastra, Bk. iv, Ch. I, et seq.

கள் (ராஜசாசனம்)[71] ஆகியவை இவைகளாகும். ஆனால், இவைகள் ஒன்றுக்கொன்று முரண்படும்பொழுது புனிதச் சட்டம் அல்லது தர்மம் முன்மதிப்பீடுபெற்றது. நியாயத்திற்கு அதாவது ராஜசாசனத்திலிருந்து தோன்றும் நீதிநெறிக்கு எதிராகப் புனிதச் சட்டம் செல்லுகையில் ராஜசாசனம், முன்மதிப்பீடு பெற்றது [72] ஏனென்றால், புனிதச் சட்டத்தின் மூலநூல் கிடைக்கவில்லை குற்றவியல் வழக்குகளில் குற்றத்தை ஒப்புக்கொள்ளுகைக்குச் சித்திரவதை பயன்படுத்தப்பட்டது. பொதுவாக வழக்கில் நான்குவகைச் சித்திரவதைகள் இருந்தன.[73] உரிமை பற்றிய வழக்குகளில் சாட்சிகளை விசாரித்தல் மிக முக்கியமானதாகும். வாக்குமூலங்களைச் சரியாகக் குறித்துக்கொள்வது எழுத்தர்களின் பணியாகும்.[74] தண்டனைகள், தண்டங்கள், இழப்பீடு ஆகியவைமுதல் சிறைவாசம், மரணதண்டனைவரை விதிக்கப்பட்டன.

அடுத்துக் காவல் துறை (Police) ஆட்சியாகும். இது நீதி, பாதுகாப்பு ஆகிய அமைப்புகளோடு சேர்ந்தது. நாம் முன்னர் பார்த்ததுபோல், ஸ்தானிகரோடு சேர்ந்து ஆணையாளர் (பிரதேஷ்தா), கிராம, மாவட்ட அலுவலர்களின் அல்லது கிராமத் தொகுதிகளின் பொறுப்பில் இருந்த மாவட்ட அலுவலர்களையும் கோபர்களின் பணிகளையும் சோதனை செய்தார்; திருட்டுக் குற்றத்தையும் மற்றக் குற்றங்களையும் கண்டுபிடிக்க இவர் நடவடிக்கை எடுத்தார்.[75] இப் பணியில் இவர்களுக்குக் கிராமக் கண்காணிப்பாளர்களும்[76] கிராமத் தலைவரும் போதிய அளவில் உதவினர்; இவர்கள் கிராமத்தில் கணிசமான செல்வாக்குப் பெற்றிருந்தனர்.[77] கிராமத் தலைமை அதிகாரி கிராம மக்களின் சேவையைப் பெற்றுக் குற்றவாளிகளையும் ஐயுறவிற்குரிய பேர்வழிகளையும் அகற்றலாம்.[78] இவைகளன்றிக் குற்றங்களைத் தடுப்பதில் ஒற்றர்கள் மிகச்சிறந்த பணியாற்றினர்.

தொகுத்துரைப்பின், தல அல்லது மாநில ஆட்சி கீழ்க் கண்டவாறு செயல்பட்டது. உச்சகட்டத்தில் தண்டல்நாயகம்

[71] Arthasastra: Bk. iii, Ch. I. Dharmasca-vyavaharasca caritram rajasasanam ...etc.

[72] Ibid., Samsthaya - dharmasastrena... Patohinasyati.

[73] Arthasastra, Bk. iv. Ch. VIII.

[74] Ibid., Ch. IX.

[75] Ibid., Ch. VI, p. 264.

[76] Ibid., Ch. IV, p. 256.

[77] Arthasastra, Bk. iii, Ch. X.

[78] Ibid.

(Samahartta) ஒருவர் இருந்தார். இவருக்குக்கீழ் மாவட்டத் தண்டலர் அல்லது ஸ்தானிகர்கள் இருந்தனர்; இவர்களின்கீழ் மாவட்ட உட்பிரிவுகளின் பொறுப்பைத் துணைத்தண்டலர்கள் அல்லது கோபர்கள் ஏற்றுக்கொண்டிருந்தனர். இவர்கள் வருவாய் திரட்டுவதையும், அமைதியையும் ஒழுங்கையும் பேணுவதைப் பொறுப்பாகக் கொண்டிருந்தனர். இவர்களுடைய பணியில் கிராமத்தின் கண்காணிப்பாளர்களும் தலைமை அதிகாரிகளும் உதவினர். நாட்டின் அரணமைப்புகள் உள்நாட்டுப் பாதுகாப் பளித்தன. ஏற்படக்கூடிய கிளர்ச்சிகளுக்கெதிராக இவை பாது காப்பளித்தன. ஒரு நிலைப்படை இருந்ததை இது முன்னூகிக் கிறது. இங்குப் பல அரண்கள் இருக்கவேண்டி இருந்ததால் படை யும் பெரிதாக இருக்கவேண்டும். மாவட்ட, உட்பிரிவு அலுவலர் களின் பணியை ஆணையாளர்கள் சோதனை செய்தனர். இவர் கள் தண்டல்நாயகத்தின் ஆணையின்கீழ் செயல்புரிந்தனர். இவர் கள் பிரதேஷ்த்தர் எனப் பெயர்பெற்றிருந்தனர். மேல்முறை யீட்டு வழக்குகளைக் கவனித்துக்கொள்ள நீதிபதிகளுமிருந்தனர் முதியோரைக் கொண்ட ஒரு சபையைக் கிராமம் பெற்றிருந்தது. நீதி, பொதுப் பயன்பாட்டுப் பணிகள், கிராம நிலங்களின் மேலாண்மை, கோயிற்சொத்து, இளையோர் சொத்து முதலிய வற்றைப் போன்ற தலச் செயல்களில் கிராமசபை போதிய அளவு சுயஆட்சி பெற்றிருந்தது.

## நகரத்தின் ஆட்சி

நகர, கிராம ஆட்சிக்கிடையேயுள்ள வேறுபாட்டை அர்த்த சாத்திரம் செய்திருப்பது குறிப்பிடத்தக்கதாகும். அரசாங்கத் தின் இரண்டு சுயேச்சையான ஆனால் ஒரேபடித்தான பிரிவுகளாக இவை அமைந்திருந்தன. நாம் முன்னரே கண்ட, அரசாங்கம் பற்றிய கிரேக்கரின் விபரங்களோடு அர்த்தசாத்திரமளிக்கும் விபரங்களும் ஒத்திருக்கின்றன. மோரிய காலத்தின் நிலைகளைக் கௌடிலியர் வெளியிட்டார் என்பதை இவ்வுண்மை வலியுறுத்து கிறது. நகரத்தைத் தலைநகரென சாம சாஸ்திரி மொழிபெயர்த் திருப்பது பெருமளவு குழப்பத்தை உண்டாக்கலாம். ஜனபதம் அல்லது நாட்டிலிருந்து வேறுபடுத்த நகர் அல்லது மாநகர் என்ற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. உண்மையில் நகரகர் அல்லது நகரக் கண்காணிப்பாளரின் கடமைகளைப்பற்றிச் சொல்லும் பொழுது ஓர் இடத்தில்கூடத் தலைநகர்பற்றிய குறிப்பு இல்லை. தண்டல்நாயகத்தைப்போல நகரப் பொறுப்பேற்றுக்கொண் டிருந்த அலுவலரும் (நகரகரும்) நகரக் காரியங்களைக் கவனித்துக் கொள்வர்.[79] நாட்டின்மீது தண்டல்நாயகத்திற்கிருந்த அதிகா

[79] இந்தத் தலைப்பிற்கு, Arthasastra, Bk, ii, Ch. XXXVI–ஐப் பார்க்கவும்.

ரத்தைப் போன்ற அதிகாரம் நகரகருக்கு நகரத்தின்மீது இருந்த தெனப் பொருள்படும். தண்டல்நாயகத்திற்கு நகரகர் ஒரு கீழ் நிலை அலுவலரன்று. ஆனால், ஓர் இணைப்பலுவலராக இருந்தார். தண்டல்நாயகத்தைப்போல் நகரத்தின்மீதும் இதன் அலுவலர் கள்மீதும் இவர் தலையாய கட்டுப்பாடு பெற்றிருந்தார்; நாட்டு ஆட்சியைப்போல் நகரின் ஆட்சியும் பல கோபர்களாலும் ஸ்தா னிகர்களாலும் நடத்தப்பட்டது. இங்குதான் நாம் ஒருருப்படுத் தலைக் காணுகிறோம். நகரில் நிலைக்கேற்ப, ஒவ்வொரு பத்து, இருபது, நாற்பது குடும்பங்களுக்கும் ஒரு கோபர் இருந்தார். இவருடைய ஆட்சி வரம்பிற்குள் இருக்கும் ஒவ்வொருவரின் சாதி, கோத்திரம், பெயர், வரவுசெலவு ஆகியவைபற்றி எல்லா வற்றையும் இவர் தெரிந்திருக்கவேண்டும். நாட்டு ஸ்தானிகரைப் போல் நகர ஸ்தானிகரும் கோபர்களைக் கட்டுப்படுத்தி, அரணின் எல்லாப் பகுதிகளையும் கவனித்துக்கொள்ளவேண்டும்.[80] மறுபடி யும் இங்குப் பொதுவாக நகரா என்பது நகரமென்றும், குறிப் பாகத் தலைநகர் என்றும் பொருள்படவில்லை என்ற முடிவைக் காட்டுகிறது. 'நகர் அரண்' என்றசொல் இதைத்தெளிவுபடுத்து கிறது. ஏனெனில், எங்கெல்லாம் ஒரு ஸ்தானிகம்,துரோணமுகம் அல்லது சம்கிரஹணக்கோட்டை இருந்ததோ அங்கெல்லாம், இரண்டு முக்கிய காரணங்களால் ஒரு நகரம் வளர்ந்ததென்பது பெரும்பாலும் உறுதியாகும். முதன்மையாக இவைகள் கேந்திர மாகவும் போர்த்திறஞ் சார்ந்ததாகவும் இருந்தன. அடுத்து, அங்கு நீதிமன்றங்களும் இருந்தன. ஆகவே, இந்த ஸ்தானிகர் தான் நகர அரணைக் கவனிக்கவேண்டியிருந்தது. மேலும், நீதி மன்றங்கள் இருந்த இடங்களில் எல்லாம் சிறையுமிருந்தது. சிறையின் ஆட்சிப்பொறுப்பை நகரகர் ஏற்றுக்கொண்டிருந்தார். நாளைக்கொரு முறையாவது அல்லது ஐந்து இரவுகளுக்கொரு முறையாவது கைதிகள் செய்த பணிகளை மனத்திற்கொண்டு அல் லது தங்கத்தில் போதிய அளவு மீட்புப்பணம் செலுத்தியதைக் கருத்திற்கொண்டு கைதிகளை விடுதலை செய்ய இவர் உரிமை பெற் றிருந்ததாக நாம் அறிகிறோம். 'நீர்த் தேக்கங்கள், சாலைகள், நகரைவிட்டு வெளியே செல்லும் மறைவான பாதை, அரண்கள், கோட்டைச் சுவர்கள், மற்றப் பாதுகாப்பு அமைப்புகள் ஆகிய வற்றையும் நகரகர் கவனித்துக்கொண்டார்.' தர்மசாலைகளைப் போன்றவகை அறநிலையங்கள் இருந்தன. ஏற்பமைதியில்லாத கோட்பாட்டாளர்களும் ஐயத்திற்குரிய பேர்வழிகளும் இங்குத் தங்கவரும்பொழுது இந் நிறுவனங்களின் மேலாளர்கள் கோபர் அல்லது ஸ்தானிகர்களுக்குத் தகவல் அளிக்கவேண்டும். கோபர்

[80] Ibid., Ch. XXXVI—Evam durga-caturbhagam sthanika scintayet. இங்கு 'துர்க்கம்', என்ற சொல்லை டாக்டர் சாமசாஸ்திரி நகரம் என்று மொழி பெயர்த் திருத்தல் தவறாகும். இது அரண்செய்யப்பட்ட நகரமென்றிருத்தல்வேண்டும்.

கள் அல்லது ஸ்தானிகர்களின் அனுமதியோடு வைத்தியத் தொழிலில் ஈடுபடலாம். நகரத்தில் வசிப்பவர்கள்மீது கண்டிப்பான சுகாதார விதிகள் செயற்படுத்தப்பட்டன. தீ போன்ற இடர் நேர்வுகளுக்குத் தயாராகவும், தம் வீடுகளுக்கு வரும் வெளியார்பற்றியும், வீடுகளிலிருந்து வெளிக்கிளம்பும் வெளியார்பற்றியும் இவர்கள் அறிவிக்கவேண்டும். தவறினால் தண்டவரி செலுத்தவேண்டும் எனவே, இவர்கள் தம் கடமையைச் செய்வதில் அரசாங்க அலுவலர்களுக்கு மக்கள் பெருமளவு உதவினர். இரவில் காவற்காரர்கள் செய்த உதவியும் பெரிது.

## அர்த்தசாத்திர அரசாங்கத்தின் இயல்புகள்

### (அ) நிதிஇயல் முறை

கௌடிலியர் எதிர்நோக்கிய அரசாங்கத்தின் இயல்புகளை இப்பொழுது நாம் ஆராயத் தொடங்கலாம். மனிதக் கூர்மதியால் வகுக்கக்கூடிய அவ்வளவும் இதனுடைய நிதியின் மூலங்களாகும். இவைகளில் மிகவும் முக்கியமானது ராஷ்டிரத்தால் அல்லது அரசருக்குரிய நிலத்தால் செலுத்தப்பட்டதாகும். விளைவுகளில் ஆறில் ஒரு பங்கு (சத்பாகம்), சமயவரிகள் (பாலி), குறுநில மன்னர்களின் திறைகள் (காரா), அரசகுமாரர்கள் பிறக்கும் சமயத்தில் விதிக்கப்படும் தனிப்பட்ட வரி (உத்சங்கா), அரசருக்களித்த அன்பளிப்புகள் ஆகியவை பொதுவான, மரபான இவ் வரிகளைக் கொண்டிருந்தது. அடுத்து வந்தவை வணிகமும், அரசருக்குச் சொந்தமான நிலங்களுமாகும்.[81] கள்ளக் கடத்தலுக்கு எதிராகப் பெரு முன்னெச்சரிக்கைகள் எடுத்துக் கொள்ளப்பட்டன.[82] எந்தப் பொருள்களுக்கு வரிவிதிக்க வேண்டுமென்பது சுங்கக் கண்காணிப்பாளர்களுக்குத் தெரியும். சமைத்த உணவிலிருந்து உயர்ந்த மீன்வரை நகருக்குள் எடுத்துச் சென்ற எல்லாப் பொருள்கள்மீதும் வரிவிதிக்கப்பட்டது; இவைகளுக்கு நகர நுழைவாயில் முத்திரையிடப்பட்டது.[83] அரசருக்குரிய காடுகளும் கணிசமான வருவாயைக் கொடுத்தன. இவைகளைத் தவிர, சுரங்கங்கள், படகுப் பயணப் பாதைகள், நீதிமன்றத்தின் வருவாய்கள் ஆகியவைகளும் இருந்தன. சுருக்கமாக, தெரிந்தவரை, வருவாய்மூலங்கள் மிக்க விரிவானவைகளாகும். மக்களின் சமயத்தைப் பேணுவதற்கும் அரசாங்கம் தம் மக்கள்மீது வரி விதித்தது. இது புதிதாகத் தோன்றுகிறது.

### (ஆ) வணிகக் கட்டுப்பாடு

வணிகம், வியாபாரம், உற்பத்தி, தொழிலாளர் போன்றவைகளைக் கட்டுப்படுத்தியது அரசரின் மற்றோர் இயல்பாகும்.

[81] Ibid., Ch. XV. [82] Ibid., Ch. XVI, p. 133.

[83] Ibid., Chs. XXI & XXII.

"தலத்தில் உற்பத்தி செய்யப்படும் வணிகப் பொருள்கள் மையப்படுத்தப்பட்டனவென்றும், இறக்குமதி செய்யப்பட்ட வணிகப் பொருள்கள் விற்பனைக்காகப் பல இடங்களுக்குப் பகிர்ந்தளிக்கப்பட்டனவென்றும்'[84] நாம் அறிகிறோம். உள்நாட்டில் தயாராகும் பொருள்களுக்கு வெளிநாடுகளில் விற்பனை வாய்ப்புகளைப் பெறுவதற்குத் தகவலை வணிகக் கண்காணிப்பாளர்கள் திரட்ட வேண்டும். வெளிநாட்டுப் பொருளை இறக்குமதி செய்வோருக்கு இவர் சலுகை காட்டவேண்டியிருந்தது.[85] உற்பத்திகளையும் சுரங்கத் தொழிலையும் அரசு நடத்தியது. எங்கெல்லாம் இது சுரங்கத் தொழிலைச் செய்யவில்லையோ அங்கெல்லாம் தனியார் தொழில் துணிவிற்கு அனுமதி வழங்க ஊக்கப்படுத்தியது.[86] செம்பு, ஈயம், வெள்ளீயம், பாதரசம், பித்தளை, மணி செய்வதற்கான கலப்பு உலோகம், தங்கம், வெள்ளி, உப்பு போன்றவைகளின் உற்பத்தியை உலோகங்களின் கண்காணிப்பாளர் நடத்தினர்.[87] தொழிலாளர்களைக் கட்டுப்படுத்தும் பணியை அரசு மேற்கொண்டது. தொழிலாளர்களின் தொழிற்சங்கங்கள் (சம்ஹபிரதா—Samghabhrtah), நாட்டில் கூட்டுறவுப் பணிகளை நிறைவேற்றியவர்கள் ஆகியோர் அரசின் கட்டுப்பாட்டிற்குட்பட்டனர்.[88] நெசவுக் கண்காணிப்பாளர், நூல் ஆடைகள், துணிகள், கயிறுகள் ஆகியவற்றின் உற்பத்தியைக் கவனித்துக்கொண்டனர்; இவர்கள் கூலிகளையும் வேலை முறைகளையும் உறுதிப்படுத்தினார்கள்.[89] அரசாங்க அனுமதியின்கீழ் மது உற்பத்தி செய்யப்பட்டு விற்கப்பட்டது. தேவைக்கேற்ப மது விற்பனையைக் கண்காணிப்பாளர்கள் மையப்படுத்தினர் அல்லது பன்முனைப்படுத்தினர். அனுமதி இன்றி மதுவை உற்பத்தி செய்து விற்பனை செய்தவர்கள் பெரும் தண்டத்திற்குள்ளானார்கள். எல்லாவகையான வசதிகளாலும் அலங்காரங்களாலும் மதுக்கடைகள் கவர்ச்சியாக்கப்பட்டன. இதனுடைய விலையும் கட்டுப்படுத்தப்பட்டது.[90] மிருக வதைகளை அரசு கட்டுப்படுத்தி இதற்காக இறைச்சிக் கடைகளை நிறுவியது. குறிப்பிடப்பட்ட விலங்குகள் மட்டுமே கொல்லப்படலாம். சட்டத்தை மீறியவர்கள்மீது தண்டம் விதிக்கப்பட்டது.[91] பரத்தைமையும் தண்டிக்கப்பட்

[84] Ibid., Ch. XVI, p. 115. [85] Ibid.

[86] Ibid., Ch. XII, p. 94.

[87] Ibid.

[88] Arthasastra, Bk. iii, Ch. XIV, pp. 226—27.

[89] Arthasastra, Bk. ii, Ch. XXIII, pp. 136—7.

[90] Ibid., Ch. XX[illegible], [illegible] 1[illegible]—5. [91] Ibid., Ch. XXVI, pp. 147—48.

டது. அரசின் மேற்பார்வைக்கும் கட்டுப்பாட்டிற்கும் இது உட்படுத்தப்பட்டது.[92]

(இ) அலுவலர்களின் ஊதியமும் நடத்தையும்

அர்த்தசாத்திர ஆட்சிமுறையின் மற்ருேர் இயல்பு, சில விதிகளாலும் கட்டுப்பாடுகளாலும் அலுவலருக்குரிய நடத்தை நெறிப்படுத்தப்பட்டது. இப்பொழுதுபோல், பெரும்பாலும் எல்லா அலுவலர்களும் பணமாகவே ஊதியம் பெற்ருர்கள். அலுவலர்களின் மிகக்குறைந்த அடக்குமுறைகூடப் பொறுத்துக் கொள்ளப்படவில்லை. நீதிபதி, எழுத்தர், ஆணையாளர், சிறைக் கண்காணிப்பாளர் போன்றவர்களாகவோ அல்லது வேறெந்த அலுவலராகவோ இருந்தாலும் ஒவ்வொருவரும் தம் அலுவலர்க் கடமைகளை, அரசாங்கத்தின் பெருமையும் புகழும் பாதிக்கப் படாதவகையில் நிறைவேற்றவேண்டும். கடமை தவறிய நிகழ்வுகளில் தண்டனைகள் விதிக்கப்பட்டன.[93] எடுத்துக் காட்டாக நாட்டின் பாதுகாப்பிற்கு இடராக இருந்த அமைச்சர்களையும் (மகாமாத்தியர்) தலைவர்களின் கூட்டத்தையும் வெளிப்படையாக அழிக்கமுடியாமல் இரகசியமாகத் தண்டித்தனர்.[94] ஊதியத்தைப் பொறுத்தவரையில் தரப்படுத்தப்பட்ட ஒரு பட்டியல் இருந்தது. அரசின் அலுவலர்களை மருட்சிக்கு மேல் வைக்கக்கூடிய ஊதியம் வழங்கும் கொள்கை பின்பற்றப் பட்டது.[95] வேள்வி நடத்தும் குரு, ஆசிரியர், அமைச்சர், குடும்பத்தின் அதாவது குலகுரு, படைத்தலைவர், அரசுரிமைக்கு அடுத்த வாரிசு, தாய், அரசி ஆகியோர் ஒவ்வொருவரும் ஆண்டிற்கு 48,000 பணம் பெற்றனர். வாயிற்காப்போன், உவைக் கண்காணிப்பாளர், படைத்தலைவர், தண்டல்நாயகம், அரண்மனை அகவினைஞர், ஆகியோர் ஒவ்வொருவரும் 24,000 பண பெற்றனர். அடுத்து, தனி மதிப்புநிலை வரிசையில் இளவரசர்கள், தலைமை ஊர்க்காவலர், நகர, வணிக, சட்ட உற்பத்திக் கண்காணிப்பாளர், அமைச்சவையினர், நாட்டுப் புறங்கள், எல்லைகள் ஆகியவற்றின் கண்காணிப்பாளர்கள் ஆகியோர் ஒவ்வொருவரும் ஓர் ஆண்டிற்கு 12,000 பணம் பெற்றனர். இவர்களுக்குக் கீழ்ப் பட்டியலில், இராணுவம், குதிரைப் படை, தேர்ப்படை., காலாட்படை ஆகியவற்றின் தலைவர்கள், ஆணையாளர்கள் ஆகியோர் ஒவ்வொருவரும் 8 000 பணம் பெற்றனர். இப்படியே படையினர், கணக்கர், எழுத்தர், தூதர்கள், ஒற்றர், கிராமப் பணியாட்கள், கைதிகள் போன்ற இன்னும் பல

[92] Ibid., Ch. XXVII, pp. 149—50.
[93] Arthasastra, Bk. iv, Ch. IX.
[94] Arthasastra, Bk. v, Ch. I.
[95] Ibid., Ch. III, p. 297.

ளரையும் கொண்ட பட்டியல் நீண்டுகொண்டிருந்தது. பணமாக ஊதியங்கள் கொடுக்கும் இம் முறை வழக்கில் உள்ள நாணய முறையை முன்னேக்குகிறது. அக்கசாலையின் கண்காணிப்பாளர், நாணய ஆய்வாளர், இன்னும் பலரையும் கொண்ட அச்சிடுவதற்கென ஒரு தனித்துறையும் இருந்தது.[96] ஒய்வு ஊதிய விதிகள் பண்பு நயமுடையனவாகவும், ஏற்கத்தக்கன வாகவும் இருந்தன. 'சேவையில் இருக்கும்பொழுது இறந்தோரின் மைந்தர்களும் மனைவிகளும் பிழைப்பூதியமும் ஊதியங்களும் பெறுவர்.'[97] உண்மையான ஆட்சியோடும் மக்களின் நிலையோடும் தொடர்புகொள்ள அரசர் அடிக்கடி இராணுவச் சுற்றுப்பயணம் மேற்கொள்வார்.[98]

(ஈ) வெளிநாட்டுக் கொள்கை

பழங்கால இந்திய ஆட்சிமுறை வளர்ச்சியில் முதன்முறையாக, அரசின் வெளியுறவுகள், அதாவது, அரசின், மற்ற அரசுகளோடான உறவுகள் உருவாக்கிக் காணப்பெற்றதும் ஒழுங்குபடுத்தப்பெற்றதும் மற்றொரு கூறுகும். வெளிநாடுகள் எல்லாம் மூன்று வகையாகப் பிரிக்கப்பட்டிருந்தன. அவை நட்பு நாடுகள், பகை நாடுகள், நடுநிலை நாடுகள் என்பன. மேதகவு நிலையை அவாவிய நாட்டைச் சுற்றி இவை இருந்ததாகக் கருதப்பெற்றது. மேதகவு நிலையை அவாவிய அரசும் இதைச் சுற்றியுள்ள அரசுகளும் இப்பொழுது பன்னிரண்டுக்குமேல் இருக்கமுடியாது. சான்ருக (i) வெற்றியாளராகக் கூடியவர் மையத்திலும் விஜிகிசு (Vijigisu); (ii) பகைவர் அரி (Ari); (iii) விஜிகிசுவின் நண்பராகிய மித்திர பிரகிருதியும்; (iv) பகைவரின் நண்பராகிய அரிமித்திரரும், (v) மித்திரபிரகிருதியின் நண்பராகிய மித்திரமித்திரரும்; (vi) அமித்திரரின் நண்பராகிய அரிமித்திரமித்திரரும்; (viii) பக்கத்தில் உள்ள பகைவராகிய பார்சிணிகிராகரும்; (viii) பக்கத்தில் உள்ள நண்பராகிய ஆகிரந்தரும்; (ix) பார்சிணிகிராகரின் நண்பராகிய பார்சிணிகிரகசாரரும்; (x) ஆகிரந்தரின் நண்பராகிய ஆகிரந்தசாரரும்; (xi) இடைநிலையில் உள்ளவராகிய மத்யமரும்; (xii) நடுநிலையாளராகிய உதாசினரும்[99] ஆவர். இவர்களிடையே போர், அரசதந்திரம் ஆகியவற்றின் நட்புகள் தாராளமாக ஊடாடின. இவ்வாறு ஊடாடிய நட்புகள் ஆறு வகையான கொள்கைகளாகப் பகுக்கப்பட்டுள்

[96] Arthasastra, Bk. ii, Ch. XII, p. 95.

[97] Arthasastra, Bk. v, Ch. III, 299.

[98] Ibid., Ch. III, 299; அரசர்களின் பொழுதுபோக்குப் பயணங்களை அசோகர் சமயப் பயணங்களாக மாற்றினர்; Girnar R. E., viii.

[99] Bk. vi, Ch. II.

ளன. அவை, அமைதி (சாந்தி), போர் (விக்ரஹ), நடுநிலையைப் பின்பற்றுதல் (ஆசன), அணிவகுப்பியக்கம் (யானம்), நேசக் கூட்டு (சமாஸ்ரய), ஒன்றேடு போர் தொடுத்தலும் மற்றென்றேடு சமாதானம் செய்துகொள்ளலும்.[100] இதன் நிறைவேற்ற வழிகள் இறைமையின் ஏழு கூறுகளில் அடங்கி இருந்தன. அவை யாவன ; அரசர், அமைச்சு, நாடு, அரண், பொருள், படை, நட்பு. 'மண்டல' மெனப்பட்ட பேரரசில் மேதகவு நிலையை அடைவதற்கு இவைகள் எல்லாம் பயன்படுத்தப்பட்டன.* நாம் முன்னைய அதிகாரங்களில் பார்த்ததுபோல், கி. மு. ஏழாம் நூற்றாண்டிலிருந்து வட இந்திய அரசுகளுக்கிடையேயான அரசியலில் இக் குறிக்கோள் இயல்பாகவே மிக்க வலிமை பெற்றிருந்தது. இக் குறிக்கோள்தான் கி.மு. நான்காம் நூற்றாண்டின் இறுதியில் மோரியப் பேரரசைத் தோற்றுவித்தது. மண்டலத்தின் தோற்றத்தை விளக்குவதற்கு எழுந்த முதல் ஆய்வுக் கட்டுரையாகிய அர்த்தசாத்திரத்தில் இக் குறிக்கோள் விளக்கம் பெறுகிறதென்பதில் வியப்பில்லை. கௌடிலியர் மண்டலயோனி என்ற சொல்லைப் பயன்படுத்துகிறார் (Bk. vi, Ch. i).

தன்னாட்சி இனங்கள் அல்லது கூட்டாண்மை நிறுவனங்களை நோக்கிய அரசின் போக்குகள் நேர்மையாக ஆராயப்படவேண்டுமென்பது அறுவகைக் கொள்கையின் நோக்கமாக அரசின் வெளியுறவு மண்டலத்திற்குட்பட்டதாகும். பொதுவாக இவைகளில் இரண்டு வகையுண்டு. அவையாவன : (i) படை, வேளாண்மை ஆகிய தொழில்களைப் பிழைப்பிற்காகப் பின்பற்றும் கூட்டு நிறுவனங்கள் (வார்த்தாசஸ்திரோபஜீவின); (2) அரசியல் இயல்புடையனவும், ராஜா என்ற பட்டங்களைப் பெற்ற மக்களைக் கொண்டிருந்தனவும் (ராஜஸபோதோபஜீவின). முன்னது காம்போஜ, சுராஸ்திரா போன்றவைகளின் க்ஷத்திரிய கூட்டு நிறுவனங்களைக் கொண்டிருந்தது. பின்னது, மல்லர், விருஷிகள் போன்றவர்களைக் கொண்டிருந்தது. கௌடிலியரின் அரசின் போக்கை இயக்கிய பொதுக்கருத்து இவ்வாறு வரையப்பட்டிருக்கிறது: 'இராணுவ உதவி அல்லது நல்லெண்ணத்தின் கூட்டைக்காட்டிலும் ஒரு சங்கம் அல்லது கூட்டாண்மைக் கழகத்தைத் தமதாக்கிக்கொள்ளுதல் விரும்பத்தக்கதாகும். ஒரு சங்கமாக இணைந்துள்ளவர்களைப் பரந்த உள்ளங்கொண்ட கட்டுப்பாட்டுக் கொள்கையால் நடத்தவேண்டும். ஏனெனில், இவர்கள்

[100] Arthasastra, Bk. vii, Ch. I.

* இதைக் கௌடிலியர் மண்டலமென்கிறார், இது வட்டமெனப் பொருள்பெறும். அதாவது, அரசர்களின் அல்லது சக்கரங்களின் வட்டம். இதன் தலைவராக சக்கரவர்த்தி அதாவது பழங்கால இந்தியப் பேரரசர் இருந்தார்.

வெல்ல முடியாதவர்கள். ஒற்றுமையின்றி இருப்பவர்களைப் படையாலும் உட்பகையாலும் வெல்லவேண்டும்.'[101] கூட்டணைப் பாகவும் வலிமையாகவும் இருந்த குடியரசுகளை நேர்மையாக வாழவிடுதல் மோரியக் கொள்கையாக இருந்ததென்று ஜெய்சுவால் வேறுவிதமாகக் கூறுகிருர். (ஏனெனில், இவைகளை வெற்றிகொள்வது கடினமாகும்.) தனிமைப் படுத்தப்பட்ட அரசுகள் உட்பிரிவுக் கொள்கையால் வலிமையற்றவைகளாக்கப் பட்டுப் பின் படையால் அழிக்கப்பட்டன. இணைப்புப் பெற்ற சிலவராட்சி அரசுகள் தம் வலிமைக்கேற்ப மாறின. இவைகளில் சில சமமாக நடத்தப்பட்டன; மற்றவைகளுக்கு உதவியளிக்கப் பட்டன; இவை இராணுவ உதவி அளிக்கவேண்டுமென்று எதிர் பார்க்கப்பட்டன. கலப்பற்ற நேச உடன்பாட்டிற்கெதிராக இவைகளிடமிருந்து படை உதவி பெறுதலை ஒரு நிபந்தனையாகக் கொள்ளப்பட்டது. இக் கொள்கையின் விளைவாக வலிமையான சிலவராட்சிகள் மோரியப் பேரரசிற்குப் பின்தொடர்ந்து நிலவின. ஆனுல், வலிமையற்றவர்கள் ஆற்றலிழந்து பணிந்தனர்.[102] மோரியப் பேரரசின் நிலைகளையும் இந்த ஆய்வுக் கட்டுரையின் கருத்தாய்வு இயல்பையும் கொண்டு அர்த்தசாத்திரம் இதனுடைய அனுமானங்களை அடிப்படையாகக்கொண்டிருந்ததை மனத்தில் கொண்டு மேதகவுநிலைக் குறிக்கோள் அல்லது இறைமை அரசுகளுக்கிடையேயான உறவுகளை மிகைப் படுத்தியதென்று நாம் உறுதியாகச் சொல்லலாம். தன்னுட்சி இனங்கள், முடியரசு நாடுகள் ஆகியவற்றின்கீழ்ப் பலதரப்பட்ட தன்னுட்சி உரிமையைப் பெற்றிருந்த பல்வேறு அரசுகளைக் கொண்டிருந்த மண்டலம் அல்லது பேரரசு அரசுகளுக்கிடையே யான உறவுகளை முடிவிற்குக் கொண்டுவர முயன்றது.

## அர்த்தசாத்திர ஆட்சிமுறையின் அகல் விரிவான இயல்பு

அர்த்தசாத்திரத்தால் எதிர்நோக்கப்பட்ட அரசியல் பரவலான இயல்புகள் இவைகள்தான். இரட்டை நோக்கங்கொண்ட அகல்விரிவை இது முதன்மையாகக் கொண்டிருந்தது. அகத்தே சமூக வாழ்க்கை முழுவதையும் இது கட்டுப்படுத்தவும் கருத்திற் கொள்ளவும் முயன்றது; புறத்தோ அனைத்திந்தியாவின் இறைமையை இது நோக்கமாகக் கொண்டிருந்தது. 'உண்மையான சமயத்தையும், ஒருவர் துறவறம் கொள்ளுவதற்கான நிலைகளையும் வயதையும் ஒழுங்குபடுத்தவும்' இது முயன்றது. கணவனும் மனைவியும், தந்தையும் மகனும், அண்ணனும் தங்கையும்,

[101] Arthasastra, Bk. xi, Ch. I.

[102] Jaiswal, Hindu Polity, Pt. I, p. 142.

தந்தையுடன் பிறந்தாரும் உடன்பிறந்தார் மகனும், ஆசிரியரும் மாணவரும் ஒருவருக்கொருவர் பற்றுறுதியோடு இருக்கவும், நேர்மைக்கேடாக நடக்காதிருக்கும்படியும் அரசு பார்த்துக் கொள்ளவேண்டும். வறியோருக்கும், கருவுற்ற பெண்களுக்கும், பிறந்த குழந்தைகளுக்கும், அனாதைகளுக்கும், முதியோருக்கும், மெலிந்தவர்களுக்கும், பிணியுற்றவர்களுக்கும் உதவியற்றவர்களுக்கும் அரசு ஆதரவளிக்கவேண்டும்.[103] மணவினையின் பல வழிகளும், மணவாழ்க்கைப் பிரிப்பு வழிகளும், பிற்பட்ட மணவினைகளும், எதற்கும் மசியாத பெண்களுக்கு நடத்தை கற்பித்தலும் இங்குச் சொல்லப்பட்டிருக்கின்றன. ஒருபுறம், பரத்தைமை, சூதாட்டம், சமூகக் களியாட்டங்கள், மது அருந்துதல் ஆகியவை கட்டுப்படுத்தப்பட்டன. மறுபுறம், சமயச் சார்புடைய வரிகள் விதிக்கப்பட்டன. சமய நிறுவனங்களை மேற்பார்வையிட அலுவலர்கள் அமர்த்தப்பட்டனர்.[104] இதைவிட விரிவானதோர் உணர்வாற்றல் மிக்க ஓர் அரசை எவரும் காணமுடியாது. வண்ணார் கூலியை நிர்ணயம் செய்வதுபோன்ற மிக நுட்பமானவைகளைக்கூடக் கட்டுப்படுத்தும் வெறி விட்டுவைக்கவில்லை.

உலகத்தின்மீதான இறைமை, அதாவது, நடைமுறையில் அனைத்திந்தியாமீதான இறைமையைப்பற்றிய இந்தியா இரண்டாவது இயல்புபற்றிய வரையில், அரசின் வெளியுறவுகள் எவ்வாறு ஆழ்ந்த ஆய்விற்கிலக்காகியதென்பதையும், சுற்றியிருந்த அரசுகள் எப்படி மூன்று தொகுப்புகளாகப் பிரிக்கப்பட்டிருந்தனவென்பதையும், இறுதியாக ஆறுவகைக் கொள்கை பின்பற்றப்படுவதற்காக எவ்வாறு வகுத்துரைக்கப்பட்டதென்பதையும் நாம் பார்த்திருக்கிறோம். அரசின் வெளியுறவுகள் பற்றிய தலைப்பிற்கு அர்த்தசாத்திரத்தில் பாதிக்குமேல் ஈடுபடுத்தப்பட்டிருக்கிறது. இவருடைய அரசியல் தத்துவத்திற்கு உயிரூட்டிய இக் கருத்து ஆசிரியன் மனத்தில் இருந்ததாகத் தோன்றுகிறது. மனிதச் செயல்கள் இடையறாது மாறிக்கொண்டிருந்ததாக இவர் கருதினார். எனவே, அரசுகள் விரிவடைய வேண்டும் அல்லது சிதைவுற வேண்டும். எனவே, இவைகள் இடைவிடாத விரிவிற்கு முயலவேண்டும். மேலும், மோரியப் பேரரசின் எடுத்துக்காட்டும் இவர்முன் நின்றது.

கௌடிலியரின் அரசின் மற்றொரு கூறு ஒழுக்கங்கள், சமயங்கள் ஆகியவைபற்றிய இதனுடைய மனப்போக்கு. ஏனெனில்,

[103] Beni Prasad, 'The State in Ancient India', p. 260.

[104] 'Arthasastra,' Bk. V, Ch. II, p. 244. கடவுளர்களை மேற்பார்வையிடுவோர் தேவதயக்ஷகர்கள் எனப் பெயர்பெற்றனர்.

அர்த்தசாத்திரத்தில் எதிர்நோக்கப்பட்டதைப்போல் அரசு, இதனுடைய இருப்பிற்கும் போர்முறைக்கும் ஒழுக்க நெறிகளைக் கீழ்ப்படுத்துகிறது. சமயம்பற்றியும் அரசு இதே போக்கைத் தான் மேற்கொள்ளுகிறது. அரசியற் பயன்களை அடைவதற்கு இதை ஒரு வழியாகவும் அரசு பயன்படுத்தியிருக்கிறது. இக் கருத்துகளின் நடைமுறைப் பயன்பாட்டிற்கு ஒருவர் அரசராக, பிராமணராக அல்லது கடவுளராக இருந்தாலும் ஒவ்வொருவரும் உட்படவேண்டும். சான்ருக, 'ஒருவரின் ஒரே மகன் அல்லது அரசரின் வாரிசு பயனற்றவராக இருந்தால், இவருக்கு ஒரு மகனை உண்டுபண்ண முயற்சிகள் எடுக்கவேண்டும்; அல்லது இவருடைய மகள் பிள்ளைபெறச் செய்யலாம்...ஆனால், பயனற்ற ஒருவரும் கொடியவரும் அரியணையேற்றப்படமாட்டார்கள்.'[105] அரசகுடும்ப நெறிமுறை அரசின் நெருக்கடி நிலைகளுக்குப் பணிய வேண்டியதுமட்டுமன்றிக் கடவுளரின் கோயில்களும் தொழிற் சங்கங்களின் சொத்துகளும்கூடப் பொருளகத்தை நிரப்புவதற்குச் சூறையாடப்படலாம்.[106] அரசை எவ்வளவு தூரம் சாதி இயக்கியதென்ற வினா இங்குத் தோன்றலாம். மெய்யாகவே, ஆட்சியின் மீது இது சிறிது செல்வாக்குப் பெற்றிருந்தது; ஒரு குறிப்பிட்ட அளவிற்கு சாதிமுறையின் மெய்க்கருத்தை ஆட்சிமுறைகள் மதித்தன. சான்ருக, குற்றவியல் நீதிபற்றியவைகளில் பிராமணர்கள் சில சலுகைகள் பெற்றிருந்தனர். ஆனால், இவர்களின் நிலையில்கூட தண்டனையிலிருந்து தப்பித்துக்கொள்ளும் ஐயப்பாட்டிற்கு நீதியின் இரக்கமற்றதன்மை இடம் வைக்கவில்லை. சான்ருக, கற்பழிப்பு வழக்கில் 'ஒரு பிராமணக் குற்றவாளியின் குற்றத்தைச் சுட்டிக்காட்டுவதற்குச் சூடிடப்படவேண்டுமென்றும், இவருடைய குற்றத்திற்காகச் சூடிடப்பட்டதைப் பொதுவில் அறிவித்தபின், பிராமணக் குற்றவாளியை அரசர் நாடுகடத்துவார் அல்லது வாழ்நாள் முழுதும் சுரங்கத்தில் உழைக்கத் தண்டனை வழங்குவார்.'[107] சட்டம் வெகு கடுமையாக இருந்தாலும், சட்டத்தின் நடுநிலைமை நேர்மையை இச் செய்தி உறுதிப்படுத்துகிறது.[108] ஆனால், நல்ல அரசாங்கம், அரசியல் நல்வாழ்வு ஆகியவற்றை நிறைவேற்றுவதற்கென்றே இதைச் செய்யவேண்டியிருந்தது. இந்தப் பயனை அடைய ஒவ்வொன்றும் ஒவ்வொருவரும் ஒரு வழியாக (உபாயமாக) இருந்தனர். எனவேதான் உபாயங்கள் நேர்மையென எண்பிக்கத் தக்கனவாக இருந்தன. குடிமக்கள் பற்றி நல்லெண்ணத்தை மேற்கொள்ளும் நல்லாட்சி வல்லரசாக

105 'Arthasastra,' Bk. i, Ch. XVII, p. 37.
106 'Arthasastra,' Bk. v, Ch. II.
107 'Arthasastra,' Bk. iv, Ch. VIII, p. 270.
108 Beni Prasad, 'The State in Ancient India', p. 274.

அரசர் இருக்கவில்லை. அரசின் நலனைப் பெற, அதாவது தம் மக்களின் அரசியல் நல்வாழ்விற்குத் 'தம்மை மகிழ்விக்கும் எதையும் நலமென்று கருதாமல், ஆனால், மக்களை மகிழ்விக்கும் எதையும் நலமெனக் கருதும்'[109] வகையில் இவருடைய போக்கை அமைத்துக்கொள்ளவேண்டும். அதாவது, இது தன்னை அர்ப்பணித்துக் கொள்ளுதல் விரும்பப்படுதலேயன்றி, அரசரின் ஆணவக் கட்டளையன்று. நல்லெண்ணமுள்ள அரசரின் தனி மனப்போக்குகள் அரசின் நலனாக, தம்முடைய கடமைகளைச் செய்யும் இவருடைய ஆற்றல்தான் முக்கியமானது. இறுதியாக, நோக்கில் அகல் விரிவானதாகவும், மெய்க்கருத்தில் மிகத் தூய்மையானதாகவும் இருந்த ஓர் அரசையே கௌடிலியர் கருத்திற்கொள்ளுகிறார்.

### அர்த்தசாத்திரத்தின் குறைபாடுகள்

அர்த்தசாத்திரத்தின் குறைபாடுகளைக் கருத்திற்கொண்டு நாம் வலியுறுத்தும்பொழுது, அரிஸ்டாட்டிலின் 'அரசியல்' என்ற நூலைப்போலவோ, வில்சனின் 'அரசு' என்ற நூலைப்போலவோ இது இருக்கவில்லை என்பதை நாம் நினைவுகொள்ளவேண்டும். அர்த்தசாத்திரத்திலும் இதன்வழியாகவும் சரிநுட்ப வாதப் பொருத்தமுடைய செயலமுத்த மிக்க உணர்வு ஒன்று செல்கிறது. அரசாங்கத்தின் குற்றமற்ற விளக்கமொன்றைக் கொடுக்க மிகக் கவனத்தோடும் சூழ்ச்சித் திறத்தோடும் விவரங்கள் உழைத்து அளிக்கப்பட்டிருக்கின்றன. அரசாங்கம்பற்றிய நனிசிறந்த அறிவியல்முறை ஆய்வுக்கட்டுரை ஒன்றின் கருத்துப் பதிவை இது விட்டுச் செல்கிறது. சிறப்பான பயன் நாட்டமுடைய விளக்கத்தைக் கருத்திற்கொண்டு அரசாங்கத்தின் செயல்முறை சார்ந்த முறைகளை வரைவதாகக் கருதிக்கொண்டு கௌடிலியர் மிகவும் உயிர்ப்புத்திறமற்ற ஒரு விளக்கத்தில் மனம்போனவாறு சென்று விடுகிறார்; புறஇயல் மெய்ம்மையின் தொடர்பை இவர் இழந்துவிட்டதாக மக்கள் நினைக்கும்படி இது செய்துவிடுகிறது. இருந்தபோதிலும், அரசுபற்றிய புனைவுக் கோளியல்பான ஒரு விளக்கத்தை இது அளிக்க முற்படுகிறது. அர்த்தசாத்திரத்தின் போதோ, பிந்தியோ இது எக்காலமாக இருந்தபோதிலும், எந்த அரசியலும் இவ்வெல்லா ஆட்சி இயல் விவரங்களையும் காணமுடியாது. ஆனால், இவைகளின் பெரும்பாலானவைகளின் பொதுவான இயல்புகள் பொதுவாக இந்திய அரசுகளிலும் குறிப்பாக மோரிய அரசியலிலும் இருந்திருக்கவேண்டும். அதாவது (டாக்டர் பார்னெட் குறிப்பிடுவதுபோல), மோரிய அரசாங்கத்தின் குணவியல்பாகவுள்ள அரசாங்க மரபுகளையும் பழக்க வழக்கங்களையும் அர்த்தசாத்திரம் தாராளமாக எடுத்துக்கொள்ளுகிறது.

[109] 'Arthasastra,' Bk. i, Ch. XIX.

இந்தியாவில் காணப்பெற்ற அரசாங்க மரபுகளையும் கூறுகளையும் மோரிய அரசாங்கத்தின் பரந்த கட்டுப்பாடு காரணமாக இவைகளை மோரிய அரசாங்கம் செறிசுருக்கமாக்கிற்று.

## அசோகரின் ஆட்சி

இப்பொழுது நாம் அசோகரின் அரசாங்கத்தின் விவரங்களைப் பார்க்கலாம். நான்காண்டு (கி.மு. 274—270) இவருடைய போட்டியாளரோடு நடந்த போராட்டத்திற்குப் பின் இவர் அரியணையேறினர். கி.மு. 270-ல் இவர் தம் முடிசூட்டு விழாவை நடத்தினர். கி.மு. 232-ல் இவர் இறக்கும்வரை முப்பத்தெட்டாண்டு இவர் ஆட்சி செய்தார்.[110] கி.மு. 262-ல் நடந்த கலிங்கப் போரைத் தவிர, கிளர்ச்சி நிகழ்ச்சிகளின்றிச் செறிந்த செயற்பாடுகளைக் கொண்ட இவைகளெல்லாம் நாட்டு மக்களின் நலனையும் மன்பதையின் நலனையும் கொண்டிருந்த புகழ்மிக்க காலம் இதுவாகும். கி.மு. 265-ல் புத்த சமயத்திற்கு மாறியதும் கலிங்க வெற்றிக்குப் பின், 'தர்மத்தைப் பின்பற்றுவதிலும், தர்மத்தை விரும்புவதிலும், தர்மத்தைப் பயிற்றுவிப்பதிலும்' இவர் ஆர்வம் காட்டினர்.[111] கி.மு. 260-ல் இச் சமயத்தில் சேர்ந்தார்; புத்த சமயக் கருத்துகளைப் பரப்புவதற்குச் செயல்திறத்தோடு இவர் பிரசாரம் செய்யத் தொடங்கினர். இப்பொழுதுதான் இவர் தம் முதல் பாறைக்கல் ஆணைகளை வெளியிட்டர்; 'சமயச் சுற்றுலா'க்[112]களையும் இப்பொழுதுதான் தொடங்கினர். 'இவரது ஆட்சியாண்டாகிய பதின்மூன்றும் பதினான்காம் ஆண்டுகளின் பொழுது அசோகரின் செயற்பாடுகள் மிக உச்சநிலையை அடைந்தன. இவர் பதினன்குக்குக் குறையாத ஆணைகளை வெளியிட்டார். இவைகளில் பதினன்கு பேரரசின் தொலை தூரங்களில் உள்ள இடங்களாகிய, கத்தியவாரில் கிர்ஞரிலும், பஞ்சாபில் மான்சேராவிலும், ஷாபாக்கார்ஹி (Shahbazghari)யிலும், இதே போன்றவை பன்னிரண்டும், இன்னும் இரண்டும் சேர்ந்து ஒரிசாவில் உள்ள தாலூலியிலும் ஜவ்காதாவிலும் ஒரு தொகுப்பில் பொறிக்கப்பட்டிருந்தன.'[113] இவர் புகுத்திய ஆட்சி நடவடிக்கைகளும் மற்றவைகளும் இவைகளில் சொல்லப்பட்டிருக்கின்றன. கிணறுகளை வெட்டவும், நிழல் தரும் மரங்களை நடவும், சாலையோரங்களில் தங்குமிடங்களைக் கட்டவும் இவர் ஆணையிட்டார்; தம்முடைய நாட்டில் மட்டுமன்றி வடமேற்கு எல்லைப்

[110] R. K. Mukherji, 'Asoka,' pp. 23, 44—46.

[111] R. E. xiii.

[112] R. K. Mukherji, 'Asoka', p. 18.

[113] C. H. I., p. 496.

புறத்திலும் தென்னிந்தியாவில் உள்ள சுயேச்சையானதும் அரைகுறை சுயேச்சையான அண்டை அரசுகளிலும், அண்டியோக்கஸ் நாட்டிலும் அதற்கப்பாலும் மனிதர்களுக்கும் விலங்குகளுக்கும் வைத்திய உதவியளிக்க நடவடிக்கைகளை எடுத்தார்; மக்கள் தம் வாழ்க்கையை மிக்க நேர்மையுடையதாகவும், மகிழ்ச்சியுடையதாகவும், தகவுடையதாகவும் செய்ய இவர் மக்களைக் கேட்டுக் கொண்டார். இவரின் முன்னோர்களுடைய, வேட்டையாடுதல் விடுமுறைக் கேளிக்கைகள் ஆகியவற்றை ஒழித்து இவைகளின் இடத்தில் 'அறிவுறுத்துகின்ற காட்சிகளையும், கடமை பேணும் மாநாடுகளையும் வைத்தார்'; இறுதியாக ஒழுக்கமுறைச் சட்டத்தைப் பரப்புவதற்கு ஐந்தாண்டிற்கொருமுறை அலுவலர்களின் சுற்றுப்பயணத்தைத் தொடக்கிவைத்தார்; தர்ம மகாமாத்திரர்களைக் கொண்ட மதகுரு தொடர்புடைய துறை ஒன்றையும் நிறுவினார். ஆட்சிக்குட்படுத்தப்பெறாத எல்லைப்புற மக்களின் பற்றுறுதியைத் தக்கவைத்துக்கொள்ளச் சிறிது அக்கறை காட்டித் தம் ஆளுநர்களுக்கும் அரச பதிலாட்களுக்கும் இதற்கெனத் தனிப்பட்ட அறிவுரைகளை வெளியிட்டார். ஏறத்தாழ கி.மு. 253-ல் பௌத்தர் உலகில் மறக்கமுடியாத நிகழ்ச்சியொன்றாகிய மூன்றாவது பௌத்தப் பேரவையொன்று பாடலிபுத்திரத்தில் கூடியது. கி.மு. 250-ல் புத்தர் பிறந்த இடமாகிய லும்பினித் தோட்டத்திற்கு இவர் சென்றார். இந் நிகழ்ச்சியின் நினைவுச் சின்னமாக ஒரு தூண் நட்டார். கி.மு. 243-க்கும் 242-க்கும் இடையில் இவர் தூண் கல்வெட்டாணைகளை வெளியிட்டார். உலகத்தில் வேறெந்த அரசராலும் ஈடுகட்டமுடியாத நேர்மையும் அறச்செயல் விருப்பையும் கொண்ட பெருமைக்குரிய பேரரசரும் பெருந்தன்மைமிக்கவருமாகிய அசோகர் கி.மு. 232-ல் மறைந்தார்.

## அசோகரின் கடமையும் அரசாங்கமும்

ஏற்கெனவே நன்கமைக்கப்பெற்ற செழிப்பான ஒரு பேரரசின் ஆட்சியுரிமை பெற்ற அசோகர், ஆட்சிஇயல் ஏற்பாடுகளைப் புதிதாகத் தொடங்கவேண்டியிருக்கவில்லை. ஆட்சி முறையை அப்படியே ஏற்றுக்கொண்டு தேவைக்கேற்ப அவ்வப்போது மாறுதல்களைப் புகுத்தினார். வடமேற்கே ஹீரத்திலிருந்து கிழக்கே அசாம், ஒரிசாவரையும் இமயமலைகளிலிருந்து தெற்குவரையும் பரவியிருந்த ஒரு பேரரசும், அரசின் நல்வாழ்வும் இவருடைய குணவியல்பையும் ஆளுமையையும் சார்ந்திருந்தன. இது எத்தகைய பேரரசு என்பதையும், இதன் மரபுகள், மக்கள், பிரச்சினை ஆகியவை என்னவென்பதையும் உணர்ந்துகொள்ள நாளாகவில்லை. இவர் நிலையை இவர் அறிந்திருந்தார். 'எல்லோ

ருடைய நலனின் மேம்பாடுதான், உண்மையில் இவருடைய மிக உயர்ந்த கடமையாகும்'[114] என்று இவர் நினைத்தார். பின் இதற்கு அர்த்தசாத்திரம் ஏற்பிசைவளித்தது. மறுபடியும் இதன் மூலம் இதுதான்; கடுமுயற்சியும் விரைசெயலும்.[115] பொதுநலனை வளர்ப்பதைக் காட்டிலும் பெரும்பணி இருக்க முடியாது.[116]

இவருடைய இப் பணித்திட்டத்தில் இவருடைய அமைச்சவையினர் இவருக்கு உதவினர்.[117] இக் குறிக்கோள் பணித்திட்டத்தின் வலிமையை அலுவலர் அணி, ஒற்றர்கள் ஆகியோராலும் வேறெந்த வழிகளாலும் கண்டறியமுடியாது.[118] ஆட்சி வசதிக்காகப் பேரரசு பல மாநிலங்களாகப் பிரிக்கப்பட்டிருந்தது; இவைகளில் மிகத் தொலைவில் இருந்தவை அரச பதிலாட்களின் பொறுப்பில் இருந்தன. ஆணைகளில் ஆரியபுத்திரரென்றும் குருமாரர்கள் என்றும் வழங்கப்பெறும் அரசகுமாரர்களுக்கு அரச பதிலாட்களுக்குரிய பதவிகள் ஒதுக்கப்பட்டிருந்தன. அரச பதிலாட்களாக இருந்த நான்கு அரசகுமாரர்களை ஆணைகள் குறிப்பிடுகின்றன. தக்கசிலம். உஜ்ஜெய்னி, தொசாலி, சுவர்ன கிரி ஆகிய இடங்களைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி செய்யப்பட்ட மாநிலங்கள் இவைகளாகும் (கலிங்க ஆணை ஒன்றும், இரண்டும். தாஹுலி பதிப்புரு; சிறிய பாறைக்கல்வெட்டாணை ஒன்று, பிரமகி பதிப்புரு).[119] அரச பதிலாட்களின்கீழ் மகாமாத்திரர் எனப் பதவிப்பெயர் கொண்ட உயர் அலுவலர் பலர் இருந்தனர்.[120] பல்வேறு ஆட்சிப்பணி பொறுப்புகளில் இவர்கள் இருந்தனர். சாம்பா, தொசாலி போன்ற நகரங்களில் இவர்கள் சுயேச்சையான பொறுப்பேற்றிருந்தனர்.[121] சுவர்னகிரியில் இருந்ததைப்போல் இவர்கள் சில சமயங்களில் அரசபதிலாட்க

114 cf. Vidyavinitorajahi, etc....'Arthasastra,' Bk. i. Ch. V, Prajasukhesukham-rajnah prajanam ca hite hitam, Ibid., Ch. XIX.

115 cf. Tasmannityotthito-raja-kuryad-dharmanusasanam. Ibid. Ch. XIX.

116 Girnar, R. E., vi Mukherji, 'Asoka,' p. 149.

117 Girnar, R. E. vi, (Parisat) cf. 'Arthasastra,' Bk. i, Ch. XIX.

118 Ibid., Mukherji, 'Asoka,' p. 149, cf.

119 Mukherji, Asoka, p. 51, cf. 'Arthasastra,' Bk. ii, Ch. XXXV.

120 cf. Arthasastra, Bk. i, Chs. X, XII, & XIII; Bk. v, Ch. III—இங்கு மகாமாத்திரர் என்பதன் பொருள் அமைச்சர். J. R. A. S. 1914, p. 387-ல் தாமஸ் இதை 'அலுவலர்' என்று மொழிபெயர்த்திருக்கிறார்.

121 First Separate R.E. of Dhauli I; Second Separate R.E. of Jaugada; cf. Arthasastra, Bk. iv, Ch. V-Nagarikamahamatra, அதாவது, நகரப் பொறுப்பேற்றிருந்த மகாமாத்திரர்.

ளோடு தொடர்புபடுத்தப்பெற்றார்கள்.[122] இவர்கள் அமைச்சவையாகிய மந்திரி பரிஷத்திலிருந்து நெருக்கடி நிலைபற்றியவைகளை விவாதித்தனர்.[123] இத்துடன் இவர்கள் பிற்காலத்தில் பொதுமக்களின் ஒழுக்கநெறித் தணிக்கையாளர்களாக, அதாவது, தர்ம மகாமாத்திரர்களாகவும், உவகைக் காப்பாளர்களாகவும் அதாவது ஸ்திரிஎத்யக்ஷ மகாமாத்திரர்களாகவும், சில சமயக் குழுக்களின் மேற்பார்வையாளராகவும் அமர்த்தப்பட்டிருந்தனர்.[124] இதே தரத்தைப்போல் அல்லது மகாமாத்திரருக்குக் கீழே யுத்தர்கள், இராஜுகர்கள், பிரதேசிகர்கள் இருந்தனர்.[125] டாக்டர் முகர்ஜி நினைப்பதுபோல், லாஜவகனிகர்கள், (Lajavacanikas) 'அரச பதிலாட்கள் வழியாகவன்றி அரசரின் செய்திகளை நேராகப் பெறும் உரிமைபெற்ற மாநில ஆளுநர்களாக இருந்ததாகத் தோன்றவில்லை'[126] டாக்டர் ஹல்ட்ஸ் (Hultzsch) என்பவரின் பொருள் விளக்கம் மிக இயல்பாக இருப்பதுபோல் தோன்றுகிறது.[127] அதாவது, 'அரசரின் சொற்படி' என்று மட்டுமே பொருள்படுகிறது. 'ராஜுகர்களைவிட மேலானதொருவகை'[128] புருஷர்கள் (Purusas) எனப்பட்ட அலுவலர்களும் இருந்தனரென்று தோன்றுகிறது. 'செயலிகள்' அல்லது ஒற்றர்கள் எனக் குறித்துக்காட்டும் டாக்டர் ஹல்சனின் பொருள் விளக்கம் மிக்க இயல்பானதாகத் தோன்றுகிறது.[129] டாக்டர் பார்னெட் குறிப்பிடுவதுபோல், புருஷர்கள் காவலர்களாக (Policemen) இருந்திருக்கலாம். ஏனெனில், அர்த்தசாத்திரத்தில் குதபுருஷர்கள் (Gudhapurusas) எனப்பட்ட மற்றொருவகையினரும் இருந்தனர்.[130] புருஷர்களிலும் பிரதிவேதகர்களிலும், பின்னவர்கள் அரசருக்குத் தவறாது அறிக்கை அனுப்பினர். நாட்டில் எங்கும் இவர்கள் அமர்த்தப்பட்டிருந்தனர்.[131] எனில், இந்தி

122 Girnar, R. E. vi : Shabazarhi R. E., vi.

123 Brahmagiri Rock Inscription cf. Arthasastra, Bk. i, Ch. XV, Atyayika karye mantrino mantri parisadam cahuya bruyat.

124 Shabazgarhi R.E. v; Delhi-Topra P.E. vii. 'சங்கங்களின் காரியங்களைக் கவனித்துக்கொள்ளும்படி என்ஞல் சில மகாமாத்திரர்கள் கட்டளையிடப்பட்டனர்; மற்றவர்கள் பிராமணர்களையும், ஆஜிவிகர்களையும்; பிறர் ... நிர்கிரந்தர்களையும்—மற்றவர்கள் மற்றச் சமயக்குழுக்களையும்—குறிப்பாக வேறுபட்ட குழுக்களை வேறுபட்ட மகாமாத்திரரும் கவனித்துக்கொண்டனர்.'

125 Girnar, R.E., iii.

126 Mukherji, Asoka, pp. 52, 126.

127 'The Inscriptions of Asoka,' p. 117.

128 Mukherji, 'Asoka,' p. 177.

129 'Inscriptions of Asoka,' Delhi-Topra P.E., iv, His introduction also, p. xli.

130 Arthasastra, Bk. i, Chs. XIX & XII.

131 Girnar R.E. vi.

யாவில் நாம் அறிந்த மரபுகள் எதற்கும், மையப்படுத்தலின் தேவைகளும் அர்த்தசாத்திர ஒற்றர்த் தொகுதியைப் போன்ற ஆய்வுக் கட்டுரைகளின் விதியமைப்புகளும் நிறுவப்பெற்ற நிறுவனமாக இருக்கின்றன. இதனை அசோகர் பெருமளவு பயன்படுத்தியதில் வியப்பில்லை. மகாமாத்திரர், ராஜுகர், பிரதேசிகர், யுக்தர் ஆகிய நால்வகைப் பதவியின் அலுவலர்களில், நான்கு அரச பதிலாட்களுக்கு உதவ, மகாமாத்திரர்கள் மாநில ஆளுநர்களாக அமர்த்தப்பட்டதாகத் தெரிகிறது.[132] இவர்கள் எல்லைப்புற மாநிலங்களிலும் பொறுப்பேற்றிருந்தனர். எல்லைப் பகுதிகளின் காவலருக்கு ஒப்பாக அந்தமகாமாத்திரர் (Anta-mahamatra) என்ற பெயரைப் பெற்றிருந்தனர்.[133] முன்னர் கூறியதுபோல், இவர்களில் சிலர் மதகுருசார்ந்த துறையின் தலைவர்களாகிய தர்ம மகாமாத்திரர் என்ற பெயரில் இருந்தனர். உவகை மகளிர் பொறுப்பை ஏற்றுக்கொண்டிருக்கும் பொழுது இவர்கள் ஸ்திரி அத்யக்ஷ மகாமாத்திரர் எனப் பெயர் பெற்றனர்.[134]

மகாமாத்திரர்களின்கீழ், பல ஆயிரம் பேர்களைத் தம்கீழ்க் கொண்டிருந்த ராஜுகர்கள் இருந்தனர். நகர மக்களுக்கு மாறாக 'நாட்டுப்புற மக்களின் நல்வாழ்விற்காகவும் மகிழ்ச்சிக்காகவும்'[135] பணிபுரிதல் இவர்களின் கடமையாகும். அரசரால் இவர்களுக்கு அளிக்கப்பட்ட பெருமளவு உசித அதிகாரங்களை இவர்கள் பெற்றிருந்தனர். பிரிட்டிஷ் இந்தியாவின் தற்கால மாவட்ட குற்றவியல் நடுவரைப்போல், மக்களுக்கும் மத்திய அதிகாரத்திற்கும் இடையில் தொடர்பைப் பேணியவர்கள் என்றமுறையில் நாட்டில் மிகச் சிறந்த அலுவலர்களாக இவர்கள் இருந்தனர். நாட்டு மக்களாகிய குழந்தைகளின் பொறுப்பை ஏற்றுக்கொண்ட 'அறிவுத் திறம்வாய்ந்த தாதிகளாக,' அசோகரின் கண்களுக்கு இவர்கள் தோன்றினார்கள். நகர மக்கள் கைத்திறமுடையவர்களாக இருந்தனர். தம் நலனிற்குப் பெருமளவு கவனத்தை இவர்கள் வேண்டவில்லை. ஆனால், இவர்கள் தம் கடமைகளை நம்பிக்கையோடு நிறைவேற்றவேண்டுமென்பதற்காகத் தலைப் பொறுப்பையும் உசித அதிகாரங்களையும் அசோகர் இவர்களுக்குக் கொடுத்தபொழுது, அதே சமயத்தில்

132 Dhauli Second Separate R.E.; Brahmagiri Rock Inscription; Siddapura Rock Inscription.

133 Delhi-Topra, P.E.I., cf. Arthasastra, Bk. i, Ch. XII-Antapala.

134 Ibid., vii; Shabazgarhi R.E. v.

135 Delhi-Topra P.E. iv.

'இவருடைய விருப்புகளை அறிந்திருந்த'[136] செயலிகள் அல்லது புருஷர்களால் இவர் நகர மக்களோடு தொடர்புகொண்டார். ராஜுகர்களோடு பிரதேசிகர்கள்[137] தொடர்புகொண்டிருந்திருக்கலாம். அர்த்தசாத்திரத்தின்[138] பிரதேஷ்தர்களென[139] இவர்களை டாக்டர் தாமஸ் அடையாளம் காட்டுகிறார். பிரதேஷ்தர்களைப்பற்றி நாம் கூறியதைப்போல் இக் காலத்திய கோட்ட ஆணையாளர்களைப்போல் இவர்கள் முன்னரே இருந்திருக்க வேண்டும். அர்த்தசாத்திரத்தில் இவர்களின் பெயரைக்கொண்டிருந்தவர்களுக்கு ஒப்பாக இறுதியில் யுக்தர்கள் வந்தனர்.[140] அமைச்சவையினரின் கட்டளைகளைப் பதிவு செய்வதிலிருந்து நாட்டில் ஆட்சிப் பதவிகளை நிரப்பும் வரையிலான நானுவிதமான பணிகளை நிறைவேற்ற அமர்த்தப்பட்ட கீழ்நிலை அலுவலர்களின் பொதுவானதொரு வகுப்பாக இவர்கள் அமைந்திருக்க வேண்டும்.[141] இவர்களில் உயர் அலுவலர்கள் மக்களோடு தொடர்புகொள்ள வேண்டுமென்பதற்காகவும், இவர்களின் குறைகளைக் கேட்கவும். நல்வாழ்விற்கும், உயர்ந்த ஒழுக்கநெறிக்கும் இவர்களைக் கொணர முயற்சிக்கவும் ஒவ்வோர் ஐந்தாண்டிலும்[142] அல்லது ஒவ்வொரு மூன்றாண்டிலும்[143] நாட்டில் சுற்றுப் பயணம் செய்ய இவர்கள் கட்டளைபெற்றனர்.

## மாநகர் ஆட்சி

பொது ஆட்சியியலுக்கப்பால், நாட்டின் ஆட்சிப்பொறுப்பை ஏற்றுக்கொண்டிருந்தோருக்கு மாறாக நகர ஆட்சியைத் தனிப் பொறுப்பாகக் கொண்ட மகாமாத்திரர் பிரிவு ஒன்றிருந்தது. அர்த்தசாத்திரத்தின்[144] பௌரவியவகாரிகருக்கு (Pauravyavakarika) ஒப்பான நகரவியவகாரர்[145] என்ற பெயர் பெற்றிருந்தனர். நீதிப் பொறுப்பை மட்டும் பெற்றிருந்ததாகக் கருதியது அன்றி, மகாமாத்திரர் நகர ஆட்சியின் பொதுவான பொறுப்பையும் பெற்றிருந்திருக்கலாம்.[146] ராஜுகர் நாட்டையும், ஜன

[136] Delhi-Topra P.E. iv.
[137] Girnar. R.E. iii.
[138] J.R.A.S., 1914. pp. 383—6.
[139] Arthasastra, Bk. i, Ch. XII.
[140] Arthasastra, Bk. ii, Chs. VIII & IX. Yuktastathakarya-vidhan Niyuktah, etc.
[141] Girnar R.E. iii.
[142] Ibid.,
[143] K.R.E., i.
[144] First Separate Rock E. of Dhauli; First Separate R.E. of Jaugada. (Mahamata Nagala biyohalaka).
[145] Arthasastra, Bk. i, Ch. XII.
[146] The words are 'Nitiyam', and 'Niti', 'Niti' here means Dandaniti =Government (First Separate R.E. Dhauli).

பதத்தையும் ஆட்சி செய்ததுபோல் இவர் நகரை ஆண்டார்.[147] ராஜுகர்களைப்போல் நகர மகாமாத்திரரும் பரந்த உசித அதிகாரங்களைச் செலுத்தியிருக்கலாம். ஆகவே, புருஷர்கள் ராஜுகர்களை அரசரோடு[148] தொடர்புபடுத்தியதுபோல், ஐந்தாண்டிற்கு ஒரு முறை பார்வையிட்டு அறிக்கைதர அரசராலும் அவருடைய பதிலாள்களாலும் அனுப்பப்பெற்ற மகாமாத்திரர்கள் வழியாக மத்திய அரசாங்கத்தோடு நகர மகாமாத்திரர்கள் தொடர்புபடுத்தப்பெற்றனர்.[149] இவ்விரண்டு வகையான அலுவலர்களுக்கு நீதி வழங்குதல்பற்றியும் மற்றவைபற்றியும் அரசர் கட்டளைகளை அனுப்பினார். ஆகவே, நகர ஆட்சியும் நாட்டு ஆட்சியும் அரசாங்கத்தின் இரண்டு இணைந்த பிரிவுகளாக இருந்ததாகத் தோன்றுகின்றன. கிரேக்கர்களாகக் குறிப்பிடப்படுகின்ற பிந்துசாரர், சந்திரகுப்தர் காலத்திய நடைமுறையின் தொடர்ச்சியாகவும் இவை தோன்றுகின்றன.

## அசோகரின் நீதியும் அருளிரக்கமும்

அசோகரின் ஆட்சி, நீதி, அருளிரக்கம் ஆகிய உரமான பொருள்களின் அடித்தளமாகும். தவறாத நீதியைச் செலுத்துவதாலும், பல வழிகளில் மக்களின் உடல்சார்ந்த தேவைகளை அளிப்பதாலும் மக்களின் நலவாழ்க்கையை எய்தக் கருதினார். ஆகையால், தகாத சிறைத்தண்டனைக்கும் ஓரவஞ்சனைக்கும் எதிராகக் கவனமாக இருக்கும்படி இவர் நகரக் குற்றவியல் நடுவர்களைக் கேட்டுக்கொண்டார். இதே நோக்கத்திற்காக 'சினம், கொடுமை, மிகுவிரைவு, செயல்திறமின்மை, சோம்பல், களைப்பு' ஆகியவற்றை இவர்கள் விட்டுவிடுதல் விரும்பப்பட்டது. தவறினால் இந்த உலகத்தில் அரசரின் ஆதரவை இவர்கள் இழப்பதோடு, அடுத்த உலகில் சொர்க்கத்தையும் இழக்க நேரிடும்.[150] பின்னதன் இழப்பு எந்த அளவினதாக இருந்தாலும், அசோகரின் அலுவலர் ஒவ்வொருவரும் முன்னதுபற்றிப் பெரிதும் அக்கறை கொள்ளுவர் என்பதை அசோகர் அறிந்திருந்தார். இதைப்போலவே, 'நீதி நடைமுறைகளிலும் தண்டனையிலும் நடுநிலை தவறாமை இருக்கவேண்டு'மென்று நாட்டுப் பொறுப்பில் இருக்கும் ராஜுகர்போன்ற தம் அலுவலர்களுக்கு இவர் கட்டளையிட்டார். மரணதண்டனை விதிக்கப்பட்டிருந்தவர்களுக்கு மூன்று நாள் அருளிரக்கம் கொடுக்கப்பட்டிருப்பதாக அறிவித்திருக்கையில், இந்த மூன்று நாள்

[147] Delhi-Topra P.E. IV. [148] Ibid.

[149] First Separate R.E. of Dhauli; First Separate R.E. of Jauguda.

[150] First Separate R.E. of Dhauli; First Separate R.E. of Jaugada.

களுக்குள் மீட்புப் பணம் செலுத்தினால் அம் மனிதனை இவரது ராஜுகர்கள் விடுதலை செய்ய வேண்டுமென்றும் இவர் விரும்பினார்.[151] குறிப்பிட்ட சில விலங்குகள் கொல்லப்படலாகாதெனவும் அசோகர் கட்டளையிட்டார். இதை ராஜுகர்கள் செயல்படுத்தவேண்டியிருந்தது. ஆனால், நீதிபற்றிய இவரது பெரும் அக்கறையைப்போல் இவரது கொடையும் கட்டுப்பாடற்றது. மனிதர்களுக்கும் கால்நடைகளுக்கும் நிழல்தர சாலையோரங்களில் ஆலமரங்களை நடச்செய்தார். தண்ணீரை எட்ட இறங்கிச் செல்லக்கூடிய படிகளோடு கூடிய கிணறுகளை அரைக்கோளின் (kos) இடைவெளியில் தோண்டும்படி செய்தார். நீர் குடிக்கும் இடங்களும் தோற்றுவிக்கப்பட்டன. பயணத்தின் சலிப்பை அகற்றவும், இவருடைய பேரரசின் பல்வேறு இடங்களுக்கிடையே செய்தித் தொடர்பை எளிதாக்கவும் இப் பணிகள் மேற்கொள்ளப்பட்டன.

## அசோகரின் தம்மம்

எவ்வாறாயினும், அசோகரின் மிகக் குறிப்பிடத்தக்க அருஞ்செயல் இவருடைய தம்மத்தின் அல்லது கடமையுணர்ச்சியின் வெற்றியாகும். இவருடைய அரசாங்கத்தின் தொனியை முற்றிலும் மாற்றியதும், இவருடைய ஆட்சியியற் கொள்கைக்கு ஒரு புதிய திருப்பத்தைக் கொடுத்ததும் இத் தம்மம்தான். 'தன் விருப்பிழைவிலிருந்து விடுதலை, நற்செயல்களின் நிறைவு, இரக்கமுடைமை, தாராள மனப்பான்மை, உண்மையுடைமை, தூய்மை'[152] ஆகியவைகளையும், எல்லாச் சமயக் குழுக்களின் இன்றியமையாக் கூறுகளின் வளர்ச்சியையும் இவருடைய தம்மம் கொண்டிருந்தது.[153] இக் கருத்துகளை மேலும் விரிவுபடுத்தி உறுதியான கட்டளைகளாக வகுத்தார். சான்றாக, அடிமைகளையும் பணியாள்களையும் நேர்மையோடு நடத்துதல், தந்தைதாய்க்குப் பணிவு நண்பர்கள் கூட்டாளிகள் உறவினர்கள் பிராமண-சிரவணக் கடுந்துறவிகள் போன்றோருக்கு ஈகை, வேள்விக்காக உயிருள்ளவைகளைக் கொல்வதைத் தவிர்தல்.'[154] 'காரணம் இன்றி ஒரு சமயப் பிரிவை மதிக்கவும் மற்றொன்றைக் கண்டனம் செய்யவும் கூடாது.........இத்தகைய அவமதிப்புகள் குறிப்பிட்ட காரணங்களுக்காக மட்டுமே இருக்கவேண்டும். மற்றவர்களால் எடுத்துச் சொல்லப்படுகிற கொள்கை விளக்கத்தை எல்லோரும் கேட்கவேண்டும். கேட்கவேண்டுமென்ற

151 Delhi-Topra P.E. iv. For Ransom cf. 'Arthasastra,' Bk. iv, Ch. X.

152 Delhi-Topra P.E. ii. 153 Girnar R.E. xii.

154 Shahbazgarhi, R.E. xi; Kalsi R.E. ix.

பொருளில் இணக்கம் ஒன்றுமட்டுமே போற்றற்குரியதாகும்.'[155] இவருடைய தம்மத்தின் குறிக்கோளை நிறைவுசெய்ய இன்னுமொரு கூறு இருந்தது. கீழ்வரும் ஆணையில் அது விளக்கப் பட்டிருக்கிறது:

'மக்கள் பல்வேறு சடங்குமுறைகளைச் செய்கின்றனர். குழப் பங்களிலும், புதல்வர்கள் புதல்விகளின் திருமணங்கள், குழந்தைகளின் பிறப்பு, வீட்டிலிருந்து வெளியேற்றங்கள் ஆகிய இச் சமயங்களிலும், மற்ற வேளைகளிலும் மக்கள் பல்வேறு சடங்குகளைச் செய்கின்றனர். ஆனால், இத்தகைய நிகழ்வுகளில் தாயார் களும் மனைவிகளும் எண்ணிறந்த பல்வேறு மிகச் சிறிய, பயனற்ற சடங்குகளைச் செய்கின்றனர். இப்பொழுது சடங்குகள் கட்டாய மாகச் செய்யப்படவேண்டியவைதாம். ஆனால், இவைகளினால் பயனில்லை. இருப்பினும் தம்மத்தோடு தொடர்புடையவை தாம் பெரும்பயனளிக்கும்' 'இவைகளன்றி மற்றச் சடங்குகளின் பலன் ஐயப்பாட்டிற்குரியதுதான்'[156]

இக் கருத்துகள் தம் குடிமக்களிடையே பரவவேண்டுமென்றும், தம் அரசாங்கத்தாரால் இவைகள் செயல்படுத்தப் படவேண்டுமென்றும் இவர் விரும்பினார். 'இந் நோக்கத்திற் காகத்தான் தர்ம மகாமாத்திரர்களையும், ஸ்திரீ-அத்யக்ஷ-மகாமாத்திரர்களையும், வாக்க பூமிகர்களையும் (Vacha-bhumikas), இன்னும் பிற நிறுவனங்களையும் உண்மையில் அமர்த்திய'[157]தாக இவர் சொல்லுகிறார். இவற்றையெல்லாம் செய்ய முயலுகையில், 'ஒருவரின் சொந்தமான தனிக் குழு வளர்ச்சியடைய வேண்டுமென்றும், ஒழுக்கப் பண்பு மேன்மை யடையவேண்டு'[158]மென்றும் இவர் விரும்பினார். இவர் விரும் பிய பயனை அடைய இவர் தம் அலுவலர்களின் கடிய உழைப்பைமட்டும் நம்பியிருக்கவில்லை. மற்றவர்களைக்காட் டிலும் கடினமாக இவர் உழைத்தார். இவர் தமக்கு எவ்வித ஓய்வையும் அனுமதிக்கவில்லை.[159] கடுந்துறவிகள், குடும்பத்தினர், படையினர், இவர்களின் தலைவர்கள், வறியோர், முதியோர் ஆகியோரைப்போன்ற எல்லா மக்களையும் தகாத சிறைத் தண்டனையிலிருந்தும் தொல்லையிலிருந்தும் காக்கவேண்டுமென் பதும், ஒழுக்கப் பண்பின் செயல்முறையை ;ஒத்திருக்கச் செய்ய வேண்டுமென்பதுமான இவருடைய ஆர்வத்தில் சங்கங்கள், பிராமணர்கள், அஜ்விகர்கள், நிர்கிரந்தர்போன்ற இன்னும் பிற

155 Girnar R.E. xii.

156 Kalsi R.E. ix.

157 Girnar R.E. xii.

158 Ibid., (Hulzsch).

159 Girnar R.E. vi.

தனிக் குழுக்களின் செயல்களை மேற்பார்வையிட மகாமாத்திரர் களை இவர் அமர்த்தினர்.[160] தம் அலுவலர்களுக்கு, ஐந்தாண்டிற் கொரு முறை சுற்றுப்பயணம் செய்யவேண்டுமென்று கட்டளை யிட்டதோடு, இவரும் பரவலாகச் சுற்றுப்பயணம் செய்தார்.[161]

## அசோகரின் அரசாங்கம் சமய நடத்தையையும் சமூக ஒழுக்கத்தையும் ஒழுங்குபடுத்துகிறது

அசோகர் இவைகளையெல்லாம் செய்ய முயன்றபொழுது அரச பதவியின் குறிக்கோளை அவர் பெற்றிருந்தார் என்பதில் ஐயமில்லை. தம்முடைய குடிமக்களுக்கு ஒழுங்குணர்வை வகுத் தளிக்க அரசர் இடையருமல் முயலவேண்டுமென்னும் இக் குறிக் கோள் பின்னர் அர்த்தசாத்திரத்தில் கூறப்பட்டது.[162] மெய் யாகவே இவருடைய நடவடிக்கைகளின் காரணங்கள் இவரால் தனிப்படக் குறித்துக் காட்டப்படுகின்றன. ஈகைக்குணத்தை யும் கொல்லாமையையும் (அஹிம்சை), அதாவது, உயிரினங்களைத் துன்புறுத்தாமையையும் இவர் ஏன் வற்புறுத்தினுரென்பதைத் தம் மக்களின் கவனத்திற்குக் கொண்டுவந்து, ‘பல நூறு ஆண்டு களுக்கு முற்பட்ட காலத்தில், விலங்குகளைக் கொல்வதும், உயி ரினங்களைத் துன்புறுத்துவதும், உறவினர்களை அவமதிப்பதும், பிராமணர்களையும் சிரமணர்களையும் அவமதிப்பதும் என்றும் வளர்க்கப்படவில்லை’[163] என்று இவர் கூறுகிறுர். மற்றவர்க ளுடைய சமயத்தைப்பற்றி மக்கள் பொல்லாங்கு பேசினுர்கள்; ஒரு தனிக்குழு மற்றென்றை ஒதுக்கிவைத்துக் குறைகூறித் தடங்கல் செய்தது;[164] எனவே, ஒவ்வொன்றும் தம் சொந்தத் தனிக் குழுவை ஊறுசெய்து மற்றக் குழுக்களுக்கும் தவறிழைத் தது.’[165] விலங்குகளைப் பலியிடுவதோடு, சமயச் சழக்குகளில் ஈடுபாடு கொண்டு, நன்ருக நடத்தப்படவேண்டிய முதியோர், பிராமணர், சிரமணர் ஆகியோரை அவமதித்தல் போன்றதோர் நிலை சமூக ஒழுக்கநெறிகளின் தளர்ச்சியைத் தவருகக் கொள்ள முடியாத வகையில் குறிப்பிடுகிறது. ஆண்களும் பெண்களும் எண்ணிறந்த சமயங்களில் அவர்களுக்குப் பயனளிக்காத ‘பல் வேறு வகையான பயனற்ற இழிவான சடங்குகளைச் செய்தன’[166] ரென்பதை அசோகர் கண்டார். எனவே, விலங்குகளைக் கொல் வதை இவர் தடைசெய்ய முற்பட்டார். சமயப் பொறையை

160 Delhi-Topra P.E. vii; Mansera, R.E. v.

161 Rupnath Rock Inscription i; Sasram Rock Inscription ii; Girnar R.E. iii.

162 ‘Arthasastra,’ Bk. i, Ch. V-Prajanam Vinaye ratah.

163 Girnar R.E. iv. (Hultzsch).

164 Ibid., xii. 165 Ibid. 166 Girnar, R.E. ix.

வலியுறுத்தினார். பயனில்லாச் சடங்குகளை ஒழிக்கவும் இவர் முற்பட்டார். மற்றப் பல இந்திய அரசர்களைப் போலவே அசோகரும் சமயப் பொறையைச் செயல்படுத்தினார் என்று சொல்வது போதாது.[167] மெய்யாகவே இதைச் செயல்படுத்த வேண்டிய இத்தகைய நிலையில்தான் அசோகர் இருந்தார். சமயப் பொறையின் அவசியத்தை இந்திய வரலாற்றில் முதன் முறையாக இவர் உணர்ந்திருந்தார். ஆகவே, சமயம்பற்றிய பேச்சில் கட்டுப்பாட்டை மக்கள் பின்பற்றவேண்டுமென்றும், காரணமின்றி ஒருவர் தம் சொந்தத் தனிக்குழுவைப் போற்றவும் மற்றவருடைய தனிக் குழுவைத் தூற்றவும் கூடாதென்றும்,[168] 'எல்லாத் தனிக் குழுக்களும் எந்த இடத்திலும் தங்கி வசிக்கலாமென்றும்'[169] இவர் ஆணையிட்டார். ஆகவே, சமயப் பொறை என்பதை இவர் எப்படிக் கருதினாரென்பதைக் காட்டினார். மக்களின் சமய நடத்தைகளை இவர் ஒழுங்குசெய்ய முற்பட்டார்.

'ஒழுக்கப் பண்பின் செயற்பாட்டைப் பொறுத்தவரை 'நன்னெறிச் சுற்றுலாக்களை' மேற்கொள்ளுமாறு இவரது அலுவலர்களுக்குக் கட்டளையிட்டார். 'பிராமணர்களையும் சிரமணர்களையும் கண்டு அவர்களுக்குப்பரிசில் வழங்குதல், முதியோர்களைக் கண்டு அவர்களுக்கு உதவும் வகையில் பொன் அளித்தல், நாட்டு மக்களைச் சென்று கண்டு ஒழுக்கப் பண்பில் அறிவுரை கூறுதல், ஒழுக்கப் பண்புபற்றி அவர்களை வினவுதல் போன்றவைகளில் இவை ஈடுபடவேண்டும்.'[170] விலங்குகளைக் கொல்லுவதைப் பொறுத்தவரை, 'உயிர்வாழும் விலங்குகளுக்கு மற்ற உயிர்வாழும் விலங்குகள் உணவாகலாகா'[171] தெனும் பேரரசுத் தடை இருந்தது. எல்லோரும் உண்மை பேசவேண்டுமென்று இவர் கட்டளையிட்டார்.[172] இருபதாண்டுச் செயற்பாடுகளை மறுஆய்வு செய்தபொழுது, நன்னெறிச் செயற்பாட்டில் 'மனிதர்கள் முன்னேறும்படி வலியுறுத்தப்பெற்றனரென்றும், முன்னேற வற்புறுத்தப் பெறுவர்' என்றும் இவர் ஒளிவு மறைவில்லாது கூறியபொழுதும், இவர் கசப்பான உண்மையையே பேசினார். 'இப்பொழுது ஒழுக்கக் கட்டுப்பாடுகளாலும் உள்முக நோக்காலும் மட்டுமே மக்களுக்குள் இந் நன்னெறி முன்னேற்றம் வளர்க்கப்படுகிற' தென்று இவர் கூறுகிறார். இவருடைய கருத்தைத் தெளிவாக்க,

[167] Hultzsch, (Ed.) 'Corpus Inscriptium Indicarum,' Vol. I. Introduction, p. xlviii.

[168] Girnar, R.E. xii, (Hultzsch).

[169] Ibid., vii.

[170] Girnar, R.E. viii.

[171] Delhi-Topra P.E. v.

[172] Brahmagiri Rock Inscription, vi.

'குறிப்பிட்ட விலங்குகள் கேடணுகத்தகாதனவாக இருக்க வேண்டுமென்று நான் கட்டளையிட்டிருப்பது உண்மையிலேயே நெறிமுறைக் கட்டுப்பாடுகளாக இருக்கின்றன'வென்று இவர் கூறுகிறுர். 'என்ஞல் விதிக்கப்பட்ட மற்ற நெறிமுறைக் கட்டுப் பாடுகளும் இருக்கின்றன.'[173] அதாவது, சமூக, சமய நடத்தைத் தொடர்புடையவைகளில் இவருடைய நெறிமுறைக் கட்டுப்பாடு களை மக்கள் பின்பற்ற வேண்டுமென்று வற்புறுத்தினுர். தம் முடைய தனியாட்சியைப் பகட்டாக வரைந்துகாட்டும் நோக்கத் தோடு தம் மக்கள்மீது ஓர் ஒழுக்க விதித் தொகுப்பை இவர் திணிக்கவில்லை. இவரது நெறிமுறைக் கட்டுப்பாடுகள், கடவுட் பற்று ஆகியவைகளுக்குப் பின்ஞல் இவரது எதிர்க்கொண்ணு அதிகாரம் இருந்ததென்பது உண்மை. ஆனுல், தம் மக்களின் நலத்தையும் மகிழ்வையும் உண்மையாகவே வளர்க்க இவர் முற்பட்டார்.

இருப்பினும், நம்முடைய நோக்கிலிருந்தும், பழங்கால இந்திய அரசின் தோற்றத்தின் நோக்கிலிருந்தும் இது ஒரு முக்கியமான பிரச்சினையை எழுப்புகிறது. அரசியல் அதிகாரத் தின் முழு நிறைவை அசோகரின் செயல் குறிப்பாகச் சுட்டுகிறது. இதன் பயனுடைமையும் தகுதித்திறனும் எத்தகைய வரையறை யையும் ஏற்கவில்லை. மறுக்கமுடியாத வகையில் பிறருக்கென உழைக்கும் நோக்கத்தால் இவர் இயக்கப்பெற்றிருந்தாலும், அல்லது உயிரினங்கள் எல்லாவற்றிற்கும் தம் கடனைச் செலுத்த வேண்டுமென்று விரும்பியிருந்தாலும், கட்டுப்பாடுகளிலும் ஒழுங்குமுறைகளிலும் இவர் இத்தகைய பேரார்வம் கொண் டிருந்தார் என்பதை மறுக்கமுடியாது. அரசாங்கத் தலைவீடுகளுக் குப் புனிதமான மானிட வாழ்க்கைத் துறைகளுமிருந்தனவென் பதை இவர் மறந்தார். அரசாங்கத்தின் தலைவர் என்ற முறையி லும், தம் குடிமக்களினது விதியின் ஒரே வழிகாட்டி என்ற முறை யிலும்,அவர்களின் நலன் என்ன என்பதை முடிவுசெய்பவர் என்ற முறையிலும் ஒழுக்க நெறிமுறைக்கு ஒத்துப்போகும்படி வற்புறுத் தினுர். ஏனெனில், இந்த தர்ம மகாமாத்திரர் பதவியில் வேறெந்த நோக்கமுமில்லை. இவர்களின் முழுமையான தகுதித் திறன் மக்களின் மனத்தில் பயபக்தியை எழுப்பியிருக்கவேண்டும். எல்லாச் சமயங்களின் பொறையை இவர் செயல்படுத்தினுலும், இவர் தம் சொந்தக் கருத்தை முறித்தார். சூழ்நிலைகளால் உதவப்பெற்ற இவர், சமயப் பொறையைச் செயல்படுத்தினுர். குறிப்பிட்ட சில சடங்குகளைப் 'பயனற்றவைகளாகவும்' 'இழி வானவைகளாகவும்' குறிப்பிட்டபொழுதும், வேள்விக்காகக்

[173] Delhi-Topra, P.E. vii.

கூட விலங்குகளைப் பலியிடுதலை விலக்கியபொழுதும், மக்களின் பெரும்பகுதியினரின் மனச்சான்றுரிமையிலும் சமய சுதந்திரத்திலும் இவர் உறுதியாகத் தலையிட்டார். இதனுடன் இவர் மனவமைதி பெறவில்லை. தர்ம மகாமாத்திரர்களை அமர்த்தி புத்த சங்கங்கள், சமணத் துறவிகள், பிராமணர்கள், ஆஜ்விகர்கள், இயன்றவரை இன்னும் பலரின் செயல்களை அரசின் கட்டுப்பாட்டின்கீழ் இவர் கொண்டுவந்தார். இவைகளைப்போன்ற இத்தகைய நடவடிக்கைகள் ஒரே ஒரு முடிவைத்தான் சுட்டிக்காட்டுகின்றன. மக்களின் சமூக, சமய நடத்தையை அரசு கட்டுப்படுத்த முற்பட்டதென்பதுதான் இம் முடிவு. இது எங்கும் நிறைந்திருந்தது. மெய்யாகவே இது ஒவ்வொன்றையும் கட்டுப்படுத்தியது. விஞ்சி நின்றது. ஒரு நிகழ்ச்சியை எடுத்துக்கொண்டால், கௌசாம்பியின் 'ஒருபிக்குவும் பிக்குணியும் சங்கத்தைக் கலைத்தபொழுது' மகாமத்திரர் என்ன செய்யவேண்டுமென்று ஒரு முறை இவர் கட்டளையிட்டார்.[174] பொதுவாக சங்கங்களுக்கு இவர் மறுபடியும் 'சட்ட'த்தை இவர்தம் பேரரசு ஆணையிலிருந்து திட்டமிட்டுரைத்தார்.[175] ஆகவே, இந்தியச் சங்கங்கள் எல்லாவற்றிற்கும் இவர் தலைவராக இல்லாவிட்டாலும், நடைமுறையில் புத்த சமயத்திற்குத் தலைவராக இவர் முயன்றார்.

ஆனால், மற்றச் சமயங்கள்மீது இவர் அதிகாரம் செலுத்த முயலவில்லையென்றாலும், அவைகளைத் தனியே இவர் விடவில்லை. அவைகளிலும் இவர் தலையிட்டுச் சமயத்தின் தலையாய கொள்கையை வளர்க்க உண்மையாகவேமுயன்றார். இந்நோக்கிற்காகக் கடவுளின் தேர்கள், யானைகள், பெருநெருப்பு, மற்ற வானுலகக் காட்சிகள் ஆகியவற்றை மக்கள் காணும்படி செய்யப்பட்டது.[176] இதனால் கடவுளர்களோடு தொடர்புகொள்ளாதிருந்தவர்கள் கடவுளர்களோடு தொடர்புகொள்ளவும்,[177] அதாவது, கடவுளர்களின் பூசலும் அவர்களை வழிபடுகிறவர்களின் பூசலும் நாட்டில் பெருமளவு மறைந்துவிட்டது.[178] எனவே, தம் மக்களை உண்மையர்கச் சமயப் பற்றுடையவர்களாகவும் ஒழுக்கப் பண்புடையவர்களாகவும் ஆக்க இவர் முயன்றார். பேரரசின் செல்வமூலங்களால் உண்மையான நெறிமுறை அல்லது கடவுட் பற்று போன்றதை வெளியிட்டு முயன்ற காரணத்தினால், நேர்மையாக அரசிற்குச் சொந்தமாகாத அதிகாரங்களையும் சிறப்புரிமைகளா

[174] Kawsambi P.E.—Allahabad-Kosam.
[175] Calcutta–Bairat Rock Inscription.
[176] Girnar, R.E. iv. [177] Brahmagiri, M.R.E.
[178] Mukherji, 'Asoka,' p. 110, note 1.

யும் இவர் தமக்கு உரியதாக்கிக்கொண்டார். இத்தகைய அதிகாரங்களை இவர் ஏற்றுக்கொண்டதனால் மற்ற எல்லா நிறுவனங்களுக்கும்மேல் இவர் இயல்பாகவே அரசை உயர்த்தினர். ஏனெனில், பேரரசர், நெறிமுறை ஆணையாளர் என்ற இவ் விரட்டைப் பாகம்தான் அசோகரின் இறைமையை, அதாவது, அரசின் இறைமையைக் குறித்தது. மெய்யாக, இந்திய வரலாற்றுப் பரப்பு முழுவதும், இவ்வளவு விஞ்சிய அரசியல் அதிகாரத்தின் மிக உயர்ந்த எடுத்துக்காட்டு மாதிரியை அல்லது இதைக் காட்டிலும் அரச இறைமையை நமக்களிக்கவில்லை. ஒற்றர்களும் அரசாங்க அலுவலர்களும் உங்கள் நடத்தையைக் கவனிப்பதையும், உங்கள் சொற்களைக் குறித்துக்கொள்வதையும், உங்களைச் சுற்றியுள்ள உறவினர்களைக் கவனிப்பதையும், உங்களைத் திருத்துவதையும் நினைப்பதற்கு மிக்க எரிச்சலாகவும் மிகக் கொடியதாகவும் தோன்றுகிறது. தம் அதிகாரம் முழுமையில்கூட அக்பர் இதைச் செய்யமுடியவில்லை. ஆனல், மொகலாயத் தனியரசின் பேரரசைக் காட்டிலும் அசோகரின் பேரரசு மிகத் திறமையாக அமைக்கப்பட்டிருந்தது. ஆகவே, அரசியல் தலைவராகவும் நெறிமுறை வழிகாட்டியாகவும் இவர் பங்குபற்றியதெல்லாம் இவருடைய சொந்த அதிகாரம், தொடக்கத்துணிவுபோன்றவைகளால் இல்லையா என்று கேட்கலாம். இவரது அதிகாரம், இவரது புகழ், இவரது இறைமை, சுருக்கமாக இவரது மிக உயர்ந்த நிலை போன்றவைகள் எல்லாம் முழுதும் இவரது தனி நிலைக்குரியது அல்லவா? இவரது தெள்ளத் தெளிந்த நல்லெண்ணம், இயற்கை கடந்த திறமை, எதிர்க்கொணு அதிகாரம் ஆகியவைகளல்லாது மற்றவை இவரது முயற்சிகளுக்கு உதவவில்லையா? இவைகளெல்லாம் தனி மனிதருக்குரியன அல்லவா? அப்படியானல் தனி மனிதரைச் சுட்டாத நிறுவனமாக அரசு, அசோகரின் தனி மனிதருக்குரிய அருஞ்செயல்களிலிருந்து சிறப்படைந்தது, அதோடு ஒத்திருந்தது என்று சொல்வது எந்த அளவிற்குச் சரி? இவர் செய்ததெல்லாம் அரசின் செயல்திட்டத்தில் ஒரு பாகமன்று; ஆனல், ஒரு குறிப்பிட்ட காலத்தில் அரசராக இருந்த ஒரு மனிதரின் சொந்தச் செயல்களாகும்.

## அசோகரின் செயற்பாடுகள் அரசின் செயல்திட்டத்தின் ஒரு பாகம்

முடிவிலிருந்து தொடங்கினல், ஒரு குறிப்பிட்ட காலத்தில் ஓர் அரசின் அரசர் செய்யக்கூடியதையெல்லாம் அசோகர் செய்தார் என்பதில் ஐயமில்லை. இவரது சொந்த மனப்போக்குகளை அரசின்மீது வைத்துக் கட்டினர் என்பதில் ஐயமில்லை; ஆனல்,

அரசபதவி தனி மனிதருக்குரியதன்று. இப்பொழுது முற்றிலும் வளர்ந்ததொரு நிறுவனமாக இது இருந்தது. இதனுடைய உருவையும் பணியையும் இதுவே உருவாக்கிக்கொண்டது. இதனோடு தொடர்புடைய பெருமரபுகள் இருந்தன. இவைகளால் அரசரின் போக்கு வரையறைக்குட்படுத்தப்பட்டது. தம் சொந்த மனப்போக்குகளுக்குத் தடையிலா ஆட்சியதிகாரமளிக்க முடியவில்லை. தம்முடைய வாழ்க்கையின் கடமைப் பொறுப்பிற்கு வேண்டியவைகளைத் தேடிக்கொள்ளப் பல்வேறு கலைகளிலும் அறிவியலிலும் ஒரு கடுமையான பயிற்சியை அரசர் எப்படி ஏற்கவேண்டியிருந்ததென்பதைக் கடந்த அதிகாரத்தில் நாம் குறிப்பிட்டோம். பின் அரசாங்கத் தலைவர் என்ற முறையில் இவர் சுறுசுறுப்பாகவும், கட்டுப்பாடுடையவராகவும், நேர்மையானவராகவும், தன்னுய்வும் சூழ்ச்சித்திறமும் உடையவராகவும், தம் மக்களின் நலவாழ்வில் ஆழ்ந்த அக்கறையுடையவராகவும் இருக்கவேண்டும். சமூக ஒழுங்கை இவர் பேணவேண்டியிருந்தது. தந்நல மறுப்பு வாழ்க்கையை இவர் நடத்தவேண்டும். ஆயிரம் ஆண்டிற்கு மேலான வளர்ச்சியையுடைய ஒரு நிறுவனமாகிய அரசபதவியின் மரபுகள் இத்தகையனவாக இருந்தன. இதனுடன் தம் நிலையின் பொறுப்புகளையும், இவருடைய கடமைப் பொறுப்புகளையும், அல்லது இவர் கூறும் மக்களுக்கான இவருடைய கடனையும் அசோகர் உணர்ந்திருந்தார். இக் 'கடன்' பற்றிய இவருடைய கருத்தின் ஊன்றிய வெறிதான் இம் முயற்சிகளுக்கு இவரைத் தூண்டியது. ஒழுக்கப் பண்பின் இயக்காணையாளரின் பங்கை இவர் ஏற்பதில் இத் தூண்டுதல் முடிவடைந்தது. டாக்டர் பார்னெட் குறிப்பிடுவதுபோல், அரசின் இறைமையின் ஓர் உணர்வாற்றல் கூறாக இது அமைகிறது. மகாபாரதத்தில், நூல் எட்டில், மிகச் சுவையாக இது கொண்டு வரப்பட்டுள்ளது. தசரதர் தம் மக்களிடமிருந்து விடைபெற்ற போது, அவருடைய குற்றங்களை மன்னிக்குமாறு தம் குடிமக்களை வேண்டிக்கொள்ளுகிறார். தம் நாட்டை ஒரு பொறுப்பாண்மையாகத் தாம் ஆட்சி செய்ததையும், அவர்களுக்குத் தாம் செய்த பணிவிடைகளையும் (susrusa) நினைவுபடுத்துகிறார். அரசபதவியின் நிறுவனத்தோடு பிரிக்கமுடியாத சில குறிப்பிட்ட மரபுகளோடும் குறிக்கோள்களோடும் இது தொடர்புகொண்டிருந்தது. இது அசோகரால் தூண்டப்பெற்றது. இம் மரபுகளுக்கும் குறிக்கோள்களுக்கும் அசோகர் பொருத்தமாகப் பரிந்துபேசுபவராக இருந்தார் என்பதையும் மறந்துவிடலாகாது. இம் மரபுகளுடனும் குறிக்கோள்களுடனும் அசோகர் முற்றிலும் கலந்துவிட்டார். அசோகரின் இவ்வுயிர் உள்ள எடுத்துக்காட்டுதான் அரசபதவியின் குறிக்கோள்களைக் கௌடிலியருக்கு அளித்தது.

புத்த சமய வாழ்க்கைமுறையில் பேரார்வம் சிறிதுமில்லாத அசோகர்தாம் கௌடிலியரின் அரசர். எனவே, இந்திய அரச பதவி அல்லது அரச இறைமையின் சிறந்த பகர ஆளாக அசோகர் இருக்கிருர். ஆனல், இது நம்முடைய விஞக்களுக்கெல்லாம் விடை அளிக்கவில்லை. இவர் செய்ததெல்லாம் அரசின் செயல்திட்டத்தின் ஒரு பாகமாக அமைந்ததென்று எப்படி நாம் சொல்லமுடியும்? இவர் செய்ததெல்லாம் உறுதியாக இவர் காலத்திற்குமுன் அரசின் செயல்திட்டத்தில் ஒரு பாகமாக அமையவில்லை. ஆனல், சமூக நெறிமுறையின் மேம்பாடு, மக்களின் சமயக் கடமைகள் ஆகியவைகளை இவர் செய்ததன் உள்நோக்கம், அரசின் தெளிவான நோக்கங்களாக ஏற்கெனவே ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றன. சமூகம் தடங்கலின்றிச் செயல்பட அரசரின் அதிகாரத்தைச் சார்ந்திருக்கவேண்டியிருந்தது. அசோகரின் நடைமுறையில் உள்ள ஆட்சிமுறையை நாம் ஆராய்ந்தபொழுது, மக்களுக்கு ஒழுக்கநெறித் தொகுப்பொன்றைத் திட்டமிட்டுரைத்துப் புகுத்திய புதிய முறையை நாம் பார்த்தோம். தர்ம மகாமாத்திரர்கள், ஸ்திரி-அத்யக்ஷ-மாத்திரர்கள் போன்றோரைக்கொண்ட மதகுரு சார்ந்த துறையை நிறுவி இதைச் செயற்படுத்திஞர். இவர் காலத்தில் மக்களால் இப் புதிய முறை வெறுக்கப்பட்டிருந்தாலும், பின் இது வெறுக்கப்படவில்லை. சான்ருக, குடிமக்களை ஒழுக்கமுடையவர்களாகச் (Prajanam vinoye ratah) செய்வது அரசரின் கடமையெனக் கௌடிலியர் எடுத்துரைத்திருக்கிருர். அரசர் தம் காலத்தைப் படைக்கிருர் (Raja kalasya karnam) என்ற அறிவொளி மிக்க கருத்தை மகாபாரதம் மெய்ப்பிக்கிறது. எனவே, ஏற்றுக்கொள்ளப்பட்ட அரசின் நோக்கத்தில் பெருமாறுதலைச் செய்யாமல், சமூக, சமய அமைப்புகளின் தீமைகளை அகற்றிக் காலநிலைகளைச் சமாளித்த அரசரென அசோகரை உண்மையாகவே கருதலாம். இதே சமயத்தில், இந் நோக்கத்தைச் செயல்படுத்த ஆட்சியியல் விவரங்களை வகுத்து, இவருக்குப் பின் வருபவர்கள் பின்பற்றுவதற்கு ஒரு குறிக்கோளையும் வகுத்தார்.

கண்மூடித்தனமாக நடத்தப்பட்ட ‘இழிவான சடங்குகள்’, சமயத்தின் பெயரால் விலங்குகளின் வதை மது அருந்துகின்ற கேளிக்கைகளை நாடுகின்ற குழுக்களின் மிகச் செல்வாக்குடைமை (சமாஜங்கள்), மக்களின் பொது நடத்தையில் ஈகையும் இணக்க நயப் பண்பும் இன்மை, சமயச் சழக்கு போன்றவை இக் காலத்திய சமூக, சமய நிலைகளின் ஒரு துயரார்ந்த காட்சியை அளித்தன. இவருடைய மனமாற்றத்திற்குப்பின் இவைகள் இவரைக் குத்தின. ஆகையால், தம்முடைய சொந்த மனித இனநலப் பற்றுடைய நோக்கங்களால் தூண்டப்பட்டும், தம்முடைய பதவி

யின் கடமைப் பொறுப்பாலும், தம்முடைய 'கடனாக' இருந்த கடமை உணர்வாலும் மதகுரு சார்ந்த ஒரு துறையை நிறுவினார். இவருடைய செயலை உயர்ந்தோர் ஏற்றுக்கொண்டதைக் கௌடிலியர் குறிப்பிடுகிறார். அசோகர் தர்ம மகாமாத்திரரின் பதவியை உண்டாக்கியிருந்ததால், கௌடிலியரும் அரசரின் புரோகிதரின் கட்டுப்பாட்டின்கீழ் தேவதாதியக்ஷர் (Devatadhyaksas) என்ற நிறுவனத்தை வகுத்தளித்தார். கௌடிலியரின் கருத்தின்படி, சமயம் சார்ந்த நிறுவனங்களின் உடைமையையும் கடவுளின் உடைமையையும் கட்டுப்பாடு செய்ய இவர்கள் அமர்த்தப் பெற்றனர். அசோகரின் தர்ம மகாமாத்திரர் நெறிமுறைகளின் தணிக்கையாளராக இருந்தால், அரசரின் பொருளகம் காலியாகும்பொழுது கடவுளர்களின் சொத்தையும் சமய நிறுவனங்களின் சொத்தையும் மோசடியாக அதற்கு மாற்றுவதற்கு கௌடிலியரின் தேவதாத்யக்ஷர்கள் பயன்படுத்தப்படலாம். செயலில் இது ஒரு வேறுபாடுதானாலும்.ஒன்றுதான் பொதுமக்களின் நடத்தையை அரசர் கட்டுப்படுத்துவதும் மேதகவு நிலையை எட்டுவதுமாகிய நோக்கத்தின் நிறைவேற்றத்திலும் அசோகரின் நுட்பமுறையிலும் மெய்யாகவே ஒரு வேறுபாடு இருக்கிறது. ஆகவே, அரசின் நோக்கத்திற்கு சமூக ஒழுக்கப் பண்புகள், சமயக் கடமைப் பொறுப்புகள் ஆகியவற்றின் மேம்பாடுபற்றி ஆட்சிச் செயல்திட்டம், அதாவது, இப் புதிய முறை முரணாக இல்லை; மெய்யாகவே, பிற்காலத்தில் இது அரசின் செயல் திட்டத்தின் ஒரு பகுதியாக ஏற்றுக்கொள்ளப்பெற்றது.

## இவருடைய வெளிநாட்டுக் கொள்கை

வெளிநாட்டுக் கொள்கைபற்றியவைகளிலும் அரசுகளுக்கிடையேயான உறவுகள்பற்றியவைகளிலும் அசோகரின் தம்மம் எவ்விதத் தொடர்பும் கொண்டிருந்ததாவென்பதை அடுத்து நாம் ஆராயவேண்டும். அசோகர் தொடர்புகொண்டிருந்த அரசுகளை இரண்டு வகையாக வகைப்படுத்தலாம்: (1) அரசத் தூதர்களை அனுப்பி நட்புறவு கொண்டிருந்த அரசுகள்; (2) இவருடைய பேரரசிற்குள் தன்னாட்சியுரிமை பெற்றிருந்தவைகள்.[179] முதல் வகை அரசுகள் யோன அரசர் அன்டியோக (Antiyoka—செலுகஸ் நிகேட்டரின் பேரர் அன்டியோகஸ் தியோஸ்), அன்டிகினி (Antikini—மாசிடோனியாவின் அன்டிகோனஸ்), துரமய (Turamaya—எகிப்தின் தாலமி பிடெல்ஃபோஸ்), மாக (Maka—எகிப்தின் மேற்கிலுள்ள சிரீமின் அரசராகிய மாகாஸ்), அலிகசுதர (Alikasudara—எப்பிரசின் அலெக்சாந்தர்), தென்னரசுகளாகிய சோழபாண்டியர்கள் போன்றோர்களால் ஆட்சி செய்யப்

[179] Shahbazgarhi, R.E. xiii.

பட்டன.[180] யோனர்கள், கம்போஜர்கள், நாபகர்கள் (Nabhakas), நாபபமிதிஸ் (Nabhapamitis), போஜர், பித்தினிகர், ஆந்திரர், புளிந்தர் (Pulindas) போன்றோர் இரண்டாவது வகையின ராவர். இவர்கள் எல்லையோரங்களில் இருந்தனர். முதல் வகை அரசுகளைவிட இந்த அரசுகளில்தான் 'தேவனும்பியரால் நெறி முறை (தம்மம்) அடிக்கடி வெற்றிபெற முடிந்தது.'[181] 'மனநிறை வுணர்வை அளிக்கக்கூடியதும்' 'அடுத்த உலகில்'[182] பலனளிக்கக் கூடியதுமான வெற்றியாக இருந்தாலும், இவருடைய வெளி நாட்டுக் கொள்கையின் நோக்கம் அன்பு வெற்றியேயாகும். இத்தகைய வெற்றியைத் தமக்குப் பின்வருவோருக்கு இவர் பரிந் துரைத்தார். 'ஒரு வெற்றி இவர்களை மகிழ்விக்குமானால், அருளில் இன்பமும் கனிவுடைய தண்டனையில் இன்பமும் இவர்கள் காணவேண்டும்; இந் நன்னெறியின் வெற்றியை உண்மையான ஒரே வெற்றியாகக் கருதவேண்டும்.'[183] இவருடைய வெளிநாட்டுக் கொள்கையின் மெய்யான தன்மையை இது மயக்கத் தேவை யில்லை. இவர் அருளிரக்கம், கனிவிரக்கம் ஆகியவற்றின் திரு வுருவாகத் திகழ்ந்தார் என்று நாம் நினைக்கலாகாது. 'எல்லைப் புற வாழுநர் எமக்கு அஞ்சாதிருக்கலாம். ஆனால், எம்மீது நம் பிக்கை கொண்டிருக்கலாம்; எம்மிடமிருந்து துன்பத்தையன்றி இன்பத்தை இவர்கள் பெறலாம்; ஆனால், மன்னிக்கக்கூடியவை களில் இவர்களை தேவனும்பியர் மன்னிக்கலாமென்பதையும் இவர்கள் அறிந்துகொள்ளலாம்; நன்னெறியைப் பின்பற்ற இவர்கள் எம்மால் தூண்டப்படலாம் என்று இவர் கூறும் பொழுது ஒரு கணம் நாம் மயக்கம் தெளிவிக்கப்பெறுகிறோம்.' அதாவது, துன்பம் விளைக்கிறதும் அதிர்ச்சியூட்டுகிறதுமான வெற்றி முறைகளை அசோகர் வெறுத்தார்; இவர்கள் நலம் பெறுவதை இவர் விரும்பினார். நன்னெறியைப் பின்பற்ற இவர்களை அசோகர் தூண்டுகிறார்; ஆனால், இதற்குப் பதிலாக இவரால் மக்கள் நலமடையவேண்டுமென்றும் இவர் விரும்பினார். இவருடைய நிலைக்கு ஏற்பில்லா இவர்களுடைய விடாப்பிடியான நடத்தை எதையும் மன்னிக்க இவர் தயாராக இல்லை. இவரது நன்னயப்பண்பில் மருட்டல் மறைந்திருப்பதை இங்கு காணலாம். ஆனால், தம்முடைய நல்லொழுக்கப் போதனைக்கு ஆதரவு தேட மிரட்டலில் நம்பிக்கை வைத்தார் எனக் கருதலாகாது. நல்லொழுக்கப் போதனையைக் காட்டிலும் நன்னடத்தை சிறந்ததென்று இவர் நம்பினார். ஆகவே, 'எல்லைப்புற வாழு நர்கள்' என்று இவர் கூறும் அண்டை அரசுகளுக்கு நன்மை செய்து இவர் வழிகாட்டினார். இந் நாடுகளின் மனிதர் களுக்கும் விலங்குகளுக்கும் செலவின்றி இருவகையான வைத்திய

[180] Ibid. [181] Ibid. [182] Ibid.

வசதியளித்தார். மருந்துச் செடிகளைப் பண்படுத்துவதற்குத் தோட்டங்களை அமைத்தார். இவைகளை வளர்ந்த இடங்களிலிருந்து இத் தோட்டங்களுக்கு அனுப்பினார். இவைகளின் பயன்பாட்டிற்குக் கிணறுகளை வெட்டும்படி செய்தார்.[184] இவைகள் எல்லாம் உண்மையாக இருந்தால், அரசுகளுக்கிடையேயான உறவுத்துறையில் படைவலி, சூழ்ச்சித்திறம், அரசியல் நலன் ஆகியவற்றின்மீது தோற்றுவிக்கப்பெற்ற அரசதந்திரத்திற்குப் பதிலாக மனித இனநலப் பண்புடைய சேவையின்மீது அமைந்த நல்லெண்ண உறவுமுறையை மாற்றீடு செய்த மிக உயர்ந்த பெருமை அசோகரைச் சேரும். அக, புறத் தாக்குதலைத் தவிர்ப்பதற்கு மிகச் சிறந்த நோக்கம் ;செயல்படுவதை இங்கு நாம் காணுகிறோம். அரசுகளுக்கிடையேயான அரசியல் நெறி முறையிலும் இது ஒரு புதிய முறை; அலெக்சாந்தர் அல்லது தரயஸின் முறையிலிருந்து இது முற்றிலும் மாறுபட்டதாகும்.

## தர்மத்தைப் பறைசாற்றிய அசோகரின் தனிமுறைச் சிறப்பு

ஆகவே, உள்துறை ஆட்சியிலும் வெளியுறவுத் துறையிலும் அசோகர் ஒரு புதிய அடிப்படை மெய்மையைத் தெளிவுபடக் கூறினார், ஒரு புதிய குறிக்கோளை எதிர்நோக்கினார் என்று முடிவுசெய்யலாம். அரசுகளுக்கு இடையேயான உறவுகளில் அறுவகைக் கொள்கையின் பயன்பாட்டைக் கௌடிலியர் பரிந்துரைத்தார். இந்திய அரியணையிலிருந்து அசோகருக்குப்பின் வந்தவர்களெவரும் இவருடைய அடிப்படை மெய்மைகளைப் பின்பற்ற இயலவில்லை. இவருடைய ஆட்சியியல் திட்டம் அர்த்த சாத்திரத்தில் வெளிப்படுத்தப்பெற்றிருக்கிறது. ஆனால், அசோகரின் ஆட்சியியற் குறிக்கோளுக்கும் கௌடிலியருக்கும் இடையில் சிறிது வேற்றுமை இருக்கிறது; அர்த்தசாத்திரம் கருத்தில் கொள்ளுவதைக் காட்டிலும் அசோகருடைய அரசு பரவலான தகுதித்திறத்தைக் கோரியது. சான்றாக. நீதிமுறைமையில் அர்த்தசாத்திர ஆட்சிமுறை, சாதியின் சிறப்பு எல்லை கடந்து மேம்பட முடியவில்லை. அரசு கட்டுப்பாடுகளுக்கு மக்களின் நெறிமுறை நடத்தையை உட்படுத்த இது நினைக்கமுடியாது; அரசருக்கு சமயத் தலைமையையும் இது ஒதுக்க இயலவில்லை. இவையெல்லாம் அசோகரின் ஆட்சிமுறையை வேறுபடுத்திக் காட்டின. இருந்துங்கூட, கௌடிலியர் அசோகரைக் காட்டிலும் அறிவுடையவராக இருந்தார். அசோகர் ஓர் ஆட்சியாளர்; கௌடிலியர் (ஓர் ஆசிரியர்) ஒரு நூலாசிரியர். பின்னவர் தம் அமைதியான சிந்தனையோட்டத்திலும் ஆய்விலும் எளிதாகப்

[183] Ibid.

[184] Shahbazgarhi, R.E. ii.

பார்க்கக்கூடியதை நிகழ்ச்சிகளின் விரைவாற்றலிலும் விறுவிறுப்பிலும் ஆட்சியாளர் இதைச் செய்ய இயலாது. அதாவது, சமயத்தை விஞ்சி நிற்கவும், நெறிமுறையை வகுத்தளிக்கவும், குறிப்பிட்ட பொதுவான செயல்களைத் தடைசெய்யவும் அசோகர் முற்படுகையில், தம்முடைய தருமம்பற்றிய கருத்தாலும் 'கடனும்' அல்லது தம் மக்களுக்குரிய கடமைப் பொறுப்பாலும் இவர் ஆட்டிப்படைக்கப்பட்டார். இதன் நோக்கம் எவ்வளவு சிறந்ததாக அல்லது நல்லதாக இருந்தபோதிலும், மானிட நடத்தையைத் தரப்படுத்தலாம் என்று இவர் நினைத்தபொழுதும், எல்லா மக்கள்மீதும் ஒரே படித்தான ஒழுக்க விதிகளின் தொகுப்பைப் புகுத்த நினைத்தபொழுதும் அசோகர் ஒரு தவறு செய்தார்.

இருந்தபோதிலும், இவரிடத்தில் உருப்பெற்ற அரசின் செல்வாக்கை உயர்த்துவதற்கு அசோகரின் இம் முயற்சி உதவியது. இதனால்தான் இவர் உலகியல் தலைவர், நெறிமுறை வழிகாட்டி ஆகிய இரட்டைப் பாகத்தை ஏற்கமுடிந்தது இதனால் தம்முடைய தனிமுதன்மை நிலையை அடைய இவர் முயன்றார். ஏனெனில், இவர் தம் பாறைக் கல்வெட்டாணை எட்டில், 'தர்ம விஜயமாகிய நெறிமுறை வெற்றியை மாண்பமைதிமிக்க தூய அரசர் முதன்மையான வெற்றியாகக் கருதினர். இவ் வெற்றியை இவரது அரசிலும் அறுநூறு யோசனைப் பரப்பிலும் உள்ள எல்லா எல்லைப்புற மக்களுக்குள்ளும் அடிக்கடி மாண்பமைதிமிக்க அரசரால் பெறப்பட்டதாகும்' கலப்புறாத படைவலியால் பெற்ற பழிபாவங்களுக்கு அஞ்சாத வெற்றியை இவர் வெறுத்தார். இது உண்மையான தனிமுதன்மை நிலையை உறுதி செய்யவில்லையென்று சரியாகத்தான் நினைத்தார். தம் மக்களின் முழுமையான பற்றுறுதியைத் தம்முடைய அதிகாரத்திற்குப் பெறுவதில்தான் உண்மையான தனிமுதன்மை நிலை இருந்தது. கலிங்கப் போரில் இவர் தோன்றியதுபோல் வெறும் வெற்றியாளராக மட்டுமே இவர் இருக்கும்வரை இதை எய்தமுடியாதென்பதை இவர் அறிவார். இவரிடமிருந்த மனித இன நலப் பண்பும், பிறர்க்கென உழைக்கும் பெற்றியும் வெற்றிக்கு வாளைக்காட்டிலும் சிறந்ததொரு கருவியையும், நிலங்களைக் காட்டிலும் சிறந்த ஓர் இலக்கையும் கோரின. முதலாவது தம்மம், இரண்டாவது மக்களின் இருதயம் (மனம்). இந்த இருதயத்தின் வெற்றிதான் இவருடைய அரச பதவியை உண்மையானதாகச் செய்யமுடியும். இது மக்களின் பற்றுறுதி அரசிற்கும் சமயத்திற்கும் இடையில் பகுக்கப்பட்டிருந்தது. மக்களின் பகுக்கப்படாத பற்றுறுதியை இவர் விரும்பினர். அரசராகவும் நெறி

முறை வழிகாட்டியாகவும் அசோகர் மக்களிடமிருந்து கடப்பாட்டை நாடினார். நெறிமுறைத் தலைமையை இவர் உரிமையோடு கேட்டுப் பெறலாம் இவருடைய கருத்துகளோடும் வாழ்க்கை நெறிகளோடும் இவர் இதற்குத் தகுதியுடையவரெனக் கருதினார். தம் மக்களோடான செயல்வினைகளில் அசோகர் தம்மத்தை, அதாவது, கடமைப் பற்றைப் பயன்படுத்தினார். மக்கள் தமக்குள்ளான செயல்களில் தம்மத்தைப் பயன்படுத்துவார்களென இவர் எதிர்பார்த்தார். தம் செங்கோலின் அதிகார வலிமையால் இத் தம்மத்தின் விதிகளைத் தெளிவுபடக் கூறினார்; புகுத்தினார். மக்களுக்கு நன்மை செய்யும் சமூக நெறிமுறைகளை உயர்த்தும் எல்லோருடைய உண்மையான மகிழ்ச்சிக்காகப் பாடுபடுவதுபோன்ற உயர்ந்த நோக்கங்களால் தூண்டப்பெற்று, இவர் விதிகளைப் பறைசாற்றினார். இயன்றவரையில், இயல்பாகவே எல்லாச் சமயங்களுக்கும் பொதுவான எல்லோர் மீதும் செயல்படக்கூடிய ஒழுக்க இயல் அடிப்படை மெய்மைகளாக இவைகள் இருந்தன. சமூகத்திலும் சமயத்திலும் பிரிவுகளும் விரிசல்களும் ஏற்பட்ட காலத்தில் சமூக நெறிமுறைகள் தேய்ந்தழிந்துகொண்டிருந்தபொழுதும், சமயப் போட்டி கடுமையாக இருந்தபொழுதும், சுருங்கக் கூறின், சமூகமும் சமயமும் உதவியின்றி அரச அதிகாரத்தின் ஆதரவை நாடியபொழுதும் தம்முடைய தம்மத்தால் சமூக நெறிமுறைகளை உயர்த்தலாமென்றும், சமூக அமைதி நிலையைப் பேணலாமென்றும் அசோகர் நினைத்தார்.

மேலும், அரசபதவியின் குறிக்கோளின் உயிரோடு இவர் உள்நின்று இயக்குவிக்கப்பெற்றார். தம் குடிமக்களின் அரசர் என்ற முறையில் தம் கடனை அவர்களுக்கு நிறைவேற்ற விரும்பினார். பொதுநல மகிழ்ச்சியையும் சமூக அமைதியையும் இந்த அடிப்படையான மெய்மைகளால் வளர்க்க விரும்பினாரென்பதை இவர் பறைசாற்றினாரென்று நாம் கண்டோம். மெய்யாகவே சமூக, சமயத்தின் உறுதியற்ற அடித்தளங்கள்தாம் இவருடைய முயற்சிகளுக்கு நோக்கத்தையும் நிறைவையும் அளித்தன. தம்மம் எனப் பெயர்பெற்ற தொடர்ச்சியான விதிகளை வகுக்க, தனிமுதன்மை நிலையை அடையும் அரசியல் நோக்கம், பகுக்கமுடியாத பற்றுறுதியைப் பெறல் ஆகியவைமட்டும் இவரைத் தூண்டவில்லை. மக்களுக்கு நன்மை செய்ய வேண்டுமென்ற நேர்மையான விருப்பமும், தம்மால் இயன்றவரை சிறப்பாகச் சேவை செய்யலாமென்ற விருப்பமும் இவரை இப்படிச் செய்யத் தூண்டியது. இவருடைய முயற்சிகளின் தவிர்க்கொணா விளைவாக அரசியல் தனிமுதன்மை நிலை இருக்கலாமென்று இவர்

உணர்ந்தார். மக்களின் பகுக்கமுடியாத பற்றுறுதியில் அமைந்த அசோகரின் தனிமுதன்மை நிலையிலும் வழியிலுமேதாம் அரசரின் திருவுருவைப் பெற்றிருந்த அகல்விரிவான தகுதித்திறனை நாடிய அரசு இறைமை அரசின் நிலையை எட்டியது. ஏனெனில், மக்களின் நலன் எது என்பதையும் அரசர் முடிவுசெய்தார். இந் நலனை அடையும் வழிகளையும் இவரே முடிவுசெய்தார்; மக்களின் மனச்சான்றைக் கட்டுப்படுத்தி ஆட்சிசெய்ய முயன்றார்; சமயப் பொறையை வளர்க்கத்தக்க நடவடிக்கைகளை இவர் செயற்படுத்தினார்; உண்மையைப் பேசவும் பேச்சைக் கட்டுப்படுத்தவும் கட்டளையிட்டார்; மொத்தத்தில் அரசில் இவருடையஅதிகாரம் எங்கும் பரவச்செய்ய முயன்றார். மாற்றங்களோடு கூடிய பிராமண சமயத்தால் குறிப்பிடப்பட்ட இம் முயற்சிகளும் விழைவுகளும் போதிய அளவு அர்த்தசாத்திரத்தில் வெளிப்படுகின்றன.

ஆகையால்,அசோகர் தம் இறைமையை மெய்யாக்க எதைக் கோரினரோ அது பிற்காலத்தில் அரசரின் நேர்மையான உரிமைப் பொருள் எனக் கருதப்பெற்றது. உரிமைப் பொருள்களாவன : (அ) சட்டத்தையும் கடமையையும் பிரகடனப்படுத்துபவராக, அதாவது, தர்ம பிரவர்த்தகராக இருத்தல், (ஆ) அரசின் முதல்வராக, அதாவது, சுவாமியாக இருத்தல். இது அரசின் முதற் கூறுகும். இதனுல்தான் நீதிமுறைமை செய்யவும் தண்டனை விதிக்கவும் முடிகிறது. இது தண்ட நீதியாகும். இது அரச பதவியின் புதிய மரபை அல்லது இறைமையைப் படைத்தது. (அ) நான்கு சாதிகளின் வழக்கங்களையும் மரபுகளையும் இவருடைய தகுதித்திறமையின் வலிமையால், தர்மத்திற்கெதிராக, அதாவது, சட்டங்களையும் கடமைப் பொறுப்புகளையும் மீறுமல் பேணிக் காக்கிறுர் என்று சொல்லும்பொழுதும், (ஆ) சுவாமி (இறையாக)யாக அரசர் தண்ட நீதியை அல்லது தண்டிக்கும் அதிகாரத்தையும் நல்விளைவு நல்கும் அதிகார்ரத்தையும் செயற்படுத்தி நீதிமுறைமை செய்யும்பொழுதும், அரசர் சட்டத்தையும் கடமையையும்[185] நிலைநிறுத்துகிறுர். இந்த உரிமைகளைத் தான் அர்த்தசாத்திரம் மெய்ப்பித்தது.[186]

### சட்டத்தைப் பிரகடனம் செய்த அசோகரின் தனிச் சிறப்பு

தர்ம பிரவர்த்தகராக இருக்க அசோகர் செய்த முயற்சிகளின் தன்மையை நாம் கண்டோம்; தண்ட நீதியைச் செலுத்த இவர் செய்த முயற்சிகளை இப்பொழுது நாம் காணவேண்டும். அதாவது, நீதிமுறைமை செய்ய இவர் எச் சட்டத்தைப் பிரகடனஞ் செய்தார் என்பதை நாம் உறுதிசெய்யவேண்டும். சட்டக்

185 'Arthasastra, Bk.' iii, Ch. I. 186 Ibid.

கோட்பாட்டைப் பொறுத்தவரையில், சட்டம் அரசரின் ஆணையாகும்; இவரது அல்லது மோரியப் பேரரசில் காணப்பெற்ற சட்டத்தின் மூலச்சான்றையும் பொருளையும் நாம் ஆய்தல்வேண்டும். இவரது இறைமையின் தன்மையை உறுதிப்படுத்துவதற்கு இது நமக்கு உதவும். புத்த சமயம் பரவுவதற்கு முன்னும், மெய்யாகவே மோரியப் பேரரசிற்கு முன்னும், சட்டம் முற்றிலும் பிராமண சமயத்தின் குணவியல்பையும் பொருளையும் கொண்டிருந்தது. பௌதாயன, கௌதம, ஆபஸ்தம்ப சட்டத் தொகுப்புகள் எதிர்ப்பில்லாமல் நிலவின. பௌத்த சமயம், பௌத்த சமய வாழ்க்கை முறையை ஏற்றுக்கொண்டதோடு, பிராமண சமயம் சார்ந்த சட்டத் தொகுப்புகளின் விதிகள் பற்றுதனவாகத் தோன்றின. சான்றாக, பிராமண சமயம் சார்ந்த சட்டம் செய்ததுபோல், சாதியின் மெய்மையை சட்டம் பின்பற்றியிருந்தால், பின் ஒரு புத்த சமயத்தினர் அல்லது ஒரு சமணர், நீதிமன்றங்களில் நீதியைப் பெறலாம் என்று நம்பமுடியாது. பொதுவாக மோரியப் பேரரசிலும், குறிப்பாக அசோகரின் பேரரசிலும் பௌத்தர்களுக்கும் சமணர்களுக்கும் ஓர் இக்கட்டான நிலை உண்டாக்கப்பட்டிருக்கவேண்டும். மோரியர்கள் அவர்களுக்காக என்ன சட்டம் செய்தார்கள் என்பதை உறுதியாய் அறியமுடியாது. ஆனால், பிராமணச் சட்டம் அல்லது புனிதச் சட்டத்தைப் பொருத்தத்தோடு இவர்கள்மீது செயல்படுத்த இயலாதென்றால், இவர்களின் நிலையைச் சமாளிக்க உறுதியாகச் சில செயல்வகைகள் வகுக்கப்பட்டிருக்கலாம். இவர்களுடைய சமயச் சார்பில்லாத வழக்கங்களையும் மரபுகளையும் நீதி வழங்குவதற்காக அரசர் நாடலாம். தனிக் குழுக்கள், குடும்பங்கள், சாதிகள் அல்லது நாடுகள் ஆகியவற்றின் பழக்கங்களும் மரபுகளும் குறிப்பிட்ட சில ஒவ்வா ஒதுக்கங்களோடு கட்டுப்படுத்தும் ஆற்றல் பெற்றிருந்தனவென்று பிராமணச் சட்டத் தொகுப்புகள் விதித்தால், பின் பௌத்த, சமணத் தொகுப்புகளும் இதைப் போலவே நடத்தப்பட்டிருக்கவேண்டும்.

'(புனித) விரிவுரை விளக்க மூலங்களுக்கு முரணில்லாதிருக்கின்ற நாடுகளின், சாதிகளின், குடும்பங்களின் சட்டங்களும் சான்று வலிமை பெற்றிருக்கின்றன'வென்றும்; தம் சொந்தப் பிரிவுகளுக்கு உழவர் வணிகர், மந்தைக்குரியவர், கைவினைஞர் ஆகியோர் சட்டம் வகிக்க அதிகாரம் பெற்றிருக்கின்றன'ரென்றும்; 'ஒவ்வொரு வகுப்பிலிருந்தும் எடுத்துக்கூறும் அதிகாரம் பெற்றிருப்பவர்களிடமிருந்து நடப்பு நிலைகளை அறிந்துகொண்டு இவர் சட்ட முடிவுகளை அளிப்பார்'[187] என்றும் சொன்ன

[187] xi, 20—22.

வர் கௌதமராவார். ஆபஸ்தம்பரும்[188] பௌதாயனரும்[189] இதேபோன்ற மூலக்கருத்தைத் தெரிவித்துள்ளனர். சட்டம் பற்றியவைகளில், வழக்காறு அல்லது வியவகாரத்தின் முறைமைத் தகுதியில் இவைகள் மிகத் தெளிவான குறிப்புகள். பௌத்த சமணர்களோடு தொடர்புகொள்ளுகையில் இவர்களின் வழக்கம் அல்லது பழக்கம், மரபு ஆகியவற்றை அரசர் நம்பியிருந்தார். ஏற்புடைச் சமயம் சார்ந்த பிராமண சட்டத் தொகுப்பாகிய பிற்கால நாரதர் தொகுப்பால், உண்மையிலேயே இந்த முடிவை யொட்டி ஒரு முடிவு செய்யப்பட்டது. 'ஏற்பமைதியில்லாக் கோட்பாட்டாளர்களுக்குள், நிகாமங்கள், தொழிற் சங்கங்கள், கூட்டாண்மைக் கழகங்கள், விரதங்கள், கணங்கள் ஆகியவைக ளுக்குள், அரணமைந்த நகரங்களிலும் நாட்டிலும் இவைகளுக்குள் நிலவுகின்ற வழக்காறுகளை அரசர் பேணவேண்டும்.'[190] ஆட்சி யைப் பொறுத்தவரையில், பௌத்தர், சமணர், பிராமணர் ஆகி யோரின் பழக்கங்கள், மரபுகள் போன்றவைகளின் பொருளை, இவர்களுக்கு நீதிமுறைமை செய்வதை, அசோகரும் மோரியரும் எடுத்துக்கொண்டிருக்க வேண்டுமென்பதும் இவர்களுடைய பழக்கங்களையும் மரபுகளையும் இணக்கமாகப் பொருத்தவும் அவர் கள் முற்பட்டிருக்க வேண்டுமென்பதும் ஏற்றுக்கொள்ளக் கூடி யவையாக இருக்கின்றன. இந்தக் காலத்தில் இம் மரபுகள் எழுதி வைக்கப்பெறுமல் இருந்திருக்கக்கூடும். இதனால்தான், இந்தியா வின் சட்டங்கள் எழுதிவைக்கப்பெறவில்லை என்று மெகஸ்தனீஸ் சொல்லியதை இந்த அதிகாரத்தில் ஏற்கெனவே நாம் குறிப்பிட் டோம். இதனால்தான், வியவகாரங்கள் அல்லது பழக்கவழக் கங்கள், சரித்திரம் அல்லது நல்லவரின் நடத்தை, அரசரின் ஆணை, அதாவது, அரச சாசனம் ஆகியவை புனிதச் சட்டம் அல்லது தருமத்தைப்போல் சட்டத்தின் ஆற்றல் பெற்றிருந்தனவென்று அர்த்தசாத்திரம் மெய்ப்பித்தது.[191]

புனிதச் சட்டம் அல்லது தர்மம், வழக்காறு அல்லது வியவ காரம், சமஸ்தா அல்லது நிலைபெற்ற வழக்கம், நியாயம், அதாவது, அரசரின் தீர்வு முடிவு, நீதியின் விதிமுறைகள் அல்லது ஒப்புர வைத் திருப்திசெய்யும் கற்றோரின் தீர்வு முடிவு ஆகியவற்றிற்கு ஒப்ப அரசர் நீதி வழங்கவேண்டுமென்று மேலும் வழிவகுக்கப் பட்டது[192] ஆனால், சரித்திரம், வியவகாரம், தர்மம் ஆகிய வற்றிற்கிடையே உடன்பாடு இல்லையென்றால், தருமம் நிலவ வேண்டும்; தருமத்திற்கும் நியாயத்திற்கும் இடையில் உடன்

[188] II—15, 1. [189] I, i, 2, 6. [190] x, 2.
[191] Bk. iii, Ch. I. [192] Ibid.

பாடு காணப்படவில்லையென்றால், நியாயம் நிலவும்.[193] அரசர் தம் இறுதி முடிவை அல்லது தீர்வு முடிவை அளிப்பதற்கு வியவகாரத்தையும் சரித்திரத்தையும் பின்பற்ற முயன்றிருக்கலாம் என்பதும், பௌத்தர், சமணர், பிராமணர் ஆகியோர் தொடர்புகொண்ட வழக்குகளில் சாசனத்தை அரசர் பின்பற்ற முயன்றார் என்பதும் அர்த்தசாத்திரத்தின் இக் கூறுகள் சுட்டிக் காட்டும் முடிவாகும். ஆகவே, அரசரால் முறைமை செய்யப்பட்ட சட்டம் புனிதச் சட்டத்தையொட்டிய முதன்மையாக இவருடைய சொந்தத் தீர்வு முடிவுகள், நன்னெறியில் வாழ்கின்ற மக்களின் நிலைபெற்ற நடத்தை,வழக்கம் ஆகியவைகளைக் கொண்டிருந்தது. பல சமயங்களும் தனிக் குழுக்களும் அடுத்தடுத்து வசித்த ஒரு பேரரசில் இவர்களுடைய பழக்கங்களையும் மரபுகளையும் பொருள் விளக்கம் செய்து ஒருங்கிணைக்கும் கடமைப் பொறுப்பு முற்றிலும் அரசரின் முறைப்படியான உரிமையாயிற்று. இதன் விளைவாக, நாட்டின் சட்டத்தில் இவருடைய தீர்வு முடிவு முதன்மையான இயல்பாக இருந்திருக்கக்கூடும்.

## அசோகரின் இறைமை

குடிமக்களின் மாறுபடுகின்ற வழக்காறுகள், நடத்தை ஆகியவற்றின் பொருள் விளக்கத்தில் அரச சாசனம் வலிமை மிக்கதோர் இயல்பாக இருந்ததென்று கூறவேண்டும். உண்மையாகவே அரசர் இறைமையுடையவராக இருந்தார் என்ற கருத்திற்கு இது ஆதரவளிக்கிறது. ஏனெனில், பெருமளவிற்கு இவருடைய தீர்வு முடிவு சட்டமாக இருந்தது. இதில் அசோகர் தம் அதிகாரத்தை முழு நலத்திற்குச் செயல்படுத்தியிருக்க வேண்டுமென்பதில் சிறிதும் ஐயமில்லை. எல்லாச் சமயங்களின் நனிசிறந்த ஒழுக்கப் பண்புகளைக் கூட்டிணைக்க முயன்றதில் இவர் திண்ணியராக இருந்தார். இக் கூட்டிணைப்பை இவர் 'தம்மம்' என வழங்கி எல்லோர்மீதும் செயல்படுத்தினார். நீதிமுறைமை நோக்கத்திற்காக, நடைமுறையில் மக்களின் வழக்கத்திற்கும் நடத்தைக்கும் ஒப்பத் தம்முடைய ஆணைகளையும்கூடச் செயற்படுத்த இவர் முனைந்திருக்கலாம். ஆகவே, நெறிமுறை வழிகாட்டியாக, ஆட்சித் தலைவராக, சட்டத்தைப் பறைசாற்றுபவராக இவர் இருந்த காரணத்தால், அசோகர் இச் சொல்லின் ஒவ்வொரு பொருளிலும் இறைமையுடையவராக இருந்தார்; இவர் வழியாக, அரசு, அதாவது, ராஷ்டிரமும் அந்த அளவிற்கு இறைமை பெற்றதாயிற்று.

[193] Ibid.

# 6. அரசின் ஆளுமையும் இறையுரிமையும்

(கி.மு. 100—கி.பி. 300)

## அரசியல், சமய மோதலோடு இக் காலம் தொடங்குகிறது

அசோகனின் மறைவு மௌரியர்களின் வீழ்ச்சியைக் குறிப்பிட்டது. அடுத்தடுத்து வந்த திறமைமிக்க மன்னர்களால் வருந்தி ஆக்கப்பெற்ற மௌரியப் பேரரசின் அழிவை இது தூண்டியது. வெளித்தாக்குதல்கள், உட்பூசல்கள் ஆகிய இரு நெருக்கங்களுக்குள் பேரரசு மூழ்கியது. இந்தியாவின் பல்வேறு பாகங்களில் புதிய இனங்கள் ஆட்சியுரிமை பெற்றுப் பல்வேறு பல புதிய அரசுகளைத் தோற்றுவித்தன. அரசியல் ஒட்டிணை வாற்றல் மிகக் குறைந்த நிலையில் இருந்ததாகத் தோன்றியது. புதிதாக ஏற்படுத்தப்பெற்ற இவ் அரசுகளின் உறவுகளைக் குறிப்பிடும் முடிவில்லாச் சச்சரவால் இது ஏற்பட்டது. பெரும்பாலும் இவைகள் ஒரு பேரரசின் பரப்பைப் பெற்றிருந்தன. ஆனாலும், மௌரியப் பேரரசின் புகழ் உச்சநிலையை இவைகளால் எட்ட முடியவில்லை; வடஇந்தியா முழுவதையும் ஓர் ஆட்சியின்கீழ் ஒன்றுபடுத்தவும் இவைகளால் முடியவில்லை. சுங்கர், கண்வர், ஆந்திரர், சேதர், குஷானர், பாரசிவர், வாகாடகர் ஆகிய இவர்கள் இக் கடமைப் பொறுப்பில் முயன்று சிறிதளவு வெற்றி பெற்றனர். பாழான மோதலில் இவை ஒவ்வொன்றும் ஈடுபட்டு அரங்கில் தோன்றின. சிற்றிடைக் காலப் பகட்டழகிற்குப் பின் இவை இருளிலும் குழப்பத்திலும் மறைந்தன. இறுதியில், வடஇந்தியாவை ஆழ்த்தியிருந்த இருளிலிருந்தும் குழப்பத்திலிருந்தும் வடஇந்தியாவை ஒருங்கிணைத்துக் காக்கும் கடமைப் பொறுப்பை குப்தர்கள் நிறைவேற்றினர். ஆகவே, மௌரியப் பேரரசு வீழ்ச்சியோடு தொடங்கிய குப்தர் பேரரசு நிறுவப்படுதலோடு முடிவுறும் இக் காலம் ஐந்து நூற்றாண்டுகளைக் கொண்ட காலமாகும். இக் காலத்தின் பரந்த நீட்சி, பகட்டழகு, துயர்க் காலங்களாலும், பெரு முயற்சிகளாலும், இடையறா மோதல்களாலும் தடுக்கப்பெற்றது.

நாட்டின் அரசியல் மரபுகளில் இம் மோதலின் கூறுகள் ஓரளவு பதிந்திருந்தன. ஓர் அளவு இந்தியாவிற்குள் வந்தடைந்த புதிய இனத்தவர்கள் இதை விரைவுபடுத்தினர். ஆகவே, மௌரியப் பேரரசின் சிதைவு, உறுதிப்படுத்திக்கொள்ள முனைந்த விரிமையைப் போக்குச் சக்திகளை எல்லாப் பக்கங்களிலும் வெளிப்படுத்தியது. இதன் சிதைவுகளிலிருந்து எண்ணிறந்த அரசுகள் தோன்றின. நீண்ட காலப் போராட்டத்தால் வெளியான தமக்கிடையேயுள்ள பகைமையால் இவ்வரசுகளின் நிலை தெளிவாயிற்று. நாட்டின் அரசியல் மரபுகளில் இப் பகையும் போரும் மெய்ப்பிக்கப்பெறுகின்றன. சக்கரவர்த்தியின் வெற்றி வாகைகளைக் கொணர்ந்த திக்விஜயக் கருத்துகளால் இவைகள் ஊக்குவிக்கப்பெற்றன. இதைச் சிலரே அடையமுடியுமென்றாலும், பல அரசர்கள் அடைய விழைந்தனர். இது நாட்டை மோதலுக்குள்ளாக்கியது. அரசியல் வாழ்க்கையில் அமைதி நிலவுமுன், இந்தியாவின் கணவாய்களின் வழியாக இந்தோ-கிரேக்கர், ஸ்கித்தியர்கள், பார்த்தியர்கள், ஊச்சிகள் போன்ற தாக்கும் கூட்டங்கள் வந்தடைந்தன. ஏனெனில், மௌரியப் பேரரசின் வீழ்ச்சிக்குப்பின் உள்நாட்டுக் குழப்பத்தின் காரணமாக எல்லைப் பாதுகாப்பு முற்றிலும் சிதைந்தது. இவர்களின் வருகை மோதல்களில் புதிய கூறுகளைப் புகுத்திற்று. நாட்டில், மெதுவாக உருவாகிக்கொண்டிருந்த மெய்யுணர்வை இவர்களின் தாக்குதலின் வேகம் அவலமானதாக்கிற்று.

ஆனால், மக்களுக்கும் அரசுகளுக்கும் இடையிலான இப் பூசல், நிலைமையின் ஒரு விளக்கமேயாகும். மறுபுறம், இப் பூசல் சமய இயல்பைப் பெற்றுவந்ததை நாம் காண்கிறோம். உண்மையில், மக்களின் சமயச் சார்புடைமைகளிலும் அரசுகளின் சமயச் சார்புடைமைகளிலும் உள்ள வேறுபாடுகள், அரசியல் பூசல்களை மிகைப்படுத்தின. அசோகரின் கீழ்க் காணப்பெற்றதைப் போன்ற மூல முன்மாதிரிச் சமயங்கள்பற்றி அரசுகள் ஒருசார்புடைய உணர்வைக் காட்டின. பௌத்த சமயத்திற்கு எதிர்ப்பொன்று தோன்றியது. ஏனெனில், அசோகனின் அரசியல் அதிகாரத்தால் இது ஆதரிக்கப்பட்டது. இது பிராமணீய மறுமலர்ச்சிக் காலமாகும். அசோகனின் பேரரசின் சிதைவுகளிலிருந்து எழுந்த பல அரசுகள் போராடிக்கொண்டிருந்த பிராமணீயத்திற்கு உதவின; பிராமணீயத்தின் செல்வாக்கை மெய்ப்பிக்கவும், பழிவாங்கும் இயல்பின் காரணமாக பௌத்த சமயத்தை ஒடுக்கவும் இவைகள் முயன்றன.

பிராமணீய மறுமலர்ச்சிக் காலமாகிய இக் காலத்தில்தான் இந்தியாவிற்குள் புதிய தாக்குதல்காரர்கள் நுழைந்தனர். பிரா

மணீய சமூகத்திற்கு இவர்களின் வருகை ஒரு பிரச்சினையை உண்டாக்கிற்று; புத்துயிர் பெற்றுக்கொண்டிருந்த பிராமணீயத்திற்கும் பௌத்த மதத்திற்குமிடையே நடந்துகொண்டிருந்த பூசலை இவர்கள் தீவிரமாக்கினார்கள். பிராமணீய சமூகக் கட்டமைப்பிற்குள் இவர்களை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. இவர்களை மிலேச்சர்கள் என வெறுத்து ஒதுக்கினர். அக் கால இலக்கியங்களாகிய புராணங்கள், இதிகாசங்கள், மனுஸ்மிருதி போன்ற இன்ன பல நூல்களில் இவர்களுக்கு இப் பெயர் வழங்கப்பெற்றுள்ளது. இவர்களைத் தம் அமைப்பிற்குள் ஏற்றுக்கொண்டது பௌத்த சமயமேயாகும். இவர்களை விலக்கி வைத்ததுமட்டுமன்றி இவர்கள்மீது அதுவரை சுமத்தியிருந்த சமுதாய முறையையும் அழிக்கத் தீர்மானித்தனர். ஏனெனில், பிராமண சமூகம் இம் மிலேச்ச அரசர்களுக்கு அளித்த இழிவை உணர்ந்தனர். இச் சமூக சமய வெறுப்புதான் பிராமண சமயத்தைக் குஷாணிய மன்னர்கள் எங்கெல்லாம் ஆட்சி செய்தனரோ அங்கெல்லாம் கடுமையாக ஒறுக்கத் தூண்டியதென்பதை நாம் பின்னர் பார்க்கலாம். ஆகவே, இந்த ஈரிடையான பூசல் தான் இந்திய வரலாற்றின் இக் காலத்தின் பண்பை விரித்து உரைக்கிறது.

## சீரமைப்போடு பூசல் முடிவுறுகிறது

அரசின் செல்வாக்கையும் பழமையான சமூகக் கட்டுக்கோப்பின் உறுதிப்பாட்டையும் இந்த ஈரிடையான பூசலின் ஆற்றல்கள் கீழறுப்பதில் வெற்றி பெறலாம் என்று இக் காலத்தின் முற்பகுதிகளில் அஞ்சப்பட்டது. ஏனெனில், அரசின் சமயச் சார்புடைமை சமயப் பூசலை நிலைபேறுடையதாக்கவும், அதுவே மெல்ல உருவாகிக்கொண்டிருக்கும் இறைமையின் எங்கும் நிறைந்த தன்மையை மாசுபடுத்தவும் நாடிற்று. ஆனால், இக் காலம் முடிவுறும்பொழுது அரசின் சமயச் சார்புடைமையும், பிராமண சமூகத்தில் வெளியாரின் ஆதிக்கமுமாகிய பூசலின் கூறுகள் இவர்களின் குணவியல்புகளை மெதுவாக மாற்றியதோடு, அரசியல், சமயச் சீரமைப்பையும் செய்தன. சமயத்தைப் பொறுத்தவரையில் அரசின் சார்புடைமை உணர்வு, அரசின், அதாவது, அரச பதவியின் புதிய கோட்பாட்டை உருவாக்க உதவிற்று. அரசனுடைய உருவில் அரசு உள்ளடக்கப்பட்டிருந்தமையால், சமயத்திற்கு இதனுடைய ஆதரவை அளித்தது; இறைவனின் பேரொளியிலும் அருள் தூய்மையிலும் ஓர் ஒளிவட்டத்தோடு சமயம் தன்னைப் பொறுத்தமட்டில் அரசனுக்கு அதிகாரமளித்தது. மனித உருவில் உள்ள கடவுளாகஅரசன் நடத்தப்பெற்றான். இவ் உயர்நிலைக்கு உயர்த்தப்பெற்ற அரசனின்

அதிகாரம் பயனுடைமையையும் ஆற்றலையும் பெற்றிருக்கவில்லை யென்றால், இக் காலத்தில் இந்தியாவில் நுழைந்த வெளியார் களின் பழக்கம் இதை வழங்கிற்று. ஆகவேதான், இந்திய ஆட்சி அமைப்பொழுங்கில் அரசர்களின் இறைவழி உரிமைக் கோட்பாடு எழுந்தது. அரசு தன் உண்மை நிலையையும் பயனுடைமையை யும் அரசனின் ஆளுமை வழியாகக் கண்டதால், அரசபதவியின் இக் கொள்கை வழிபாடு அரசின் செல்வாக்கை மீண்டும் உயர்த் திற்று. இந்த அரசியல் வளர்ச்சியோடு சமயத்துறையில் எதிர் பாராத ஓர் உணர்வும் வளர்ந்தது. சமயப் பூசல்களுக்குள் ளான காலம் சிறிது சிறிதாகச் சமயக் கூட்டிணைப்பிற்குள்ளா கியது. இது வாழ்க்கையின் போக்கில் ஒரு முழு மாற்றத்தைக் கொண்டுவந்தது. முரண்படுகின்ற சமயங்களுக்கிடையில் ஒரு சமரச இணக்க உணர்வை இது உட்கொண்டிருந்தது. குறைபாடு களும், முரண்பாடுகளும், குழப்பமும் இருந்தாலும், இக் காலம் முன்னேற்றக் கூறுகளையும் பெருந் துணிகரச் செயல்களையும் முழுமையாகக் கொண்டிருக்கிறது. எல்லாவற்றிற்கும் மேலாகக் கலையிலும் இலக்கியத்திலும் புதிய தகவுகளை இது உருவாக்க முயன்றது. தாராள மனப்பான்மையையும் பற்றையும் வளர்த்த சமயக் கூட்டிணைப்புணர்வு இவைகளை இயக்கிற்று. சமயச் சார்புடைமையைக் காட்டிலும் சமயப் பொறை அரசாங்கங் களின் ஏற்றுக்கொள்ளப்பெற்ற கொள்கையானபொழுது, ஆட்சிக் கலை நுட்பங்களைக்கூட இது மாற்றிற்று. இக் காலத்தின் செயல் கூடு நிலைகள் இவைகளே.

இக் கால வரலாற்றின் சிறு விளக்கம் இக் காலத்தின் அரசியல் வரலாறு அரைகுறையாக உறுதிப்படுத்தப்பெற்ற உண்மைகளை யும், சர்ச்சைக்குரிய விவரங்களையும், முரண்படும் குறிப்புகளையும் கொண்ட கடுஞ்சிக்கல் வாய்ந்த சிக்கு முடிச்சாகும். புராணங் களும், நாணயங்களும், கல்வெட்டுகளும், இலக்கியமும் மிகக் குறைவான வரலாற்றுச் சான்றுகளையே அளிக்கின்றன. இக் காலம்பற்றிய கருத்தை விளக்குவதன்றிக் குழப்பவே இவைகள் பயன்படுகின்றன. புஷ்யமித்ர சுங்கன், பிரிஹத்ர மோரியனைக் கொன்று அரியணையைக் கவர்ந்தபொழுது, கி.மு. 184-ல், நடை முறையில் மோரியப் பேரரசு முடிவிற்கு வந்தது. சுங்கர்களின் தோற்றம் தெளிவற்றிருக்கிறது. சுங்க அரசர்களின் குலவழிப் பட்டியல், இவர்களின் 112 ஆண்டு ஆட்சிக் காலத்தைக் குறிப்பிடு கிறது.[1] சுங்கர்களின் ஆட்சி 'ஒரு பிராமண மறுமலர்ச்சியால் குறிப்பிடப்படுகிறது. இம் மறுமலர்ச்சியின் வீர முதல்வனாக புஷ்யமித்திர சுங்கன் கருதப்பெறுகிறான். சக்கரவர்த்தியின்

[1] F. E. Pargiter, 'Kali Age,' pp 30-33, 70.

ஆட்சியின் ஓர் அடையாளமாக, அதாவது, உயர்தலைமைக்காக இவர் ஓர் அசுவமேத யாகம் செய்ததாக 'மாளவிகாக்னிமித்ரமும்' சிறப்பித்துக் கூறுகிறது. பௌத்த இலக்கியங்கள் இவரை பௌத்த சமயத்தை ஒறுத்தவர் என்றும், பல மடங்களை அழித்தவர் என்றும் வருணித்திருக்கின்றன.[2] இவரது மகன் அக்னிமித்திரனைப்பற்றிப் புராணங்களிலிருந்தும், மாளவிகாக்னிமித்திரத்திலிருந்தும் தெரிந்துகொள்ளக்கூடியதற்கப்பால் ஒன்றும் தெரியவில்லை. வட பாஞ்சாலத்தில் கண்டெடுக்கப்பெற்றுள்ள நாணயங்களில் காணும் அக்னிமித்திரனாக இவன் இருக்கலாம் அல்லது இல்லாதிருக்கலாம்.[3] இருப்பினும், புராணங்கள் கூறும் பாகபத்ரா அல்லது பாகவதா என்பவர் இவரது வமிசத்தில் ஈற்றயல் மன்னரென்பதில் ஐயமில்லை. 'தட்சசீல மன்னராகிய அன்டியால்சிடாவின் (Antialcidal) விதிச அரசவையிலிருந்து வந்த யவன அரசியல் தூதராகிய டியோன் (Dion) என்பாரின் மகனாகிய ஹெலியோடோரஸ் (Heliodoras) என்பவரால் எழுப்பப்பெற்ற பெசநகர் கற்றூண் இவரது ஆட்சிக் காலத்தில் தான் நிறுவப்பெற்றது.[4] கண்ணுவ வமிசமெனப் பெயர் பெற்ற பிராமண வமிசமொன்றைத் தோற்றுவித்த வாசுதேவர் என்னும் பவபூதியின் அமைச்சரின் தூண்டுதலின்பேரில் (பவபூதியின்) அடிமைப் பெண் ஒருத்தியின் மகளால் இவர் கொல்லப்பட்டார்.[5] சுங்கப் பேரரசின் பரப்பை நிருணயிப்பது கடினமாகும். இதில் மாளவம், பாஞ்சாலம் (அஹிசத்ரா), வத்சம் (கௌசாம்பி), கிழக்குப் பஞ்சாப், மதுரா போன்றவை அடங்கியிருந்தன என்பதில் ஐயமில்லை. ஆனால், இதில் கோசலம், விதேகம், காசி, மகதம், அங்கம், பஞ்சாப், விதர்ப்பாபோன்ற நாடுகள் அடங்கியிருந்தனவா என்று கூறுவது கடினமாகும்.

புஷ்யமித்திரனின் வாழ்நாளில் பஞ்சாபில் இருந்த சாக்கலம் என்ற இடத்தை மினண்டர் கைப்பற்றிக்கொண்டான். மாளவத்தில் உள்ள உஜ்ஜெயினியை சதகர்ணி கைப்பற்றிக் கொண்டான். மறுபடியும் கி.மு. முதல் நூற்றாண்டின் இரண்டாம் பகுதியில் மதுராவைச் சுற்றியிருந்த பகுதிகள் சகர்களின் ஆட்சியின்கீழ் வந்தன.[6] விதர்ப்பாவைப் பொறுத்தவரை, மாளவிகாக்னிமித்ராவின் யஞ்ஞசேனன் என்பவர் ஆந்திர அரச

[2] E. B. Cowell&R. A. Neil, 'Divyavadana,' pp. 433–4.
[3] C.H.I. p. 520.
[4] Ibid. p. 521.
[5] Cowell and Thomas, 'Harsha Carita', p. 193.
[6] C. H.I., pp. 576-77.

ராக அல்லது ஆந்திர அரசருக்குத் திறை செலுத்துபவராக இருந்திருக்கலாம். ஆனால், இவர் சுங்கர்களுக்குத் திறை செலுத்துபவராக இருந்ததில்லை. ஆகவே, வட இந்தியாவில் இக்காலத்தில் குறிப்பிடத்தக்க மூன்று இனங்கள் இருந்தன. அவையாவன கிழக்கில் சுங்கர்கள், வடக்கில் யவனர்கள், தெற்கில் பிரதிஷ்டான ஆந்திரர்கள் ஆகியோர் வசித்துவந்தனர்.

தேவபூதியின் படுகொலையோடு அதிகாரம் சுங்கர்களிடமிருந்து கண்ணுவர்களுக்கு மாறிற்று. கண்ணுவர்கள் 'சுங்கர்களின் அமைச்சர்க'ளென்றும், 'சுங்கர்களின் அரசர்க'ளென்றும் விவரிக்கப்பட்டிருக்கின்றனர்.[7] புராணத்தின் காலமுறைப்படி கி.மு. 72-ல் சுங்கர்களின் அதிகாரம் முடிவடைந்தது. இவர்களுக்குப்பின் வந்த கண்ணுவர்கள் 45 ஆண்டு ஆட்சிசெய்தனர். இதற்கிடையில், கி.மு. மூன்றாம் நூற்றாண்டின் கடைசிப் பகுதியில் தெற்கில் சிமுகா என்பவர், சாதவாகன அல்லது சத்தகர்ணி வமிசத்தை நிறுவினார். இவரது அல்லது உடனடியாக இவருக்குப் பின்வந்த இவருடைய இளவல் கிருஷ்ணாவின் காலத்தில் ஆந்திரப் பேரரசு மேற்குத் திசையில் 74 நிரைகோடுவரையிலும் அராபியக் கடல்வரைகூடப் பரவியிருந்தது. இம் முந்திய சாதவாகன அரசர்களின்கீழ் ஆந்திர அரசின் எல்லைகள் விதர்ப்பா முழுவதுமில்லாவிட்டாலும், இதன் ஒரு பகுதி மத்திய மாகாணங்கள், ஹைதராபாத் போன்றவைகளைக் கொண்டதாக விரிவடைந்தது.[8] இயல்பாகவே இவர்கள் சுங்கர்களோடு மோதி, முன் குறிப்பிட்டதைப்போல், புஷ்யமித்திரனிடமிருந்து உஜ்ஜெய்னியைக் கவர்ந்துகொண்டனர். கி.பி. மூன்றாம நூற்றாண்டின் மத்திய காலம்வரையில் இவர்களின் அதிகாரம் மத்திய இந்தியாவிலும் தென்னிந்தியாவிலும் பரவிற்று. இக்காலத்தில்தான் இவர்களின் உயர்நிலை மேலாண்மை முடிவிற்கு வந்தது. பிற்கால சாதவாகன அரசர்கள், இரண்டு மேலை அரசுகளை (Western Satraps) எதிர்த்து அழிவுப் போரில் ஈடுபட்டிருந்தனர். இதில் ஒன்று நாகபானன் (Nagapana) என்பவராலும், மற்றொன்று காஸ்டானா (Castana) என்பவராலும் தோற்றுவிக்கப்பெற்றது.[9] முன்னைய அரசின் தலைநகர் நாசிக்கில் அல்லது அதனருகில் இருந்தது. பின்னையதன் தலைநகர் உஜ்ஜெய்னியாகும். 'இரண்டாம் காட்பிசிஸின் மரணத்திற்கும் கனிஷ்கன் அரசுரிமை பெற்றதற்கும் இடைக்காலமாகிய ஏற்றுக்கொள்ளப்பெற்ற கி.பி. 117ஆம் ஆண்டில் கௌதமிபுத்திரனென்னும் ஓர்

7 'Kali age,' pp. 34, 71.
8 Dr. Barnett in C.H.I. pp. 599-600.
9 Luder's List No. 1123.

ஆந்திர அரசன், நாகபானனின் வமிசத்தை ஒழித்துவிட்டு அவ் வமிசத்தின் நாட்டைச் சேர்த்துக்கொண்டான்.'[10] பிற்கால சாதவாகன அரசர்களில் மிக்க ஆற்றல் வாய்ந்தவர் கௌதமி புத்திர யஞ்ஞஸ்ரீயாவார். இரண்டாவது நூற்றாண்டின் பிற் பகுதியில் இவர் முப்பதாண்டு ஆட்சி செய்தார். 'ஆந்திர அரசர்கள் இந்து சமயத்தையும் சாதி நிறுவனங்களையும் காப்ப வர்களாகத் தம்மைக் கருதிக்கொண்டனர்.'[11] பட்டியலில் மூன்றாவது இடத்தைப் பெற்றுள்ளவரும், இவர்களில் மிகச் சிறந்த அரசர்களில் ஒருவருமாகிய சாத்தகர்ணி இருமுறை அஸ்வமேத யாகம் செய்தார்; பிராமணர்களுக்குத் தாராள மாக நன்கொடை வழங்கினார்.

யவனர்கள் என்ற பெயர் பெற்றவர்களும், வட இந்தியா விலும் மேற்கிந்தியாவிலும் வசித்த சகர்களும் பஹ்லவர்களும், கலிங்கத்திலும் கிழக்கிந்தியாவிலும் வசித்த சேட்டர்களும் ஆந்தி ரர்களின் சமகாலத்தவராவர். யவனர்கள் கிரேக்கர்களாவர். இவர்கள் பாக்டீரியாவிலிருந்து வந்தவர்கள். காபூல் பள்ளத் தாக்கையும் வடமேற்கிந்தியாவின் ஒரு பாகத்தையும் கி.மு. 200-ல் பாக்டீரிய அரசராகிய யுத்திடெமஸும் அவருக்குப்பின் வந்தவரும் கைப்பற்ற முயன்றனர். கி.மு. 162-ல், யுக்ரடை டீஸ் (Eukratides) என்பவர் யுத்திடெமஸ் (Euthydemus) என்ப வரின் குடும்பத்தை அகற்றினார். காபூலிலும் வடமேற்கிந்தியா விலும் இம் மரபினருக்குரிய பகுதிகளைக் கவர்ந்துகொண்டார். கிரேக்க-இந்திய அரசர்களின் இந்திய வெற்றிகளின் வரலாற்றை ஸ்ட்ராபோ (Strabo) என்பார் இவ்வாறு கூறுகிறார் (XI, 516). 'ஆர்டிமீட்டாவின் (Artemita) அப்போலோடோரஸ் (Apollo-dorus) கூறுவதுபோல், அரியானாவையும் இந்தியாவையும் வெற்றி கொண்டவர்கள் நாட்டின் செழிப்பாலும் நலன்க ளாலும் மிக்க வலிமையுள்ளவர்களாகிய இக் கிரேக்கர்கள் பாக்டீரியாவின் புரட்சியைத் தூண்டினர். இவர்களுடைய தலைவர்கள், குறிப்பாக மினாண்டர், (உண்மையில் இவர் கிழக்கி லுள்ள ஹிப்பானஸைக் கடந்து இஷாமஸை அடைந்திருந்தால்) அலெக்சாண்டரைக்காட்டிலும் பல நாடுகளை வெற்றி கொண் டார். இவ் வெற்றிகளை மினாண்டரும், பாக்டீரிய அரசராகிய யுத்திடெமஸின் மகனாகிய டெமெட்ரியஸும் (Demetrius) அடைந் தனர். இவர்கள் பாட்டலீனியை (Patalene) மட்டுமன்றி சரோஸ்டோஸ் (Saraostos), சிகர்டிஸ் (Sigerdis) போன்ற முடி யரசுகளையும் கைப்பற்றினர். இவை அக் கடற்கரையின் எஞ்சிய

[10] 'Oxford History of India', p. 152.
[11] Ibid., p. 119.

பகுதியாகும்......இவர்கள் தம் பேரரசை செரிஸ் (Seres), பிரினி (Phyrni) வரையிலும் நீட்டித்தனர்.[12] ஹிப்பானிசும் ஹிப்பாசிசும் ஒன்றுதானென்றால், இசமஸ் ஜமுனாவென்றால், பாட்டலீனி பாட்டாலாவென்றால், சரோஸ்டோஸ் சுராஸ்டிராவென்றால், இவைகளின் வெற்றிகள் தற்கால இந்தியாவின் வடமேற்கு எல்லை மாகாணம், பஞ்சாப், சிந்து, கத்தியவார் ஆகிய இடங்களும் இதில் அடங்கியிருந்தன. கி.மு. 162-ல் யுக்ரடைடிஸ் காபூல் பள்ளத்தாக்கையும், காந்தஹாரையும், காந்தாரத்தையும் ஆண்டபொழுது இந்தியாவில் இரண்டு யவன வமிசங்கள் தோன்றின. இவ்விரு வமிசங்களின் கிளைகள் பல்வேறு முடியரசுகளில் நிறுவப்பெற்று ஒரே சமயத்தில் ஆட்சி செய்யப்பட்டன.[13] யுத்திடீமஸ், பண்டாலியோன், அகாத்தாகிளிஸ் போன்ற இனங்களும் அண்டிமாக்கசும் பாக்டீரியாவிலும் இந்துகுஷிற்குத் தெற்கிலுள்ள பகுதியிலும் ஆண்டனர். இந்திய வெற்றிகளுக்குப் பெயர்பெற்ற அபோலோடோரசும் மினாண்டரும் இதே வமிசத்தைச் சேர்ந்தவர்களே. இந்தியாவின் மற்றெல்லா யவன அரசர்களிலும் மினாண்டார்மட்டுமே மிகப் பழைய இந்திய இலக்கியத்தில் பாராட்டப்பெற்றுள்ளார். இந்த இலக்கியத்தில் இவர் மிலிண்டா என்று பெயர் பெற்றுள்ளார். ஒரு சிறந்த அரசரென்றும், ஆழ்ந்த மெய்யுணர்வாளரென்றும். சூழ்ச்சிநயத்தோடு வாக்குவாதம் செய்பவரென்றும், சிறந்த போர்வீரரென்றும் இவர் குறிப்பிடப்பெறுகின்றார். இந்தியாவில் இவர் பரந்த பகுதிகளைக் கைப்பற்றினார். இவை பஞ்சாபிலிருந்து பாடலிபுத்திரம்வரையும், சாகேதா (Saketa) விலிருந்து இராஜபுதனத்தில் சித்தூருக்கு அருகில் அவுந்தின் உள்ள மத்திய மீகாவரையிலும் பரந்து கிடந்தன. மினாண்டரும் யுக்ரடைடிஸீம் சமகாலத்தினராக இருக்கக்கூடும் யுக்ரடைடிஸிற்குப்பின் வந்த ஹெலியோக்கிளிஸ்; இந்தியாவையும். பாக்டீரியாவையும் ஆட்சி செய்தாரென்று நாணயங்கள் தெரிவிக்கின்றன. இவருக்குப்பின் பாக்டீரியாவில் கிரேக்க அதிகாரம் மறைந்தது. இதற்குப்பின் யவன அரசர்கள் இந்துகுஷிற்குத் தெற்கிலுள்ள முடியரசுகளில்மட்டுமே காணப்பட்டனர். காபூல் பள்ளத்தாக்கிலும் வடமேற்கிந்தியாவிலும் யுக்ரடைடிஸிற்குப்பின் வந்தவர்களும், பஞ்சாபின் கிழக்கு மண்டலத்தில் யுத்திடிமசிற்குப்பின் வந்தவர்களும் இரண்டு அரச வமிசங்களாகப் பிரிந்தனர்.[14] யுக்ரடைடிஸின் வழிவந்தவர்கள் ஹெலியோகிலிசும் அன்டியால்சிடசும். ஆவர் (Antialcidas). மினாண்டரின்

[12] McCrindle, 'Megasthenes and Arrian', p. 150.

[13] C.H.I., p. 545.

[14] C.H.I. 554.

வழிவந்தவர்கள் அகத்தாகிளியாவும் (Agathocleia) இவரது மகன் ஸ்ட்ரேட்டோவும் (Strato) ஆவர். விதிச நாட்டின் சுங்க வமிச அரசராகிய பாகபத்திரரின் சமகாலத்தவர் அன்டியால் சிடாஸ் ஆவார். ஸ்டிரேட்டோவின் (Strato) வாழ்நாளில் வட இந்தியாவில் யவனர்களின் வீழ்ச்சி முற்றுப்பெற்றது. ஒரு பெரிய வெளியார் படையெடுப்பே இதற்குக் காரணமாகும். இதன் பயனாகச் சகர்களும் பஹ்லவர்களும் (Pahalavas) உயர் மேலாண்மை பெற்றனர் (கி.மு. 75).

சகர்கள் சித்தியர்களே (Scythians). இவர்களில் சிலர் நீண்ட காலமாகவே செயிஸ்தான் (Seistan) என்னும் நாட்டில் நிலைத்து விட்டனர். மற்றவர்கள் ஜக்ஜார்டிஸ் ஆற்றின் கரையோர நாட்டில் இடம்பெற்றனர். இவர்கள் யூச்சிகளால் (Yuehcis) ஜக்ஜார்டிஸ் நாட்டிலிருந்து வேறிடத்திற்குத் துரத்தப்பட்ட பொழுது, பாகட்ரியாவில் குடியேறி, அங்கிருந்து கிரேகக ஆட்சியை (கி.மு. 135) அகற்றினர். இருப்பினும், இதற்கிடையில் கி.மு. 165-ல் ஹூணர்களால் தோற்கடிக்கப்பட்ட யூச்சிகள் மேல்திசை நோக்கச் செல்லத் தொடங்கினர். இவர்களின் வருகையின் வேகம் மறுபடியும் சித்தியர்களை இடம்பெயரச் செய்தது. சிதறிச் செல்லுகையில் சித்தியர்கள் கிப்பின் (Kipin) என்று சீனர்கள் வழங்கிய காஃபிரிஸ்தான் என்னும் இடத்தைக் கைப்பற்றி, செயிஸ்தானில் உள்ள இவர்களுடைய குடியிருப்புகளை வலுப்படுத்தினார்கள். இது செயஸ்தானின் சித்தியர்களை பார்த்திய அரசர்களை எதிர்த்து நிற்கச் செய்தது. இரண்டாம் பராட்டிஸ் (Phraattes) மன்னரின் ஆட்சியில் (கி.மு. 138—128) இவர்களுக்கிடையே ஒரு நீண்ட போராட்டம் தொடங்கிற்று. இரண்டாவது மித்திரிடேட்டசின் (Mithridates) ஆட்சிக் காலத்தில் (கி.மு. 123—88) இப் போர் பாத்தியர்களுக்குச் சாதகமாக முடிந்தது. கி.மு. முதல் நூற்றாண்டின் தொடக்கக் காலத்தில் இது சித்தியர்களைப் போலன் கணவாய்வழியாக சிந்து நதியின் தாழ்வெளிப் பகுதியில் குடியேறத் தூண்டியது. ஆனால், செயிஸ்தானிலும் காந்தஹாரிலும் 'இவர்கள் பார்த்தியர்களோடு மிக நெருக்கமாகத் தொடர்புகொண்டிருந்தனர். இவர்களைப் பிரித்துக் காண்பது எப்பொழுதும் இயலாததாகும்; ஒரே குடும்பம் பார்த்திய, சித்தியப் பெயர்களைக்கொண்டிருக்கிறது.'[15] எவ்வாறுயினும், நம்முடைய வசதிக்காக, வடமேற்கு எல்லைப்புற மாகாணத்திலும் பஞ்சாபிலும் யவனர்களுக்குப்பின் வந்தவர்களாகிய மௌஸ், முதலாம் அஜிஸ், அஜிலிசெஸ் போன்றோர்களையும் சகர்கள் என்று கூறலாம். செயிஸ்தானையும் காந்த-

[15] C.H.I., p. 568.

ஹாரையும் ஆட்சிசெய்த வோனேனிஸும் (Vonones), இவர் வழி வந்த ஸ்பாலிரிசசும் (Spalirises) இரண்டாம் அஜெசும் (ஆட்சி இறுதியின் கி.பி. 19) பஹ்லவர்களேயாவர். ஏறக்குறைய கி.பி. 19-ல் கிழக்கத்திய இரானிலும் வடமேற்கு இந்தியாவிலும் பஹ்லவர்களுக்கும் சகர்களுக்கும் உரிய நாடுகளின் ஆட்சியுரிமையைக் கொண்டோபார்னஸ் (Gondopharnes) பெற்ருர். இவர் காபூல் பள்ளத்தாக்கின்மீதும் ஆட்சிசெய்தார். இவரே ஒரு பஹ்லவராக இருந்திருக்கலாம். இவருக்குப்பின் வந்த பாக்கோரிசும் (Pacores) பஹ்லவரேயாவர். முதலாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் குஷானர்களின் வருகை இவர்களுடைய ஆட்சியை விளக்கிற்று.

யூச்சி கூட்டத்தின் ஐந்து இனங்களில் குஷானியர் ஓர் இனமாவர். நாம் முன்னர் குறிப்பிட்டதுபோல், இவர்கள் சாக்கியர்களை பாக்டீரியாவிலிருந்து விரட்டினர். பாக்டீரியாவில் இவர்கள் குடியேறியபின், ஒரு நூற்றுண்டிற்குமேல், குஷான இனத்தின் யாவுகா (Yavuga), அதாவது, தலைவர், யூச்சிகளுக்குள் தம்மை உயர்தலைவராக்கிக்கொண்டு, கி.பி. 25-க்கும் 81-க்கும் இடையில் ஒரு முடியரசை அமைத்துக்கொண்டார். தம்முடைய தளமாகிய பாக்டீரியாவிலிருந்து சிறிது சிறிதாக ஆப்கானிஸ்தான், காந்தஹார், வடமேற்கு இந்தியா ஆகியவற்றைக் கைப்பற்றிக் கொண்டு இவ் இடங்களிலிருந்து பஹ்லவர்களை ஒழித்துக் கட்டினர். ஒருவர்பின் ஒருவராக ஐந்து சிறந்த குஷான மன்னர்கள் ஆட்சிசெய்தனர். இவர்கள் முதலாம் காட்பிசிஸ், இரண்டாம் காட்பிசிஸ், கனிஷ்கன், ஹவிஷ்கன், வாசுதேவன் போன்ருராவர். இவர்களின் கால வரிசைமுறை இன்னும் உறுதியற்று இருக்கிறது. ஏனெனில், கி.பி. 78-ல் கனிஷ்கன் அரியணை ஏறியதாகப் பேராசிரியர் ராப்சன் (Rapson) கருத்துக் கொண்டிருக்கிருர். நாற்பது ஆண்டிற்குப்பின் கனிஷ்கன் அரசுரிமை பெற்ருன் என்ற மற்ருெரு கருத்தை டாக்டர் சிமித் (Dr. Smith) ஆதரிக்கிருர். எவ்வாருயினும், இரண்டு காட்பிசிஸ்களுக்குப் பிறகு கனிஷ்கன் அதிகாரம் பெற்ருன் என்பது ஒருவாறு ஏற்றுக்கொள்ளத்தக்கதாகும். எல்லாம் சேர்ந்து ஐந்து குஷானியர்களும் ஏறத்தாழ ஒரு நூற்ருண்டு ஆண்டனர். இவர்களுடைய பேரரசு இதன் உச்சக் காலத்தில் வடநாட்டில் பெனுரஸ், நர்மதாவரையிலும் உள்ள பகுதிகளையும், மாளவம், மேற்கிந்திய சகரும் க்ஷத்திரபரும் குஷான மேலதிபருக்குத் திறை செலுத்தி வந்தனர். இதனுடன் சிந்துத் தாழ்வெளி, காஷ்மீர், கோட்டான், யார்கண்டு, காஷ்கார், காபூல் உட்பட வடக்கிலும் மேற்கிலும் உள்ள பகுதிகளையும் கொண்டிருந்தது. இவர்களுடைய ஆட்சி இந்திய வாழ்க்கையில் பெரும் முற்போக்குச் சிந்தனையையும்

செயற்பாட்டையும் சுட்டியுணர்த்தியது. இவர்களுடைய பேரரசு எவ்வாறு வீழ்ச்சியுற்றதென்பதைச் சொல்வது கடினமாகும். வடமேற்கில் ஏறத்தாழக் கி.பி. 225-ல் தோன்றிய சசானிய அரசும், முதலாம் ஆர்ட்டா சர்க்ஸீஸும், இவரது வழிவந்தோர்களும் அல்லது ஆர்டெஹூரின் வெற்றிகளும் தெளிவாகப் பாதித்திருக்கவேண்டும். இருந்தபோதிலும், காபூலிலும் வடமேற்குப் பகுதிகளிலும் வலிமைமிக்க குஷான வமிசங்கள் ஆட்சி செய்தன. இவ் வமிசத்தின் சில இளவரசர்களைச் சமுத்திர குப்தனின் கல்வெட்டுகள் ஷாஹி என்றும், ஷாஹானு ஷாஹி என்றும் குறிப்பிட்டுள்ளதாகக் கூறலாம். இவைகளில் சில ஹூணர்களின் இந்தியப் படையெடுப்புவரையும், இன்னும் சில அராபியர்கள் வெற்றி கொண்டவரையும் நிலைத்திருந்தன.

இக் காலத்தில் இந்தியாவிற்குள் நுழைந்த வெளிநாட்டினர் பற்றி இதுவரை பார்த்தோம். இவர்களைச் சிறிது சிறிதாக இந் நாட்டின் சமூக அரசியல் அமைப்புகள் ஏற்றுக்கொண்டன. இவர்களின் வருகைக்குமுன் ஆந்திரர்களோடு சமகாலத்தவர்களாய் இருந்தது கலிங்க சேதகுலமே. பெருவேந்தன் காரவேலனின் காலத்தில் இது வலிமை பெற்றது. அசோகனின் மறைவிற்குப்பின் ஏறத்தாழ நூற்றாண்டிற்குப் பின், * கிழக்கு இந்தியாவிலும் தென் இந்தியாவிலும் பரந்த நிலப்பரப்பில் இவன் தன்னுடைய உயர்மேலாண்மையை ஏற்படுத்தினான். இவர்களுடைய வரலாற்றைச் சீரமைப்பதற்கு நமக்கு உதவக்கூடிய போதிய அளவு சேதர்களின் பதிவுகளை துரதிர்ஷ்டமாக நாம் பெற்றிருக்கவில்லை. மகாமேகவாகன ஸ்ரீகாரவேலன், மகாமேகவாகன ஸ்ரீ வக்ரதேவன், குமாரவாதுகா[16] ஆகிய மூன்று பெயர்களைமட்டுமே கல்வெட்டுகளிலிருந்து நாம் அறிகிறோம். 'கலிங்க அரசகுலத்தின் மூன்றாவது தலைமுறையில் காரவேலன் இருபத்து நான்கு வயது நிறையப்பெற்றபொழுது மகாராஜா எனத் திருமுழுக்காட்டப்பெற்றார்' என்று காரவேலன் தன் சொந்தக் கல்வெட்டுகளில் கூறுகிறான் ... இரண்டாவது ஆட்சி ஆண்டில் சாதகர்ணியை மதியாது ஒரு பெரும்படையை மேற்கே அனுப்பிக் கௌசாம்பர்களின் (Kusambas) உதவியோடு சில நகரங்களைக் கைப்பற்றினான்... எட்டாம் ஆண்டில், கொன்றபின்...இராசகிருகத்தைத் தாக்கி மதுராவிற்குப் பின்வாங்கச் செய்தார். பதினோராம் ஆண்டில், 113 ஆண்டுக் காலமாக நடைபெற்றுவந்த ஜினர் தியானத்தை மீண்டும் உயிர்ப்பித்தான். பன்னிரண்டாம்

* See R. P. Chanda's article in the 'Indian Historical Quarterly', Vol. V, Nos. 3 & 4.

[16] Luder's List Nos. 1245—1348.

ஆண்டில், உத்தரபாத மன்னர்களைத் துன்புறுத்தி மகதநாட்டை அச்சுறுத்தி, கங்கையாற்றில் யானைகளுக்குத் தண்ணீர் காட்டி, மகத அரசனைப் பணியச் செய்தான்.[17] இறைமையை நாடுகின்ற எந்த அரசனுக்கும் இது ஒரு சிறந்த சாதனையாகும். ஆனால், இந்தக் குலத்தைப்பற்றி நமக்குத் தெரிந்தவையெல்லாம் இவை தாம். காரவேலனின் பேரரசு என்னவாயிற்று என்பதும், எவ்வளவு நாள் தொடர்ந்தது என்பதும் அல்லது எப்பொழுது வீழ்ச்சியுற்றது என்பதும் போன்ற பிரச்சினைகள் தெளிவற்றவைகளாகும். ஏறத்தாழக் கி.பி. 220 அல்லது 230-ல் மறைந்த ஆந்திர, குஷான வமிசங்களுக்கும் ஒரு நூற்றாண்டிற்குப்பின் தோன்றிய குப்தர்களின் வமிசத்திற்கும் இடையேயான காலம் உண்மையிலேயே இருண்ட காலமாகும்.'[18] வடக்கில் அல்லது தெற்கில் மிகப் பெரிய அரசு எதுவும் இருந்ததில்லை. குப்தர்கள் மேதகவான நிலையை அடையும்வரை பல சிறிய அரசர்கள் இந்திய நாட்டைப் பகிர்ந்துகொண்டனர்.

குப்தப் பேரரசர்களுக்குமுன் மேதகவான அரசு எதுவுமில்லையென்பது முற்றிலும் தவறானதென்பதை ஒரு கணமும் நிலைநாட்ட முடியாதென்று இதற்கெதிராக ஜெய்ஸ்வால் எழுதுகிறார். 'நான்காவது நூற்றாண்டில் சமுத்திரகுப்தனோடு அல்லது ஒரு நூற்றாண்டிற்கு முந்திய வாகாடகரோடு இந்தப் பேரரசப் புத்துயிர்ப்பு வரலாற்றிற்குத் தேதியிட முடியாது. அதனால் இன்னும் அரை நூற்றாண்டிற்கு முந்திய பாரசிவர்களோடு தேதியிடலாம்'[19]. எனவே குஷான, ஆந்திர அரசுகள் நலிவுற்றபின் பாரசிவர்கள், வாகாடகர்களின் அரசு தோன்றியது. கங்கைக்கரையில் பாரசிவர்கள் பத்து அசுவமேத யாகங்கள் நடத்தினர். இது பெனாரசின் தச அசுவமேத கதாவினால் நினைவுச் சின்னமாகக் கொண்டாடப்பெற்றதை ஜெய்ஸ்வால் வலியுறுத்துகிறார். ஆரியவர்த்தத்தில் குஷானியர்கள் இருந்த இடத்தில் இவர்கள் தம் பேரரசு நிலையை உறுதிப்படுத்திக் கொண்டனர். இது குஷானர் பேரரசு சிதைவுறுவதையும் மேலும்மேலும் இவர்கள் வடமேற்குத் திசையை நோக்கி சால்ட் ரேஞ்சின் உட்பகுதிகளுக்குத் துரத்தப்படுவதையும் இது குறிப்பிடுகிறது.[20] புராண நாகர்களும் கல்வெட்டுகளில் கூறப்படும் பாரசிவர்களும் ஒருவர்தாம் என்று இவர் கூறுகிறார். ஏறத்தாழக் கி.மு. 31-ல் விதிசாவில் இவ் வமிசம் தோன்றியது.

17 Luder's List of Brahmi Inscriptions, No. 1345.

18 V. A. Smith, 'Early History of India' (1924), p. 292.

19 J.B.O.R. S. Vol. XIX Pts. I and II, p. 4.

20 J.B.O.R.S., Vol. XIX, Pts. I and II, p. 5.

பூட்ட நந்தி (Bhuta Nandi) என்பவர் காலத்தில் இவ் வமிசம் பத்மாவதிக்கு மாற்றப்பட்டது. சிவநந்தி காலம்வரை இவர்கள் இங்கு ஆட்சி செய்தனர். இவர்கள் கனிஷ்கனின் மேலதிகாரத்தை இவருடைய அரசப் பிரதிநிதி மகாசத்திரப வனஸ்பரா (Mahasatrapa-rVanaspara) என்பவர் வழியாக ஏற்றுக்கொண்டனர்.[21] பத்மாவதியில் வின்வாஸ்பானி (Vinvasphani) மகதநாடுவரை ஆண்டார் என்பதற்குப் புராணங்களில் திட்டவட்டமான கூற்று இருக்கிறது. ஆகவே, ஏறத்தாழக் கி.பி. 80—100-ல் நாகவமிசம் மதுராவிற்கும் விதிசாவிற்கும் இடையில் பெருஞ்சாலையிலிருந்து விலகி மத்திய மாகாணங்களின் அடையமுடியாத காடுகளுக்குள் சென்று தங்கின.[22] குஷானர்களின் வருகையால் பத்மாவதியையும் விதிசாவையும் விட்டு நந்தி-நாகர்கள் மத்திய மாகாணங்களின் நாகப்பூர் வட்டத்திற்கு வந்தனர். இவர்கள் வந்து குடியேறியபின் இவர்களின் பெயரைப் பெற்றிருக்கும் நாகபூர்-நந்தி வர்த்தன என்ற இடத்தில் தங்கினர். இக் கால மத்திய மாகாணத்தின் தலைநகராகிய நாகப்பூரிலிருந்து இருபது கல் தொலைவிற்குள் இருக்கிற இக் கால நாகர்தான என்னுமிடத்தில் இவர்கள் தங்கினர். இங்கு இவர்கள் அரை நூற்றாண்டிற்குமேல் வசித்தனர்[23]. கி.பி. 150-ல் இவர்கள் காந்திபுரி அல்லது முஸ்லீம்களின் ஆட்சிக் காலத்தில், கான்டிட் (Kantit) எனப் பெயர் பெற்றிருந்த இடத்தை அடைந்தனர். இந் நகர், தற்கால நகரங்களாகிய விந்தியாசலுக்கும் மிர்ஜாபூருக்கும் இடையில் இருக்கிறது.[24] இங்கிருந்து இவர்கள் இக் காலத்திய மத்திய மாகாணத்தின் வடபகுதிகளின், அதாவது, ஹோசங்காபாத், ஜபல்பூர் மாவட்டங்கள். பாஹில்கண்ட் (Baghelkhand) வழியாக முன்னேறினர். இங்கு இவர்கள் பெனரசில் அல்லது இதற்கருகில் அசுவமேத யாகங்களையும் முடிசூட்டு விழாக்களையும் நடத்தினர். இப்போதைய இந்துப் பல்கலைக்கழகம் இருக்குமிடமாகிய நாக்வா (Nagwa) இவர்களின் பெயரோடு தொடர்பு கொண்டிருப்பது போல் தோன்றுகிறது. வீரசேனனின் காலத்தில் இவர்கள் காந்திபுரியிலிருந்து மேற்கு நோக்கிச் சென்றனர். இவர் மிகுதியாக நாணயங்களை அச்சிட்டிருக்கிறார். இவருடைய நாணயங்கள் கிழக்கில் அகிச்சத்ராவிலிருந்து (Ahichatra) மதுராப் பகுதி, பத்மாவதி, மதுராவிலும் காணப்படுகின்றன.[25] காந்திபுரியில் பாரசிவ அல்லது நாகவமிசத்தை நிறுவியவர் நவநாகராக இருக்

[21] Ibid., p. 11. [22] Ibid., pp. 16, 42.

[23] J.B.O.R.S., Vol. XIX, Parts I&II, pp. 39—40.

[24] Ibid, pp. 29, 31. [25] Ibid., p. 31.

கலாம்.[26] மதுரா, பத்மாவதியிலிருந்து ஆட்சிசெய்த பேரரசிற்கு உட்பட்டு இவ் வமிசத்தின் பல கிளைகள் ஆட்சி செய்ததாகச் சொல்லப்படுகிறது.[27] மதுராக் கிளைவழியினர் யாது (Yadu) என்ற அதிகாரபூர்வமான பெயரையும், பத்மாவதிப் பிரிவினர் தக்கா(Taka)குலத்தினர் என்ற பெயரையும் பெற்றனர். தோராயமாகப் பாரசிவப் பேரரசு, பிஹார், ஆக்ராவையும், அவுத்தையும் கொண்ட ஐக்கிய மாகாணம், பண்டேல்கண்டு, மத்திய மாகாணங்கள், மாளவம், இராஜபுதனம், கிழக்குப் பஞ்சாபிலுள்ள மத்ரான் குடியரசுகள் ஆகியவற்றைக் கொண்டிருந்ததென நாம் கொள்ளலாம். கி.பி. 226-41-ல் பாரசிவர்கள் காலத்தின் மத்தியில் குஷானர்கள் ஆர்தெஷீரின் மேலதிகாரத்தை ஏற்றுக்கொண்டனர். கி.பி. 238-லும் 269-லும் இவர்கள் ஷாபூரின் (Shapur's)சிறிய உருவப் படத்தைத்தம் நாணயங்களில் பொறித்துக்கொண்டனர். இது பாரசிவர்களின் நெருக்கத்தின் விளைவு.[28] பேரரசின் பரப்பைப் பொறுத்தவரையில் ஜெய்ஸ்வாலின் கூற்றை ஏற்பது கடினமாகும். ஆனல், பாரசிவர்களின் நெருக்கத்தால் குஷானர்கள்,சஸ்ஸானியர்களின்மேலதிகாரத்தை ஏற்றுக்கொண்டனர் என்னும்பொழுது இவர் கற்பனை செய்யத் தொடங்கிவிடுகிறார். ஏனெனில், இதற்கான சான்றுகள் இவரிடமில்லை.

பாரசிவர்களின் அரசு எப்படி வலிமையற்றுப்போய்விட்டதென்பதும்,வாகாடகர்களுக்கும் பின்னர் குப்தர்களுக்கும் எப்படி விட்டுக்கொடுத்தனரென்பதும் நமக்குத் தெரியவில்லை. கி.பி. 150-க்கும் 350-க்கும் இடைப்பட்ட இந்தியாபற்றிய தம் உழைப்பீடுபாடுமிக்க யூகமான மதிப்பீட்டிலும் ஜெய்ஸ்வாலுக்குச் சொல்வதற்கொன்றுமில்லை. இவர் எடுத்துச் சொல்லுகிறபடி கி.பி. மூன்றும் நூற்றுண்டின் மத்தியில், மத்திய இந்தியாவில் பன்னவிற்கருகில் கிலக்கிலாவின் (Kilakila) கரையின்மேல் விந்தியசக்தியால் தோற்றுவிக்கப்பெற்ற வாகாடகரின்

[26] நவ நாகர் அல்லது பாரசிவ வமிசமென ஜெய்ஸ்வால் கருதும் இவ்வமிசத்தின் கால வரிசைமுறையைப புராண, நாணய, கல்வெட்டுச் சான்றுகளைக்கொண்டு வரிசைப்படுத்தியுள்ளார் :

(1) நவ (நாகர்) (நாணயம்) கி.பி. 140–170.
(2) வீரசேன (நாகர்) (நாணயம் கல்வெட்டு) கி.பி. 170—210.
(3) ஹய நாகர் (நாணயம்) கி.பி. 210–245.
(4) ஹரய நாகர் ( ,, ) கி.பி. 245—250.
(8) பர்ஹின நாகர் ( ,, ) கி.பி. 250—260.
(6) சாராஜ நாகர் ( ,, ) கி.பி. 260–290.
(7) பவ நாகர் (கல்வெட்டு) கி.பி. 290—315.

[27] J.B. D.R.S. Vol. XIX Parts I & II, p. 35–36.

[28] J.B,O.R.S. Vol. XIX, Parts I & II, p. 55.

குலமொன்று எழுந்தது. விந்தியசக்தி, பாரசிவர்களுக்குத் திறை செலுத்தும் சிற்றரசராகத் தம் வாழ்க்கையைத் தொடங்கிய ஒரு பிராமணர்; ஆனால், ஆந்திர-நைசத-விதர நாடுகளைக் கொண்ட பரந்த பகுதிகளை வென்றார். இவருக்குப்பின் இவரது மகன் பிரவார சேனன் (Pravara Sena) பட்டமெய்தினார்; இவர் அசுவமேத யாகங்களை மட்டுமன்றி இந்தியாவின் பேரரசர், அதாவது, சாம்ராட் என்னும் பட்டத்தையும் சூட்டிக்கொண்டார். இவர் நீண்ட காலம் ஆண்டதாலும், இவரது மகன் இவருக்கு முன் இறந்துவிட்டதாலும், இவருக்குப்பின் இவருடைய பேரன் ருத்திரசேனன் பட்டமெய்தினார் இவருடைய தாய் பவ நாகனின் (Bhava Naga) மகளாவாள். இவர் சமுத்திர குப்தனின் சமகாலத்தவர். இவருக்குப்பின் அரசரானோர் குப்தர்களின் மேலாதிக்கத்தின்கீழ் வந்தபின் இவர்கள் இறைமையை இழந்துவிட்டனர். பிரவார சேனன் காலத்திலிருந்து (கி.பி. (284-344) உருத்திர சேனன் (கி.பி. 344-348) வரை ஏறத்தாழ அறுபதாண்டிற்கு இவர்களுடைய இறைமை நிலவிற்று.[29] இதற்குப் பிறகு இவர்கள் காலவரிசை முறைப்படி குப்தர்களுடன் தொடர்புபடுத்தப்பெற்றிருக்கின்றனர். புராணங்களில் நம்பிக்கை வைத்து ஜெய்ஸ்வால் இந்தக் குலவரிசைப் பட்டியலை அமைத்தது இதன் குறைபாடாகும்; ஏனெனில், கல்வெட்டுகள் அளிக்காத வாகாடகர்களின் முழுமையான வரலாற்றைப் புராணங்கள் அளிக்கின்றன [30] என்று இவர் கூறுகிறார். கல்வெட்டுகளிலிருந்து முதலாம் பிரதிவிசேனனும் (Prithivisena I) இரண்டாம் உருத்திரசேனனும் (Rudrasena II) இரண்டாவது சந்திரகுப்தனின் சமகாலத்தவர்கள் என்று மட்டுமே நாம் அறிகிறோம். மறுபடியும் ஜெய்ஸ்வால் இக் குலவரிசைப் பட்டியலை ஒழுங்குபடுத்துகையில், கி.பி. 78ஐ கனிஷ்கனின் ஆட்சியின் தொடக்கம் என்று ஏற்றுக்கொண்டிருக்கிறார். இது சர்ச்சைக்குரிய தொன்றாகும். இவர் புராணங்களில் வைக்கும் நம்பிக்கை இடருக்குட்படாத முறையாகாது. இருந்தபோதிலும் இன்னும் நம்பத்தக்க ஏதாயினும் வந்துசேரும் வரையில், இவருடைய குலவரிசைப் பட்டியலையும் காலவரிசையையும் இக் காலத்திற்கான செயல்முறை புனைவுகோளாகக் கொள்ளலாம்.

## சிறு தனிநலன்கள் உயர்விடங் கொள்ளல்

பொதுவாக இக் காலம் விரைந்து மாறுகின்ற காட்சிகளும் மனப்போக்குகளும் அரசியல், சமூகக் கட்டுப்பாட்டைக் குலைக்க

29 J.B.O.R.S. Vol. XIX, Parts I & II, pp. 62—63.
30 Ibid., p. 66.

முற்படுவதாகத் தோற்றமளிக்கிறது. நிகழ்ச்சிகளின் தொடர்பு இல்லாக் குவியலின் முக்கியக் கூறுகள் குழப்பத்தில் ஆழ்ந்திருப்பதுபோன்று காலத்தின் இத் தொலைவிலிருந்து தோன்றுகிறது. பேரரசுகளின் எழுச்சியும் அழிவும், வெளியார் வருகையும், மோதல்கள் வெற்றிகள் ஆகியவற்றின் மாறுபடுகின்ற தோற்றமும், சமயங்களின் புத்துயிர்ப்புப் போட்டியும் ஆகியவை இம் முக்கியக் கூறுகளாகும். இதிகாசங்கள், புராணங்கள், சட்டத் தொகுப்புகள் போன்றவைகளடங்கிய இக் காலத்தின் இலக்கியம் இக் கருத்தைப் பரவலாக உறுதிசெய்கிறது. தம்மை உறுதிப்படுத்த முயலுகின்ற சிறுநலன்களையும் குறுநிலங்களையும் இவைகள் வருணிக்கின்றன. அரசர்கள்பற்றியும், அவர்களுடைய நாடுகள் பற்றியும், அவர்களின் தற்காப்புப் போர்கள், 'திக்விஜயங்கள்' பற்றியும், இந்தியாவிற்குள் வந்து குழுமிய நாகரிகமற்றவர்கள், அவர்களின் நடை, உடை, பாவனைகள், ஏற்பமைதியற்ற சமயங்களுக்கான இவர்களின் ஆதரவையும்பற்றியும் குறிப்புகள் இவைகளில் நிறைய இருக்கின்றன. வடஇந்தியாவின் மிக்க புகழ் வாய்ந்த பாஞ்சாலம், சேடி (Cedi), மத்ஸ்யா (Matsya), சுரசேனு, தசார்ஞு (Dasarna), மிதிலை, காம்பிலியா, மகதம்போன்ற நாடுகள்பற்றியும் மேற்கோள்கள் இருக்கின்றன.[31] இவைகளன்றி யவனர், சகர், பஹ்லவர், க்ஷத்திரபர் ஆகிய வெளிநாட்டவர்களும் புதிய முடியரசுகளை அமைத்துக்கொண்டதாகச் சொல்லப்படுகிறது[32] அரசியற் குழப்பத்தில் மூழ்கியிருந்த இக் காலத்தில் மகத நாட்டு அரசர் ஜராசந்தர் மேலாதிக்கம்[33] பெற மேற்கொண்ட வழிகளும், யவன அரசராகிய காசிறுமனைத் (Kaseruman) தெய்வீகக் கிருஷ்ணன் கொலைசெய்ததும் தெளிவாக்கப்பட்டிருக்கின்றன.[34] அரசர்களின் கூட்டிணைவுகளில் அரசுகளுக்கிடையேயான உறவுகள் வெளிப்படுகின்றன.[35] சம்ராட் (Samrat) என்னும் தரத்தைப் பெறல் மிக உயர்ந்த அரசியல் பேராவலாகக் கருதப்பெற்றது. ஒவ்வொரு குடியிலும் அரசர்கள் இருந்ததாக நாம் அறிகிறோம்; ஆனால், ஒருசிலரையே 'சம்ராட்' என்று வழங்கலாம்.[36] கண்டிப்பாகக் கடமைகளை ஒதுக்கி வழங்குவதோடு சாதியில் அடங்கியிருக்கும் கடினத் தன்மை, பீமனால் கர்ணன்[37] கேவலமாக நடத்தப்பட்டதையும்,

[31] Mahabharata, Virata Parva, Ch. I, 11—12 Verses; Adi Parva, Bk. i, Chs. CXIII & CXC; & Ramayana, Bk. i, Ch. XII.

[32] Mbh., Sabha Parva, Chs. LI & LII: Ramayana, Bk. i, Chs. LIV—LV.

[33] Mbh., Sabha Parva, Chp. XIV.

[34] Mbh., Vana Parva, Ch. XII, verse 31.

[35] Mbh., Ashramavasi, Chs. VI & VII.

[36] Mbh., Sabha Parva, XV, 2. [37] Mbh., Adi Pharva, CXXXIX.

தைம்மேற்கொள்ளத் துணிந்ததற்காக ஒரு சூத்திரன் இராமனால் கொல்லப்பட்டதையும் தெளிவாகச் சுட்டிக்காட்டுகிறது.[38]

## நாட்டில் வெளியார்

(அ) கிரேக்கர், சித்தியர், பார்த்தியர்போன்ற வெளியாரின் வருகையாலும், (ஆ) உள்நாட்டினருக்கும் அயற் பண்புடைய மக்களுக்கும் இடையில் சமயப் பூசல் போன்றவைகளாலும் இந்தச் சமூக வன்கடுமையும் குறுகிய மனப்பான்மையும் தோன்றின. தடை விதிக்கப்பட்ட திருமணங்களின் விளைவாக, சாதிகளுக்கு இடையேயான கலப்பு, பிராமண சமூகத்திற்குக் கடுமையான பிரச்சினைகளை உண்டாக்கிற்று என்பதை நாம் முன்னரே குறிப்பிட்டோம். இவ்வொழுங்கில்லாத திருமணத்தினால் பிறந்த புதிய குழந்தைகளை ஏற்றுக்கொள்ள எந்த ஒரு புதிய முறையையும் பிராமணீயம் வகுத்துக்கொள்ளவில்லை. இப்பொழுது வெளிநாட்டினரின் வருகையால் இப் பிரச்சினை மிக்க சிக்கலாயிற்று. மேலும், இவர்களின் வருகை பிராமண சமயத்தின் புத்துயிர்ப்போடு ஒரே காலத்ததாக நிகழ்ந்தது. இந்தச் சான்றுகள் இதிகாசங்களும் புராணங்களும் வெளிப்படுத்துகின்ற பிராமண சமுதாயத்தின் விட்டுக்கொடுக்கா மனப்பான்மையை விளக்குகின்றன. மகாபாரதம், புதிதாக வந்த சகர், யவனர், வால்ஹிகர் (Valhikas), ஆந்திரர், புளிந்தர் (Pulinidars) போன்றவர்களை மிலேச்சர் அல்லது நாகரிகமற்றவர்கள் என்ற வகையில் குறிப்பிடுகிறது. சமுதாய அமைப்பையும், தூய சட்டத்தையும், சமயத்தையும் மிலேச்சர்கள் அழிக்க முற்பட்டனர். இவர்களுடைய ஆதரவில் உலோகாயதமும் நாத்திகமும் நிலவுமென்றும், நாடு முழுவதும் 'எதுக்காஸ்' (Edukas), அதாவது, புத்த ஸ்தூபிகள் இருக்குமென்றும் இது கூறுகிறது.[39] விஷ்ணு, பாகவத, வாயு புராணங்கள் சகர்–புளிந்தர்களின் நாகரிகமற்ற விளையாட்டுத்தனமான செயல்களைப்பற்றிய குறிப்புகளைக் கொண்டிருக்கின்றன.[40] குணாட்டியரின் (Gunadhya) 'கதாசரித்சாகரத்தில்' (Kathasaritsagra), 'மிலேச்சர்கள் பிராமணர்களைக் கொல்கின்றனர் என்றும், வேள்விகளிலும் மற்றப் புனிதச் சடங்குகளிலும் தலையிடுகின்றனர்' என்றும் கூறுகிறார்.[41] புதிதாக வந்தவர்கள்பற்றிய பிராமண சமுதாயத்தின் வெறுப்பு மனப்பான்மையை இந்த மேற்கோள்கள் சுட்டிக்காட்டுகின்றன. இவர்கள் நாட்டில் வெற்றியாளர்களாய் நுழைந்தார்கள்.

38 Ram., Uttara., Chs. LXXXVII–XCI.
39 Mbh., Vana Parva, Chs. 188 & 190.
40 Pargiter, Part I, p. 52, n. 48.
41 Kathasaritsagara, Bk. xviii.

ஆகையால், இவர்களை அசைக்கமுடியாதென்பதை பிராமண சமயம் உணர்ந்தபொழுது, இது ஒரு தனிப்பட்ட வெறுப்பாக உயர்த்தப்பட்டது. பெனுரஸ் இடம்பெற்ற மாகாணத்தைக் கனிஷ்கனின் ஆளுநகராக வனஸ்பரா (Vanaspara) ஆண்ட பொழுது பிராமண சமயம் உற்ற நலக்கேடான நிலையைக் கற்பனை செய்துபார்க்கலாம். [42]பிராமண சமயத்தின் தள்ளிவைப்பிலிருந்தும் வெறுப்பிலிருந்தும் தப்பிச்செல்வதற்கு பௌத்த சமயத்தைப் புதியவர்கள் தழுவவேண்டியிருந்தது. அப்பொழுதுதான் இவர்கள் பழைய, சமய மாறுபாடற்ற சமூகத்தின் உறுப்பினரோடு சமத்துவம் கோரமுடியும். மிக்க கீழ்த்தரமான மதிப்பு நிலைக்கு இவர்களைப் பிராமண சமூகமுறை ஒதுக்கிவைத்ததனுல், புத்த சமயத்திற்கு இவர்கள் மாறிய பிறகு பிராமண சமுதாய முறையை அழிப்பதற்கு இவர்கள் இயல்பாகவே தூண்டப் பெறுகின்றனர். அக் காலத்திய இலக்கியத்தாலும் கல்வெட்டுப் பதிப்புகளாலும் இந்த முடிவுகள் பல ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கின்றன.

## பிராமண சமயத்தை ஏற்பமைதி இல்லாத கோட்பாட்டினர் ஒறுத்தல்

இந்தத் தறுவாயில் தன் அரசப் பகைவனுகிய மிலிண்ட பன்ஹாவின் மிஞண்டாரை மாற்றுவதில் நாகசேனன் ஏன் வெற்றியடைந்தார் என்பதையும்,[43] சாக்கியமுனியின் புனிதச் சின்னங்களை தியோடேரஸ் தி மெரிடார்க் (Theodoros the Meridark) ஏன் நிறுவிஞரென்றும், தட்சசீலத்தில் (Taxila) இதேபோல் புத்தரின் புனிதச் சின்னங்களை சத்திரபரர் பதிகா (Ksatrapa Patika) ஏன் வைத்தார் என்பதையும் நாம் அறியலாம்.[44] இதற்குமேல் புத்த சமயத்தினர்களாகிய கனிஷ்கனும் ஹுவிஷ்கனும் புத்த சமயத்தை வளர்ப்பதற்கு அரும் பணியாற்றியுள்ளனர். இவர்களைப்போல் இதற்காகப் பாடுபட்ட சாதாரண மனிதர்கள் பலர்.[45] பிராமண சமயத்தின் வெறுப்படையச் செய்கின்ற ஏற்புடைச் சமய உறுதியினுல் பௌத்த சமயத்தைத் தழுவ உந்தப்பட்ட புதிதாகச் சமயம் மாறியவர்கள், பிராமண சமயத்தின் அழிவில் பௌத்த சமயத்தைப் பரப்புவதில் பேரூக்கம் காட்டினர். இதனுல்தான் மிலேச்சரின் ஆட்சியின் கீழ் வேதங்கள் புறக்கணிக்கப்பெற்றனவென்றும், சூத்திரர் பிராமணரோடு சமமாக இருந்தனரென்றும், கடவுள் வழிபாடு

[42] Two Saranath Inscriptions, Ep. Ind. Vol. VIII, p. 173.
[43] C.H.I. p. 549.
[44] S. Konow. Cor. Ins. Ind. Vol. VIII, P. I, p. 4.
[45] Ibid., p. 29.

தடுக்கப்பெற்றதென்றும் மகாபாரதம் கூறியது.[46] சமய வெறியாலும் பேராசையாலும் இவர்கள் உந்தப்பட்டனர் என்று பிரமானந்த புராணம் கூறுகிறது.[47] இவர்களின் படுகொலைகள் கார்க்க சம்ஹிதையால் (Garga Samhita) குறிப்பிடப்பெற்றன.[48] சகர் என்பதனமூலம் தவிர வேறு எவ்வாறும் இந்துக்கள் தம்மைக் கருதுவதும் வெளிப்படுத்துவதும் தடைசெய்யப்பட்டனவென்று சகர்களைப்பற்றி அல்பெருனி குறிப்பிட்டார். இந்துக்கள் இடருக்குட்பட்டனர்.[49] காஷ்மீரில் நிலவிவந்த நாகவழிபாட்டைக்கூட இவர்கள் நிறுத்திவிட்டு புத்த சமயத்தைப் புகுத்தினரென்று இராஜதரங்கிணி பதிவு செய்தது.[50] இத்தகைய நடவடிக்கைகள் நாட்டில் பல தீய உணர்வுகளைப் படைத்தன; இவைகளின் விளைவுகள் நீடித்திருந்தன.

## ஏற்பமைதியில்லாக் கோட்பாட்டில் பற்றுடைய கலிங்கர்

புத்த சமயத்திடமிருந்து மட்டும் பிராமண சமயம் எதிர்ப்பைச் சமாளிக்கவில்லை. வெளியாரின் அரசியல் ஆதரவினால் புத்த சமயம் வலுப்பெற்றதைப்போல் சமணமும் கலிங்க அரசர்களால் வலியூட்டப்பெற்றது. சமயச் சார்புணர்மை ஒரே காரணமாக இல்லாவிட்டாலும், புத்த சமயத்திற்கெதிராக எதிர்ப்பு உருவானபொழுது அசோகனின் மறைவிற்குப்பின் தாக்குதல் நடத்துகையில் இவர் வட இந்தியாவின்மீதும் தென் இந்தியாவின்மீதும் படையெடுத்தபொழுது, இது காரவேலனின் மனப்போக்கை நிச்சயமாக மாற்றியிருக்கவேண்டும். இவருடைய அதிகும்பா கல்வெட்டிற்கேற்ப இவர் கலிங்கத்தில் சமணத்தை உயிர்ப்பித்தார். காரவேலரின் கல்வெட்டுகளையும் சேர்த்துக் கட்டக்கிற்கு அருகில் உள்ள உதயகிரிக் குகைகளில் ஐந்து கல்வெட்டுகள் இருக்கின்றன. இரண்டு அரசர்கள், ஓர் அரசி, ஓர் இளவரசர், இன்னும் சிலர் உதயகிரியின் சமணத் துறவிகளுக்கு உதவியதை இவைகள் நினைவுகூர்கின்றன. கலிங்கத்தின் ஒரு பெரும் பகுதியினர் சமணராக இருந்திருக்கலாம். சமண சமயத்திற்கான முற்சார்பு காரணமாகத்தான் சேதகுலத்தைப் புராணங்கள் குறிப்பிடவில்லை. சமணத்தில் கலிங்கர்கள் உறுதி

[46] இவர்களுடைய மானியங்களுக்கு, சிவரக்ஷிதரின் ஷாதாப் கல்வெட்டுகள், மதுரா சிங்கத் தூண், யானைக்கல்வெட்டுகள், தட்சசீலப் பொன்னேட்டுக் கல்வெட்டுகள், சாடிக்கல்வெட்டு, சூய்பிஹார் கல்வெட்டுகளைப் பார்க்க. Cor. In Ins. Ind. Vol. II, Part I.

[47] Mbh.. Vana Parva, Chs. 188–190; 'Dynasties of the Kali Age,' pp. 55–56. Br. Purana, Bk. iii, 200–03.

[48] J.B.O.R.S. XIV, pp. 404, 408.

[49] Alberuni, India, Vol. II, p. 6.

[50] Bk. I, Ch. I, 174–185.

யான பற்றுக் கொண்டிருந்ததால்,[51] மகாபாரதத்தில் இவர்களுக்குப் புகழத்தக்க தோற்றமளிக்கப்படவில்லை. பாலி (Bali) அரசரின் மனைவி சுதசேனவிற்கும் துறவி திர்க்கதாமஸ் (Dirghatamas) என்பவரின் மகன் கலிங்கனுக்கும் வழிவந்தவர்கள்தாம் இம் மக்கள் என்று வலியுறுத்தப்படுகிறது.[52]

## அரச சார்புடைமையால் சமயப்பூசல் வலியுறுத்தப்பெறல்

இக் காலத்தின் இரண்டு தனிச் சிறப்புக் கூறுகளை இக் கருத்தாய்வுகள் மேம்படுத்துகின்றன. ஒன்று, சமயப் பூசல் மேன்மேலும் சிறப்படைதல்; மற்றொன்று, அரசர்கள் சமயச் சார்புடன் பங்குபெறல். உண்மையில் ஒன்று மற்றொன்றைச் சார்ந்திருந்தது. இதற்கு அரச ஆதரவு கிடைத்தபொழுது சமயப் பூசல் முனைப்புற்றது. அரச, அதாவது, அரசர் ஆதரவு அல்லது சார்புடைமை என்னும் இம் மரபு அசோகன் காலத்தில் தோன்றியது. இக் கருத்தின் நீட்டிப்புதான் இக் காலத்தில் அரசர்களின் போக்கை மிகைப்படுத்தியது. அரசின் சமயச் சார்புடைமை இறுதியில் அரசின் அல்லது அரசின் சின்னமாகிய அரசனின் தனிமதிப்பு நிலையை உயர்த்திற்று. இதில் வெளியாரின் மரபு, அதாவது, நாகரிகமற்றவர்களென வழங்கப்பெற்ற இவர்களின் வலிமைமிக்க செல்வாக்கு செயல்பட்டது. அரசர்களின் தெய்வீக உரிமையின் எழுச்சி இதன் இறுதி முடிவாகும். நம்முடைய ஆய்வின் கருத்திலிருந்து இக் காலத்தின் இக் கருத்து மிக முக்கியமானதாகும். ஏனெனில், அரசு அரசனின் உருவைப் பெற்றிருந்ததால், உண்மையில் அரசனின் தெய்வீக உரிமை அரசுத் தூய்மையையும் இறைமையையும் பெறத் தொடங்கியதெனப் பொருள்படும். பின்னர் இது ஒரு முடிவுற்ற உண்மையாயிற்று; இக் காலம் தொடக்கத்தைமட்டுமே கண்டது.

## வைணவத்தின் பயனுடைமை

சமயப் பூசலுக்கு அரசச் சார்புடைமை ஆதரவளித்தபொழுது இது கடுமையாகப் பாதிக்கப்பட்டது. இதன் தோற்றம் அசோகர் காலத்தது என்றாலும், சூத்திரர்களுக்கு அளித்திருந்த இழிவான நிலைக்கும் இழிவான நிலையை வெளிநாட்டினருக்கு அளித்துவேதனையை இன்னும் அதிகமாக்கிய இச்சமூகமுறையையும் சமயத்தையும் இவர்கள் ஒறுத்தனர். இவர்கள் இந்துகுஷ்ஷிலிருந்து நர்மதைவரையிலும் பரவியிருந்த பகுதியில் ஆட்சிசெய்ததால், இந்த வேதனையின் கடுமை இன்னும் அதிகமாக

51 R.D. Banerji, 'History of Orissa,' Vol. I, p. 70.
52 Mbh., Adi Parva, Ch. CIV, 44—49.

இருந்தது. இதற்கெல்லாம் பிராமண சமயம் தன்னுடைய சொந்த ஏற்புடைச் சமய உறுதிக்கு நன்றி செலுத்த வேண்டும். அங்கு சுங்கர், சாதவாகனர், பாரசிவர் போன்ற அரசர்கள் இருந்தனர். இவர்கள் பிராமண சமயத்தின் புத்துயிர்ப்பை ஆதரித்தனர். திவ்வியவதானர் (Divyavadana) சொல்வதுபோல், புஷ்யமித்திர சுங்கர் உண்மையிலேயே புத்த சமயத்தினரை ஒறுத்தார்; க்ஷத்திரியர்கள், க்ஷத்திரபர்கள் ஆகியோரின் பெருமையையும் செருக்கையும் அழித்ததாகக் கௌதமிபுத்திர ஸ்ரீசாதகர்ணி தம்முடைய நாசிக் குகைக் கல்வெட்டில் பதிவு செய்கிறார்.[53] முன்னேற்றத்திற்கு இவ்வகையான சமயப் பகைமை தீங்கு தரத்தக்கதாகும். நாகரிகமற்றவர்கள் என வழங்கப் பெற்ற புதியவர்களைப் பிராமண சமூகக் கட்டுக்கோப்பிற்குள் கொண்டுவர ஒரு முயற்சி எடுக்கப்பெற்றது. இம் முயற்சி வெற்றியடைந்தது. ஏனெனில், இது வைணவத்தை அல்லது பாகவத சமயத்தை இந் நோக்கத்திற்குப் பயன்படுத்திக்கொண்டது. பிராமண சமயத்திலிருந்து முதலில் எழுந்து, சிந்தனைக் கிளர்ச்சியின் ஒரு விளைவாக இது பௌத்த, சமண, வேதாந்தத் தத்துவம் போன்ற உருவைப் பெற்றது. ஏற்பமைதியில்லா முறைகளில் இருப்பதுபோல், பிராமண சமயத்தின் மிகச் சிறந்தவைகளையெல்லாம் இது இணைக்க முற்பட்டது.

வைணவத்தில் நிலவிய இணைப்பாக்க உணர்வு, பிராமண சமயத்தின் இயல்பாக இருந்த கடினத் தன்மைக்கும் ஏற்புடைச் சமய உறுதிக்கும் இயல்பாகவே இடங்கொடுத்திருக்க முடியாது. காதலாலும் பற்றாலும் கடவுளை அடையலாமென்ற சொந்தக் கடவுள் கோட்பாடு எல்லோர் உள்ளத்தையும் கவர்ந்தது. இக் கோட்பாடு நாகரிகமற்றவர்களைக் கவர்தல் உறுதியாகும். மேலும், தொடக்கத்தில் இது சாதிக் கடமைகள் (அல்லது), கடமைப் பொறுப்புகள் ஆகியவைகளுக்கும், பிராமண சமயத்திற்குரிய தனிப்பட்ட சடங்குகளுக்கும், புதியவர்களுக்கும், பௌத்த சமயத்தினர் அல்லது வைணவத்தைத் தழுவும் எவருக்கும், சமூகத்தின் மிகப் பழைய அமைப்பிற்குரியவர் என உரிமை கொண்டாடுபவருக்கும் மெய்யாக இடர் இராது. இயல்பாக, இக் காலத்தில் பாகவத சமயம் முன்னரே முடிந்தது.[54] வெளிநாட்டார் ஆதிக்கம் செலுத்திய வடமேற்குப் பகுதியில் இது பௌத்த சமயத்தோடு பற்றுறுதியைப் [illegible]து. இதனால்தான் பெசநகர் தூண் கல்வெட்




[53] '[illegible]-dapa-[illegible]na-mardana'—க்ஷத்திரியர்களின் பெருமையையும் செருக்கையும் இவர் அ[illegible] என்று சொல்லுவதோடு, க்ஷத்திரபர்களையும் அழித்தார் என்று இது பொருள்படும் என்று டாக்டர் பார்னெட் குறிப்பிடுகிறார்.

[54] R. G. Bandarkar, 'Vaisnavism, Saivism etc.' p. 4.

டின் ஹெலியோடோரஸ், கிருஷ்ணனின் பக்தராக இருந்தார்;[55] அல்லது பாகவதத்தின் ஒரு புனிதச் சின்ன அமைப்பை பெஷாவர் மியூசியக் கல்வெட்டு ஏன் குறிப்பிடுகிறது?[56] கல்வெட்டுகளுக்கு மேலாக, இக் காலத்தின் ஏற்புடைய சமய இலக்கியங்களில் இவர்கள் இந்து சமூகத்தில் சிறிது சிறிதாக உட்கொள்ளப்பட்டதன் தெளிவான குறிப்புகள் இருக்கின்றன. யவனர்களின் தலைவன் திரௌபதியின் திருமணத்திற்கு[57] அழைக்கப்பட்டது பற்றியும், ராஜசூய யாகத்தின்[58]பொழுது யுதிஷ்டிரருக்கு ரோமகர் (Romaka), யவனர், சின்னர் (Cinas), சகர், பஹ்லவர் போன்றோர் பரிசுகள் கொண்டுவந்ததுபற்றியும்,பஹ்லவர், யவனர், சகர் ஆகியோர் வசிஷ்டரின் (Vaisistha) பசுவினுல்[59] படைக்கப் பெற்றனர் என்பதுபற்றியும், யவனர், காந்தாரர், பார்பரர், சகர், பஹ்லவர் ஆகியோர் வேதங்கள் விதிக்கும்[60] சமயச் சடங்குகளையும் கடமைகளையும் பின்பற்றவேண்டியதுபற்றியும் இதிகாசங்கள் சிறிதளவுகூட வெறுப்புக் காட்டவில்லை. புதியவர்களுக்கும் நாட்டின் மக்களுக்கும் இடையேயான சமூக, அரசியல் தடைகளும் தவிர்க்கமுடியாத கருத்துகளும் முன்னரே வேகமாக மறைந்துகொண்டிருக்கின்றன. இனங்கள் விரைந்து இணைந்து கொண்டிருக்கின்றன என்பதற்கு உண்மையில் இவைகள் மிகத் தெளிவான குறிப்புகளாகும். இவர்களுக்காக சமய வெறுப்பு உணரப்படவில்லை என்றால், இவர்களுடைய பழக்கங்களுக்கும் மரபுகளுக்கும் உறுதியாக வெறுப்புணர்ச்சி இருக்க முடியாது. உண்மையில் இந்த இரத்தக் கலப்போடு இவர்கள் ஆரியர்களானபின் பழக்கங்களின் கலப்பும் ஏற்பட்டது. இவர்களுடைய எல்லாப் பழக்கங்கள், மரபுகள் ஆகியவற்றோடும் நமக்குத் தொடர்பில்லை எனினும், நாட்டின் அரசியல் மரபோடு மிகப்பெருஞ் செல்வாக்குப் பெற்றதொன்றிருந்தது. முற்கால இந்தியாவில் அரசர்களின் தெய்வீக உரிமைகள் எழ இது உதவிற்று.

## அரச பதவியின் கொள்கை வழிபாடு

இக் காலத்தின் அரசர்கள் தம் செயற்பாடுகளில் சமயத் தொடர்புகளால் பெருமளவு விளைவாட்சிக்குட்படுத்தப்பெற்றனர் என்பதை நாம் முன்னரே கூறினோம். பிராமண சமயத்

55 கல்வெட்டுக்களுக்கு, J.R.A.S., 1909—10 பார்க்க.
56 Cor. Ins. Ind. Vol. II, Pt. I, p. 128.
57 Mbh., Adi Parva, Ch. CLXXXXIX, 15.
58 Mbh., Sabha Parva, Ch. LI.
59 Ram., Bk. 1, Cha. LIV. LV ; Mbh., Adi Parva, Ch. CLXXVII.
60 Mbh , Santi Parva. Ch. LXV, 13–19.

தின்மீது பௌத்த சமயத்தின் நெருக்கமிருந்தது. இதை விடுவிக்கவேண்டியிருந்தது. நாகரிகமற்றவர்களின் தாக்குதலு மிருந்தது. அதிலும் புத்த சமயத்தைத் தழுவியர்களின் தாக்குதல் இருந்தது. இந்த இரட்டை அழுக்கம் அரசரது, அதாவது, அரசினது வளங்களைப் பாதித்தது. ஆரிய அரசர்களின் வலிமைமீதுதான் பிராமண சமயத்தின் புத்துயிர்ப்பும், காட்டு மிராண்டிகளின் வெளியேற்றம் அல்லது வென்று வயப்படுத் துதலும் சார்ந்திருந்தன. அரசின் உள்ளிணைவாற்றலையும் எல்லா வளங்களையும் ஒருங்கமைத்தலையும் இது இயல்பாக உட்படுத் தியது. இந்தத் துணிகரச் செயலில் சமயம் அரசிற்கு நம்பிக்கை உறுதியோடு பணியாற்ற வேண்டுமென்று உணரப்பெற்றது. அதாவது, புத்த சமயத்தை ஒடுக்கி பிராமண சமயத்தை உயிர்ப் பிக்க அரசு தன் வளங்களை யெல்லாம் திரட்டவேண்டுவதோடு வெளிக்காட்டுமிராண்டிகளையும் தாக்கித் துரத்திடவேண்டும். இந்த நெருக்கடியில் மக்கள் தம் முழு மனப் பற்றுறுதியை அரச ருக்கு அளிக்கவேண்டுமென்பதற்காகச் சமயம் இவர்களின் மன வுணர்வுகளில் செயல்படத் தொடங்கியது. இது இவருடைய அதிகாரத்தையும் வளங்களையும் ஒருமுனைப்படுத்தி அதிகாரத்தை உயர்த்தலாம். அரச பதவிக்குக் கடவுள் தன்மையையும் அதிகா ரத்திற்குக் கடவுளின் இசைவாணையையும் வழங்க பிராமண சமயம் முயன்றது. இதிகாசங்களைப்போன்ற மக்கள் பாராட் டிற்குரிய ஏற்புடைச் சமய இலக்கியம், சட்டத் தொகுப்புகள் ஆகியவற்றின் வழியாக இது நிறைவேற்றப்பெற்றது. அரசர் மனித உருவில் உள்ள கடவுள் போன்ற கருத்துகள் உட்கவடான முறையில் பலரறியக் கூறப்பட்டன. இதனால்தான் இராமா யணத்தில் உள்ளதைப்போல் இப்பொழுது கடவுள் க்ஷத்திரிய அரசரைப்போல் திருவுருக் கொண்டார்; மகாபாரதத்தில் உள்ளதைப்போல் அரசர், 'பூமியில் புனித சமயத்தையும்', வேதத்தால் உலகில் உணர்த்தப்பெற்ற சமயத்தையும் பாது காக்க, அரசர் தம் முடிசூட்டு விழாவில் உறுதியளித்தார்.[61] இந்திரன், வாயு, யமன், சூரியன், அக்கினி, வருணன், சந்திரன், குபேரன்[62] ஆகியோரின் புறக்கூறுகளைக்கொண்டு படைக்கப் பெற்றதையும், வேத, பிராமண உயர்விற்காக இருத்தலையும், சாதிகளையும் இனங்களையும் பாதுகாத்தலையும் இதனால்தான் மனு விதித்தமைத்தார்.[63] ஒவ்வோர் அரசரும் விஷ்ணுவின் அங்க மென்றும் அரசரும் கடவுளும் ஒன்றுதான் என்றும் மகாபாரதம்

[61] Pratijanam ca dhi rohasva manasa karmana gira ; Palayisyamy aham bhaumam brahmaity eva ca Sakrit. Mbh., Santi. Ch. LIX. 107.

[62] vii, 3 & 4.

[63] vii. 35, 82, 133, 18'.

குறிப்பிட்டபொழுது தெய்வத்தன்மை அளிக்கப்பெற்றது.[64] இதுதான் அரச பதவியின் கொள்கை வழிபாடும் அரசர்களைத் தெய்வமாக்கலுமாகும்.

## அரசபதவியின் தோற்றத்தின் மூலகாரணம்

அதுமட்டுமன்று. அரசபதவியின் இந்த உயர்விற்கும் கொள்கை வழிபாட்டிற்குமான தோற்ற மூலகாரணம் மிகைப் படுத்தித் தொகுப்பாக வரையப்பட்டுள்ளது. அரசர் இன்றி யமையாதவர்; அவரின்றி மக்கள் மடிவர், தெய்வங்கள் சினங் கொள்ளும். சட்டம் மறைவதைப்போல்தான் வேளாண்மையும் வணிகமும் மறைகின்றன. வான் பொய்க்கிறது; மீனைப்போல் மக்கள் ஒருவரையொருவர் உணர்கின்றனர். குடும்பத் தூய்மை யும் சமூக ஒழுக்கமும் மறைகின்றன. சமூகக் கட்டளைகள், கடமை களைப் புறக்கணிக்கின்றன. சமயம் அழிகிறது.[65] மக்கள் மகிழ்ச் சியைப்பற்றி அரசனின் அதிகாரம் கடவுளின் அதிகாரத்தைப் போல் இருப்பதாகத் தோன்றுகிறது. இது மனுவால் மேலும் விளக்கப்படுகிறது. 'இந்தப் படைப்பு முழுவதையும் காக்க, இந்திரன், வருணன், யமன், சூரியன், அக்கினி, சந்திரன், குபேரன் ஆகியோரின் புறக்கூறுகளை எடுத்துக்கொண்டார். ஏனென்றால், இந்தத் தெய்வங்களின் கூறுகளால் அரசர் அழிக்கப் பட்டிருக்கிறார்; எனவே, படைக்கப்பெற்ற எல்லாப் பொருள் களையும்விட மிகு புகழில் மிஞ்சுகிறார். சூரியனைப்போல் கண் களையும் உள்ளங்களையும் எரிக்கிறார்; பூமியில் எவரும் இவரை உற்றுநோக்க முடியாது. இயல்நிலை கடந்த இவரது அதிகாரத் தின் வழியாக இவர் அக்கினியாகவும் காற்றாகவும் இருக்கிறார்; இவர் சூரிய சந்திரர், நீதியின் தலைவர் (யமன்), குபேரன், வருணன், வலிமைமிக்க இந்திரன். இவர் மனித உருக்கொண்ட கடவுளாகையால், இறக்கக்கூடியவராகவும் இளையவராகவும் இருந்தாலும்கூட ஏளனம் செய்யக்கூடாது.[66] விஷ்ணு தம் முடைய ஒளிர்வை அரசர்களுக்களித்தார். ஆகவேதான், இவ ரைக் கடவுளாக உலகெலாம் வழிபடுகின்றது.[67]

## அரசர் 'சமயக் காவலர்'

அரசருக்கும் அரச பதவிக்கும் தெய்வப் பெருமையையும் தூய்மையையும் வழங்க பிராமண சமயம் முயன்றதென்பதை

64 Mbh., xii, 59; 128—144.

65 Ram., Ayodhya, Ch. LXVIII.

66 Manu, S. B. E. Vol. XXV. Ch. VII, 3—8.

67 Mbh., Santi Parva, Ch. LIX.

நாம் காணுகிறோம். இத்தகைய அரசர்தான் இதை நாத்திகத்திலிருந்து காக்கவும்,இதனுடைய நலன்களை மேம்படுத்தவும் முடியுமென்ற விருப்பத்தையும் நாம் காணுகிறோம். ஏனெனில், வேதத்தால் பூமிக்களிக்கப்பெற்ற சமயத்தின் மேம்பாட்டிற்கு உலகியல் அதிகாரம் தேவையானது (Bhaumam brahma). எனவே,இவரது அதிகாரம் தெய்வ இசைவாணை பெற்றிருந்தது; இதை மறுதலிக்க முடியாது. தெய்வ சமயத்தின் காவலராக இவர் இருக்கவேண்டியிருந்தால், இவருடைய அதிகாரத்தை மறுதலிக்கமுடியாது. இது மற்றொரு விளைவைப் பெற்றிருந்தது. கட்டுப்பாட்டு ஒற்றுமைக்கும், அதாவது, அரசில் மையப்படுத்தப்படுவதற்கும் அரச பதவியின் உயர்வு அல்லது கொள்கை வழிபாடு செய்யப்பெற்றது. மையப்படுத்தப்பெற்றபொழுது குறிப்பாக விரும்பிய இறுதிப் பயனை அடைய அரச அதிகாரம் மிகப் பயனுடையதாக இருந்தது. அரசன் ஆட்சி செய்யும் இந்தத் தெய்வீக உரிமைதான் அரச பதவியின் கொள்கை வழிபாடு. நாம் குறிப்பிட்டதுபோல், தனிப்பட்ட சூழ்நிலைகளின் பலன் இது. மக்கள் பாராட்டிற்குரிய இதிகாசங்களும் சட்டத் தொகுப்புகளும் இக் கோட்பாட்டை ஒழுங்குற உருவாக்கி விழிப்புடன் பரப்பின.

புதிதாக ஆரியமயமான காட்டுமிராண்டிகள், அதாவது, வெளிநாட்டார் உண்மையிலே வழக்கமாகச் செய்துகொண்டிருந்ததைத்தான் மக்கள் பாராட்டிற்குரிய இலக்கியம், மக்களிடையே பரப்ப முயன்றது. இவர்களுடைய நடைமுறை, அதாவது,அரசியல் மரபு, ஏற்புடைய சமயம் சார்ந்த இலக்கியம் பரப்பிய அரசர்களின் இறையுரிமை மரபை மெய்ப்பிக்க நெடுந்தூரம் சென்றது. இக் காலத்தின் இறுதியில் அது ஒரு கோட்பாடாக இருந்தது. நிலவும் நடைமுறையிலிருந்து அது சட்ட வலிமை பெற்றதை உறுதிப்படுத்தியது. இந் நாகரிகமற்றவர்களின் அரசியல் மரபுகளைப்பற்றி இப்பொழுது நாம் விவாதிக்கலாம்.

## வெளியாரின் அரசியல் மரபு

இவர்களுடைய அரசர்கள் பகட்டோசையுடைய தெய்வீக நன்மதிப்புச் சொற்களை ஏற்றுக்கொண்டது ஓர் அரசியல் மரபாகும். சகரும் பஹ்லவரும் இயல்பாகவே 'அரசர்களில் பேரரசர்' என்ற பட்டத்தைப் பெற்றனர் என்று சொல்லப்படுகிறது. டேரையஸின் (Darius) கல்வெட்டுகளிலிருந்து பெற்ற பாரசீக நன்மதிப்புச் சொற்களிலிருந்து (Ksayathiyanam Ksayathia) இப் பட்டப் பெயரைக் கடன்கொண்டனர்.[68] பார்த்திய

[68] C.H.I., p. 567.

நாணயங்கள் இரண்டாவது மித்திரிடேட்டஸிற்கு (Mithridates II)[69] உரியனவாகக் கொள்கின்றனர். பின் முதலாம் அஜிஸாம் (Azes I) அஜிலிசெஸாம் (Azilises) கூட்டாக நாணயங்களை வெளியிட்டனர். இவைகளில் 'அரசர்களின் பேரரசர்' எனும் பட்டப் பெயர் தோன்றுகிறது.[70] சபிதானு (Sapedana), சடவஸ்திராவின் (Satavastra) பஹ்லவர்களின் நாணயங்களில் 'அரசர்களின் பேரரசர்' என்ற இதே பட்டப் பெயர் காணுகிறது. பஹ்லவர்களின் மிக வலிமைவாய்ந்த அரசராகிய கொண்டோபார்னஸ் (Gondopharnes) ஏற்றுக்கொண்ட 'சிறந்த அரசர், அரசர்களின் தலையாய அரசர்' என்ற பட்டப் பெயர் ஒரு படி தரம் குறைந்ததாகும்.[71] சபிதானுவையும் சடவாஸ்த்ராவையும்விடக் குறைந்த வலிமை வாய்ந்த அரசர்கள் இதேகாலத்தில் 'பெரிய அரசர்' அல்லது 'பெரிய காவலர்' என்ற பட்டப் பெயர்களைக்கொண்ட நாணயங்களை வெளியிட்டிருக்கவேண்டும். பீம காட்பிசிஸிற்கு உரியனவாகச் சொல்லப்படும் மற்றொரு வகை நாணயங்கள் கனிஷ்கனின் நாணயங்களைப்போல் மிகஉயர்ந்த நன்மதிப்புப் பட்டங்களைக் கொண்டிருக்கின்றன. பீம காட்பிசிஸ், சிறந்த 'அரசர்', 'அரசர்களில் தலையாய அரசர்,' 'குஷானத் தலைவர்' என்ற பட்டங்களைப் புனைந்துகொண்டார்.[72] கனிஷ்கன், 'பேரரசர், 'அரசரின் அரசர்', 'கடவுளின் மகன்', 'மகாராஜா, இராஜாதிராஜா, தேவபுத்திரர்'[73] என்ற பட்டப் பெயர்களைப் பெற்றிருந்தார். இதேபோல ஆற்றல்மிக்க குஷான மன்னர்களின் கடைசி அரசரான வாசுதேவர், 'மகாராஜா, இராஜாதிராஜா, தேவபுத்திரர்'போன்ற பட்டப் பெயர்களைப் புனைந்துகொண்டார்.[74] கனிஷ்கனும் வாசுதேவரும், 'தேவபுத்திரர்' அதாவது, 'கடவுளின் மகன்' என்ற பட்டப் பெயரைப் பெற்றதிலிருந்து இங்கு உச்சநிலை அடைந்தது. இவைகளுக்கும் மேலாக, அரசர்கள், 'சிறந்த அரசர்', 'அரசர்களின் தலையாய அரசர்', 'கடவுள்களுக்கு அர்ப்பணிக்கப்பெற்ற தேவவிரதா' (Devavrata) என்ற பட்டப் பெயர்களை ஏற்றுக்கொண்டுள்ள அரசர்களுமிருக்கின்றனர். அது கொண்டோபார்னஸ் ஆகும்[75]. தர்மிகா (Dharmika), அதாவது, கடவுட் பற்றுள்ளவர் என்ற பட்டப் பெயரை ஏற்றுக்கொண்ட மற்றவர்களும் இருக்கின்றனர். யவனர்கள், பஹ்லவர்கள், சகர் ஆகியோரின் அரசர்கள், இவர்களின் வீறுார்ந்த பட்டப் பெயர்கள் குறிப்பிடும் முழுமையான

69 Ibid., p. 567.
70 Ibid., 572.
71 Ibid., p. 580.
72 C.H.I., p. 581.
73 Taxila Silver Scroll Inscriptions Indicarum, Vol. II, Part I, page 77.
74 Luder's List No. 69a.
75 C.H.I. p. 590.

அதிகார மரபை எப்படிக் கொண்டுவந்தனர் என்பதற்கு நாணயங்களும் கல்வெட்டுகளும் சான்று கூறுகின்றன. மேலும், சமயத்தை வளர்க்க இவர்கள் முற்பட்டனர்; தேவவிரதா அல்லது தர்மிகா போன்ற பட்டப் பெயர்கள் இதைச் சுட்டிக் காட்டுகின்றன. பிராமண சமயம் புகட்ட முயன்ற இரண்டு அரசியல் கருத்துகளில் ஒன்று 'அரசர் சமயக் காவலராதல்', இரண்டு அரசர் கடவுளின் திருவுருவமாகக் கருதப்பெறல் ஆகியவை உண்மையிலேயே நாகரிகமற்றவர்களின் அரசியல் மரபாயிற்று. இவர்கள் ஆரியர்களானபின், இந்த மரபும் அரசர்களின் தெய்வீக உரிமைக் கோட்பாடும் பிராமண சமயத்தை வலுப்படுத்தின.

## இரண்டு கூறுகள் வழியாகத் 'தெய்வீக உரிமைக்' கோட்பாடு பயனுடையதாகிறது

இரண்டு கூறுகளால் இந்த அரசியல் கருத்து பயனுடையதாகிறது. ஒன்று, அரசர்கள் ஆண்ட அரசுகள் இதற்கு முந்திய காலங்களைக்காட்டிலும் ஒப்பீட்டடிப்படையில் அளவில் சிறியனவாகவும் இயல்பில் ஒருபடித்தானவாகவும் இருந்தன. இதன் விளைவாக, இந்த அரசுகளில் மையப்படுத்தப்பெற்ற கட்டுப்பாட்டின் சாத்தியங்கள் அதிகமாகும். இரண்டு, அர்த்தசாஸ்திரம் போன்ற ஆய்வுக் கட்டுரையில் வெளிப்படும் அரசியல் அமைப்புத் திட்டமாகும். இது முன்னதை உறுதிப்படுத்தியது. அரசனிடம் அதிகாரம் செறியும் குறிக்கோளுக்கு இது வலியூட்டியது. அரசு கட்டுப்பாட்டையும், அர்த்தசாத்திரம் முன்குறித்துக் காட்டுவதில் அதிகாரம் ஒருமுனைப்படுத்தப்படுவதன் நுட்பத்தையும் மெய்யாக அளிக்கிறது. தம் நலனுக்காக பிராமண சமயத்தின் புத்துயிர்ப்பை ஆதரித்தவர்களும் அரசர்களும் இதை மகிழ்ச்சியோடு பயன்படுத்தினார்கள். எடுத்துக்காட்டாக, அரசர் தர்மப் பிரவர்த்தகராக (Dharmapravartaka) இருக்க வேண்டியதன் ஒழுக்கக் கடப்பாடு, அதாவது, சட்டத்தையும் சமயத்தையும் அறிவித்துச் செயல்படுத்துபவராகும் இவருடைய கட்டளையின் முழுமையான சட்டத் தகவு, விரிவான அமைப்பு, அரசின் அதிகார வர்க்கத்தின் கட்டுப்பாடு, அரசர்களின் வட்டாரத்தில் செயல்படும் ஆறுவகைக் கொள்கை, அரச இறைமையின் ஏழு கூறுகள் ஆகியவைகள் எல்லாம் அரசனிடம் அதிகாரத்தை மையப்படுத்த முயல்கிறவர்களை மிக வலிமையாகக் கவர்ந்திருக்கும். ஆகவே, இவ்விரண்டு கூறுகளும் (அ) அரசின் சிறிய அளவும் பெரும் ஒருங்கிணைப்பும், (ஆ) அர்த்தசாத்திரம் குறிப்பிட்ட மையப்படுத்தப்பெற்ற கட்டுப்பாட்டு நுட்பமுறையும் அரசின்

செயற்பாட்டை, அரசர்களின் தெய்வீக முறையைக் கோட்பாட்டின் வழியாகப் பயனுடையதாக்க உதவியது.

## அரசபதவியின் தோற்றம் சிவில் சமூகத்தின் தோற்றமாகும்

இக் காலத்தில் இலக்கியத்தில் இது வெளியாகிறது. அரச பதவி, அரசாங்கம் ஆகியவற்றின் ஒத்திசைவான கோட்பாடு உருவாகிறது. அரசன் அரசின் ஆன்மாவாகவும் சமூக ஆதாரமாகவும் இருப்பதால், இவருடைய தோற்றம்பற்றிப் பகுத்தறிவுக்கொத்த கோட்பாட்டை உருவாக்குவது முதல் தேவையாகும். மக்களுக்கு இவர் பிரம்மாவின் கொடையாவார். ஏனென்றால், இவர்களைக் காக்க ஓர் அரசரில்லாமல் இவர்கள் துயரமிக்க வாழ்க்கை நடத்தினார்கள். பாதுகாப்பின்மை, வாழ மிருகத்தனமான போராட்டம், வேள்வியில் கருத்தின்மை, சமூகப் பண்புகளின் இழப்பு, குற்றவியல் சமூக விரோத மனப்பான்மைகளின் ஆதிக்கம் ஆகியவை அரசர் இல்லாத அரசின் தீமைகளாகும். எனவே, மக்கள் பிரம்மாவை நாடினர். இவர்களை ஆள மனுவை அளித்தார். இவர் அளிக்கும் பாதுகாப்பிற்குப் பதிலாக மக்கள் தம் கால்நடைகளில் ஐந்தில் ஒன்றையும், தங்கத்தில் ஐந்தில் ஒரு பங்கையும், தானியத்தில் பத்தில் ஒரு பங்கையும் அளிப்பதாக உறுதி கூறினார்கள். எனவே, அரச பதவியின் நிறுவனத்தோடு சிவில் சமூகம் எழுந்தது.[76] இதைப்போல், 'படைப்பு முழுவதையும் காப்பதற்காகவும்,'[77] உலக முழுவதையும் ஒழுங்காக வைத்துக் கொள்வதற்காகவும்,[78] சமூக ஒழுங்கையும் சாதி முறையையும் பேணுவதற்காகவும்[79] ஆன கடவுளின் விருப்பை அரச பதவியின் தோற்றத்திற்குக் கற்பித்துக் கூறப்பெற்றது. இக் கோட்பாடுகளைக் கூறுவதன் நோக்கம், அரச பதவிக்கும் சமூக அமைப்புக்கும் உள்ள இயல்பான தொடர்பை நிறுவ என்று தெரிகிறது. அதாவது, சமூக அமைப்பு அரச பதவியோடு தொடங்குகிறது. அரச பதவியின் தோற்றம் அரசாங்கத்தின் தோற்றமாகும். கடவுளின் மகனாகிய தண்ட நீதியின்,[80] அதாவது, தண்டனை என்னும் கருவியோடுதான் அரசனின் ஆட்சி நடக்கும். எனவே, அரசாங்க நிறுவனத்தின் இன்றியமையாத் தகுதிக்கூறு சமூக அமைப்பாகும். அரசனின் முழு வல்லாட்சியை ஏற்படுத்த முற்படும் அரசாங்கம்பற்றிய கோட்பாட்டை நாம் பெற்றிருக்கிறோம். அரசன் தன் செங்கோலை ஓச்சி, அதாவது,

[76] Mbh., Santi, Ch. LXVII.
[77] Manu., viii, 3.
[78] Ibid., 22.
[79] Ibid., 35.
[80] Manu., vii, 14.

தண்டனையின் சின்னமாகிய தண்ட நீதியைப் பயன்படுத்தி, படைப்பு, சமூக அமைப்பு ஆகியவற்றின் காவலனுகிறார். இவரது கட்டளைகளுக்கு எவரும் பணிய மறுக்கலாகாது. எனவே, இவரது அதிகாரத்தின் தகுதித்திறன் எங்கும் நிலவும். இது அரச தனி வல்லாட்சியின் கோட்பாட்டியலான மெய்ப்பிப் பாகும். அரசரிடத்தில் மையப்படுத்தும் அதிகாரத்தின் இது மறைமுகமான கருவியாகும்.

### அரசரும் அவருடைய கடமையும்

இந்த யூகங்களின் சூழமையில் அரசரின் சிறப்பை எளிதில் மதிப்பிடலாம். இறைமையின் (Svamin) ஏழு கூறுகளில் இவர் (அரசர்) முதல்வராகத் தோன்றுகிறார். உண்மையில் இப் பொழுது சுவாமி (Svamin) என்பது அக்காலத்திய கல் வெட்டுச் சான்றிற்கு ஏற்ப அரசன் என்று பொருள்படும்.[81] அரசியற் கோட்பாடு எவ்வாறு அரசியல் நடைமுறையை இயக்குகிறது என்பதை நாம் இங்குக் காண்கிறோம். அரசர் இறைமையுடையவராக இருந்தால், இவருடைய கடமை அல்லது இராஜதர்மம், தண்ட நீதியை அல்லது தண்டனைச் சட்டத்தைச் செயற்படுத்துவதில் அடங்கியிருக்கிறது. தண்ட நீதியால்தான் இவர் முடியரசின் தலைவராக இருக்கிறார்.[82] மனித உருவில் இவர் பெரிய கடவுளாக இருப்பதால்,[83] ஒவ்வொன்றையும் ஆதரிப்பவராகவும் வைத்துப் பேணுபவராகவும் இருக்கிறார்;[84] காலத்தைப் படைக்கிறவர்;[85] இவர் மக்களின் இருதயம், அவர் களுடைய பெரிய புகலிடம், அவர்களின் புகழ், அவர்களின் மிகச் சிறந்த மகிழ்ச்சியாகவும் இருக்கிறார். இவருக்குப் பற்றுறுதி யோடு இருப்பவர்கள் இவ்வுலகையும் அவ்வுலகையும் வெற்றி கொள்கின்றார்கள்.[86] இவரைத் துன்புறுத்த நினைப்பவர்கள் கூட இங்கு துன்பம் அடைந்து நரகத்திற்குச் செல்கிறார்கள்.[87] இக்கொள்கைகளில் அசோகரின் எடுத்துக்காட்டின் நுட்பமான செல்வாக்கை நாம் காணுகிறோம். சமயம் மக்களின் மனத்தில் செயல்படுவதையும் பார்க்கிறோம். அரசனின் வல்லாட்சியைத் தாங்கிக்கொள்ள மக்களின் மனம் இவ்வாறு தயாராக்கப்பட்

[81] Luder's List, No. 1100 for Plumavi; No. 1174 for Nagapana; No. 1124 for Gotamiputra Sri Satakarni.
[82] Ram., Bk. i, Ch. XLI,
[83] Mbh., Bk, XII. Ch. LXVIII, 40.
[84] Mbh., Ch. LXXII, 25; Manu., Ch. VII, 14.
[85] Mbh., Ch. LXIX. 79.
[86] Ibid., Ch. LXVIII. 59.
[87] Ibid., Ch. LXVIII, 39; Manu. Ch. VII, 14.

டிருந்தது. அரசனைத் தெரிவு செய்வது, பின் அவருக்கு முழு நம்பிக்கையோடு கீழ்ப்படிதல் மக்களின் முதற் கடமையாகும்[88]. ஆனால், இத் தேர்வு என்பது அரசனை ஏற்றுக்கொள்வதைத் தவிர வேறொன்றுமில்லை; சில உடற் குறைபாடுகளால் தகுதி இழக்காத வரையில் இவர் வழிவழி உரிமையையொட்டி அரியணை ஏறுகிறார்.[89] அரசர்தாம் தம் மகனைப் பின்வாரிசு ஆகவும், அவருடைய ஆயுட் காலத்தில்கூட ஆட்சி செய்யவும் நியமிக்கிறார்.[90] அவருடைய கடமைகளைப்பொறுத்தமட்டில் முதற்கடமைதன்னை வெற்றிகாண்பது; அடுத்து எதிரிகளை வெற்றி காண்பதாகும்; பின்னது முன்னதைச் சார்ந்திருந்தது.[90] அவருடைய மக்களின் விருப்பத்திற்கு முற்றிலும் எதிராக அவ்ரால் செயல்பட முடியாது. அவருடைய நடத்தைக்குச் சார்பாக அல்லது எதிராக மிக்க வலிமையாகத் தம் கருத்தை அடிக்கடி வெளிப்படுத்தினார்கள்.[92] அரசரின் தனியாட்சியில் வழக்கமான தடைகள் இருந்தன. குடிமக்களுக்குப் பாதுகாப்பு அளிக்கவேண்டியது அவருடைய மிக உயர்ந்த கடமையாகும்.[93] பாதுகாப்பளிக்கும் இக் கடமையை ஒற்றர்களையும் பணியாட்களையும் வேலைக்கமர்த்துவதாலும், தற்பெருமையின்றி அவர்களுக்குரியதை அளித்தலும், கருணையோடு வரிகளை வசூலித்தலும், நேர்மைக்கு முரணாக விருப்பம் போல் எதையும் எடுத்துக்கொள்ளாதிருத்தலும், நேர்மையுடையவர்களையும் வீரத்தையும், தேர்ச்சியையும், நுண்ணறிவையும் தேர்ந்தெடுத்தலும், உண்மை, மக்களின் நலம் நாடுதல், நல்ல, தீயவழிகளால் எதிரிகளிடையே ஒழுங்கின்மையையும் ஒற்றுமையின்மையையும் உண்டாக்குதல்; பழைய, இடிந்த கட்டடங்களைச் செப்பனிடல்; நேர்மையான தண்டத்தையும் உடல் தண்டனைகளையும் அளித்தல்; நேர்மையானவர்களைக் கைவிடாதிருத்தல்; மதிப்பிற்குரியவர்களுக்குப் பதவியும் பாதுகாப்பும் அளித்தல்; வைத்திருக்கவேண்டிய இருப்பை வைத்திருத்தல்; நுண்ணறிவு உள்ளவர்களோடு வசித்தல்; படைவீரர்களை எப்பொழுதும் மனநிறைவோடு வைத்துக்கொள்ளுதல்; குடிமக்களை மேற்பார்வையிடல்; பணியாற்றுவதில் உறுதிப்பாடு; கருவூலத்தை நிரப்புதல்; நகரக் காவலர்களிடம் மூடநம்பிக்கை வைக்காதிருத்தல்; தண்டநீதிக்கொப்ப செயல்பட என்றும் தயாராய் இருத்தல்; பகைவனைப் புறக்கணியாதிருத்தல்; கொடி

88 Ibid., Ch. LXVII, 2.
89 Mbh., Udyoga Parva, Ch. CXLIX. 25, 30.
90 Ibid., Ch. CXLIX, 10—16; Ram., ii Ch, II.
91 Mbh., Santi Parva, Ch. LXIX. 4.
92 Mbh., Adi Parva, Ch. CXLVII: Ram., Bk. II, Ch. II.
93 Mbh., Santi Parva, Ch. LVIII, 1—4; Ram., Bk. I, Ch. XXXIV.

யவர்களைத் துரத்துதல் அரசனுடைய கடமைகளாகும்.[94] இவைகள் எல்லாம் தண்ட ரீதியில் அடங்கியிருக்கின்றன; இவை நிலையான வேதத்தில் அடங்கியுள்ள வழக்காறு அல்லது வியவகாரம்;[95] ஆகையால், வேதத்தை எதிர்த்த நாத்திகம், சமூகத்தில் நேர்மையுணர்வை அடைவதற்குரிய ஒரே வழியாகிய தண்ட நீதியால் அகற்றப்படவேண்டும்.[96] அர்த்தசாத்திரம் வலியுறுத்தியதுபோல் அரசர் தர்மப் பிரவர்த்தகராக இதனால் தான் இருக்கவேண்டியிருக்கிறது. வெளியார்களின் அரசர்கள், நாம் முன் குறிப்பிட்டதைப்போல், தம்மை தேவ விரதா என்றும், தார்மிகர் என்றும் குறிப்பிட விரும்பினர். இதனால் தான் பல்லவ அரசர் சிவஸ்கந்த வர்மன் தர்ம மகாராஜாதிராஜ என்ற பட்டப் பெயரைச் சூட்டிக்கொண்டார்.[97]

## அரசருக்குரிய அரசாங்கம்

(அ) அமைச்சவை

அரசருக்கு அமைச்சர்கள் உதவினால், இப்பொழுது இத் தண்ட நீதியை மிகச் சிறந்த நன்மைக்குப் பயன்படுத்தலாம். இவர்களின் எண்ணிக்கை எட்டிலிருந்து[98] முப்பதுக்கு அதிகமாக மாறியது.[99] ஆனால், நடைமுறையில் இருக்கும் பரவலான மாறுபாடுகளை அனுமதித்தால் இந்த எண்ணிக்கை வெறும் கோட்பாடு சார்ந்த சிறப்புடையதேயாகும். தசரதர் பத்து அமைச்சர்களைப் பெற்றிருந்தார்.[100] யுதிட்டிரர் ஏழு அமைச்சர்களைப் பெற்றிருந்தார்.[101] இவர்களில் ஐவர் நகரம், படையமைப்புகள், வணிகர்கள், உழவர்கள், சிவில், கிரிமினல் நீதி பேரன்றவைகளை மேற்பார்வையிட்டனர்.[102] அமைச்சர்களின் எண்ணிக்கை நாட்டின் தேவையைச் சார்ந்திருக்கவேண்டும்; ஆனால், எல்லா அரசர்களும் அமைச்சர்களைப் பெற்றிருந்தனர். அவர்கள் நாட்டின் அரசாங்கத்தில் மிகச் சிறந்த முறையில் பணியாற்றினார்கள்.[103] இதனால்தான் எதிரிகள்

94 Mbh. Santi Parva, Ch. LVIII, 5—12.
95 Ibid., Ch. CXXI.
96 Mbh., Adi Parva, Ch. CXLII, 59.
97 Luder's List, No. 1200.
98 Manu., vii, 54.
99 Mbh., Santi Parva, Ch. LXXXV.
100 Ram., Bk. 1, Canto Vii.
101 Mbh., Sabha Parva, Ch. V, 22.
102 Ibid., Ch. V, 80.
103 Cor. Ins. Ind. II, i, p. 77; Ep. Ind., viii; No. 8.

அமைச்சர்களுக்குக் கைக்கூலி கொடுக்க அடிக்கடி முயன்றனர்.[104] ஆனால், இந்த அமைச்சர்களுக்கும், ஏன், அரசரின் தன் மதிப்பு நிலைக்கும் சமமாகப் புரோகிதர் இருந்தார். இவர் பதவி அரசருக்கும் இவருடைய நாட்டிற்கும் செழிப்பைக் கொண்டு வந்தது.[105] இந்த அமைச்சர்களும் தம் ஊதியங்களைப் பணமாகப் பெற்றிருக்கலாம்.[106] வருவாய், சுரங்கம், உற்பத்தி களஞ்சியம் ஆகியவற்றின் பொறுப்பேற்க அலுவலர்களை அமர்த்த மனு இசைவளிக்கிறார்.[107] வெளிநாட்டுறவுகளை ஓர் அரசியல் தூதரிடம் ஒப்படைக்கவேண்டும்.[108] இவரையும், அரசரையும், படைத்தலைவரையும் நாட்டின் தூண்களாக மதிக்கின்றனர்; ஏனெனில், மக்களைக் கட்டுப்படுத்துகின்ற அதிகாரம் படையையும் கருவூலத்தையும், பொது ஆட்சி அரசரையும், போரும் அமைதியும் போன்றவை அரசியல் தூதரையும் சார்ந்திருந்தன.[109] அரசர் நீதியின் உறைவிடமாக இருந்தார்; இவர் மிக உயர்ந்த முறையீட்டதிகார வரம்பைப் பெற்றிருந்தார். ஆனால், இவர் தலைமை நீதிபதி என்ற முறையில், கற்றறிந்த பிராமணராக இருந்த ஒருவரிடம் தம்முடைய அதிகாரங்களை ஒப்படைத்தார்.[110] இப் பதவிகள் அரசாங்கக் கோட்பாடுகளில் இடம்பெறவேண்டு மென்பதில்லை. இவைகள் உண்மையாக இருந்ததை மெய்ப்பிக்க நமக்குக் கல்வெட்டுச் சான்று இருக்கிறது. லூடருடைய (Luder's) கல்வெட்டுகளின் பட்டியலில் மகா சேனபதி,[111] மகாதண்ட நாயகர்[112], பொருளாளர் (Treasurer)[113] என்று சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்கிறோம். மனு மேலே குறிப்பிட்ட இதே அலுவலர்களுக்கொப்பாக இவர்களும் இருந்திருக்கலாம். நாசிக் குகைக் கல்வெட்டு, உருத்திர தாமனின் ஜூனகாத் (Junagadh) கல்வெட்டு, தட்சசீல வெள்ளிச் சுருள் போன்றவைகளிலிருந்து இவைகள் எல்லாம் அமாத்தியர் என்ற பொதுவான பதவிப் பெயரைப் பெற்றிருத்தல் தெளிவாகிறது.

(ஆ) படை

முன் குறிப்பிட்டதுபோல் படைத் தலைவர் அல்லது மகா சேனபதி என்பவரைத் தலைவராகக் கொண்டிருந்த பல உயர்

104 Mbh., Adi Parva, Ch. CCIII, 5—7.
105 Ibid., Ch. CLXXVI, 13.
106 Mbh., Sabha Parva, Ch. V, 114.
107 Manu., vii, 62.
108 Manu., vii, 63.
109 Ibid.,.65
110 Ibid.. viii, 9.
111 Luder's List, Nos. 1124 & 1146.
112 Ibid., No. 1328.
113 Ibid., Nos, 1114 & 1182—Bhandagarika & Ganjavara respectively

அலுவலர்கள்மீது படையின் ஆட்சி சென்றடைந்தது. இந்தப் படைத்தலைவர்களும் மற்ற உயர் அலுவலர்களும் கல்வெட்டு களில் காணுகின்ற சேனாபதி, கோல்மிகர் (Gaulmikas), ஆரக் ஷாதிகிரித்தா (Araksadhikritas) ஆகியோரை ஒத்தவர்களே.[115] பெரும்பாலும் இப் படை நிலைப்படையே.[116] பெரும்பாலோர் அரசரிடமிருந்து உண்மையிலேயே மானியம் பெற்றார்கள் என்றாலும் படை, மற்றத் துறைகளின்[117] தலைமை அலுவலர்கள் பணமாகத் தம் ஊதியத்தைப் பெற்றுக்கொண்டார்கள்.[118]

### (இ) மற்ற நிருவாக அலுவலர்கள்

மனுவும்[119] மகாபாரதமும்[120] இரண்டு தனிப்பட்ட அரச அலுவலர் வகைகளைக் குறிப்பிடுகின்றன. அரசரின் சொந்த ஆலோசகர்களாகச் செயல்பட்டு அரசருடன் எப்பொழுதும் செல்லுகின்ற இவர்கள் மந்திரி என்று வழங்கப்பெறுகின் றனர். இவர்கள் அரசின் அமைச்சர்களாக அமர்த்தப் பட்டார்கள். ஆட்சிப் பொறுப்பில் இருந்தவர்கள் கல்வெட்டு களில் காணுகின்ற அமாத்தியர் என்று பெயர் பெற்றனர். இவைகள் கல்வெட்டுகளில் காணப்படும் ரகசியாதிகிர்தா-ராஜமாத்யர் (Rahasyadhikrita-Rajamatya) அல்லது அமாத்தி யர்களுக்கு ஒப்பாக இருக்கின்றன.[121] மந்திரிகளோடு அரசர் மக்கள்முன் தோன்றி எல்லாச் சடங்குகளிலும் கலந்துகொண்டு அரசாங்கக் கொள்கைகள்பற்றி இரகசியமாக ஆலோசனை செய்தார்.[122] கவர்னர்கள், ஆய்வாளர்கள், மேற்பார்வை யிடுவோரைப்போல் அமாத்தியர்கள், நிருவாக அலுவலர்கள் ஆகியவர்கள் நாட்டின் நிகழ்ச்சிகளையும் ஆட்சி இயல் விவரங்களை யும் ஆய்ந்தனர்.[123] இந்த வேறுபாடு, கல்வெட்டுகளில் காணும் மதிசச்சிவர்களுக்கும் (Mati Sacivas) கர்ம சச்சிவர்களுக்கும் (Karma Sacivar) இடையான வேறுபாட்டிற்கு ஒப்பாக இருக்

115 Luder's List, No. 1200; Epi. Ind. xiv; p. 155.

116 Mbh., Sabha Parva, Ch. V. 47, 48; Manu, vii, 114 & Luder's List No. 1200.

117 Mbh., Sabha Parva, Ibid., Ch. V. 114 & 115.

118 Luder's List, Nos. 1126 & 1200.

119 Manu., Ch. VII, 55 & 81.

120 Mbh., Santi Parva. Ch. LXXX III.

121 Luder's List. Nos. 1053, 1141, 1200.

122 Manu, vii, 146 & 147; Mbh., Santi Parva, Ch. LXXXIII, 47, et Seq. Sabha Parva, Cn. V, 85 & 86.

123 Manu., vii, 80 & 81; Mbh. Sabha Parva, Ch. V,80; Luder's List, Nos. 1126 & 1186.

கிறது.[124] மதிசச்சிவர்கள் இரகசிய ஆலோசகர்களாகவோ அல்லது மந்திரிகளாகவோ, கர்மசச்சிவர்.நிருவாக அலுவலர்களாகவோ அல்லது அமாத்தியார்களாகவோ இருக்கின்றனர்.[125]

(ஈ) நகர, கிராம ஆட்சி

மோரிய, அர்த்த சாத்திர மரபுகளின் தொடர்ச்சியை முறித்துவிடாது ஆட்சி இயல் இரண்டு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. (1) நகர ஆட்சி, (2) நாட்டு ஆட்சி. சமய விதிமுறை தழுவிய நூல்கள் கிராம,[126] நகர,[127] ஆட்சிபற்றித் தனியே குறிப்பிடுகின்றன. 'நம்பிக்கைக்குரிய அதிகாரிகளின் தலைமையில் ஒரு படை அணியை, இரண்டு, மூன்று, ஐந்து அல்லது நூறு கிராமங்களுக்கிடையில் நாட்டின் பாதுகாப்பிற்காக நிறுத்தவேண்டு மென்பது மனுவின் கருத்தாகும். இதனுடன் ஒவ்வொரு கிராமத்திற்கும், பத்து, இருபது, நூறு, ஆயிரக் கணக்கான கிராமங்களுக்கு ஒரு தலைவரை அரசர் அமர்த்தவேண்டும். ஒரு கிராமத்தின் தலைவர் தம் கிராமத்தில் நடந்த குற்றங்களைப் பத்துக் கிராமங்களை ஆட்சி செய்யும் தலைவருக்கும், இப்படியே ஆயிரக் கணக்கான கிராமங்களை ஆட்சி செய்யும் தலைவருக்கும் தகவல் கொடுக்கவேண்டும். இந்த அலுவலர்களின் ஊதியங்களைப் பொறுத்தவரையில், 'பத்துக் கிராமத் தலைவருக்கு ஒரு குலமும் (ஒரு குடும்பத்திற்குப் போதுமானது), இருபது கிராமத்தை ஆட்சி செய்பவருக்கு ஐந்து குலமும், நூறு கிராமங்களை மேற்பார்வையிடுபவருக்கு ஒரு கிராமமும் (ஒரு கிராமத்தின் வருமானமும்), ஆயிரம் கிராமத் தலைவருக்கு ஒரு நகரமும் (நகரத்தின் வருமானமும்) கொடுக்கவேண்டுமென்று வகுத்தளிக்கப்பட்டிருக்கிறது. இவர்களுடைய கிராமங்களோடு தொடர்புடைய இவர்கள் சம்பந்தப்பட்டதையும் இவர்களின் தனிப்பட்ட வேலைகளை அரசரின் மற்றோர் அமைச்சர் சோதனையிடுவார்.''[128] ஒவ்வொரு கிராமத்திற்கும் ஓர் ஊர்த் தலைவனையோ அல்லது கிராமிகாவையோ, (Gramika), பத்துக் கிராமத்திற்கு ஒரு மேற்பார்வையாளரையோ இப்படியே இருபது நூறு, ஆயிரம் கிராமங்களுக்கு இதுபோன்ற உயர் அலுவலர்களை அமர்த்த மகாபாரதம் விதிமுறை செய்கிறது.[129] நகரத்தைப் பொறுத்தவரையில், ஒரு மேற்பார்வையிடுபவர் இருக்க

124 Bombay. Gaz. I, i, 39.
125 Luder's List, Nos. 1126 & 1186.
126 Manu., vii, 114 et Seq., Mbh., Sabha Parva, Ch. V, 80, 81 & 82.
127 Manu., vii, 121, et Seq., Mbh., Santi Parva, Ch. LXXXVIII, 3.
128 Manu., Ch. VII, 114–120.
129 Mbh., Santi Parva, Ch. LXXXVII, 3, et Seq.

வேண்டும். இவர் தாமே மற்ற அலுவலர்களைச் சந்தித்து, ஒற்றர்கள் வழியாக அவர்களுடைய நடத்தையை ஆராய வேண்டுமென்று மனு கூறுகிறார்.[130] ஐந்து தலைமை அலுவலகங்களில் அமர்த்தப்பட்டுள்ள அறிவும் உரமும் உள்ள ஐவரில் ஒருவர் நகரத்திற்காக இருக்கவேண்டுமென்று மகாபாரதம்கருதுகிறது.[131] கல்வெட்டுச் சான்றுகள் இக்கோட்பாட்டியலான விவரங்களை உறுதிப்படுத்துகின்றன. கிராமம் ஓர் ஆட்சிப் பிரிவாக இருந்ததென்பதில் ஐயமில்லை. நாம் மகாபாரதத்தில் கண்ட அதே கிராமிகா என்பதுதான் கிராமத் தலைவனின் பெயர்.[132] கிராமணி[133], கிராம போஜகா[134] என்ற மற்றப் பெயர்கள் இவற்றின் தல வேறுபாடுகளாகும். இதேபோல் நகரப் பொறுப்புடைய அலுவலர் நகராக்சதர்சா (Nagaraksadarsa) என்னும் பெயர் பெற்றிருந்தார்.[135]

## (உ) வருவாய்

நிலத்தின் விளைபொருளில் ஆறில் ஒரு பங்கும், குற்றவாளிகளிடமிருந்து திரட்டிய தண்டங்களும், பறிமுதல் பொருள்களும்; வணிகப் பொருள்களின்மீது விதித்த வரிகளும் சட்டப்படியான வருவாய் வளங்களில் அடங்கும்.[136] ஆனால், பணம் தேவைப்படும்பொழுது விரும்பினால் மற்றெந்த முறையாலும் பெறலாம். பிராமணர்களைத் தவிர மற்றவர்களிடமிருந்து செல்வத்தை எடுத்துக் கருவூலத்தை நிரப்பலாம்.[137] சமய விதிமுறை சார்ந்த நூல்கள் பாலி (Bali), சுல்கா (சுல்கா), பாகா (Baga) என்ற மூன்று வருவாய் வளங்களையும் சொல்லும்போது உருத்திரதாமனின் ஜுனகாத் கல்வெட்டு இவற்றை வலியுறுத்துகிறது. வருவாய்த் துறையில் பெருமெண்ணில் கணக்கர்களும் எழுத்தர்களும் அலுவலர்களாக அமர்த்தப்பட்டிருந்தனர் என்று தெரிகிறது.[138] கல்வெட்டு குறிப்பிடும் ராஜ லிபிகாரர் (Raja-Lipikaras) அல்லது லேக்கஹர் (Lekhakas) கணக்கர்களுக்கொப்பாவர்.[139] ஆனால், மிக முக்கியமான பணிகள் ஒற்றர்களின் பணிகளேயாகும். நாட்டில் எங்கும் இவர்கள் பரவலாக அமர்த்தப்

[130] Manu., vii, 121 & 122.
[131] Sabha., V, 80.
[132] Mathura Ins. Luder's List, Nos. 48, 69 a.
[133] Luder's List, No. 1333.
[134] Ibid., No. 1200.
[135] Udaygiri Cave Ins., Luder's List, No. 1351.
[136] Mbh., Santi Parva, Ch. LXXI, 10; Manu, vii, 130 – 137.
[137] Mbh., Santi Parva, Ch. LXXI, 10; Manu, vii, 21.
[138] Mbh., Sabha Parva, Ch. V, 72.
[139] Luder's List, Nos. 271, 1045, 1138, 1148 etc.,

பட்டனர். இவர்கள் உள்நாட்டில் அலுவலர்களின் நடத்தை பற்றியும், உவளகத்தில் உள்ள பெண்களைப்பற்றியும், அரசனின் நண்பர்கள், பகைவர்களின் போக்குப்பற்றியும், கள்வர்கள் நடவடிக்கைபற்றியும், மற்ற வீணர்கள்பற்றியும் அரசருக்கு அறிக்கை கொடுத்தனர்.[140] அசோகரின் அலுவலர்களின் நடவடிக்கைகளின் எதிரொலியாக இது தோன்றுகிறது. ஒரு பல்லவக் கல்வெட்டில் இவர்கள் சம்காரான்தகர் (Samkarantakas) எனக் குறிப்பிடப்படுகிறார்கள். நேருண்மையாக, மரணக் கடவுளை அல்லது அந்தகரை நகர்த்துதல் என்பது மக்கள் மனத்தில் உண்டாக்கும் அச்ச உணர்வை இது வெளியிடுகின்றது எனலாம்.

(ண) உரிமைசார்ந்த முறைமையும் குற்றவியல் முறைமையும்

நீதிமுறையின் வளர்ச்சிபற்றியும் விரிவுபடுத்தல்பற்றியும் தெளிவான அறிகுறிகள் இருக்கின்றன. உரிமை சார்ந்த குற்றவியல் சட்டங்கள் இப்பொழுது வேறுபடுத்திக் காணப்படுகின்றன; குற்றச்சாட்டறிவிப்பின் தன்மை வரையறை செய்யப்படுகிறது; நீதிபதிகளின் நடத்தையும் தேர்ச்சிப் பேறுகளும் பெருங்கூராப்புப் பெறுகின்றன. இருந்தபோதிலும் நீதி சாதியையொட்டித்தான் இருந்தது;[142] முற்றிலும் நேர்மையாக இருக்கவேண்டிய சட்டத்தின் மிக உயர்ந்த நோக்கம் இதனால் பாதிக்கப்பட்டது. இந்தியச் சட்டத்தின் சிறப்புத் தன்மை இதனுடைய சார்பற்ற தன்மையிலன்றித் தூய்மையில்தான் இருந்தது. எனவே, சட்டத்திற்குமேல் ஒருவருமில்லை; ஆனால், இதே சமயத்தில் சட்டத்தின்முன் எல்லோரும் சமமாக இருக்கவில்லை. தண்டனை பல கூறுகளால் நிர்ணயிக்கப்பட்டது. இவைகளுள் சாதியும் தனிமதிப்பு நிலையும் அற்பமானவை ஆகா. எனவே, 'தந்தை, ஆசிரியர், நண்பர், தாய், மனைவி, மகன், குடும்ப புரோகிதர் ஆகியோர் தம் கடமைக்குள் இருக்கவில்லை என்றால் அரசனால் தண்டிக்காமல் விடப்பட்டார்' [143]

அரசன் தன் கடமையினின்று விலகிச் சென்றால், இவர் சட்டத்திற்கு அப்பாற்பட்டவராக இருந்தும் கடினமாகத் தண்டிக்கப்படுவார். 'சாதாரண மனிதனுக்கு ஒரு காரஷபணம் (Karasapana) தண்டம் விதிக்கையில் அரசருக்கு ஓரா

[140] Manu., vii, 122, 153--154, 223; ix, 256, 261. 298.

[141] Luder's List No. 1200.

[142] Manu, viii, 337 et Seq.

[143] Manu., viii, 335.

யிரம் தண்டம் விதிக்கவேண்டும்.'[144] நீதி முறையோடு மிக நெருங்கித் தொடர்பு கொண்டிருந்தது தண்ட நீதியாகும்; இது பொதுச் சட்டத்தோடு சமமாகக் கருதப்படுகிறது. 'தல வழக்காறுகளிலிருந்தும் புனிதச் சட்டங்களின் மூலத் தொகுப்புகளிலிருந்தும் எடுத்துக்கொண்ட கருத்துகள் இப்பொழுது பொதுச் சட்டத்தில் அடங்கியிருக்கின்றன.' எடுத்துக்காட்டாக, இது பதினெட்டு வேறுபட்ட தலைப்புகளாயிற்று. (1) கடனைச் செலுத்தாமை, (2) நிதி வைப்பும் உறுதியும், (3) உடைமையுரிமையின்றி விற்றல், (4) பங்காளிக்குள்ளான பொறுப்புகள், (5) கொடைகளின் மறுதொடக்கம், (6) ஊதியங்களைக் கொடுக்காதிருத்தல், (7) ஒப்பந்தங்களை நிறைவேற்றாமை, (8) விற்றதையும் வாங்கியதையும் மாற்றுதல், (9) உடைமையாளருக்கும் அவருடைய பணியாளருக்குமிடையில் தகராறு, (10) எல்லைகள்பற்றிய தகராறுகள், (11) திடீர்த் தாக்குதல், (12) இகழுரை, (13) திருட்டு, (14) வழிப்பறியும் வன்முறையும், (15) பிறர் மனை நயத்தல், (16) கணவன் மனைவியின் கடமைகள், (17) மரபுரிமைச் சொத்தைப் பிரிவினை செய்தல், (18) சூதாட்டமும் பந்தயம் கட்டலும்[145]. அரசர் வழக்குகளை நேரில் விசாரணை செய்தார்; இது தவறினால், அரசரால் அமர்த்தப்பெற்ற ஒரு நீதிபதியும் மூன்று மதிப்பீட்டாளர்களும், புனிதச் சட்டத்திற்கும், சாதிகள், மாவட்டங்கள், வணிகச் சங்கங்கள் குடும்பங்கள் ஆகியவற்றின் சட்டங்களுக்குமேற்ப இவர்கள் வழக்குகளை முடிவு செய்தார்கள்.[146] 'குறிப்பிட்ட தொழிலில் இருப்பவர்கள் மூவருக்குக் குறையாத, அல்லது பத்துப் பேருக்குக் குறையாத ஒரு சபையின் முடிவிற்கு சர்ச்சைக்குரிய கருத்துகளை விட்டனர். இவர்களின் முடிவு எதுவானாலும் சட்டமாக ஏற்றுக்கொள்ளப்பெற்றது.[147] எங்குப் புனிதச் சட்டமும் தர்மமும் நியாயமும் மோதுகின்றனவோ, அங்குப் பின்னது நிலவிற்று. இங்கும் நாம் மறுபடியும் அர்த்த சாத்திரக் கருத்தைப் பார்க்கிறோம். மனுவால் குறிப்பிடப்பெற்றதைப்போல் நியாயம் என்பது சட்டப்படியான சபையின் முடிவென நேர்மை நிறைவோடு பொருள் செய்யலாம். ஏனெனில், சட்டப்படியான சபையின் முடிவு நேர்மை விதிகளைப் பின்பற்றியிருக்கவேண்டும். சாட்சிகளின் தகுதிபற்றியும் சான்றறிக்கைபற்றியும் விரிவான விதிகளை மனு வகுத்துள்ளார். இவைகளெல்லாம், சட்டம் மிகத் தெளிவான நிலையை நோக்கிச் சென்றதைக் காட்டுகின்றன.

144 Manu., viii, P. 335.
145 Manu., viii, 4—7.
146 Manu., viii, 41.
147 Ibid., Ch. XII. 110.

## சட்டமும் இறைமையும்

சட்டத்தின் மூலத்தை நாம் விவாதிக்கலாம்; இந்த விவாத அடிப்படையில் இறைமையின் தன்மையை நிர்ணயிக்கலாம். சட்டத்தின் குண இயல்புபற்றி இப்பொழுதுதான் குறிப்பிட்டோம். முதன்மையாக, சமய வாழ்க்கையின் கருத்துகளைப் போதிப்பது இதன் நோக்கமாக இருந்தது இப்பொழுது குறைந்த சமயத் தொடர்புடையதாயிற்று. உரிமை சார்ந்த முதன்மை, குற்றவியல் சார்ந்த முறைமை, பாதுகாப்பு அமைப்பு, நிதிகள், வியாபாரமும் வணிகமும், வேளாண்மை. சட்டமும் ஒழுங்கும் போன்றவைகளை இது இரண்டாவதாகத் தான் எடுத்துக்கொள்ளுகிறது அதாவது, இரண்டாவது அல்லது சட்டத்தின் சமயச் சார்பற்ற தன்மை மிக அதிகமான கவனம் பெற்றது. இது முதல் தடவையாக அர்த்தசாத்திரத்திலும் மனுஸ்மிருதியிலும் வெளிப்பட்டது. ஆனால், அர்த்த சாத்திரம் அரசின் அமைப்புப்பற்றிய கோட்டின் ஓர் ஆய்வு நூலாக இருக்கிறது. மனுஸ்மிருதியோ ஒரு தர்மசாத்திரமாகும். இதன் பொருள் சட்டமும் கடமையுமாகும்; அதாவது, தர்மமாகும். இருந்தபோதிலும், மனுமிஸ்ருதியின் ஒரு பாதி சமயச் சார்பில்லாச் சட்டப்பற்றயதற்கு ஈடுபடுத்தப்பட்டிருக்கிறது. அரசரின் வளர்ச்சியடைகின்ற தகுதிக்கு இது ஒரு குறிப்பாகும். ஒன்று சமயச் சார்பற்றதாகச் சட்டம் இருந்தால் இதை அரசர் நேர்முகமாகச் செயற்படுத்தலாம்; இரண்டு, சமயச் சார்பற்ற சட்டத்தைச் செய்வதில் அரசர் முழுமையாகத் துணிந்து செயல்படலாம். சட்டத்தின் இத் துறையில், உண்மையில் மிக்கநேர்மையுடன் அரசர் தன் அதிகாரத்தை முழு வல்லமையுள்ளதாகச் செய்துகொள்ளலாம். நாம் முன்னரே கடந்த அதிகாரத்தில் தர்மம், சரித்திரம், வியவகாரம் போன்றவற்றை இணைப்பதற்கு முயன்றதில் இவருடைய முடிவுகள் அல்லது கட்டளைகள் எப்படிச் சட்டங்களின் மூலமாயின என்பதைப் பார்த்தோம். பொதுக் குற்றவியல் வழக்குகளை, தல வழக்காறுகளிலிருந்து எடுத்துக்கொண்ட கருத்துகளுக்கேற்பவும், புனிதச் சட்டத் தொகுப்பிலிருந்து பெற்ற கருத்திற்கேற்பவும் அரசர் முடிவு செய்யவேண்டுமென்று மனு கூறுகிறார்.[148] இதைத் தவிர. தண்ட நீதியால் அல்லது தண்டனைச் சட்டத்தால் சமூக அமைப்பையும், ஒழுக்கநெறி சார்ந்த கடமைகளையும், சமயம் சார்ந்த கடமைகளையும் அரசன் பேணி இணங்கவைக்கவேண்டும். இதற்கென் அரசனுக்குப் பெருமளவு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்க வேண்டும். புத்துயிர்ப்புப் பெற்றுக்கொண்டிருக்கும் பிராமண சமயத்தால்

[148] Manu, Ch. VIII, 3.

இயக்கப்பெற்ற மனு, சிறியவும் பெரியவுமான குற்றங்களுக்கும் தண்டிக்கத்தக்க செயல்களுக்கும் தொடர்ச்சியாகத் தண்டனை களை வகுத்துரைத்தாலும், அரசருக்குரிய தகுதியைக் குறைக் கவும், நீதியின் பன்முகப்படுத்தலின் பரப்பை விரிவாக் கவும் இவை முற்பட்டன. இருப்பினும், பொது வழக்குகளையும் குற்றப் பிரிவு வழக்குகளையும் முடிவுசெய்யும் தகுதி காரணமாகச் சட்டத்தைப் பொறுத்தவரையில் இவருடைய முயற்சித்திறம் உண்மையாகவும் பயனுடையதாகவும் இருந்திருக்க வேண்டும். எனவே, வேதம், சட்டமூலத் தொகுப்பு, நன்மை, மனநிறைவு ஆகியவற்றின் நடத்தை சதாச்சாரம் எதுவென்பதை நிர்ணயிப் பதோ அல்லது அரசரைச் சாரும் நன்மை, மன நிறைவு ஆகிய வற்றின் :போக்கு ஆகிய இந் நான்கு சட்ட மூலங்களை மனு ஏற்றுக்கொண்ட பின்னரோ, இவை அரசரை நீதியின் மூலமாக் கிற்று. ஆகவே சட்டக் கருத்தின்படி பெருமளவு இவரை இறைமை உள்ளவராக்கிற்று.

## குலமரபு சார்ந்த சிலவராட்சி அரசுகள்

இதுகாறும் நாம் முடியரசு நாடுகளைப் பார்த்தோம். இப் பொழுது தன்னாட்சிக் குலமரபுக் குழுக்களின் அரசாங்க ஆய்விற்குச் செல்லலாம். பஞ்சாபின் தென்பகுதியில் இருந்த யவ்தேயர்களின் கூட்டுக் குழு, இராஜபுதனத்தில் பாரத்பூரும் அல்வார் அரசுகளும் இப்பொழுது இருக்கின்ற மண்டலங்களில் ஆர்ஜுனயனர்களும் (Arjunayanas), பஞ்சாபின் குருதாஸ்பூர் மாவட்டத்தில் உதும்பாரர்களும் (Udumbaras), காங்ரா மாவட்டத்தின் கூலு பள்ளத்தாக்கில் குலுதர்களும் (Kulutas), சட்லெஜ் நாட்டில் குனின்தர்களும் (Kunindas) வசித்த இடங்கள் இவைகளாகும்.[149] இவர்கள் இங்கு இருந்ததற்கு இவர்கள் வெளியிட்ட நாணயங்கள்மட்டுமே சான்று. இவைகள் கி.மு. முதல் நூற்றாண்டிலிருந்து கி.பி. இரண்டாம் நூற்றாண்டுவரை பரவிக்கிடந்தன. ஏறத்தாழ கி.மு. முதல் நூற்றாண்டில் ஆர்ஜு னயனர்கள் நாணயங்களை வெளியிட்டனர். 'ராஜன்ய நாடு' (Rajanya Country) என்ற வெறும் சொற்களோடு நாணயங்களை வெளியிட்ட மற்ற அரசுகள் இராஜபுதனத்தில் இருந்தன. குலுத்தர், குனின்தர், உதும்பாரர் ஆகியோரின் நாணயங்கள் கி.பி. முதல் நூற்றாண்டு, இரண்டாம் நூற்றாண்டைச் சேர்ந்தன வாகத் தேதியிடலாம். இவ்வினங்கள் எல்லாம் கணங்கள்(Ganas) என்ற பொதுவான வகையைச் சேர்ந்தவர்களாக இருக்கலாம்; இவைகளில் இன்னும் சிலவற்றை மகாபாரதம் குறிப்பிடுகிறது.

[149] C.H.I. p. 523—29.

யாதவர், சுகுரர் (Kukuras), அந்தகர் (Andhakas), விருஷ்ணி (Urusnis), போஜர் (Bhojas),[150] சிபிஸ் (Sibis), அம்பஸ்தர் (Ambhasthas), சூத்ரகர் (Ksudrakas), மாளவரும்[151] திரிகர்த்தரும்[152] இவைகளாகும். இவைகளன்றி இன்னும் மற்றப் பல இனங்களும் குறிப்பிடப்படுகின்றன. ஆனால், இவைகளில் மாளவர்களும்[153] சிபியர்களும் (Sibis) மட்டுமே நாணயங்களைப் பெற்றிருந்தனர். சிபியர்[153] மத்திய மீகா அல்லது சித்தூரில் வசித்தனர். இந்த இனங்களின் கூட்டுக் குழுவொன்று விருஷ்ணி, போஜர்களைக் கொண்ட அந்தகர்களைப்போல் இருந்ததாகத் தெரிகிறது.[155] பேரரசுகள் தோன்றி மறைந்தபோதிலும், அலையலையாகப் படையெடுப்புகள் இருந்தபோதிலும், தன்னாட்சி இனங்கள் இருந்திருக்கின்றன என்ற முடிவை இவ் உண்மைகள் குறிப்பிடுகின்றன. 'இவைகளின் மிக வலிமை வாய்ந்த இனங்கள் அடுத்திருந்த அரசமரபினருடன், அதாவது, இப்பொழுது பெரும்பாலும் சித்தியர்களுடன் அடிக்கடி மோதின.'[156] சித்தியப் படையெடுப்பாளர்கள் இந்த இனங்களின் சுதந்தரத்தை அழிக்கமுடியவில்லை என்றாலும், இவர்களின் நெருக்கம் இந்த இனங்களை வட இந்தியாவின் மேற்கு, தெற்கு ஓரங்களில் சென்று தங்க வலியுறுத்தினர். விருஷ்ணிகள் மதுராவிலிருந்து துவாரகைக்குக் குடிபெயர்ந்த கதையில்[157] இவ்வுண்மை பொதிந்துள்ளது. இக்காலத்திய குடியரசுகள் குப்தர்கள் காலம்வரை தம் அதிகாரத்தைத் தக்கவைத்துக்கொண்டிருந்தனர்.

## குலமரபு அரசுகளின் அரசாங்கம்

குடியரசு இனங்களின் அரசாங்கம்பற்றிப் போதிய தகவல் கிடைக்கவில்லை. அந்தக விருஷ்ணிகள் தம் சொந்தக் காரியங்களை எவ்வாறு நடத்தினார்கள் என்பதற்கு மகாபாரதம் சில தகவல்களை அளிக்கிறது. இவர்கள் சுதர்மா (Sudharma) என்ற ஒரு மன்றத்தைப் பெற்றிருந்தனர். முக்கியமான சமயங்களில் இவர்கள்

150 Mbh., Santi Parva. Ch. LXXXI, 29.

151 Mbh., Sabha Parva, Ch. LII.

152 Mbh., Sabha Parva, Ch. XXXII.

153 Catalogue of Coins in the Indian Museum, Calcutta by Smith pp. 170—74—The Legends are—

(a) Malavanam jaya, (b) Malava jaya. (c) Malava Ganasya etc.

154 Arch., Ins. Re., Vol. XIV, p. 146. The legend is Majhimikaya-sivi jana padasa.

155 Mbh., Adi. Ch. CC. XX.

156 Raichauduri, Op. cit., p. 322.

157 Mbh., Sabha Parva, Ch. XIV, 48–56.

இங்குக் கூடி எடுக்கவேண்டிய நடவடிக்கைபற்றி விவாதித்தனர்.[158] சபாபாலா (Sabhapala) என்ற ஒரு செயலாளர் அல்லது கட்டுப்பாட்டதிகாரி ஒருவர் இருந்தார். தக்க சமயங்களில் இவர் சபையைக் கூட்டினார். ஒவ்வொருவரும் தன் கருத்தை வெளியிடலாம்; கருத்தை வெளியிடுகின்றவர்களின் அறிவும் மெய்ப்பிக்கும் திறமுமே நிலவும் ஒரு சமயத்தில் தலைவராக இருந்த கிருஷ்ணனின் கருத்தை மதிப்புடன் கேட்டனர்.[159] இவர்களுக்குள் பல தலைவர்களும் முதியவர்களும் (Gana-Mukhyas) கணமுக்கியர் இருந்தனர்; இவர்களில் ஒருவராகிய[160] அக்குரூரா (Akrura) என்பவர் சேனைத் தலைவராக இருந்தார்.[161] ஒரே சமயத்தில் கிருஷ்ணனுக்கும் பாப்ரு உக்ரசேனனுக்கும் இடையில் நடந்தபோட்டியைப்போலப் பலகட்சிகளும் கட்சித்தலைவர்களும் அதிகாரத்திற்காகப் போட்டியிட்டனர்.[162] ஆட்சி முறையைப் பொறுத்தவரையில் சாத்திரங்களுக்கேற்ப[163]முறைப்படியமைந்த சட்டமுறை, ஒழுங்கான ஒற்றர்முறை, நேர்மையான உள்நாட்டு வெளிநாட்டுக் கொள்கைகளைப் பின்பற்றல், நிறைந்த கருவூலம்[164] ஆகியவைகள் எப்பொழுதும் நிலைநாட்டப்பெறவேண்டுமென்று வலியுறுத்தப்பட்டது. ஆட்சி ஒழுங்கை அடைய யுக்தர்களைப்(Yuktas) போல் உரமிக்க, சுறுசுறுப்பான, கடமைமிசுகவர்களைப்பதவியில அமர்த்தவேண்டும். இவர்களுக்கு மக்கள் அடங்கி நடக்கவேண்டும்[165] முதியவர்கள் சபையில் கூடி முடிவுசெய்த அரசாங்கக்கொள்கைக்குக் கணத்தின் தலைவர் பொறுப்புடையவர்[166] அரசாங்க அதிகாரிகளுக்குப் பணிவதுபோல் இம் முதியவர்களுக்கும் பணியவேண்டும். மகிழ்ச்சிக்குரியதாக இல்லை எனினும், இது குலமரபுசான்ற குடியரசாக இருந்தது. மோரியக் காலத்தில் நாம் கண்ட குலமரபுக் குடியரசுகளிலிருந்து இது மேம்பட்டதாகத் தோன்றவில்லை. கிரேக்கர்களைப்போல் இவர்கள் சூழ்நிலையாலும் மனப்போக்காலும் தம் அரசியலமைப்புகளில் சோதனை செய்யமுடியாதவர்களாக இருந்தனர். பல நூற்றாண்டுகளுக்குப் பின் தம் அரசியல் நிலை முற்றிலும் அகலும்வரை தொடர்ந்திருந்துவந்தனர்.

158 Mbh., Adi Parva, Ch. CCXLIV.
159 Ibid., Chs. CCXLIV & CCXLV.
160 Ibid., Chs. CCXXXIX & CCXLIII.
161 Ibid., Ch. CCXLIV.
162 Ibid., Santi Parva, Ch. LXXXI.
163 Dharmistan Vyvaharamsca Sthapayntasca Sastratah.
164 Santi Parva, Ch. CVII, 17, Sloka 19.
165 Ibid., Sloka 20.
166 Ibid. Sloka 24 & 25.

## அரசமைப்பின் தன்மை

இக் காலத்தில் பேரரசின் இணைந்த பகுதியாக பல சிறு நாடுகளும் குலமரபுக் குடியரசுகளும் இருந்தமையால், இவைகளுக்கிடையேயான உறவுகள்பற்றி ஒன்றும் சொல்வதற்கில்லை. சுங்கப் பேரரசில் அஹிசாட்ரா, பார்ஹட், மதுரா[167] போன்ற குறுநில மன்னர்களால் ஆளப்பட்ட முடியரசுகளும், மாளவம், இராஜபுதனம்போன்ற குலமரபுக் குடியரசுகளும் இருந்தன.[168] வாகாடகர் பேரரசில் கோசலத்தின் மேகர் (Meghas), பேரரின் நளர், குலமரபு அரசுகளாகிய ஆபிராஸ் (Abiras) புஷ்யமித்திரர் ஆகிய ஆட்சி செய்துகொண்டிருந்த முடியரசுகளும் இருந்தன. காரவேலனின் பேரரசிலும், மாவட்ட, தலத் தலைவர்கள், ரதிகர் (Rathikas), போஜகர் போன்றோர் பலர் இருந்தனர்.[169] ஒரு பேரரசுடன் திறைசெலுத்தும் குறுநில மன்னர் பலர் இணங்கியிருக்கும் இத் தோற்றம், நிலமானிய முறையை அறிஞர்கள் சுட்டியுணர்த்தத் தூண்டியது.[170] இடைக்கால ஐரோப்பிய வரலாற்றிலிருந்து பெற்ற இணையொப்பில் உண்மை இல்லாதிருப்பது தெளிவு. இக் காலத்தின் அரசியலமைப்புபற்றி இந்த இணையொப்பு உண்மையை நையாண்டி செய்ய முற்படுகிறது. இதை ஏற்பதற்கான எதிர்ப்பு நிலமானிய முறையின் தன்மையிலிருந்து எழுகிறது. இடைக்கால ஐரோப்பாவில் நிலமானிய முறை ஓர் அரசாங்க முறையாக மட்டுமன்றிச் சமுதாய அமைப்பாகவும் இருந்தது. நிலமானிய முறையின் அடிப்படையாக இருந்த நிலக்குத்தகை முறை அரசியல் உறவை மட்டும் கட்டுப்படுத்தாமல் மக்களின் சமூகத் தனிமதிப்பு நிலையையும் ஒழுங்குபடுத்தியது. சாதிமுறையில் கட்டுப்படுத்தப்பட்ட சமூகத் தன்மதிப்பு நிலை நிலக்குத்தகை முறையைக் கருத்தில் கொள்ளாமல் இக் கருத்துகளை இந்திய நிலையில் புகுத்துவது உண்மையைத் தவறாகப் பொருள் செய்வதாகும்.

ஆகவே, இக் காலத்தில் இந்தியாவில் இருந்த முறை நிலமானிய முறையையொட்டி இருக்கவில்லை; ஆனால், திக் விஜயத்தின் மீதும், வெல்திறத்தின் மீதும் அமைக்கப்பெற்ற பேரரசுமுறையெனக் கொள்ளலாம். இந்த முறையை கௌடில்லியர் மண்டலமென்றார் (Bk. VI. Ch. I). ஏனெனில், இது திறை செலுத்தும் தலைவர்களைக் கொண்டிருந்தது. பழைய காலத்திய இந்தியப் பேரரசின் பண்பை விளக்க இது ஒரு சிறந்த சொல்லாகும். சக்ரா

167 C.H.I., pp. 523–25.
168 Ibid., p. 528.
169 Luder's List, No. 1345.
170 Beni Prasad, 'The States in Ancient India', pp. 223.

(Cakra) எனப்பட்டதை நாம் திறை செலுத்துகிற நாட்டு முறை எயன மொழிபெயர்த்துக்கொள்ளலாம். இம் மண்டலத்தின் தலைவராக அரசர் உயர் தலைவராக இருந்தார்; அதாவது, சக்கர வர்த்திக்கும் திறை செலுத்தும் அரசர்களுக்குமிடையில், ஐரோப் பாவில் பிரபுவிற்கும் கீழாளுக்குமிடையில் நெறிமுறைக் கடப் பாடு எதுவுமில்லை. இக் கடப்பாடு 'மானியத்துட் படுத்தும்' கொள்கை அடிப்படையில் அமைந்ததாகும். அரசின் இந் நிலை பற்றி இதிகாசங்கள், கல்வெட்டுகள், நாணயங்கள் ஆகியவை இதை அப்படியே சித்திரிக்கின்றன. திக்விஜயம்பற்றி மகா பாரதத்தில் அடிக்கடி குறிப்புகள் வருகின்றன. இதன் விளைவாக சுதந்தர மன்னர்கள் வெற்றி கொள்ளப்பெற்றுத் திறைசெலுத்து பவர்களாக மாற்றப்பெற்றனர். எனவே, வெற்றியாளர் ஓர் உயர் தலைமையைப் பெறுகிறார். விழாக் காலங்களில் உயர் தலைவரோடு இவர்கள் உடனிருக்கவேண்டும்; போர்க்காலத்தில் இருவருக்கு இவர்கள் இராணுவ சேவை புரிதல் வேண்டும். இக் குறைபாடுகளைத் தவிர இவர்கள் தம் நாடுகளில் சுதந்தர மாக இருந்து இறைமையோடு ஆட்சி செலுத்தினர். உயர் தலைவருக்கு அடங்கியிருக்க இத் திசை மன்னர்கள்மீது வேறெந்தக் கட்டுப்பாடும் விதிக்கப்பெறவில்லை. இவர்களின் வலிமையைக் குறைக்க எந்த முயற்சியும் செய்யப்படவில்லை. இவர்களுடைய வெளிநாட்டுக் கொள்கையில் கட்டுப்பாடு இல்லை. ஒருவர்மீதான மற்றொருவரின் வெற்றி மீதல்லாமல் உண்மையில் உயர் தலைவருக்கும் கீழாளுக்கும் வேறுபாடு இல்லை. எனவே, இதுவரை சாமந்தாக (Samanta) அல்லது திறையரச ராக இருந்தவர், வலிமையையும் வெல்திறத்தையும் மிக நுட்ப மாக இணைத்து ஒரு திக்விஜயம் செய்தால், அதாவது, நாடுகளைக் கைப்பற்றினால் இவர் உயர் தலைவராகலாம். உண்மையில் ஓர் அரசர் அடையக்கூடிய மிக உயர்ந்த அரசியல் பெருமை இத் திக் விஜயமாகும். இதுதான் ஓர் அரசரை உயர் தலைவராகவும் திறை செலுத்துபவராகவும் செய்தது. ஆகவே, 'காலத்தில் நிலவிய ஒருவகையான நிலமானிய முறையாகாது,[171] ஆனால், அக்கால வழக்கின்படி உயர் தலைமையை அடைய இது ஒரு போக் காக இருந்தது; அக் காலத்திய அரசியல் அமைதியின்மையின் இணைந்ததாக இது இருந்தது.' பாண்டு, ஜாரசந்தா,[173] அர்ஜுனன்[174] ஆகியோர் பலரின் திக்விஜயங்கள் பற்றிய வருணனையை மகாபாரதம் வைத்துப் பேணியுள்ளது.

171 Beni Prasad, 'The State in Ancient India'.

172 Mbh., Adi Parva, cxii.

173 Mbh., Sabha Parva, xiv.

174 Mbh., Sabha Parva, XXVI–XXX.

சாமந்தர் அல்லது திறையரசரைப் பேரரசர் நடத்திய விதத்தைப் பொறுத்தவரையில் தன்னுடைய வீரத்தைக் காட்டி க்ஷத்திரியர் மற்றவர்களைத் தம் அதிகாரத்தின்கீழ்க் கொண்டு வந்தபின் தான் விரும்பும் விதம் அவர்களை நடத்தவேண்டுமென்பதும் ஜராசந்தர் எடுத்து விளக்கிய கோட்பாடாகும்.[175] எனவே, வென்றவர்களையெல்லாம் உருத்திரனுக்குப் பலியிட ஒன்று திரட்டியதாகச் சொல்லப்படுகிறது. யுதிட்டிரர், தம் உயர் தலைமையின் அடையாளமாக ராஜசூய வேள்வி நடத்திய பொழுது, வெற்றிகொண்ட அரசர்கள் எல்லாத் திசைகளிலுமிருந்து வந்து பரிசுகள் வழங்கி மரியாதை தெரிவித்துக்கொண்டனர்.[176] இதேபோன்றதொரு திக்விஜயத்தைக் காரவேலன் மேற்கொண்டதாகச் சொல்லப்படுகிறது. இவர் தென்னாட்டு, வடநாட்டு அரசர்களின்மீது கொண்ட வெற்றிகளையும் தம் கல்வெட்டுகளில் குறிப்பிடுகிறார்.[177] உயர் தலைமைக்கும் குடியான் தலைமைக்கும் உள்ள வேறுபாடு எவ்வளவு அற்பமானதென்பதை அசோகனின்கீழ்த் திறை செலுத்தும் மன்னர்களாக இருந்த ஆந்திரர்களின் எழுச்சி காட்டுகிறது. அசோகனின் மரணத்திற்குப் பிறகு சிறிது காலத்திற்குள் அன்னோர் உயர் தலைமைப் பதவியை அடைந்தனர். இத் திக்விஜயப் பேராரவத்தில் புஷ்யமித்திர சுங்கரும் மூழ்கி, உயர் தலைமையின் ஒரு சின்னமாக அசுவமேத வேள்வியொன்று நடத்தினார். ஆந்திர சாதவாகனர்களும், மற்ற வேள்விகளோடு குறைந்தது இரண்டு தடவைகளாவது அசுவமேத யாகம் செய்து இதேபோன்ற பெருமையை, பெற்றுவிட்டதாகக் கூறிக்கொண்டனர்.[178] ஆனால், அப்பொழுது நிலவிய அரசியல் அதிகாரத்திற்கு அறைகூவலாக இருந்த இத் திக்விஜயத்தின் உண்மை, ஒரு குறிப்பிட்ட எல்லைக்கப்பால் இவைகள் மேற்கொள்ளப்படவில்லையெனத் தெரிகிறது.[179]

எடுத்துக்காட்டாக, சுங்கர்களின் அரசர்கள் சாமந்தர்களைப் பற்றி இப்பொழுது நாணயங்களும் கல்வெட்டுகளும் ஒரு கருத்தைத் தெரிவிக்கின்றன. வத்ச அரசியின்[180] மகனாகிய தனபூதி வச்சிபுத்திரர் (Dhanabhuti Vachiputra) பார்ஹத் (Bharhat)

[175] Mbh., Sabha Parva, xxii—28.

[176] Ibid., Ch. LI & LII.

[177] Luder's List, No. 1345.

[178] Nanaghat Inscription No. 1112; Indian Antiquary, XLVI, II, p. 77; R. G. Bhandarkar in the J.B.B.R.A.S., XIII. p. 311.

[179] C.H.I., p. 536.

[180] His name occurs in an Inscription (No. 687) on one of the two gateways of Bharhut, dated in the sovereignty of the Sungas.'

குலத்து அரசரின் மகனும், கௌசாம்பியின் அரசர்களும், அஹிசத்ரா (Ahichatra) அரசர்களும். சுங்கர்களின் மேலாதிக்கத்தை ஏற்றுக்கொண்டனர்.[181] மதுரையை ஆண்ட அரசர்களும் சுங்கர்களுக்குத் திறை செலுத்தினர். கல்வெட்டு நாணயச் சான்றுகளின்மையால், கோசலம், விதேகம், காசி, மகதம் ஆகிய நாடுகள் சுங்கர்களுக்குக் கீழ்படிந்தவரா இல்லையா என்பதை வலியுறுத்துவது கடினமாகும். தெற்கில் சாதவாகனர்களும் கலிங்கத்தின் காரவேலனும் தமக்குத் திறைசெலுத்தும் அரசர்கள் இருந்தனரென்று பெருமையோடு கூறிக்கொண்டனர். வெளியார்களில் யவன அல்லது இந்தியாவின் கிரேக்க அரசர்கள், அதாவது, டெமட்ரியஸ், அப்போடோரஸ், மினண்டர் ஆகியோருக்கும்பின் வந்தவர்கள் நீண்டகாலமோ, பரந்த நாட்டையோ ஆளவில்லை. ஆகையால், இவர்களுக்குத் திறை செலுத்தும் மன்னர்கள் பலரில்லை. மறுபுறம், சித்தியர், பார்த்தியர், குஷாணர் ஆகியோர் தம் பரந்த நாட்டைப்பற்றியும், திறைமுறை அரசமைப்புபற்றியும் ஐயப்பாட்டிற்கிடனில்லாமல் சில சான்றுகளை விட்டுச் சென்றுள்ளனர். சித்திய முதலாம் அஜிஸ்ஸும் அஜிலிஸெஸ்ஸும் 'அரசர்களின் பேரரசர்' என்ற பட்டத்தைப் பெற்றிருந்தனர். பார்த்திப அரசர் வோனோனிஸ்ஸும் 'அரசர்களின் பேரரசர்' என்ற இதே பேரரசப் பட்டப் பெயரைப் பெற்றிருந்தார்.[182] மாவூக்களின் (Maues) கீழ் க்ஷத்திரபர் அல்லது மகாக்ஷத்திரபர் என்ற இருவகையான ஆளுநர்கள் இருந்தனர்.[183] கனிஷ்கனுக்குரியதென்று சொல்லப்படுகிற சூய்பிஹார் செப்புத் தகடு, 'பேரரசர், அரசரில் தலையாய அரசர்' என்னும் சொற்களைக் கொண்டிருக்கிறது[184] திறைசெலுத்து முறையொன்று இந்தியா முழுவதும் இருந்தது என்பதை இவைகள் உறுதிப்படுத்துகின்றன. மேலதிபருக்கு இந்த சமந்தர்களின் பற்றுறுதி தெரியாத ஓர் அளவாகும்.[185] ஆனால், இந்த உண்மைக்கப்பால், இந்த முறையில் வெளியார் ஒரு புதிய கூறுபாட்டைப் புகுத்தினர். இந்த முறையில் அமைந்த உறுப்பினர்கள், க்ஷத்திரபர், மகாக்ஷத்திரபர், அல்லது அரசர், பேரரசர், அரசர்களின் தலைமையான பேரரசர் போன்ற பல்வேறு புதிய கூறுபாடு, திறைமன்னர்களின் ஒருபடிநிலை அமைப்பு இருந்திருக்கலாம் என்ற முடிவை இது குறிப்பிடுகிறது. இப்படி நிலை அமைப்பானது இந்திய அரசியல் முறைக்கு வெளியார் அளித்த

[181] C.H.I., pp. 524—25. [182] C.H.I. pp. 572—75.
[183] Taxila Copper plate and Lion Capital of Mathura; Cor. Ins. Ind. Vol. II, Part I. p. 29; et seq.
[184] Ibid., p. 77.
[185] C.H.I., p. 580.

ஒரு கொடையாகும். இதற்கு முன் இத்தகைய படிநிலை அமைப்பை நாம் கண்டதில்லை. கௌடில்லியரோ, மனுவோ, இதிகாசங்களோ இதுவரை குறிப்பிடப்படவில்லை. அரசர்களைக் குடியாள் என்றும், உபதலைவர் என்றும், அல்லது அர்த்த சாத்திரம் குறிப்பிடுவதுபோல் வெற்றியாளர் என்றும், வெற்றி கொள்ளப்பெற்றவர் என்றும் படித்தரம் செய்துள்ளதை மட்டுமே இந்திய இலக்கியம் குறிப்பிடுகிறது. இக் காலத் தின்போது அல்லது பின்னர்தான் வெற்றிகொண்டவர்களின் படித்தரம் அல்லது சாமந்தத் தலைவர்களின் படித்தரம்பற்றிக் குறிப்பிடப்பட்டிருக்கிறது.

ஆகையால், இக் காலம் பிராமண சமயத்தின் புத்துயிர்ப்பைக் கண்டது! இப் புத்துயிர்ப்பு ஒப்பீடு சேர்ந்ததாகும். புத்த, சமண மதங்களைப் போன்ற சமயங்களின் எதிர்ப்பை இது பெற்றதால் சமய வேறுபாடுகள் மிகையாகின. மோரியப் பேரரசின் சிதைவிற்குப் பிந்திய காலத்திலும் வெளிநாட்டாரின் தாக்குதலின் விளைவாலும் எழுந்த அரசுகளின் செயற்பாடுகளைச் சமயப்பகைமை பாதித்தது. தல நலன்கள் தலைதூக்கி நின்றதைப் பல சிறிய அரசுகளின் தோற்றத்தில் காணலாம். அரசுகளுக் கிடையேயானவுறவுகளில் இவை மோதலைத்தொடக்கிவைத்தன. உள்நாட்டு அரசருக்கும் வெளிநாட்டினருக்கும் இடையில் மோதல் உச்சநிலையை அடைந்தது. ஏனெனில், வெளிநாட்டினர் பிராமண சமயத்தை எதிர்த்தனர். உள்நாட்டினர் பிராமண சமயத்துடனும் அதன் சமூக முறையுடனும் நட்புக்கொண் டிருந்தனர். அதாவது, சமயத்தின் நலன்களும் அரசனின் நலன்களும் இங்கு இணைந்தன. அரசின் அதிகாரம் அரச னுடன் குவிந்திருக்கவேண்டும்; ஏனெனில், சமயத்தையும் சமூக அமைப்பையும் பயனுள்ள முறையில் பாதுகாப்பதற்கு இது பயன்படுத்தப்படவேண்டும். இந்தப் போக்கு கோளுட் சியை வழிபடுவதில் வந்து நின்றது. அரசர் மனித உருக் கொண்ட கடவுளானார். வெளியாரின் அரசியல் வழக்கத்தி லிருந்தும் இந்த மனப்பான்மை ஆதரவு பெற்றது; இது இறுதி யில் அரசர்களின் இறையுரிமையாகவும் தோன்றியது. சிறுசிறு முடியரசுகளின் எழுச்சியும், இவைகளுக்கிடையேயான பூசல் களும் திக்விஜயத்தின் உருப்பெற்றன; ஒருசில பகுதிகளின் மீதான வெற்றி, திறை செலுத்தும் முறையை அல்லது மண்டல முறையை ஆதரித்தது; வலிமை குன்றிய வெற்றிகொள்ளப் பெற்ற தலைகள்மீது படை வலிமையால் உயர்தலைவர் தம் மேலதி காரத்தைப் புகுத்தியதும் அரசர்களின் இறை உரிமையில் அடங்கியிருந்தன. இந்தியாவின் பல்வேறு பகுதிகளில் பல்வேறு

குலங்களின்கீழ் இத்தகைய முறை தோன்றி மறைந்தன. அரசரின் தெய்வீக உரிமையின் வளர்ச்சியும், அதாவது, உபதலைவருக்குக் குடியாட்கள் பெயரளவில் கீழ்ப்பட்டிருக்கும் திறை செலுத்தும் முறையாகிய மண்டல வளர்ச்சியும், இந்தக் காலத்தின் இரு கூறுபாடுகளாகும். இத்துடன் மற்றொன்றும் சேர்த்துக்கொள்ளப்பெற்றது. இது அப்பொழுதிருந்த குலமரபுக் குடியரசுகளாகும். அரசு ஓர் அமைப்பெனப் பெற்ற பெருமை அரசனின் வழியாக இப்பொழுது வெளியாயிற்று. ஏனெனில், சமூக அமைப்புகளையும் நெறிமுறைகளையும் ஆதரிப்பவராகவும், தண்டனைச் சட்டத்தைச் செயல்படுத்துபவராகவும் அரசர் கருதப்பட்டார். வேறு சொற்களில் சொல்லவேண்டுமென்றால், அரசர் முடியரசின் தலைவராகவும் சமயக் காவலராகவும் மாறினார். இவர் நீதியின் ஊற்று. இவருடைய சட்ட இறைமைக்குத் தர்ம சாத்திரங்களின் விதிகள்தாம் வரையறையாக இருந்தபோதிலும், இவர் தண்டனைச் சட்டத்தைச் செயல்படுத்துபவரர்கவும், தர்மப் பிரவர்த்தகராகவும், அக் காலத்தை உருவாக்கியவராகவும், மனித உருவில் உள்ள இக் கடவுளின் கட்டளைகளை மீறலாகாதாகையாலும் இவரது இறைமை உண்மையாகவும் பயனுடையதாகவும் இருந்தது.

# 7. அரசரின் இறைமை

(கி.பி. 300—700)

## சமூக இளமை மீட்பும் முன்னேற்றமும்

அயல்நாட்டுக் குலங்களின் 'நிலையற்றதும் கடுமையாக வாதிக்கப்பட்டதுமான' வரலாற்றிலிருந்து குப்தர்களின் ஒப்பீட்டிற்குரிய வீறமைதி சார்ந்த காலத்திற்கு ஒரு சுமைத்தணிவு உணர்வோடு ஒருவர் செல்கிறார். குப்தர்களின் காலத்தைப் 'பரந்த பொருளில் கி.பி. 320-லிருந்து அல்லது முழுமையாகக் கி.பி. 300-லிருந்து கி.பி. 647 அல்லது ஏழாம் நூற்றாண்டின் இடைப்பகுதிவரை நீளுகிறது'.[1] முன்னூற்று ஐம்பது ஆண்டுகொண்ட இக் காலம் பல வழிகளில் இந்திய வரலாற்றில் ஒரு திரும்புகட்டமாக அமைகிறது. இதன் முதற்பகுதி (கி.பி. 320-450) 'குப்தர்களின் பொற்காலமென வழங்கப் பெறுகிறது'. வலிமை மிக்க குப்தர்களின் பரந்த வெற்றிகளின் விளைவாக அமைந்த பேரரசும், 'சமய ஒறுப்பின்றிச் சமயத்தில் ஏற்பட்ட படிப்படியான மாற்றங்களும்,' இலக்கியம், கலை, அறிவியல் ஆகியவற்றின் மிக உயர்ந்த நிலை வளர்ச்சியும், மென்மையுடன் திறமை சேர்ந்த ஆட்சியும், பொதுவாக மக்களின் செழுமையான நிலையும் முற்கால இந்தியாவின் இயல்பு கடந்த புகழ்சான்ற காலமென்பதை மெய்ப்பிக்கின்றன. இருப்பினும், இக்காலத்தின் இரண்டாம் பகுதி இறுதியில், ஹர்ஷனின் பேரரசின் மிளிர்வு குப்தர்களின் புகழை நினைவுபடுத்தினாலும், (இக்காலம்) அவ்வளவு புகழுக்குரியதன்று. ஆனால், வெளிநாட்டுத் தாக்குதலின் துயர்களாலும், தொல்லைகளாலும், இதற்குமுன் நிகழ்ந்த குப்தர்களின் அழிவாலும் இது தடைப்பட்டது. ஹூணர்களின் உட்பாய்வு பேரிடர்களை உண்டாக்கிற்று. இது பேரரசு அமைப்பையே அசைத்தது. சிறிதுசிறிதாகப் பேரரசும் வீழ்ச்சியுற்றது.

[1] Smith, 'Oxford History of India', p. 147.

இதனுடைய சிதைவுகளிலிருந்து சிறிய முடியரசுகள் எழுந்தன. இவைகள் மறுபடியும் போரில் ஆழ்ந்தன. இவைகளில் மிக வலிமை வாய்ந்த அரசுகள்கூட அமைதியாக இருக்க முடியவில்லை. இத்தகைய கூறுகளின்மீதுதான் ஹர்ஷர் தம் பேரரசை எழுப்பினார். இது மிகக் குறைந்த காலமே இருந்ததால், ஓர் அரசியல் சக்தியாக இது இந் நாட்டில் எந்த நிலையான அடையாளத்தையும் விட்டுச் செல்லவில்லை. ஆனால், ஹர்ஷர்தாம் ஹூணர்களை முழுமையாக அடக்கினார். இவர்களுடைய அரசியல் கீழ்ப்படிந்த நிலை பிராமண சமுதாயத்தில் முழுமையாகக் கலப்பதற்கு இஃது ஒரு முன்னோடி நிகழ்ச்சியாக இருந்தது. ஹூணர்கள் தம்முடன் அமைவுற்ற சமயத்தையும் சமூக அமைப்பையும் கொண்டுவரவில்லை. இது இவர்களுடைய கலப்பை விரைவுபடுத்தியது. இருந்தபோதிலும், சாதி நிறைந்த பிராமண சமூகம் வெளிநாட்டு நாகரிகமற்றவர்களை ஏற்றுக்கொள்ள முடிந்தது, இன்னும் உயிர்ப்புடையதாக இருந்ததென்பதற்கு ஒரு சிறந்த சான்றாகும். உண்மையில் இவர்களுடைய கலப்பின் புதிய இரத்த நுழைவால் சமூகம் இளமை மீளப்பெற்றது. இவர்களில் பலர் பழைய க்ஷத்திரிய சாதியில் சேர்த்துக்கொள்ளப் பட்டனர்; இன்னும் பலர் கீழ்ச்சாதிகளில் சேர்த்துக்கொள்ளப் பட்டனர் என்று சொல்லலாம். ஆனால், படையெடுத்துவந்தவர்களில் ஹூணர், கூர்ஜரர், மெய்த்ரகர் ஆகியோரின் கூட்டங்களில் உயர்ந்த சாதியினர் இராஜபுத்திரர்களானார்கள் என்பதற்கும், தாழ்ந்த சாதியினர், கூர்ஜரர், அஹிர்ச், ஜாட்டுகள் ஆகிய குறைந்த மதிப்பு நிலையில் இந்து சாதிகளாக வளர்ச்சியடைந்தனர் என்பதற்கும் சான்று கிடையாது.[2] இத் தாக்குதல்காரர்களிலிருந்து இராஜபுத்திரர்கள் தோன்றினார்கள் என்னும் இக் கூற்றினை, ராய்பகதூர் ஜி.எஸ். ஓஜாதம், இராஜபுதன வரலாற்றில் (History of Rajputana) திறமையோடு மறுத்திருக்கிறார். இருந்தபோதிலும், இதை அடுத்த காலங்களில் வட இந்தியாவின் வரலாற்றில் இராஜபுத்திரர்களின் வீரமும் புகழும் நிறைந்திருந்ததை நாம் நினைக்கும்பொழுது, இவர்கள் சமூகத்தில் ஒரு புதிய உரமேற்றினர் என்பது தெளிவாகிறது. மொத்தத்தில் இக்காலம் பல துறை முன்னேற்றங்களைக் கொண்டிருந்தது. கலையில், இலக்கியத்தில், அறிவியலில் முன்னேற்றமிருந்தது; வணிகமும், வியாபாரமும், வெளிநாட்டுத் தொடர்புகளும் பரவலாக இருந்தன; அரசின் உருவிலும் இயல்பிலும் வளர்ச்சி இருந்தது.

[2] Ibid., p. 173.

## சிதைவின் கடந்தகாலச் சின்னமும் சமயங்களின் தராதரநிலையும்

நாட்டில் இருந்த கடந்த காலத்தின் அரசற்ற நிலையும் சமயப் பகைமையும் விட்டுச்சென்ற அழிவின் சின்னங்களுக்கெதிராகச் சமுதாய முன்னேற்றம் பகட்டாகத் தோன்றுகிறது. செழித் தோங்கியிருந்த இடங்கள் பல அழிந்தொழிந்தன. சமயம் மண் டலப் போக்கில் சென்றது. சமூக உறவு மகிழ்ச்சியாக இல்லை. இதேபோன்ற கருத்தைத்தான் பாஹியானும் யுவான்சுவாங்கும் (Fahien and Hiuentsang) நமக்கு அளிக்கின்றனர்; அதாவது, இவர்கள் ஐந்தாவது ஆருவது நூற்ருண்டில் குறிப்பிட்டது, மிகப் பழைய காலத்தில் தோன்றிய நிலைகள்பற்றிப் பலவாறு பேசப் பயன்படும். மத்திய நாட்டின் மேற்கிலும் வடக்கிலும் உள்ள எல்லாப் பகுதியும், அதாவது, டெல்லி, மதுரா தொடங்கிக் கங்கை நதிப் பள்ளத்தாக்குவரை புத்த சமயத்தை முதன்மை யான சமயமாகப் பெற்றிருந்தது. மதுராவில் 3,000 பௌத்தத் துறவிகளும் '10,000-க்கும் அதிகமான புத்த சமயம்சாராத் துறவி களும்' இருந்தனரென்று பாஹியான் முதல் முறையாகக் குறிப்பிட்டார். ஆனுல், இங்குக்கூட, புத்தசமய நெறி புத்துயிர்ப் படையும் நிலையில் இருக்கிறதென்பது பக்தர்களுக்கு ஒரு சுமைத் தணிவாகும். மணற்பாங்கான பாலைவனங்களுக்கப்பால் உள்ள எல்லா முடியரசுகளும் மேற்கிந்தியாவைச் சேர்ந்ததாகச் சொல்லப்படுகிறது. இந்த நாடுகளின் அரசர்கள் புத்த தர்மத்தை உறுதியாக நம்பினுர்கள்.'[3] பிராமண சமயம் தலை தூக்கி நின்ற மத்திய நாட்டில்கூட மக்கள் புத்த சமய நெறியைப் பின்பற்றினர். ஏனெனில், இவர்கள் 'உயிருள்ளவற்றைக் கொல்வதில்லை; மயக்கமுண்டாக்கும் பானத்தைக் குடிப்பது மில்லை. சண்டாளர்களைத் தவிர இவர்கள் பூண்டையும் வெங்காயத்தையும் உண்பதில்லை.'[4] வைணவத்தின் எழுச்சி யால் மக்களின் இந்த வழக்கம் தோன்றியிருக்கலாம். நாம் முன்னர் குறிப்பிட்டதுபோல், புத்த, பிராமண சமயங்களின் சிறந்த இயல்புகளைத் திரட்டித் தாராள முற்போக்கு வகையைச் சார்ந்த ஒரு புதிய சமயமாக உருவாக்கிய சமயக் கூட்டிணைப்பை வைணவம் கொண்டிருந்தது. இருப்பினும்; 'தீண்டாமை' வளர்ச்சியடைந்துகொண்டிருந்ததாகச் சொல்லப்படுகிறது. வெங்காயத்தையும் பூண்டையும் உண்டு 'மற்றவர்களிடமிருந்து விலகி' வாழ்ந்த சண்டாளர்களும் இருந்தனர். இத்தகைய மனிதன் ஒருவன் நகரில் அல்லது அங்காடியில் நுழைந்தால்,

3 Beal, 'Travels of Fahien and Sung yun,' pp. 53—54.

4 Ibid., p. 55.

தனனைத தனிபபடுததத இவன ஒரு மரததுணடைத தடடுகிறுன, இநத ஒலியைக கேடடு இது எதைக குறிககிறதெனபதை அறிநது, அவனைத தொடுவதையும அவனமேல மோதுவதையும தவிாததனா[5] காசியில பல பௌதத கோபுரஙகளின சிதைவுகளை பாஹியான கணடு குறிபபிடடாா[6] கோசலததின ஒரு காலததில மிகச செழிபபான தலைநகராகிய ஸராவஸதி, மொததமாக ஏறததாழ இருநூறு குடுமபஙகளையும 'ஒருசில குடிமககளை'யும கொணடிருநதது[7] இதனுடைய பல பௌதத கோபுரஙகள நமபிககைசுயறற பிராமணஙகள அழிகக விருமபும பொருமை உணாவைக கொணடிருநதன,[8] ஆனுல, இறைவனின தலையீடடினுல அவைகளால அழிகக முடியவிலலையெனறு பாஹியான கூறுகிருா இனனும மேலே செலலும பொழுது, கபிலவாஸது நகரில 'மககளுமிலலை, அரசாஙகமுமிலலை இது ஒரு பாலைவனமாக இருககிறது' எனபதை இவா கணடாா அஙகு, துறவிகள கூடடமொனறும, ஏறததாழத துறவறமசாராப பததுக குடுமபததினரும இருநதனராம[9] இராஜகிருகததைபபறறிச சொலலுமபொழுது, முறகாலததிய பௌததக கடடடஙகளின சிதைவுகள மடடுமே இருநதன எனறு கூறுகிருா' நகருககுள நடமாடடமுமிலலை, மககளுமிலலை'[10] சாககிய முனிவா புததரான இடமாகிய கயா (Gaya) சிதைவுகளாக இருநதது இதைபபோல, 'நகரின உடபுறமும மனித வாடையறற பாலைவனமாக இருககிறது'[11] தாமரலிபதிககு வநதபொழுதுதான, 'நாடடில புதத நெறி பொதுவாக மதிககபபடுவதைக கணடு மகிழசசியடைநதாா'[12] முரணபாடுகளோடு கூடிய பாஹியானின நாடடு வருணனை, சடலஜிறகும தாமரலிபதிககும இடையிலான பகுதியில பௌதத சமயம அழிநதுகொணடிருநததையும, மேறகிலும வடககிலும அது செழிததுககொணடிருபபதையும குறிபபிடப போதுமானதாகும இதனுடைய தலையாய காரணம வைணவததின எழுசசியாக இருககவேணடுமெனற கருததில இதே கருததைக கடநத அதிகாரததில நாம குறிபபிடடோம கலவெடடுகளின சானறும யுவானசுவாஙகின குறிபபுகளும இதே முடிவைததான குறிபபிடுகினறன குபதாகளைப பரம பாகவதாகளெனறு இக காலததின கலவெடடுகள பதிவு செயகினறன அதாவது, வைணவ பகதாகளெனறு குறிபபிடுகினறன இவாகளில பலா

[5] Ibid, 55
[6] Ibid, p 72
[7] Ibid., p 73
[8] Ibid p 75
[9] Beal, op cit, p 85
[10] Ibid, p 113
[11] Ibid, p 120
[12] Ibid, p 147

விஷ்ணுவை அல்லது சிவனை வழிபட்டனர். காந்தார நாட்டில், 'பெரும்பான்மையினர் மற்றச் சமய நெறிகளையும் ஒருசிலர் புத்த சமயத்தையும் ஏற்றுக்கொண்டிருந்தனர்.'[13] 'ஆயிரத்திற்கும் மேலான புத்த மடங்கள் சிதைந்து காணப்பெற்றன.'[14] உதயணன் நாட்டில் புத்த சமயம் 'உச்ச நிலையில்' இருந்தாலும், தட்சசீலத்தில் இது சிதைந்துவிட்டது.[15] காஷ்மீரில்கூட ஓர் அரசியல் அல்லது குலப்புரட்சியின் பயன், சமயத்தின் மாற்றத்தில் முடிந்தது. புத்த சமயத்தில் நாட்டினர் நம்பிக்கை கொள்ளாமல், மற்றச் சமய உட்பிரிவுகளில் நம்பிக்கை வைத்தனர்.[16] மதுராவில் 'புத்த மடங்கள் பத்துமட்டும்' இருக்கையில் 'நூற்றுக்கணக்கான தேவாலயங்கள் அங்கு இருந்தன.'[17] ஜலந்தாராவில், பௌத்தரல்லாத பாசுபத சமய உட்பிரிவைச் சேர்ந்தவர்கள் ஐந்நூறுக்கு அதிகமாக இருந்தனர். [18] மேலும், பிரயாகையிலும் கோசாம்பியிலும் பௌத்தரல்லாதோர் பலர் இருந்தனர்.[19] பெரும்பாலும் கிழக்கில் எல்லா இடங்களிலும் புத்த சமயம் அழிந்துகொண்டிருந்தது. இந்தப் பகுதியில் பல்வேறு சமயங்களைச் சேர்ந்தவர்கள் வசித்தனர். கலிங்கத்தைப் பொறுத்தவரையில், பல்வேறு சமய உட்பிரிவினர் இருந்தனர். அவருள் பெரும்பாலோர் நிர்கிரந்தர்கள் (Nirgranthas) என்று பயணி குறிப்பிடுகிறார். [20] நிர்கிரந்தர்கள் சமண சமயத்தினர். வடக்கில் புத்த சமயம் மேலும் பின்னோக்கிச் சரிந்துகொண்டிருந்தது. இந்து சமயம் அல்லது வைணவம் நிலைபெற்றுக் கொண்டிருந்தது; சமணம் இருந்தது என்று சொல்வதற்கில்லாமல் இருந்ததுதான் பொதுவான கருத்தாகும். இந்தியாவின் பல சமயங்களின் தராதர நிலை இதுதான்.

## முற்போக்கு நோக்கும் சமயப் பொறையும்

அதனால் இதற்கு முந்திய காலத்திய வாழ்க்கையின் குணவியல்பாக இருந்தவையும் அரசிற்கும் சமயத்திற்கும் இடையில் கூட்டை வளர்த்தவையுமான வைதீகமும் குறுகிய மனப்பான்மையும் மறைய முற்பட்டன. இதற்குப் பதிலாக முற்போக்கும் சமயச் சார்பற்றதுமான ஒரு கருத்து வளர்ச்சியடைந்தது. குப்தப் பேரரசின் எழுச்சியால் இது தோன்றியது. இதன் வலிமையை முற்றும் உணர்ந்துகொண்டு எல்லோருக்கும் சமயப் பொறைக் கொள்கையை அறிவித்து, இதனுடைய முற்போக்கையும், சமயச்

[13] Ibid., p. 199.
[14] Ibid., p. 202.
[15] Ibid., pp. 226, 240.
[16] Ibid., p. 279.
[17] Ibid., p. 286.
[18] Ibid., p. 297.
[19] Ibid., p. 361–66.
[20] Beal, op. cit., Vol. II, p. 198.

சார்பற்ற நிலையையும் இது வெளிப்படுத்தியது. நாட்டின் பல்வேறு சமயங்களில் எது ஒன்றுக்கும் அரசு சிறப்பாதரவு அளிக்க மறுப்பதை இது மிகத் தெளிவாகக் கூறிப்பிடுகிறது. சமய ஒறுப்புக்கு ஒப்பான நிலையொன்று மோரியர் காலத்திய அரசியலில் எப்படி ஏற்பட்டதென்பதை நாம் பார்த்திருக்கிறோம். இது ஒரு கடுமையான எதிர்ப்பைத் தோற்றுவித்தது; இதன் விளைவாக, பிராமண சமயத்திற்கும் புத்த சமயத்திற்குமிடையில் இது ஒருபகைமையாக உருப்பெற்றது. சமயங்களின் இப் பகைமையில் அரசர்களும் அரசாங்கங்களும் தம் ஆற்றலையும் வளங்களையும் ஈடுபடுத்தினர். அரசர் சமய ஆதரவாளராகத் தோன்றினர். ஆனால், குப்தர்களும், பின் ஹர்ஷரும், இன்னும் பல பெரும் புகழடையாத அரசர்களும் இவ்வாறு செய்ய மறுத்தனர். அதாவது, சமய ஆதரவிற்குட்பட மறுத்தனர். எல்லாச் சமயங்களையும் இவர்கள் சமமாக நடத்த முயன்று வெற்றியும் கண்டனர். ஒருவாறு அரசர்களின் இம் மனப்பான்மை அரசின் தனி மதிப்பை வலியுறுத்தியது. முற்காலத்தில்போல் சமயத்தால் இயக்கப்படுவதற்குப் பதிலாக இது சமயத்தை இயக்கியது. இங்குதான் இக் காலத்தின் சிறப்பும் பெருமையும் இருந்தது.

## குப்தப் பேரரசு ஆட்சியின் தன்மை

இந் நோக்கத்தை அடைய இதற்கு முந்திய காலம் தவறவில்லை. சமயத்தை மிகையாக உயர்த்திவிடாமல், அரசியல் சமூக நலன்கள் கட்டுப்பாட்டொருமையை அரசருக்குஅளித்தன. அரசரின் அதிகாரமும் மதிப்புநிலையும் வளர இவைகள் உதவின. ஏனெனில், நாம் முன் பார்த்ததுபோல், அரசர் பூமியில் கடவுளின் அவதாரமாகக் கருதப்பெற்றார். தம் அரசு சிறிதாக அல்லது பெரிதாக இருந்தாலும், தெய்வ உரிமையால் ஆண்ட அரசருக்கு அவரது சொந்தத் தன்மதிப்புநிலையைப் பொறுத்த வரையில், இது வேறுபாடு செய்யவில்லை. அரச அதிகாரத்தின் சார்பில் வரையப்பெற்ற இந்த அரசியற்காட்சியின் பின்னணியோடு, குப்தர்கள் தம் திக்விஜயத்தை, அதாவது, நாடு பிடித்தலைத் தொடங்கினர். திக்விஜயம் நிறைவேறியபின் ஒரு திறமையான அரசாங்கம் அமைந்தபொழுது, வெல்ல முடியாத அதிகாரம் அரசரின் தெய்வீக உரிமையோடு இணைந்தது. இதுதான் குப்தப் பேரரசு ஆட்சியின் தன்மையாகும்.

ஆனால், இவற்றோடு குப்தர்கள் நுண்புலம் மிக்கவர்களாக இருந்தனர். இவர்களுடைய நடைமுறைப் பொதுஅறிவு, ஆட்சியியல் கொள்கையில் சுமுகமான சில மாற்றங்களைப் புகுத்தியது. அரசியல் வளர்ச்சிக்கு இது ஒரு புதிய திருப்பம் அளித்தது. மிக

உயர்ந்த நிலையிலிருந்து ஆட்சி செய்த அசோகன்கூடச் சொந்தக் காழ்ப்பை வெளிப்படுத்தாமல் அரச காரியங்களைச் செய்ய முடிய வில்லை. இவரது அரசாங்கக் கொள்கையும் சமயத்தைப்பற்றிய மனப்போக்கும் புத்த சமயத்து ஆழ்ந்த நம்பிக்கையால் பாதிக்கப்பட்டன. ஆனால், குப்தர்கள் சமயச் சார்பிற்கு அப்பாற்பட்டவர்கள். பல்வேறு சமயங்களைச் சார்ந்தவர்கள் வசித்த பேரரசை ஆள்வதற்கு இவர்கள் சமயச் சார்பிற்கு அப்பாற்பட்டவர்களாக இருக்க வேண்டுமென்பதை அரசியல் நீளறிவோடு கண்டனர். ஏனெனில், சமணத்திற்கெதிராக பிராமண சமயம், புத்த சமயம், வைணவம் அல்லது சைவசமயம் அல்லது இவைகளில் எது ஒன்றுவது மற்றவைகளுக்குச் சார் புடையதாக இருந்தால், அசோகன் காலத்திலும் அவருக்கு முன்னும் நடந்தவைகள் மீளவும் நடந்திருக்கும். அசோகனின் புத்தசமய ஒருசார்புடைமை பொருதுகிற பிராமண சமயத்தின் புத்துயிர்ப்பைத்தவிர்க்க இயலாததாக்கிற்று என்பதைஇவர்கள் அறிவர். ஆகவே, புன்மையற்றதும் சமயச் சார்பற்றதுமான ஒரு முழுமையான சமயப் பற்றற்ற மனப்பான்மையை இவர்கள் பின்பற்றினார்கள் என்பது இக் காலத்தின் தெளிந்த உண்மை யாகும்.

## சமயப் பொறையும் சட்ட உட்கருத்தும்

சமயப் பொறையும் சட்டமும் சமய மனநிறைவின்மையின் காரணங்களை அகற்றியதால், அதிகாரத்தை மையப்படுத்த இந்தக் கொள்கை அரசர்களுக்கு உதவியது. இக் கொள்கையைச் செயல்படுத்துவது நாம் நினைப்பதுபோல் அவ்வளவு எளிதன்று. பிராமண சமயம், புத்த சமயம், சமண சமயம் ஆகியவற்றிற் கிடையில் இருந்த ஒருமைப்பாடு காரணமாக நமக்குத் தெரிந்த நாடுகளில் சமயப் பொறை தேவைப்பட்டதைப்போல் முற்கால இந்தியாவில் தேவைப்படவில்லை. பயனற்ற சடங்குகளை அசோகர் முழுமையாகக் கண்டனம் செய்ததும், அகிம்சையைச் செயல்படுத்தியதும், சடங்கு சார்ந்த சமயத்தையும் விலங்கினைப் பலியிடுவதையும் பின்பற்றுபவர்கள்மீது ஏற்பட்ட விளைவின் முக்கியத்துவத்தை ஒரு மேற்கோள் விளக்கிக் காட்டுகிறது. அசோகர் ஒருபுறமிருக்க, சமயப் பொறையின்மை நிலவிய பொழுது, முற்கால இந்தியாவில் எந்த அரசிலும் உண்மையான ஆட்சியில் இடர்கள் எழுவது திண்ணம். எடுத்துக்காட்டாக, அக்காலத்தில் தர்ம சூத்திரங்களுக்கும் தர்ம சாத்திரங்களுக்கும் ஏற்பச் சட்டத்தையும் நீதியையும் அரசர் செயல்படுத்தவேண்டிய பொழுதும், இவைகள் இரண்டும் பொருள் அடக்கத்தாலும் குணத்தாலும் வைதீக பிராமணக் கருத்துகளை நிறையப் பெற்

றிருந்தால், நீதிமன்றத்தில் ஒரு புத்த சமயத்தினன் அல்லது ஒரு சமணனின் நிலை எதுவாக இருந்திருக்கும்? 'புனித அறிவையும், நாட்டையும் அல்லது சாதியையும் (இத்தகைய) அல்லது தன்னுடைய சமயம் சார்ந்த கடமைகளையும் தன்னால் செய்ய முடியவில்லை என்று மறுக்கிறவனுக்கும் 200 பணங்கள் தண்டம் விதிக்க வேண்டுமென்று விஷ்ணு கூறுவதை எடுத்துக்கொள்ளலாம்.[21] இப்பொழுது அரசர்கள் இந்தச் சட்டத்தைப் பின்பற்றினால் பௌத்தர்களும் சமணர்களும் ஓர் இக்கட்டான நிலையில் இருப்பர். இவர்கள் வேதத்தின் புனித அறிவை மறுக்கின்றனர்; சாதியையும் மறுக்கின்றனர். வேதமும் சாதியும் திறமையையன்றிப் பிறப்பை ஏற்றுக்கொள்ளுகின்றன. இந்து சமயஞ் சாராத மற்றவர்களுக்கு இந்துச்சட்ட முறை எந்த வழிமுறையையும் கூறவில்லை. இந்துச் சட்டத்தை வகுத்தவர்களைப் பொறுத்தவரை, சுருதிக்கும் (Sruthi) சுமிருதிக்கும் (Smrithi) இடையே மோதல் ஏற்பட்டால் சுருதியே நிலைபெறுமென்பது நன்கு அறிந்ததேயாகும்.[22] புனிதச் சமய உரை மூலத்திற்கு முரணாக இல்லாத நாடுகளின் சட்டங்கள், சாதிகள், குடும்பங்கள் ஆகியவை அதிகாரம் பெற்றிருந்தன[23] என்று மேலும் கௌதமர் குறிப்பிட்டார். 'இருபிறப்பாளர்களால் கைவிடப்பட்டவர்களும் நாத்திகர்களும் பெரும் எண்ணிக்கையிலுள்ள சூத்திரர்களின் நாடு விரைவில் முழுமையாக அழிகிறது' என்று மனு குறிப்பிட்டார்'. சட்டத்தைப் பொறுத்தவரையில், நாடுகள், குடும்பங்கள்,சாதிகள் ஆகியவைகளின் வழக்கங்களுக்கு முரணாகா வகையில் பண்பாளர்களாலும், சட்டத்தில் ஈடுபாடு கொண்டிருக்கிற இத்தகைய இருபிறப்பாளர்களாலும் செயல்படுத்தப்பட்டவைகளை அரசர் சட்டமென நிறுவிப் பேணினர்' என்று குறிப்பிட்டார்.[24] இத்தகைய சட்டத்தின் கருத்துகளை பௌத்தர்களும் சமணர்களும் எப்படித் தகுதியெனக் கருதி ஏற்றுக்கொண்டார்கள் என்பதைப் பார்ப்பது கடினமாகும். பௌத்த மதமும் சமண சமயமும் பிராமணர்களின் தலைமையையும் வேதத்தின் மெய்மையையும் எதிர்க்கும் குறிக்கோளோடு தொடங்கின. வேள்விச் சடங்குகளின் புனிதத் தன்மையாலும், பிராமணர்களின் உயர்வு மனப்பான்மையாலும் வேதத்திற்குக் கட்டுப்பட்ட இந்துக் குறிக்கோள்களைக் கொண்டிருந்த சட்டங்களுக்கும் உட்பட்டு ஆட்சி செய்யப்படுவதைவிட பௌத்தர்களுக்கும் சமணர்களுக்கும் வேறெதுவும் மகிழ்ச்சியற்றதாக

[21] Visnu Smriti, tr, Jolly in S. B. E. Vol. II, v. 26.
[22] Rai Bahadur S. Basu in his Introduction to 'Yajnavalkya'.
[23] xi, 20. [24] Manu, viii, 22 & 46.

இருந்திருக்க முடியாது. சட்டத் தொகுப்புகளிலிருந்து நிகழ்ச்சிகளைப் பெருக்கலாம். ஆனால், இந்துச் சட்டத்தின் கருத்து பௌத்த சமண சமயங்களின் உணர்வுகளுக்கு எதிரானதென்று சொன்னால் போதும். ஆகவே, இதனால்தான் சமயப் பொறைக்கான தேவை மிகப் பெரியதாக இருக்கிறது; ஏனெனில், சட்டத்தின் அதிகாரத்தைக் குலைத்துவிடாமல், கடினமான சூழ்நிலைகளில் சட்டம் வகுத்துரைப்பதைத் தளர்த்திக்கொள்ளச் செய்வது அரசர், அரசாங்கம் ஆகியவற்றின் பொறையுணர்வேயாகும். இப்பொழுது இங்குதான் சமயப் பொறை ஆட்சி இயலைப் பாதித்தது. சமயம், வேதம் ஆகியவற்றின் அதிகாரத்தைப் பெற்றிருந்த சட்டத்தை எவ்வளவு தூரம் குப்தர்கள் பயன்படுத்தினார்கள் என்பது ஒரு சிக்கலான பிரச்சினையாகும். சட்டம் தானாகவே பொருளிலும் குணத்திலும் மாறிக்கொண்டிருக்கவில்லை யென்றால், இவர்களுடைய எல்லா அதிகாரத்தால் கூட ஏற்புடைய இந்துச் சட்டத்தின் கருத்துகளையும் உணர்வையும் பெற்றிருக்க முடியாதென்று வலியுறுத்திக் கூறலாம்.

## சட்டத்தின் பொருளும் குணவியல்பும்

அரசர் சமயச் சார்புடைமையையும் சமயப் பொறையின்மையையும் ஒரு கொள்கையாகப் பின்பற்றினால், சமூக நலன் நினைக்க முடியாததொன்றாக உணரப்பெற்றது; அரசர் செயல்படுத்திய சட்டம் இதனுடைய சமயக் கூறுகளினின்று விடுபட்டிருக்க வேண்டுமென்ற எண்ணம் தோன்றியது. இக் காலத்தில் தொகுக்கப் பெற்ற சட்டத் தொகுப்புகளின் பொருளோடும் குணவியல்போடும் கடந்த காலத்திய தொகுப்புகளை ஒப்பிடும்பொழுது இது தெரிந்தது. இக்காலத்தில் தொகுக்கப்பெற்றவை மனுவின் பெயரில் தர்மசாத்திரமென்றும், முன்காலத்திய தர்மசூத்திரமென்ற பெயரிலும் இருக்கிறது. இவைகள் இரண்டிற்குமிடையில் குறிப்பிடத்தக்க வேறுபாடு இருப்பதாகத் தோன்றுகிறது. ஆக்கமுறைச் சட்டம் எனப்படுகின்ற அல்லது வியவகாரம் என்பதை நாம் முதலில் மனுவில் காணுகிறோம்; இதன் பொருளை நாரதரும் யாக்ஞவல்கியரும் (Yajnavalkya) விரிவாக எடுத்து விளக்கியுள்ளனர். இதில் ஒருவாறாக தர்மசூத்திரத்திற்கும் தர்ம சாத்திரத்திற்குமுள்ள வேறுபாடு இவ்வாறு கூறப்பட்டுள்ளது: 'முறையான சட்டம் குறித்துச் சிறிது கவனத்தோடு, சமய, ஒழுக்கவியல் போன்ற குடும்பக் கடமைகள் எல்லாவற்றையும், சூத்திரத்தின் தர்மம் என்ற சொல் கொண்டிருக்கிறது. முற்றுப் பெற்ற சாத்திரத்தில், விவாதிக்கப்பெற்ற பொருளில் சட்டம் முக்கியமானதாக இருக்கிறது.'[25] காலப்போக்கில் இந்த வேறு

[25] C.H.I. p. 277.

பாடு திட்டவட்டமாகத் தோன்றியது. உரைநடைச் சூத்திரத்திற்கும் செய்யுள்நடை சட்டப் புத்தகத்திற்கும் இடையிலாக ஒரு முறையான வேறுபாட்டை இது குறிப்பிட்டது. பொருத்தமற்றவைகள் சட்ட நூலிலிருந்து படிப்படியாக அகற்றப்பட்டதையும் இது குறிப்பிட்டது.[26] அதாவது, ஒரு தனிப்பட்ட இலக்கிய உருவில் இதன் விளக்கம் இருக்கிறது. சட்டப் புத்தகத்திலிருந்து இப் பொருத்தமற்ற பொருளின் நீக்கம், இந்தத் தனிப்பட்ட விளக்கம் ஆகியவை எதைக் குறிப்பிடுகின்றன? தர்ம சாத்திரக் காலத்தில் பொருத்தமற்ற பொருள் ஏன் நீக்கப்பட்டது? அல்லதுபொருத்தமுள்ளதற்கும்பொருத்தமற்றதற்கும் ஏன்இந்த வேறுபாடு? தர்மசூத்திரத்தில் பொருத்தமற்ற பொருள் என்னவென்பதையும், தர்மசாத்திரத்தில் பொருத்தமுள்ள பொருள் என்னவென்பதையும் நாம் தெரிந்துகொள்ளும்பொழுது இது தெளிவாகிறது. சமய, ஒழுக்க, குடும்பக் கடமைகளெல்லாம் பொருத்தமற்ற பொருளில் அடங்கும்; அதாவது,முறையான சட்டத்திலிருந்து இப் பொருத்தமான பொருள்கள் பிரித்தெடுக்கப் படுகின்றன. அதாவது, தர்மசூத்திரங்கள் சமயச் சார்புடையனவாகவும் ஒழுக்கம் சார்ந்தனவாகவும் இருக்கையில், சாத்திரங்கள் பெருமளவு சமயஞ்சாராதவையாக இருந்தன. ஏனெனில், தர்ம சாத்திரங்களின் பொருளாகிய முறையான சட்டம், வியவகாரம், அரசுரிமை என்ற தலைப்பின்கீழ்ச் சேர்த்துக்கொள்ளப்பட்டிருக்கும் உரிமை அல்லது தர்மத்தின் ஒரு பகுதியில் அடங்கியிருந்தது. 'வியவகாரம்' என்ற சொல் இக் காலத்திய பொருளில் 'சட்ட' மென்றுபொருள்படும். செயலாட்சி சட்டப்படி பொருள்விளக்கம் செய்யப்படும்பொழுது சட்ட நடைமுறையெனப் பொருள்படும்.[27] இப்பொழுது இந்த வேறுபாடு தெளிவாகிறது. இந்த வேறுபாடு அடிப்படையானது. சூத்திரங்கள் சமய ஒழுக்கச் சார்புடையனவாக இருந்தன என்பதிலிருந்தும், தற்காலத்திய பொருளில் சாத்திரங்கள் சட்டம் சார்ந்தனவாகவும் சமயச் சார்பற்றனவாகவும் இருந்தனவென்பதிலிருந்தும் இவ் வேறுபாடு எழுகிறதா? இதை எடுத்து விளக்கும் ஆராய்விலிருந்து இது எழுகிறதா? அல்லது சமூக நோக்கின் மாற்றத்திலிருந்து எழுகிறதா? இந்தியாவின் சட்டமுறைகள் அல்லது தர்ம சூத்திரங்களும் சாத்திரங்களும் வாழ்க்கையோடு தொடர்பின்றி வெறும் கல்வியியற்சுவையுடையதாகமட்டுமிருந்தால், முன் குறிப்பிட்டது சரியாய் இருந்திருக்கும். ஆனால், வாழும் சமூகத்தின் உண்மையான போக்குகளையும் தேவைகளின் உண்மையான விளைபயன்களையும் தர்ம சாத்திரங்கள் உட்கொண்டிருந்தன. எனவே, அச் சமூகத்தின் நோக்கின்

[26] Ibid.

[27] C. H. I. p. 281.

மாற்றம்தான் தர்ம சாத்திரங்கள், சூத்திரங்கள் ஆகியவற்றின் தன்மைக்கும் பொருளடக்கத்திற்கும் இடையில் வேறுபாட்டை உண்டாக்கியிருக்கவேண்டும். சட்டத்தின் பொருளை மேற்கோள் காட்டி இக் கருத்தை மேலும் விளக்கலாம்.

உடைமைகள்பற்றிய வழக்குகளுக்கும் துன்புறுத்தல்பற்றிய வழக்குகளுக்குமிடையே 'வியவகாரம்' என்ற சொல் பிற்கால எழுத்தாளர்களால் பகுக்கப்படும்வரையில் உரிமைபற்றிய சட்டத்திற்கும் குற்றவியல்பற்றிய சட்டத்திற்குமிடையில் முறையான வேறுபாடு கிடையாதென்று பேராசிரியர் ஹாப்கின்ஸ் (Hopkins) எழுதுகிறார். சட்டத் தலைப்புப்பற்றிய முதல் கணக்கெடுப்பு மனுவில் காணப்படுகிறது. இத்தகைய தலைப்புகள் பதினெட்டு நமக்குக் கிடைத்திருக்கின்றன. இவை உரிமைபற்றிய சட்டத்தையும் குற்றவியல்பற்றிய சட்டத்தையும் கொண்டிருக்கின்றன. மாறுபட்ட வழக்குகளைப் பிரிப்பதற்கு இவை 'குறிப்பிடத்தக்க முதல் முயற்சிகளாகும். சரிநுட்பமான அல்லது முற்றிலும் சரியானதொரு பட்டியலை மனு கொடுத்திருக்கவேண்டுமென்று கேட்பது நேர்மையாகாது. பிற்கால எழுத்தாளர்கள் மனுவின் ஏற்பாட்டையும் தலைப்புகளையும் சில உட்பிரிவுகளோடு பின்பற்றினார்கள்.' எடுத்துக்காட்டாக, பிரஹஸ்பதி பதினெட்டுத் தலைப்புகளைக் கொடுக்கிறார்; வழக்குகள் மாறுபடுகின்ற தன்மைக்கேற்ப இவை ஒவ்வொன்றும் மேலும் பகுக்கப்படலாமென்று கூறுகிறார். 'அரச கட்டளைகளுக்குப் பணிய மறுக்கும் குற்றங்களைத் தலையாகக்கொண்டு முதன்மையான (பெண்கொலை, சாதிக் கலப்பு, பிறர் மனை வேட்டல், திருடு, சட்டம் ஒவ்வாப் பிள்ளைப்பேறு, பழிப்பு, தாக்குதல், கருச்சிதைக்க முற்படல்) குற்றங்களை மற்ற எழுத்தாளர்கள் கொடுக்கின்றனர். தந்தைக்கும் மகனுக்கும் இடையில், கணவனுக்கும் மனைவிக்குமிடையில் அல்லது தலைவனுக்கும் பணியாளுக்குமிடையில் வழக்குத்தொடர இயலாதென்பதைப் பிற்கால எழுத்தாளர்கள்தாம் வலியுறுத்தினர்.'[28] சூத்திரங்களிலும் சாத்திரங்களிலும் குற்றவியல் சட்டத்தை விளக்கும்பொழுது, 'சூத்திரத்தில், திருடன் அரசன் முன் கொண்டுவரப்பட்டுத் தண்டிக்கப்படுகிறானென்றும், திருடு (மிகக் குறிப்பாகக் கால்நடைத் திருட்டும், கொள்ளையும்) முதன்மையான குற்றமாக வேதத்தில் சொல்லப்பட்டிருப்பதாக இவர் கூறுகிறார். பிரஹஸ்பதி கூறுவதுபோல், வன்முறை வகைகளில் திருட்டு ஒன்றாகும்; இவைகளில், மனிதக் கொலை, திருட்டு, மாற்றான் மனைவியைத் தாக்குதல், ஊறு (பழித்தல் அல்லது தாக்குதல்) ஆகியவை நான்காகும்.' ஆபஸ்தம்பர் குறிப்பிடுவது

28 Narada Smriti, S. B. E. Vol. XXXIII, 1, 6.

போல், தெய்வத்தன்மை வாய்ந்த சான்று என்பதைத் தவிர, சோதனைமுறையைப் பொறுத்தவரை சூத்திரங்கள் குறிப்பிட வில்லை. நீர், நெருப்பு போன்ற இரண்டு சோதனை முறைகளை மட்டுமே மனு ஏற்றுக்கொள்கிறார். இருப்பினும், பிற்கால எழுத் தாளர்கள் இன்னும் பலவற்றைச் சேர்த்துக்கொண்டனர். மனு கூறியவற்றோடு கொழு, நிறைகோல், நஞ்சு போன்றவற்றையும் சேர்த்து நாரதரும் யாக்ஞவல்கியரும் ஐந்து சோதனைமுறைகளை விவரிக்கின்றனர். யுவான்சுவாங் இந்தியாவைச் சுற்றுப் பயணம் செய்தபொழுது, நால்வகைச் சோதனை முறை நடைமுறையில் இருந்ததைக் கவனித்தது சுவையாக இருந்திருக்கலாம். இவை நீர், நெருப்பு, பளுவினால் அழுத்தல், நஞ்சு போன்ற சோதனை முறைகளாகும்.[29] இவை ஒவ்வொன்றின் இவரது வருணிப்பு நாரதர், யாக்ஞவல்கியர் ஆகியோரின் வருணிப்போடு ஒத்திருக் கிறது. இச் சட்டத்தொகுப்புகள் நாட்டில் பெற்றிருந்த செல் வாக்கையும், வாழ்க்கையோடு இவை கொண்டிருந்த நெருங்கிய தொடர்பையும் இது மெய்ப்பிக்கிறது. இந்த ஐந்து முறைக ளோடு தெய்வத்திற்குப் படைக்கப்படும் புனித பானம், அரிசித் தானியங்கள், சூடான தங்கத் துண்டு, தர்மத்தாலும் அதர்மத் தாலும் சோதனை முறை போன்ற நான்கையும் சேர்த்து ஒன்பது முறைகளை பிரஹஸ்பதி குறிப்பிடுகிறார். 'உரிமைகள்பற்றிய சட்டத்துறையில் பிற்காலத்திய சட்ட நூல்கள் முற்காலத்தை விடப் பெரு முன்னேற்றம் கண்டுள்ளன' என்று பேராசிரியர் ஹாப்கின்ஸ் மேலும் கூறுகிறார். சூத்திரங்கள், மனு, நாரதர், பிரஹஸ்பதி, யாக்ஞவல்கியர் போன்றவர்களின் நூல்களிலிருந்து பல எடுத்துக்காட்டுகளை இவர் கொடுக்கிறார். வணிகம்பற்றிய வைகளைப் பொறுத்தவரையில், கூட்டுக் குடும்பத்தின் கடன் திருப்பிக்கொடுக்கும் கடமைப் பொறுப்பைத் தவிர, எடுத்துக் காட்டாக, சமகூட்டுப் பங்காண்மைபற்றிச் சூத்திரம் ஒன்றும் குறிப்பிடவில்லை. மனுவின் கூட்டுப்பங்காண்மைபற்றிய கருத்து, சமய குருவிற்குரிய கடமைகளைப்பற்றியவைகளாகவே இருக் கின்றன. கூட்டுப்பங்காண்மைபற்றி யாக்ஞவல்கியர் எழுதும் பொழுது வேளாண்மையையும் வணிகத்தையும் சேர்த்துக்கொள் கிறார். சமய குருமாருக்குரிய கூட்டுப் பங்காண்மைபற்றி நாரதர் எழுதுகையில், சரக்குக் குவிப்பு, உணவு, சுங்கம், இழப்பு போன்ற தொழில்களின் மற்ற விஷயங்களில் கூட்டுப் பங்காண்மைபற்றி ஒன்றும் அறியாமல் இல்லை. இதேபோல், ஒரு வீடு கட்டுதல், அல்லது கோயில் கட்டுதல், குளம் வெட்டுதல் அல்லது தோல்

[29] Watter's 'Yuan Chwang,' edited by Rhys Davids and Bashell, 1904, Vol. I, page 172.

பொருள்கள் செய்தல் போன்றவைகளில் கூட்டுப்பங்காண்மை பற்றி பிரஹஸ்பதி குறிப்பிடுகிருர். ஐந்தாம் நூற்ருண்டில் வாழ்ந்த நாரதர், சமயம், நெறிமுறை ஆகியவைகளால் பாதிக்கப் பெருத ஒரு சட்டத்தொகுப்பை நமக்கு வழங்கியவர்களில் முதன்மையானவர் என்பதைப் பேராசிரியர் வலியுறுத்தும்பொழுது நம் வாதம் மேலும் வலிமை பெறுகிறது. சட்டத்தின் தலைப்புகளினது அருமையான இதன் உட்பிரிவுகளிலும், அடிமைகள், வழி உரிமைகள், சாட்சிகள், சோதனை முறைகள் போன்றவைகளில் இது விரிவாக எழுதப்பட்டிருப்பதிலும், சட்டத்தையே இதன் பொருளாகக் கொண்டிருப்பதிலும் இத் தொகுப்பு (சட்டத் தொகுப்பு) முதன்மையானதாக இருக்கிறது.[30] சுருக்கமாக, சட்டம் சமயச் சார்பற்றதாகிக் கொண்டுவந்தது. இச் சமயச் சார்பற்ற சட்டம்தான் நீதிக்கான எல்லாப் பிரிவுகள், சமயங்கள் ஆகியவற்றின் தேவைகளைச் சமாளித்தது. சட்டம் பொருளிலும் இயல்பிலும் சமய குருமாருக்குரியதாக இருந்தவரையிலும், எல்லாச் சமயங்களுக்கும் ஒருதலைப்பட்சமாகத்தான் இருந்திருக்க முடியும். சமூகம் இதை உணர்ந்தபொழுது, சட்டத்தில் சமயச் சார்பு இல்லாமலிருந்ததிலிருந்து சமய நெறிமுறைசார்ந்த இயல்புகளை விலக்க இது இயல்பாகவே விரும்பிற்று. ஆனால், மக்களின் எல்லாப் பிரிவினர்களுக்கும் நீதியை வழங்க இது போதியதாக இருக்கவில்லை. ஏனெனில், இச் சமயச் சார்பற்ற சட்டம் சாதி வேறுபாட்டைப் பெரும்பாலும் குறித்துக் காட்டியது. எடுத்துக் காட்டாக, சான்றுகள், தண்டனைபற்றியவைகளில் சாதி வேறுபாட்டை நாரதர் குறித்துக்காட்டுகிருர்; அவதூறு, பிறன்மனை நயத்தல் போன்றவைபற்றியவைகளில் பிரஹஸ்பதி இச் சாதி வேறுபாட்டைக் குறித்துக் காட்டுகிருர். ஆனால், ஏற்பமைதி இல்லாக் கோட்பாட்டில் பற்றுடையவர்களின் சட்டம், சாதி நீக்கம் செய்யப்பட்டோர், வணிகக்கூட்டு நிறுவனங்களின் சட்டம் ஆகியவற்றை அரசன் மதிக்கவேண்டுமென்ற திட்டவட்டமான நாரதரின் விதியால் இது பயனற்றுப்போய்விடுகிறது. இதே போல், குடும்பங்கள், சமய அமைப்புகள், வணிகர்கள், கடன் கொடுப்போர் ஆகியோர் தம் தகராறுகளைத் தம் சட்டங்களால் தீர்த்துக்கொள்ளவேண்டுமென்று பிரஹஸ்பதி விதி வகுத்தார். சமூகப் பிரிவுகளின் சட்டங்களுக்கும், பழக்கங்களுக்கும், ஆட்சிப் பரப்புகளுக்குமான இம்மதிப்பு எல்லோருக்கும் நீதியையும் இசைவையும் உறுதிப்படுத்தியது. சமூகத்தின் எல்லாப் பிரிவுகளையும் அமைப்புகளையும் இணக்குவிக்கின்ற இச் சமூக மனப்போக்குதான் சமயப் பொறைக் கொள்கையால் வெளியிடப்பெற்ற அரசரின்

30 C. H. I. p. 280.

அல்லது அரசின் மனப்போக்கைப் பயனுடையதாகவும் நிகழக் கூடியதாகவும் செய்தது.

## சமயப் பொறையின் உட்கருத்துகள்

அரசாங்கம், சமூகம் ஆகியவற்றின் மனப்பான்மைகளைச் சட்டம் எடுத்துக்காட்டுகிறதென்பதை இந்த விவாதத்தில் நாம் ஏற்றுக்கொண்டிருக்கிறோம். சரி ஒப்புரவு நிலையை ஏற்கிற சட்டமும், சமய வேறுபாடுகளுக்கு அப்பால் செல்லுகிற ஒரு சட்ட முறையுமில்லாத ஒன்றை ஏற்றுக்கொள்ளும் சமயப் பொறைக் கொள்கை வெறும் தோற்றமே என்பதை ஏற்றுக் கொள்வதாகும். எனவே, சமயப் பொறைக் கொள்கையின் உட்கருத்துகள் பரந்த செயல்விளைவுடையனவாக இருந்தன. அரசிற்கு ஒரு சமயச் சார்பற்ற தொனியை இது கொடுத்த தோடன்றி, இது பெற்ற சமூக நலத்தை அடைவதற்கு அரசு மேற்கொண்ட நுட்பமுறை சமய ஆதரவு, சமய ஒறுப்பு போன்றவைகளோடு முரண்பாடானதாக இருந்தது. இச்செயல் முறையை ஏற்பது சமயத்தின்மீது அரசிற்குரிய கட்டுப்பாட்டை எதிர்மறையான முறையில் செயல்படுத்துவதில் அரசை உட்படுத்துமென்பது தெளிவு. இக் கட்டுப்பாட்டின் எதிர் மறைக் கூறு, எந்த உட்பிரிவு அல்லது சமயக் கருத்துகளுக்கு அரசு கட்டுப்பட மறுப்பதிலும், அதன் பயனாக எல்லாச் சமயங்களையும் சமமாக நடத்துவதிலும் அடங்கிற்று.

## வரலாற்று மதிப்பீடு

இக் காலம் பற்றிய சுருக்கமான ஒரு மதிப்பீட்டை இப்பொழுது நாம் எடுத்துக்கொள்ளலாம். இக் காலம் குப்தப் பேரரசின் தோற்றத்தோடு அல்லது 'இரண்டாவது மகதப் பேரரசின் தொடக்கம்' என்று கூறப்படுவதோடு தொடங்கியது. மகாராஜ குப்தரின் மகனின் மகனாகிய மகாராஜ கடோத்கஜரின் மகன் மகாராஜாதிராஜ முதலாம் சந்திரகுப்தரால் இரண்டாவது மகதப் பேரரசு தோற்றுவிக்கப்பெற்று, லிச்சாவி இளவரசி குமாரதேவியைச் சந்திரகுப்தர் மணந்துகொண்டது இப் பேரரசின் தோற்றத்திற்கு ஒரு முதன்மையான நிகழ்ச்சியெனலாம். இம் மணவினை சந்திரகுப்தரின் அதிகாரத்தைப் பெருக்கிற்று. மகத அரசின் ஒரு சிறு பகுதியைக் கொண்ட ஒரு சிறிய அரசோடு தொடங்கி, அயோத்தியும் மகதமும் இதில் அடங்குமாறு எல்லையை விரிவாக்கினர். இவருடைய மரபுரிமையின் பரப்புப்பற்றிச் சிறிது கருத்து வேறுபாடு உள்ளது. இ.பி. இரண்டாம் நூற்றாண்டிலிருந்தே மகத நாட்டில் குப்தர்களின் ஆட்சிபற்றிய சான்றுகள் காணப்படுகின்றனவென்றும், மற்ற இடங்களில் இவைபற்றிய எண்ணற்ற கல்வெட்டுச் சான்றுகள்

இருக்கின்றனவென்றும் குறிப்பிடப்பட்டுள்ளது.[31] பாடலி புத்திரம் லிச்சாவிகளுக்குச் சொந்தமாக இருந்ததென்று டாக்டர் ஸ்மித் (Dr. Smith) குறிப்பிட்டார்;[32] சந்திர குப்தரின் பாட்டனாராகிய ஸ்ரீகுப்தரிடம் இது இருந்ததென்று அல்லன் (Allan) நினைக்கிறார். இதைச் சந்திரகுப்தர் ஸ்ரீகுப்தரிடமிருந்து மரபுரிமையாகப் பெற்றார்.[33] இதுபற்றி வாயுபுராணம் மௌனமாக இருப்பதுபோலவே சமுத்திர குப்தரின் கல்வெட்டுகளும் மௌனமாக இருக்கின்றன. பிரயாகைக்கும் பாடலி புத்திரத்திற்குமிடையே பரவியிருந்த நிலப்பரப்பை சந்திர குப்தர் பத்தாண்டு ஆட்சி செய்தார்.[34] இவருக்குப்பின் இவருடைய மகன் சமுத்திரகுப்தர் ஆட்சியுரிமை பெற்று, ஏறத்தாழ நாற்பதாண்டு ஆட்சி செய்தார். வரலாற்றில் இடம் பெற்றுள்ள குறிப்பிடத்தக்க பெருமை சான்ற அரசர்களுள் இவரொருவர். சந்திரகுப்தர் மகத நாட்டிலிருந்து வெளியேற்றப்பட்டாரென்றும், நாடுகடத்தப்பட்ட நிலையில் இறந்தாரென்றும் ஜெய்சுவால் (Jaiswal) கருதுகிறார். வெளியேற்றப் பெற்ற காலம் கி.பி. 340-லிருந்து 344 வரையிலான காலமாகும்.

தம்முடைய குலப்பெருமையை மீட்டவர் சமுத்திரகுப்தராவார்.[35] எந்த அளவிலும் இவருடைய வெற்றிகள் பரவலானவை. ஓரளவு வல்லிணைப்பாலும் ஓரளவு தம்முடைய தனித்தலைமையாலும் வட இந்தியாவையும் தக்காணத்தையும் வென்று, இமயமலை அடிவாரம்வரையும் பரவியிருந்த பேரரசை இவர் கட்டுப்படுத்தி ஆண்டார். காஷ்மீரும் பிரமபுத்திரா நதி வரையிலும் உள்ள கிழக்கு நாடும் இப் பேரரசில் அடங்கவில்லை. பேரரசு அரசாங்கத்தின் நேர்கீழ் இருந்த நிலப்பரப்பின் மேற்கத்திய எல்லையாக யமுனா, சம்பால் (Chambal) ஆறுகளும் இருந்தன; ஆனால், யவ்தேகிகர், மாளவர் ஆகியோரின் கீழ் இருந்த பாஞ்சால, மாளவ அரசுகள் போன்ற பல்வேறு நாடுகளும் மேலதிகாரப் பாதுகாப்பின்கீழ்த் தன்னாட்சி பெற்று விளங்கின. சாமதத்தா அல்லது பிரமபுத்திர படுகை நிலப்பரப்பு; தவாக்கா அல்லது கிழக்கு வங்காளம்; பெருமளவு அஸாமுக்கு

31 Raichaudhuri, op. cit., pp. 359–360.

32 Oxford History of India, p. 148.

33 Catalouge of Coins, Gupta Dynasties, by John Allan, pp. xv, xvi,

34 Anugangaprayagam magadha-Guptasca bhoksyanti [Visnu Pur., Trans. by Wilson (1840), p. 479, note 70] Anugangapryagam ca saketam magadhanstatha; Etan janapadan. sarvan bhoksyante Gupatavamsaja, (Vayu, Ibid).

35 J.B.O.R.S., Vol. XIX, pp. i—ii; pp. 117–119.

ஒப்பான காமரூபம்; குமாவோன், கார்ச்வால் ஆகியவைகளைக் கொண்ட கர்திபுரம்; நேபாளம் ஆகிய ஐந்து நாடுகளின் அரசர்களும் திறை செலுத்திப் பணிந்தனர். இவரால் ஒன்றாகத் தொகுக்கப்பெற்ற சகர்களின் தலைவர்கள், சிங்களவர்கள் ஆகியவர்களிடமிருந்தும் வடமேற்குப் பகுதியின் குளவரசர்களும் இவருக்கு மதிப்போடு பணியாற்றினர்.[36] அலகாபாத் கல்வெட்டு, இவர் அரசர்களை வீழ்த்தியவரென்று குறிப்பிடுவதிலும், இவர் தம்மை 'சர்வராஜோ சித்தர்' என்று பெயரிட்டுக் கொண்டதிலும் வியப்பில்லை. உருத்திர தேவர், மட்டிலர் (Matila), நாகதத்தர், சந்திரவாமர், கணபதி நாகர், நாகசேனர், அச்சுதர், நந்தி, பாலவர்மர் போன்ற இன்னும் பல ஆரியவர்த்த அரசர்களின் அழிவோடு தொடங்கி, கோசலத்தின் அரசர் மகேந்திரர், மகாகாந்தாரத்தின் அரசர் வியாக்கிரராஜா, கேரள மந்தராஜா, பிஸ்தாபுரத்தின் மகேந்திரர், குன்றின்மேலுள்ள கோட்டூரத்தின் சுவாமிதத்தர், ஏரண்டபள்ளியின் தாமனர், காஞ்சியின் விஷ்ணுகோபர், அவிமுக்தியின் நீலராஜா, வெங்கியின் ஹஸ்திவர்மன், பாலக்காவின் உக்ரசேனர், தேவராஷ்டிராவின் குபேரர், குஸ்தலபுரத்தின் தனஞ்செயர், தக்காணத்தின் இன்னும் பலரையும் சிறைப்பிடித்து விடுதலை செய்தார்.[37] இப் பரவலான வெற்றிகள் 'இந்திய நெப்போலியன்' என்ற ஏற்புடைய பெயரை இவருக்குத் தேடித்தந்தன.

இவருடைய மரணத்திற்குப்பின் இப் பெரிய பேரரசு இவரது மகனாகிய இரண்டாம் சந்திரகுப்தரைச் சென்றடைந்தது. தந்தையின் தகவுடைமையை மகன் மெய்ப்பித்தார். உஜ்ஜெயினியின் க்ஷத்திரபர் உருத்திரசிம்மரை முற்றிலும் அடக்கி, அவருடைய அரசையும் இணைத்துத் தம் வெற்றி வாழ்க்கையைச் சிறப்படையச் செய்தார். அதனால் வெற்றிக்கும் வல்லிணைப்பிற்கும் பின், புதிதாய் வென்ற மாநிலங்களை வருங்காலத்தினர் பெற்றுத் துய்க்க சந்திரகுப்தரின் விழிப்பான அரச தந்திரம் உறுதியளித்தது. வாகாடகரின் பெருமன்னர் இரண்டாம் உருத்திரசிம்மருக்குத் தம் மகளை மணம் செய்வித்து ஒரு நேசவுறவை உண்டாக்கிக் கொண்டார். 'குஜராத் சௌராஷ்டிர சகக்ஷத்திரபர்களின் நாடுகளை வடக்கிலிருந்து தாக்குபவருக்கு உதவியாக அல்லது எதிராக இருக்கக்கூடிய ஒரு புவியியல்நிலையை வாகாடக மகாராஜா பற்றிக் கொண்டதே இதற்குக் காரணமாகும்.'[38] மாளவம், குஜராத்,

[36] Oxford History of India, p. 149.
[37] Cor. Ins. Ind., Vol. III, No. i.
[38] J.R.A.S. 1914, p. 324.

சௌராஷ்டிரம் அல்லது கத்தியவார் ஆகியவற்றை இவர் பேரரசில் சேர்த்துக்கொண்டார். இவர் தம் எல்லையை மேற்குக் கடற்கரைவரை நீட்டித்தார். இது பல வழிகளில் பெருஞ் சிறப்பிற்குரியதாக இருந்தது. ரோச், சோப்பாரா, காம்பே போன்ற பல முக்கியமான துறைமுகங்கள் இருந்தன. இவைகள் ஆதாய மிக்க வணிகத்தில் ஈடுபட்டு நாட்டின் வளங்களைப் பெருக்கின. உஜ்ஜெய்னி பேரரசின் கேந்திரமாக விளங்கியது. மேற்குக் கரைத் துறைமுகங்களிலிருந்து தொடங்கிய எல்லா வணிக மார்க்கங்களையும் இது இயல்பாக இணைத்தது. இவை அரசியல் சிறப்பில் வளர்ச்சியடைந்தன. இதே காலத்தில் இது இரண்டாவது தலைநகராயிற்று.

இரண்டாம் சந்திரகுப்தர் பெருஞ் செழிப்போடு ஆட்சி செய்தார். காளிதாசரின் ஈடற்ற இலக்கியப் படைப்புகளை இவரது ஆட்சிக் காலம் பெற்றிருந்ததாகக் கருதப்படுகிறது. இவருக்குப் பின் ஆட்சியுரிமை பெற்ற இவரது மகன் குமாரகுப்தரின் ஆட்சிக் காலத்தில் காளிதாசர் வாழ்ந்தார். கி.பி. 415-ல் குமாரகுப்தர் அரியணை ஏறினார். இவரது ஆட்சிக் காலத்தில்தான் குப்தர்களின் புகழ், புஷ்யமித்திரர்கள் என்பவர்களால் தற்காலிகமாக மங்கியது. இப் புஷ்யமித்திரர்கள் யார் என்பதுபற்றிய ஒரு சர்ச்சை நடந்தது.[39] ஆனால், இவர்கள் யாராக இருந்தாலும் குப்தர்களின் மங்கிய செல்வாக்கிற்கு ஸ்கந்தகுப்தர் புத்துயிர் அளித்தார். இது குமாரகுப்தரின் ஆட்சிக் காலக் கடைசியில் நிகழ்ந்து, அவர்கள் இறந்தபின்னும் தொடர்ந்திருக்கவேண்டும். மங்கி அழிந்துகொண்டிருந்த குப்தப் புகழை மீண்டும் மிளிரச் செய்த பெருமை முற்றிலும் ஸ்கந்தகுப்தருக்குரியது.[40] இருந்த போதிலும், இவர்களுடைய பேரரசைப் பெருமளவு சிதைத்த பேரழிவின் தொடக்கம்தான் இது. புஷ்யமித்திரர்களையும் ஹூணர்களையும் வெளியிலிருந்து வந்த எதிரிகளென பித்தாரிக் கல்வெட்டு தெளிவாகக் கூறுகிறது. வெளியிலிருந்து வந்த மிலேச்சர்கள் என்ற வகையில் இவர்களைப்பற்றி ஜூனகாத் கல்வெட்டு கூறுகிறது. ஆனால், தாக்கியவர்களையெல்லாம் வெளியேற்றுவதில் ஸ்கந்தகுப்தர் வெற்றி கண்டார். இவரது ஆட்சியின் கடைசிக் காலம் அமைதியாக இருந்தது. இவர் கி.பி. 467-ல் இறந்தார்;

39 Fleet, Cor. Ins. Ind., p. 55 n; Annals of Bhandarkar Researcd Institute (Bibiliography), 1919—1920, p. 99f. Divekar on Pusyamitras in Gupta period.

40 Bhitari Inscription—Cor. Ins. Ind., Vol. III, No. 13. Pitari divam upete viplutam vamsalaksmim, Bhujabalavijitariyyah pratisthapya bhuyah, Jitamiti paritosan mataram sasranettram, Hataripuriva krisno devakimabhuapetah.

இவரது மறைவோடு இவருடைய குலப்பெருமையும் மறைந்தது. ஏனெனில், இவரது மறைவிற்குப் பின் புதிய தாக்குதல்காரர்கள் வந்து குப்தப் பேரரசின் கட்டமைப்பைக் குலைத்தனர். சுருங்கி நாட்டைப் பல தலைமுறையினர் குறைந்த அதிகாரத்தோடு ஆண்டனர். பின், குழப்பமும் இருளும் சூழ்ந்த மற்றொரு காலம் தொடர்ந்தது. கடுமையான வலிமையோடு ஹூணர்கள் இந்தியாவிற்குள் நுழைந்தனர். ஐந்தாம் நூற்றாண்டின் இறுதியில் (கி.பி. 496), குப்த பேரரசு, வங்காளத்திலிருந்து கீழைய மாளவம்வரையிலும் பரவியிருந்தது.[41] ஆறும் நூற்றாண்டின் முற்பகுதியில் குப்தப் பேரரசில் இக்காலத்திய மத்தியப் பிரதேசத்தின் பெரும் பகுதி அடங்கியிருந்தது.[42]

ஹூணர்களால் அழிவுற்ற குப்தப் பேரரசிற்கும் ஹர்ஷரால் நிறுவப்பெற்ற பேரரசிற்கும் இடைப்பட்ட நூற்றாண்டு ஒரு நிலையற்ற காலமாகும். ஹூணர்கள், கூர்ஜரர்களாகிய வெளியார் தடுத்து நிறுத்த இயலாத வலிமையோடு இந்தியாவின் வாயில்கள் வழியாக உட்புகுந்தனர். இதற்குமுன் இவர்கள் பாரசீகத்தையும் காபூலையும் கைப்பற்றிக்கொண்டனர். ஆறும் நூற்றாண்டில், இந்தியாவில், இவர்களுடைய தலைவர் தோரமானர் மாளவத்தில் தம் அரசை நிறுவினர். கி.பி. 500–ல தோரமானருக்குப்பின் இவரது மகன் மிகிரகுலன கி.பி. 502-ல் அரசுரிமை பெற்றார். பஞ்சாபிலுள்ள சாகலா (Sakla) அல்லது சியால்கோட்டை இவர் தலைநகராகக் கொண்டிருந்தார். பஞ்சாபிலிருந்து மாளவம்வரை இவரது அதிகாரம் பரவியிருந்ததை இது குறிப்பிடுகிறது. மகத நாட்டின் குப்த அரசரோடு மாளவத்தின் அரசர் யசோதர்மன் சேர்ந்து மிகிரகுலரின் அதிகாரத்தை 528-ல் முறித்தார். இவர் காஷ்மீரிலிருந்து பின் வாங்கி வட இந்தியாவின் நற்பேறுகளில் தலையிடுவதை நிறுத்திக் கொண்டார். இதே சமயத்தில் மேற்கில், இரானிய இனத்தைச் சேர்ந்த மெய்த்திரிகர் என்போர், சௌராஷ்டிர மாநிலத்தில் வாலாபியைத் தலைநகராகக்கொண்ட ஒரு சுயேச்சையான நாட்டை நிறுவினர். கி.பி. 770–ல் அராபியர்களால் தோற்கடிக்கப்படும்வரை இந் நாடும் இதன் தலைநகரும் கணிசமான சிறப்பையும் செழிப்பையும் பெற்று உயர்ந்தது. ஹூணர்களோடு தொடர்புடைய வலிமை வாய்ந்த இனங்களில் ஒன்றாகிய கூர்ஜரர்கள், தெற்கு இராஜபுதனத்தில் பரோச்சிலும் பீன்மலிலும் நாடுகளை ஏற்படுத்தினர். பம்பாய் மாநிலத்தின் பிஜப்பூர் மா

41 Arch I.S. Rep., 1914—15; Saranath Inscription.

42 Baitul Plates of the Paribrajaka Maharaja Samksobha Ep. Ind., Vol. viii, pp. 284 et seq; Cor. Ins., Ind. Vol. III. pp. 113—16.

வட்டத்தின் இக்காலத்தில் பாதாமி என்னுமிடத்தில் வாதாபியைத் தலைநகராய்க் கொண்டதொரு நாட்டைச் சாளுக்கியர்கள்[43] நிறுவினர். இந்தியாவைத் தாக்கிய வெளியார்களால் ஏற்படுத்தப்பெற்ற இந் நாடுகளைத் தவிர உள்நாட்டினராகிய வாகாடகர், மௌகாரிகள் போன்றோர்களால் தோற்றுவிக்கப் பெற்ற மற்ற நாடுகளுமுண்டு. இவை இரண்டும் வலிமை வாய்ந்தவை. தென்னிந்தியாவிலும் வட இந்தியாவிலும் இவர்கள் பெரும் பரப்பைக் கட்டுப்படுத்தினர். வாகாடகர்கள் தக்காணத்தின் நடுவிலும் மௌகாரிகள் ஆற்றிடைப் பகுதியின் மையத்திலும் இருந்தனர். குப்தர்களும் வர்த்தனர்களும் இவர்களை நடத்திய முறைகளிலிருந்து இவர்களின் செல்வாக்கின் பரப்பை நன்கு உணரலாம். தம் மகள் பிரபாவதியை வாகாடகர்களின் அரசர் இரண்டாம் உருத்திரசேனருக்கு மணம்செய்துவைத்ததை நாம் முன்பு பார்த்தோம். இதே நோக்கோடுதான், கன்னோஜின் மௌகாரி அரசருக்கு ஹர்ஷரின் தங்கை ராஜ்யஸ்ரீ மணம் செய்யப்பெற்றார். பல சுயேச்சையான நாடுகள் இருந்ததைப் பாணர் குறிப்பிட்டிருக்கிறார்.[44] எவ்வாறாயினும், இவைகளிலிருந்துதான் ஹர்ஷர், வட இந்தியாவின் பெரும் பகுதியைக் கொண்டதொரு பேரரசை நிறுவினார்.

ஹர்ஷப் பேரரசின் எழுச்சி, வீழ்ச்சிபற்றிய வரலாறு, வெற்றிகளையும், தனியாட்சியையும், திடீர் ஏற்றமிக்க புகழையும், பண்டைய, மத்திய காலத்திய ஒவ்வொரு பேரரசிற்குமுரிய திடீர்ச் சிதைவையும் எடுத்துக்காட்டுவதாக இருப்பது சுவையாக உள்ளது. ஸ்ரீகந்த நாட்டின் தானேசுவர் அரியணையை அணிசெய்த திறமைமிக்க அரசர்களின் வரிசையில் ஹர்ஷர் இறுதியானவராவர். நரவர்த்தனன், ராஜ்யவர்த்தனன், ஆதித்தியவர்த்தனன் ஆகியோர்தாம் ஹர்ஷரின் இதுவரை தெரிந்த முன்னோர்கள். இவர்களனைவரும் 'மகாராஜர்' என்ற பட்டத்தைப் பெற்றிருந்தனர். இவர்கள் குறுநில மன்னர்களாய் இருந்தனரா, இல்லையாவென்பதை உறுதிசெய்ய இயலாதிருந்தது. ஆனால், இவர்கள் மேலதிகாரத்தை உறுதியாகப் பெற்றில்லை. 'மகாராஜாதிராஜா' என்ற பட்டத்தைப் பெற்றதில் முதன்மையானவரும், தம் முன்னோர்களைவிட மிகையான அதிகாரத்தைக் கோரியவரும் பிரபாகவர்த்தனரேயாவார். புவியியல் அமைப்புச் சிறப்பை எக்காலத்திலும் பெற்றிருந்த வடநாட்டின் ஒரு பகுதியில் இவருடைய அரசு அமைந்திருந்தது. பஞ்சாப்பிலிருந்து

43 Cf. Dravidian origin from the word 'Culuku' meaning a noble.

44 Cowell and Thomas, 'Harsacarita,' pp. 154—55.

கங்கைச் சமவெளிக்கு வருகின்ற நெடுஞ்சாலைகள் மீது இது என்றும் ஆட்சி செலுத்தியது. இங்கு நிலைபெற்ற ஓர் அரசர் தம் நாட்டை வடமேற்கே சிந்து சமவெளிக்குள்ளும் தென்கிழக்கே கங்கைச் சமவெளிக்குள்ளும் நீட்டிக்கும் வசதி பெற்றிருக்கிறார். ஆனால், இடஅமைப்பால் வருகின்ற நன்மைகள் என்றுமே கலப்பற்ற நன்மைகளாக இரா. வெளித்தாக்குதலின்போது வடஇந்தியாவின் இப் பகுதிதான் தாக்குதலுக்குள்ளாயிற்று. ஆகவே, இங்கு நிறுவப்பெற்ற எந்த அரசும் வெளித்தாக்குதலை எப்பொழுதும் தாங்கவேண்டியிருந்தது. ஹூணர்களின் காலத்தில் இந்த அரசு வெளித்தாக்குதலை வெற்றியோடு எதிர்த்துச் சமாளித்ததால்தான் இது வலிமையும் பெருமையும் பெற்றிருந்தது. வடஇந்தியாவில் தானேசுவர் மேலாதிக்கம் பெற்றதன் இரகசியம் இதுவேயாம். மற்றொரு வெளியார்த் தாக்குதலின்போது பிரிதிவிராஜன் நிலையும் ஆனந்தபாலாவின் நிலையும் இதுவேதான். இவர்களின் தோல்வி நாடு முழுவதன் அழிவிற்கும் காரணமாயிற்று. வலிமையையும் அரச தந்திரத்தையும் தந்திரமாக இணைத்துப் பிரபாகரவர்த்தனர் தம் குடும்பச் செல்வாக்கை உயர்த்தினாரெனலாம். மாளவத்தின் வலிமைமிக்க அரசராகிய யசோதர்மனின் மகள் யசோமதியை இவர் தாமே மணந்து கொண்டார்.[45] இது இவருடைய செல்வாக்கை உயர்த்திற்று. ஒரு பக்கத்தில் ஹூணர்களாலும் மற்றொரு பக்கத்தில் கன்னோசியின் மௌகாரியராலும் சூழப்பெற்றிருந்த இவர் முன்குறிப்பிட்டவர்களுடன் வெற்றியோடு போரிட வேண்டுமென்பதற்காகப் பின்குறிப்பிட்டவர்களுடன் ஒரு நேச உடன்பாடு செய்து கொண்டார். கன்னோசியின் அரசர் அவந்திவர்மன், மௌகாரியின் மகன் சுரகவர்மனுக்குத் தம் மகள் ராஜ்யஸ்ரீயை மணம் செய்துகொடுத்தபொழுது, இது ஒரு திருமண உடன்பாட்டால் மறைக்கப்பெற்றிருந்தபடியால் இவருடைய அரசியல் உடன்பாடு உறுதி பெற்றது. எனவே, ஒரு பக்கத்தில் நிலையான காப்புடன், மறுபக்கத்தில் தம் எதிரிகளாகிய ஹூணர்களை அடக்கினார். 'ஆறும் நூற்றாண்டின் பிற்பகுதியில் கூர்ஜரர், மாளவர் போன்ற மற்றவர்களின்மீது இவர் கணிசமான இராணுவ வெற்றிகளைப் பெற்றார்' என்று கூறப்படுகிறது.[46] இவர் இறந்த பொழுது, இவரது இரண்டு மைந்தர்களாகிய இராஜ்யவர்த்தனனும் ஹர்ஷவர்த்தனனும் தொலைவில் எல்லைகளில் நாகரிகமற்ற ஹூணர்களின் தாக்குதலை முறியடித்துக்கொண்டிருந்தனர் என்று 'ஹர்ஷ சரித்திரம்' கூறுகிறது. ஹூணர்கள் இன்னும்

[45] Madhu Bana Plate.

[46] Oxford History of India, p. 165.

நிலையான தொல்லையாக இருந்தனரென்பதை இது காட்டுகிறது. இவர்களை முற்றிலும் அடக்கிய பெருமை ஹர்ஷரைச் சாருமெனலாம். எவ்வாறாயினும், பிரபாகரவர்த்தனருக்குப்பின் அவரது மகன் இராஜ்யவர்த்தனர் அரசுரிமை பெற்றார். ஆனால்,பிரபாகரவர்த்தனரின் மரணம், கன்னோசியின் மௌகாரி அரசருக்கு ஒரு நெருக்கடியை மிகுவிரைவுபடுத்தியது. இவருடைய மாமனாரின் மரணத்தால் இவர் வலிமையான ஒரு நண்பரை இழந்தார். மாளவ அரசரால் தாக்கப்பட்டு இவர் கொல்லப்பட்டார். ஆகையால், இவரது ஆட்சியின் தொடக்கத்தில், தம்முடைய தகப்பனாரால் உருவாக்கப்பெற்ற சக்தி சமநிலை குலைவுறும் நிலையில் இருந்ததை இராஜ்யவர்த்தனர் கண்டார். இவர் மாளவத்தைத் தாக்கி அதன் அரசரைத் தண்டித்து அவரை மறுபடியும் தம் அதிகாரத்திற்குள் கொண்டுவருவதில் வெற்றி கண்டார். ஆனால், இவர் வெற்றிபெறும் நேரத்தில், கௌட அரசன் இவரை நம்பிக்கைத் துரோகமாகக் கொன்றான். அமைச்சரவையினரின் பகரஆளாகிய படைத்தலைவர் பந்தி (Bhandi) என்பார் ஹர்ஷரை அரியணையேற்றினர். அப்பொழுது பதினாறு வயது இளைஞராக இருந்த இவர் தம் வயதிற்கு மேலாகத் திறமை மிக்கவராகவும் சவனமுள்ளவராகவும் இருந்தார். கி.பி. 606 அக்டோபரில் இவர் தம் ஆட்சியைத் தொடங்கி, பரவலான போரில் ஏறக்குறைய ஆறு ஆண்டைச் செலவிட்டார்; கிழக்கிலிருந்து மேற்கு வரை அடங்காத எல்லோரையும் அடக்கிக்கொண்டு இவர் சென்றபொழுது, யானைகளின் சேணம் அவிழ்க்கப்படவில்லை; வீரர்களின் தலைக்கவசம் அகற்றப்படவில்லை. 5,000 யானைகளையும், 20,000 போர்க்குதிரைகளையும், 50,000 கலாட்படை வீரர்களையும் கொண்ட ஒரு படையை இவர் பெற்றிருந்தார். பஞ்சாப் நீங்கலாக, ஆனால், பீஹாரையும் வங்காளத்தின் பெரும் பகுதியையும் கொண்ட மேற்பாதி இந்தியா முழுவதும் இவர் வென்று கீழ்ப்படுத்திய பகுதியில் அடங்கும். குழந்தையற்ற விதவையாகிய தம் தங்கையுடன் இவர் கன்னோசியை ஆண்டார்; இவர் கன்னோசியைத் தம் நாட்டின் தலைநகராக்கினர். இதற்குப்பின், வட இந்தியாவின் மேலதிகாரத்தையும் மேலரசு நிலையையும் குறிப்பிடுகின்ற ஏற்பதற்குரிய பரம பக்தாரகர், பரமேஸ்வரர் போன்ற பட்டங்களை இவர் ஏற்றார். பதிவாகியுள்ள இவரது கடைசிப் போர் கி.பி. 643-ல் வங்காள விரிகுடாவின் கரையில் நடந்தது. சில ஆண்டுகளுக்குமுன் வாலபியோடு வெற்றிகரமானதொரு போர் நடத்தினர்; கிழக்கில், தொலைவிலிருந்த ஆஸாம் அரசர் இவரைக் கண்டு அஞ்சினர். ஆனால், இவர் தம் தந்தையைப் போல், அரச தந்திரத்தில் சூழ்ச்சிநயம் வாய்ந்தவராக இருந்தார். தம் தங்கையை இவர் நடத்திய விதத்தாலும், இவரோடு

சேர்ந்து கூட்டாக ஆட்சி நடத்தியதாலும், இவர் இறந்தபின் அரசைச் சேர்த்துக்கொண்டதாலும் இது வெளிப்படுகிறது. படைவலி, அரசதந்திரத்தின் இப்படிப்பட்ட சூழ்ச்சிநய இணைப்பால்தான் இவர் ஒரு பேரரசை நிறுவினர்; பஞ்சாபும் இராஜபுதனமும் நீங்கலாக, நர்மதை நதிக்கு வடக்கிலிருந்த நாடு முழுவதையும் இது கொண்டிருந்தது. இவரது நாற்பதாண்டு ஆட்சிக் காலத்தின்பொழுது, இவர் சாளுக்கிய அரசர் இரண்டாம் புலிகேசியுடன் போர் நடத்தியபொழுது, கி.பி. 620-ல் ஒரே ஒரு முறை தோல்வியுற்றார். இத் தோல்வி நர்மதை ஆற்றைத் தெற்கெல்லையாக ஏற்க இவரை வலியுறுத்தியது.

## இக்காலத்தின் தனிச்சிறப்புக் கூறுகள்

சுருக்கமான அரசியல் வரலாறு இதுதான். இதைச் சுருக்கமாகக் கருத்திற் கொள்ள திரளான சுயேச்சை அரசுகளை நாம் சித்திரிக்க வேண்டியிருக்கும். இவைகளிலிருந்து வென்று நிலங்கொள்ளும் வலிமையால் வலிமைமிக்க ஒரு பேரரசு படிப்படியாக எழுகிறது. இது ஒரு மெதுவான வளர்ச்சியேயாகும்; சிறிது குறைந்த வலிமையுடைய பல அரசுகளின் பற்றுறுதியைக் கட்டுப்படுத்துதல் இதனுடைய முதன்மையான பணியாகும். இத்தகைய பேரரசு, திறை செலுத்தும் தலைவர்களின் நெகிழ்ந்த கூட்டாகும்; இவர்களின் பற்றுறுதி அல்லது சுயேச்சை மேதகவாளர் அல்லது சக்கரவர்த்தியின் வலிமை அல்லது வலிமையின்மையில் சார்ந்திருந்தது. இத்தகைய பேரரசு, அரசரின் திறமையாகிய தனிப்பட்ட இயல்பை எப்பொழுதும் சார்ந்திருக்கிறது. எப்பொழுது இத் திறமை குறைகிறதோ அப்பொழுது பேரரசு வீழ்கிறது. குப்தப் பேரரசின் இயல்பும் இதுவேயாம். திடமான மக்களால் நடத்தப்பெற்ற தாக்குதலின் அதிர்ச்சியைப் பேரளவு மத்தியக் கட்டுப்பாட்டோடு இதனால் தாங்க முடியவில்லை. இது முறிவுற்றது. இதைச் சுற்றி சுயேச்சையான சிறிய அரசுகள் தோன்றின. ஒரு நூற்றாண்டிற்குப்பின் மற்றோர் அரசு தானேசுவர், மற்றொரு பேரரசு அமைப்பைத் திறமையுடனும் வெற்றிகரமாக நிலத்தை வென்று கீழ்ப்படுத்தியும் உருவாக்கிற்று. திறமையான மையக் கட்டுப்பாடு இன்மையாலும், இக் கட்டுப்பாட்டைக் கொண்டியங்கப் போதிய நிறுவனம் இல்லாததாலும் இதற்கு முந்தியதைப்போல் விரைந்தழிந்தது. இரட்டித்த உள்ளுரத்தோடு தல நலன்கள் மறுபடியும் நிலைபெற்றன; குலச்சார்புடைய தலைவர்களால் முதன்மையாகத் தோற்றுவிக்கப்பெற்ற திரளான அரசுகள் தோன்றின. இக்காலத்தின் அரசியல் நிலைபற்றிய சுருக்கமான விளக்கம் இதுவாகும்.

## அரசபதவியின் குணவியல்பு

ஓரளவு தனிப்பட்ட சூழ்நிலைகளாலும், ஓரளவு தொன்மை மாட்சியுடைய மரபுகளாலும் இக்காலத்திய அரசபதவியின் குணவியல்புகள் உறுதி செய்யப்படுகின்றன. பெருமைக்குரிய அரசபதவி அல்லது கோனாட்சிபற்றிய கடந்தகால மரபுகள், தெய்வீக செல்வாக்கையும் ஆளும் உரிமையையும் அரசருக்கு அளித்தன. இதற்கு முந்திய காலத்தில், அரசர்கள் பகட்டோசையுடைய நன்மதிப்பு வழக்குப் பட்டங்களை ஏற்றுக்கொண்டதை நாம் முன்னரே பார்த்துள்ளோம். இவை இக்காலத்தில் மறுபடியும் தோன்றுகின்றன; விலக்கின்றி அரசர்கள் இவற்றை ஏற்கின்றனர். குப்தர்கள்முதல் ஹர்ஷர்வரை சுதந்திர அரசர்கள், ஒருசில அரசர்களின் பற்றுறுதியைப் பெற்றிருந்தனர் என்ற பொருளில் மேதகவான நிலைக்கு உயர்ந்த இவர்கள். பரமேசுவரன், அதாவது, தன்னிகரற்ற தலைவன், மகாராஜாதிராஜ, அதாவது, அரசர்களில் தலைசிறந்தவன், பரமபக்தாரகர், அதாவது, மிக்க வணக்கத்திற்குரிய தலைவன் என்ற பட்டங்களைப் பெறத் தவறியதில்லை.[47] அலகாபாத் பிரசாஸ்தியில் சமுத்திரகுப்தர், 'மானிடர்களுக்குரிய சடங்குகளைச் செய்வதில் மட்டுமே இவர் மனிதர்; மற்றபடி தரையில் வசிக்கும் கடவுளாவார்'[48] என்று குறிப்பிடுகிறது; மேலும், குபேரன், இந்திரன், வருணன், அந்தகன் போன்ற கடவுளர்களின் ஓர் உருவம் என்று கயாவின் செப்பேடுகளில் குறிப்பிடப்படுகிறார்.[49] பிரபாகரவர்த்தனரும் இவருடைய மகன் ஹர்ஷவர்த்தனரும் பரமபக்தாரகர், மகாராஜாதிராஜா என்ற பட்டங்களை ஏற்றுக்கொண்டனர்.[50] யசோதர்மன்கூட ஜனேந்திரன், அதாவது, மக்களின் தலைவன், ராஜாதிராஜா, பரமேசுவரன் போன்ற பட்டங்களை ஏற்றுக்கொண்டனர். ஆட்சி செய்ய இறையுரிமை பெற்றிருந்தாக இந்த அரசர்களெல்லாம் கருதினர்.

## முந்துபிறப்புநிலைபற்றிச் சட்டமின்மை

மரபுவழியை ஒழுங்குபடுத்துவதற்கு முந்துபிறப்புநிலை பற்றிய சட்டமெதுவும் இல்லையென்பது அரச பதவியின் ஒரு சிறப்பியல்பாகும். எடுத்துக்காட்டாக, இறக்குந் தறுவாயில் உள்ள ஓர் அரசன், தனக்குப்பின், மிக்க தகவுடைய தன் மைந்தர்களில் ஒருவனை நியமனம் செய்தார். சமுத்திரகுப்தர், ஸ்கந்தகுப்தர் ஆகியோர், அரசரின் மற்ற மைந்தர்களை விலக்கிவிட்டு

47 Fleet, Cor. Ins. Ind., Vol. III, Nos. 1, 4, 5, 10, 12, 13; 32; 40, etc.
48 Cor. Ins. Ind., Vol. III, No. 1.
49 Ibid., No. 60.
50 Cor. Ins. Ind., Vol. III, No. 52.

தெரிவு செய்யப்பெற்றூர்களென்பது நாம் அறிந்ததே.[51] சில வேளைகளில் அமைச்சர்கள் தெரிவு செய்யும் உரிமையை செயல் படுத்தினர். இராஜ்யவர்த்தனரின் மரணத்திற்குப்பின், அமைச் சர்களால் ஹர்ஷர் இவருக்குப் பின்வாரிசாக ஒப்புக்கொள்ளப் பட்டதை நாமறிவோம். இந்தத் தெரிவிற்குப் படைத்தலைவர் சிம்மநாடர் (Simhanada) முக்கிய காரணமாக இருந்தாரென்பது பாணரின் கருத்தாகும். பின் யுவான்சுவாங் குறிப்பிடுவதுபோல், கிரகவர்மன் இறந்தபின், கன்னோசியின் நீள் அரசியலறிஞர்கள், அவர்களில் தலையாய பாணி (Bani) என்பவரின் அறிவுரைப்படி கொலைசெய்யப்பட்ட அரசராகிய இராஜ்யவர்த்தனரின் இளவ லாகிய ஹர்ஷவர்த்தனரை அவர்களின் அரசராகும்படி வரவேற் றனர்.[52] மற்ருெரு சமயம், மகனைப் புறக்கணித்துவிட்டு சகோ தரன் அரசனுகிறுன். இது எப்படியென்பது நமக்குத் தெரியவில்லை. ஸ்கந்தகுப்தருக்குப்பின் அரசராகிய புரகுப்தரைப் பற்றியது இது. அமைச்சவையின் ஆதரவு அல்லது அரசவையின் வலிமை மிக்க கட்சியால் இது நடந்திருக்கவேண்டும். மேலும், இவ்வுண் மைகள் முந்துபிறபபு நிலைச் சட்டம் இல்லையென்பதை மெய்ப் பிப்பதோடு, அரசுரிமையைப் பொறுத்தவரை, அரசவையின் வலிமைமிக்க கட்சியின் ஆதரவு அல்லது அமைச்சர்களின் ஆதரவு எப்பொழுதும் தேவைப்பட்டதென்பதையும் மெய்ப்பிக்கின்றன. அமைச்சர்களின் அல்லது அரச அலுவலர்களின் அதிகாரம் பெரு மளவு பெருகிற்றென்பதை இது சுட்டிக்காட்டுகிறது.

## வழிவழி வந்த அரசனுக்குரிய அலுவலர்கள்

இவர்களுடைய பதவிகள், இப்பொழுது மரபுவழி வந்தன வாக உள்ளதே உறுதியான சான்றுகும். தம் தலைவர்களைப் போலவே இவர்களும் பகட்டாரவாரமான பட்டங்களைச் சூட்டிக் கொண்டனர். மகாசம்திசி விக்ரசிகா, மகாவலா திகிரித்தா, மகாசேனுபதி, மகாசர்வதண்ட நாயகா போன்ற பகட்டோசை மிக்க பட்டங்கள் பெருமளவு எங்கும் காணப்படுகின்றன. மரபு வழிப் பதவிகளைப் பொறுத்தவரையில் மகாசம்தி விக்ரசிகா, சூரியதத்தர் என்னும் ஒருவர் அமர்த்திய வக்ரர் என்பவரின் கொள்ளுப் பேரர் என்றும், போகிக நரதத்தர் என்பவரின் பேரர் என்றும், போகிக ரவிதத்தர் என்பவரின் மகன் என்றும் நமக்குக் கூறப்படுகிறது[53]. விஷ்ணுவர்த்தனரின் அமைச்சராக தக்ஷா என்று ஒருவர் இருந்தார். இவர் ஓர் அமைச்சர் குடும்பத்

[51] Alld. Prasasti of Samudra Gupta and Junagadh Inscription of Skanda Gupta.

[52] Watters, 'Yuan Chwang, Vol. I. p. 343.

[53] Cor. Ins. Ind., Vol. III; No. 22.

ததைச் சேர்ந்தவர். இவரது முன்னோர்களில் ஒருவரான அபய தத்தர், ரவிக்கும் பாரியாத்திராவிற்கும் இடைப்பட்ட நாட்டின் இராஜஸ்தானியாராக (கவர்னராக) இருந்தார்.[54] 'அன்வய பிராப்தசாசிவ்ய' (Anvaya Praptasacivya), அதாவது, மரபுரிமையால் அமைச்சர் பதவியை அடைதல் என்ற சொற்றொடரைக் கொண்டிருக்கும் உதயகிரி கல்வெட்டும் இதே முடிவைத்தான் சுட்டுகிறது. பர்னதத்தர் என்ற பெயரைக் கொண்டிருந்த சௌராஷ்டிர கவர்னரொருவர், நாட்டின் ஒரு பகுதி அரசாங்கத்திற்குத் தம் மகன் சக்ரபாலிதர் என்பவரை அமர்த்தக்கூடும்.[55] அரசின் இவ்வுயர் பதவியாளர்கள் தம் பெருஞ் செல்வாக்கிற்கும், அதிகாரத்திற்கும், ஓரளவு தம் மரபுரிமைவழி வந்த பதவிக்காலத்திற்கும், ஓரளவு தம் சிறந்த தன்மதிப்பு நிலைக்கும் கடப்பாடுடையவர்களாக இருந்தனர். இவர்களில் பெரும்பாலோர் கீழ்நிலைத் தலைவர்களாக இருந்தனர். எடுத்துக்காட்டாக, இராஜ்யவர்த்தனரின் தலைமை அமைச்சராகிய பந்தி (Bhandi) என்பவர் இவருடைய பெற்றோரின் உடன்பிறந்தாரின் சேய் என்பதையும் சாமந்தராகிய மாளவ அரசனின் மகனுமாவார் என்பதையும் நாமறிகிறோம். ஹர்ஷரின் போர் அமைதிக்கான தலைமை அமைச்சராகிய 'அவந்தியென்பார், ஒரு குறுநிலத் தலைவராகத் தெரிகிறது.' ஹர்ஷரின் சகோதரரின் உடன் நண்பரும் குதிரைப் படையின் தலைவருமாகிய குந்தலரும் இப்படிப்பட்டவராக இருந்திருக்கலாம்.

## ஆட்சித் தளர்ச்சி

முன்காலத்தில்போல் இப்பொழுதும் கோனாட்சி இணையற்ற அரசாங்கமாக இருக்கையில், அரசபதவியின் மரபுகளும் திக்விஜயமும் கேடுறுது பெறப்பட்டன; மக்களின் ஊகத்தில் அரச பதவியும் திக்விஜயமும் பெருமளவு ஓங்கியிருந்தன. நாம் முன் குறிப்பிட்டவாறு அரசர், அசிந்தைய புருஷராகவும், தனதவருண இந்திர அந்தகருக்கு சமமாகவும்,லோகதாம தேவராகவும் ஆனார். இத்தகைய அரசருக்குத் திக்விஜயம் அல்லது நாட்டை வென்று கீழ்ப்படுத்துவது போன்றவை மிகச் சிறந்த சாதனைகளாயின. ஆனால், இது வெறும் தோற்றப் பொலிவேயன்றி வேறொன்றுமில்லை. அரசாங்கத்தின் மையம் நோக்கிய ஆட்சிமுறை அமைப்பின் குறைபாட்டை ஃபேசியன், யுவான்சுவாங் ஆகிய இருவரின் சான்று மிகத் தெளிவாக்குகிறது. 'மக்கள்தொகை, வருவாய் ஆகியவற்றிற்குக் கழகங்கள் இல்லை. அரச பண்ணைகளைப் பண்படுத்தியவர்கள்மட்டுமே விளைப்பயனில் ஒரு பகுதியைச் செலுத்-

[54] Ibid., No. 35.
[55] Junagadh Inscription of Skanda Gupta.

தினர்; தாம் விரும்புகிறவரைதான் இவைகளை உடைமையாகப் பெற்றிருக்கக் கடமைப்பட்டவர்கள். அரசர் நீதி வழங்கும்போது உடல் ஒறுப்புத் தண்டனை அளிப்பதில்லை. குற்றத்தின் தன்மைக் கேற்றவாறு ஒவ்வொரு குற்றவாளிக்கும் தண்டனையளிக்கப்பட்டது. கிளர்ச்சியைத் தூண்டும் முயற்சிகளில் அடிக்கடி ஈடுபடுகின்ற குற்றவாளியின் வழக்குகளில்கூட, அவனுடைய வலது கையை வெட்டிவிடுவதோடு நிறுத்திக்கொண்டார்கள். அரசரின் அலுவலர்கள் வருவாய்களைப் பங்கிட்டுக்கொண்டனர்'[56] என்று ஃபேசியன் குறிப்பிடுகிறார். அரசு வருவாய்த்துறை ஆட்சி வலிமையற்றிருந்ததை இக் கூற்று குறிப்பிடுவதாகத் தோன்றுகிறது. ஆகவே, குறுநிலத் தலைவர்கள் அளித்த திறைகளையும் பரிசுப் பொருள்களையும் அரசர் நம்பியிருந்தார். பழைய இந்து மரபிற்கொப்ப இவர்கள் அரசனுடைய மேதகவு நிலையை ஏற்றுக் கொண்டனர். விளையுளின் ஒரு பகுதி வாரமாகக் கொடுக்கப்பட்டது. நிலமானியம் அல்லது ஜாகிர் எனப்படுபவைகளை அரச அலுவலர்கள் பெற்றிருந்தனர். அரசர் தம் அலுவலர்களுக்கு நிலமானியம் வழங்கியமையால், இவர்கள் வலிமைமிக்கவர்களாகவும் பெரும்பாலும் இவரது அதிகாரத்தை எதிர்ப்பவர்களாகவும் வளர்ந்தனர். இக் கருத்து யுவான்சுவாங்கின் குறிப்புகளால் உறுதியாகின்றன. 'அரசாங்கம் பெருந்தன்மையுள்ளதாக இருந்தமையால் அலுவல் தேவைகள் மிகக் குறைவு. குடும்பங்கள் பதிவு செய்யப்படவில்லை; தனி மனிதர்கள் கட்டாய உழைப்பளிக்கும்படி வற்புறுத்தப்படவில்லை; அரசருக்குரிய நிலம் நால் வகைப் பாகுபாட்டிற்குட்பட்டிருந்தது. ஒரு பாகம் அரசாங்க செலவிற்கும் அரச வழிபாட்டிற்கும், ஒரு பாகம் பொது ஊழியர்களுக்கு நிலமானியம் வழங்கவும், ஒரு பாகம் அறிவுத்திறனுடையவர்களுக்குப் பரிசுகள் வழங்கவும், மற்றது பல்வேறு சமயப் பிரிவினர்களுக்கு நன்கொடை வழங்கிச் சிறப்புப் பெறவுமாக இந்நான்கு பங்குகள் பயன்பட்டன. வரிவிதிப்பு குறைவாகவும் கட்டாய ஊதியம் குறைவாகவும் பயன்படுத்தப்பட்டமையால், ஒவ்வொருவரும் தம் மரபுவழி வந்த பணிகளையே செய்துவந்ததோடு தம் சொந்த சொத்தையும் கவனித்துவந்தனர். அரசரின் பண்ணையாள்கள் விளைபொருளில் ஆறில் ஒரு பங்கை நிலவாரமாக அளித்தனர் தோணித் துறைகளுக்கும் சுங்கச் சாலைகளுக்கும் குறைந்த வரியைச் செலுத்தியபின் வணிகர்கள் இங்குமங்கும் தம் பொருளைப் பண்டமாற்றுச் செய்துகொண்டிருந்தனர். அரசாங்க சேவையில் அமர்த்தப்பட்டிருக்கிறவர்கள் தம் சேவைக்கேற்ப ஊதியம் பெறுகின்றனர். இவர்கள் இராணுவ சேவைக்காக அல்லது அரண்மனைக் காவலுக்காக வேறிடம் சென்றனர்;

[56] Giles, 'Fahien,' p. 55.

நிலைமைகளுக்கேற்ப அழைப்பாணைகள் அனுப்பப்படுகின்றன; உழைப்பிற்குரிய விருப்பூதியம் அறிவிக்கப்பட்டபின் பதிவு செய்துகொள்ளப்படுகிறார்கள். அரசின் அமைச்சர்களும் பொது அலுவலர்களும் இவர்களுக்குரிய நிலத்தைப் பெற்றிருக்கின்றனர். இவர்களுக்காக ஒதுக்கப்பட்ட மாநகர்கள் இவர்களைப் பேணின.[57] சிறிதளவான வரிவிதிப்பையும், மக்கள் கட்டுப்பாடின்றி இருந்ததையும், அரச அலுவலர்களுக்கு நிலமானியம் ஒதுக்கப்பட்டதையும் இங்கு நாம் காண்கிறோம். இவைகள், உறுதியாக ஆட்சித் தளர்ச்சியைக் குறிப்பிடுகின்றன. இப் பயணிகள், குப்தர்கள், ஹர்ஷர் ஆகியோரின் பேரரசாட்சியைப்பற்றித் தம் கருத்துகளைக் குறிப்பிடுவதோடு நிறுத்திக்கொண்டனர்.

## பேரரசின் தன்மை

உறுதியற்று இணைந்திருந்த குப்தர்கள், ஹர்ஷர் ஆகியோரின் பேரரசுக் கட்டமைப்பு இவர்களுடைய இறைமையை உள்ளடக்கிக் கொண்டிருந்தது. திக்விஜயக் கோட்பாடு பேரரசு, மண்டலம், சக்கரம் போன்றவைகளின் அடித்தளமாக இருந்தது. அதாவது, ஒன்றின் மேலாட்சி உரிமையை ஏற்றுக்கொள்ளும் நாடுகள்பற்றி காளிதாசர் தெளிவாகக் கூறியுள்ளார். ரகு, குடியிருப்பு வட்டாரங்களை வெற்றிகொண்டபொழுது, அரசர் மகேந்திரனை அவர் கைதுசெய்து பின் விடுதலைசெய்தார். இதனால் மகேந்திரன் ஒரு சுயேச்சையான அரசன் என்ற பெருமையை இழக்கிறானேதவிரத் தன்னுடைய நாட்டை இழப்பதில்லை.[57a] இவ் வரிகளை எழுதும் பொழுது கவிஞர் சமுத்திரகுப்தரை மனத்தில் கொண்டிருக்க வேண்டும். சமுத்திரகுப்தரின் அலகாபாத் கல்வெட்டிலும் இது குறிப்பிடப்பட்டுள்ளது. எப்படிச் சில அரசர்கள் போரில் கொல்லப்பட்டு அவர்களுடைய நாடுகள் சமுத்திரகுப்தரால் சேர்த்துக் கொள்ளப்பட்டனவென்பதையும்; சிலர் தோல்வியுற்றுப் பிடிபட்டனர் எனினும் அவர்கள் மறுபடியும் இவர்களுடைய நாடுகளில் திறை செலுத்தும் மன்னர்களாக்கப்பட்டனரென்பதையும், இறுதியில் எல்லோரும் அரசர்கள் தாமே எவ்வாறு பணிந்தனரென்பதையும் காட்டுவதற்கு இவருடைய வெற்றிகள் விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. ஹர்ஷருடைய திக்விஜயத்தின்பொழுது வெளியிட்ட பேரறிக்கையில் இது தெளிவாகத் தெரிகிறது.[58] பேரரசரின் கட்டளைக்கு கீழ்நிலை அரசர்கள் பணிவதில் மேதகவு நிலையின் அடையாளம் அடங்கியிருந்தது. சில சமயங்களில் இவர்கள் திறை செலுத்தினர்; 'பணிவிசைவு தெரிவிக்க' வந்தனர்;

[57] Watters, 'Yuan Chwang,' Vol. I, 176–177.

[57a] Grhita Pratimuktasya sa Dharmavijayinrpah, etc., Raghu, Canto 4.

[58] Mukherji, 'Harsha,' p. 23.

பெண்களைப் பரிசுப் பொருளாகக் கொண்டுவந்தும், தம் நிலங்களின் பயன்களை அனுபவித்தும், கட்டளைகளை நாடியும் மதிப்புமிக்க பணிகளால் சேவை செய்தனர்.[59] பிரயாகையில் ஐந்தாண்டிற்கொரு முறை கூடிய ஹர்ஷரின் பேரவைக்கு இருபது கீழ்நிலைத் தலைவர்கள் வந்திருந்தனர்.[60] திறை செலுத்தும் முறை நாடெங்கிலும் காணப்பட்டது. குப்தர்களுக்குமுன், திறை செலுத்தும் முறையொன்றிற்கு, முதலாம் பிரிவான சேனுவினுல் தோற்றுவிக்கப்பெற்ற வாகாடகர்களின் செல்வாக்கு ஓர் அடையாளச் சின்னமாக இருந்ததை சிவானி செப்பேடுகளிலிருந்து நாமறிகிறோம். இவர்கள் அசுவமேத வேள்விகள் நடத்தினர்.[61] இதன் பின் சில காலம், இந்தியாவில் எவரும் மேதகவு நிலையை அடையவில்லை! இதன் விளைவாக, அலகாபாத் கல்வெட்டு கூறுவது போல், அசுவமேத வேள்வி 'நீண்ட காலம் வழக்கொழிந்திருந்தது'. அசுவமேத வேள்வியை 'மீண்டும் வழக்கிற்குக் கொண்டு வந்தவர்' சமுத்திரகுப்தராவார்.[62] இதை நடத்திய பெருமையை இவருடைய பேரன் குமாரகுப்தர் பெற்றிருந்தார்.[63] குப்தப் பேரரசின் வீழ்ச்சிக்குப்பின், இத்தகைய ஒரு திறை செலுத்தும் முறையை அமைக்க மாளவ, வங்காள, தென்னிய அரசர்கள் முயன்றனர். ஆனுல், இடைநிலையான வெற்றியைத்தான் இது பெற்றது. இத்தகைய முறையை அமைக்க, படைவலிமையையும் அரச தந்திரத்தையும் சூழ்ச்சி நயத்தோடு பயன்படுத்துவதில் ஹர்ஷர் பெருமளவு வெற்றி பெற்ருர். குப்தர்களுக்குப்பின் இதே வேள்வியை நடத்தியவர்களில் இவர் முதன்மையானவர். அசைக்கமுடியாத முறையில் இது இவருடைய மேதகவு நிலையை நிலைப்படுத்தியது. இவ்வாறு தோற்றுவிக்கப்பெற்ற பேரரசு, 'செல்வாக்கு மண்டலங்கள்' அல்லது 'சக்கரங்கள்' என்று பெயர் பெற்றன. இவைகளைச் சக்கரவர்த்தி ஆட்சி செய்தார்.

## பேரரசு அரசாங்கத்தின் தன்மை

ஆனுல், திக்விஜயத்தால் அடைந்த செல்வாக்கு மண்டலம் அல்லது அரசர் வட்டத்திற்குப்பின், அதாவது, அரச தந்திரத்தாலும் அசுவமேத வேள்வியாலும் அடைந்த வெற்றி, அரச மேதகவாளர் அல்லது சக்கரவர்த்தி பேரரசை முழுமையாக

59 Allahabad Inscription of Samudra Gupta.

60 'Si-yu-ki's Bhudhist Records of the Western World,' tr. S. Beal, 2 Vols.; R. K. Mukherji, 'Harsha', p. 81.

61 Cor. Ins. Ind., Vol. III, Nos. 56.

62 Cor. Ins. Ind., Vol. III. Nos. 4, 10, 12, 13 & 60.

63 Smith, 'Early History of India,' p. 299.

வைத்துக்கொள்ள ஆட்சிஇயல் நிறுவனத்தை வரைவதுமுதன்மை யான பொறுப்பாகும். இதைப் பொறுத்தவரை, மகாதண்ட நாயக், மகாசம்கி விக்ரகிகா, மகாபிரதிஹாரா போன்ற பேரரசு அதிகாரிகளோடு மையப்படுத்தப்பெற்ற ஓர் அரசாங்க முறை இருந்ததென்று கருதப்படுகிறது. பல துறைகளையும், ஆட்சிப் பகுதிகளோடுகூடிய புக்தி (Bhukti), விஷ்ய, கிராமம் போன்ற வைகளையும் இவர்கள் ஆட்சி செய்தனர். இவர்கள் ஒவ்வொரு வரும் பேரரசரால் அமர்த்தப்பட்டனர். அரசாங்கம் மென்மைய முள்ளதாக இருந்ததென்று டாக்டர் முக்கர்ஜி கூறுகிறார். 'தன் னாட்சி, தவசுயேச்சை ஆகியவற்றை ஒருமுக அரசுகளும், இவை களின் மிகையான ஆட்சிமுறைகளும் பயன்படுத்திக்கொள்வதை இயல்பாகக் கொண்டிருக்கும் மத்திய அதிகாரிகளின் கட்டுப் பாட்டிலிருந்து மக்கள் சுயேச்சையாக விடப்பட்டனர்.'[64] அரச மேதகவாளர் அல்லது சக்கரவர்த்தி, மத்திய அதிகாரியாகத் தம் அமைச்சர்களின் உதவியோடு ஆட்சி செலுத்தினாரென்று டாக்டர் பெனிபிரசாத் கருதுகிறார்.[65]

உண்மைச் சான்றுகளால் மெய்ப்பிக்க முடியாத ஊகங்கள் இவை. குப்தர்கள், ஹர்ஷர் ஆகியோரின் பேரரசுகள், உண்மை யில் செல்வாக்கு மண்டலங்களைக்கொண்டிருந்தனவென்பதையும், இவைகளில் உருவத்திலும் அதிகாரத்திலும் மாறுபடுகின்ற தன் னாட்சித் தலைவர்களும் இனங்களும் இருந்தனவென்பதையும் முதலில் நாம் நினைவுபடுத்திக்கொள்ள வேண்டும். இவைகளின் தன்னாட்சியுரிமையை ஊறுபடுத்தவோ, முற்றிலும் அகற்றி விடவோ இயலாது. தலமாறுபாடுகளைத் தக்கவைத்துக்கொள்ள வெண்டும். சமுத்திரகுப்தர் சில அரசர்களை வென்று அவர்க ளுடைய நாடுகளைத் தம்தம் நாட்டோடு சேர்த்துக்கொண்டார் என்பதையும், மற்றவர்களை வென்று அவர்களே ஆட்சிசெய்ய அனுமதித்தார் என்பதையும், இறுதியாக எல்லைப்புற அரசர்கள் தாமாகவே பணிந்து, சேவை, பரிவு, திறைகள் ஆகியவற்றை உவந்தளித்தனரென்பதையும் முன்னரே பார்த்தோம். இவை களைத் தவிரக் குறிப்பிட்ட தன்னாட்சி இனங்களும் இருந்தன; எனவே, மாறுபடுகின்ற அளவில் கீழ்ப்படுகின்ற பல்வகை அரசு களும் குப்தப் பேரரசில் அடங்கியிருந்தன. ஹர்ஷரின் பேரரசின் தன்மையும் இப்படித்தானிருந்தது. இப்பலவகையான நாடுகளை ஒரேபடித்தானதாக மாற்றியமைக்க முடியவில்லை. எனவேதான், ஒரேமாதிரியான மத்திய அரசாங்கத்தை இவைகள்மீது சுமத்த

[64] Mukherji, 'Harsha,' p. 101.

[65] Beni Prasad,—'The State in Ancient India,' pp. 292 et seq.; Rai Chaudhuri, op. cit., pp. 380 et seq.

முடியவில்லை. வசதிக்காக மத்திய அரசாங்கத்தைப் பல மாநிலங்கள்ாக, மாவட்டங்களாக, கிராமங்களாக அல்லது தல அரசாங்கங்களாகக்கூடப் பிரிக்க இயலவில்லை. ஒருமுக அரசின் கட்டமைப்பாக இது இருந்திருக்கும் குப்தர்கள், ஹர்ஷர் ஆகியோரின் பேரரசில் இதைச் செய்ய முற்படுதல் இயலாததொரு துணிவான செயலாகும். ஆகையால், தலமாறுபாடுகளை மதிக்கிறதும், அரசியல் அமைப்புகளின் பலவகைகளைத் தக்கவைத்துக்கொள்ளுகிறதும், அதே சமயத்தில் ஒருவரின் மேதகு நிலையை எல்லோர் மீதும் புகுத்துகிறதுமான அரசாங்க முறையை வகுக்கவேண்டியிருந்தது. இச் சூழ்நிலைகளின்கீழ் மத்திய அரசாங்கம், அதாவது, சக்கரவர்த்தியின் அரசாங்கம், தலஅரசாங்கத்தின் எல்லா நடைமுறைத் தொடர்புகளிலும் பயனுடையதாக இருக்கும். பேரரசிற்குட்பட்ட எல்லாப் பாகங்களின் பற்றுறுதியையும் தக்கவைத்துக்கொள்ள இது நாடும்; அடுத்து, தம் நாட்டையும் அரசற்குரிய சொந்த நிலத்தையும் முழுத் திறமையோடு ஆட்சிசெய்ய முற்படும். மேல்நிலை அரசரின் சொந்த நாடுதான் முதலில் இவருக்குச் சொந்தமாக இருந்தது. எடுத்துக்காட்டாக, ஹர்ஷரின் தானேசுவர நாட்டைக் குறிப்பிடலாம். இந்த இரண்டு பணிகளையும் செய்ய, மரபுவழி வந்த திறமையும் பற்றுறுதியும் மிக்க அலுவலர்களையும், திறை செலுத்தும் இராஜாக்களையும் மகா இராஜாக்களையும், சாமந்தர்களையும் பெரும் சாமந்தர்களையும் மேதகவு நிலை அரசர்களின் ஆட்சியோடு அரசர் தாராளமாகப் பயன்படுத்திக்கொண்டார். சிலர் அரசரின் சொந்த நாட்டிலும் சிலர் பேரரசின் உறுப்பு நாடுகளிலும் பொறுப்பேற்பது வழக்கம். இதனால்தான் சமுத்திரகுப்தரின் காலத்தில் மகாதண்ட நாயகர் துருவபூதியின் மகன் மகாதண்ட நாயகர் ஹரிசேனரையும், மந்திரி சேகரசுவாமியின் மகன் பிரிதிவி சேனரையும், மாண்ட்சோரில் விஸ்வவர்மா, பந்துவர்மா போன்ற மரபுவழி ஆளுநர்களையும் நாம் பெற்றிருக்கிறோம். இதனால்தான், சமுத்திரகுப்தருக்குத் திறைசெலுத்துகிறவர்கள் 'மாண்புமிக்க சேவை செய்ய விரும்பினர்; இதன் உயர் அதிகாரிகளாகச் சேவை செய்வதையே இவர்கள் கருதியிருக்கலாம். இதனால்தான் ஹர்ஷரின் பன்சேகர கல்வெட்டில், மகாசாமந்த மகாராஜா பாணரையும், மதுபன் கல்வெட்டில், மகாசாமந்த ஸ்கந்தகுப்தனையும் சாமந்த மகாராஜா ஈசுவரகுப்தனையும் பேரரசின் அதிகாரிகளாக நாம் பெற்றிருக்கிறோம். அவந்தி, அதாவது, அவந்தியின் தலைவர், ஹர்ஷரின் போர் அமைதிக்கான தலைமை அமைச்சரென்று பாணன் மறுபடியும் குறிப்பிடுகிறார்; இறுதியாக, மிக முக்கியமான சமயங்களில் குமாரராஜா துருவபட்டர் பெரும்பாலும் அரசரோடுதான் இருந்தாரென்றும், கன்னோசியில் ஹர்ஷர் அரச

முறையில் நுழைந்தபொழுது இவரைத் துருவபட்டர் வரவேற்றார் என்றும் யுவான்சுவாங் கூறுகிறார்.[66] செல்வாக்கு மண்டலத்தை முழுமையாகப் பேணுதற்குத்தான் ஹர்ஷர் தம்முடைய நாடு முழுவதிலும் சோதனை செய்யப் பயணம் செய்ய வேண்டியிருந்தது.[67] தம்முடைய பேரரசின்மீது மேதகவு நிலையைத் தக்கவைத்து இந் நேர்முகத் தொடர்பின் தகவை இவர் நன்குணர்ந்திருந்தார். ஆகவே, பேரரசின் மக்களை நேர்முகமாக ஆட்சி செய்வதில் மத்திய அரசாங்கத்தின் அதிகாரத்தில் மிகப் பெரிய குறைபாடுகள் இருந்தன; பேரரசின் இணைந்த பகுதிகளோடு ஓரளவு பரவலான கட்டுப்பாடு வைத்திருப்பதில் மன நிறைவு பெற்றது.

## மத்திய அரசாங்கம்

இதைத் தொடர்ந்து, தாமோதர்பூர் செப்பேடுகளின் சான்றின் அடிப்படையில் செய்த கூற்றுகளை நாம் ஆராயவேண்டும். குப்தர்களின்கீழ் மத்திய அரசாங்கம்தான் மாநில ஆளுநர்களை அமர்த்துவது வழக்கம்; இவர்கள் தட்பாதபரிகிரகிதா (அதாவது,பேரரசரின் பாதங்களால் ஏற்றுக்கொள்ளப்பட்டவர்கள்) என்றும், உபாரிக மகாராஜா போன்ற பட்டங்களைப் பயன்படுத்த உரிமை பெற்றவர்கள் என்றும் விவரிக்கப்படுகின்றனர். இவர்கள் பேரரசு அரசாங்கத்திற்கு நேர்முகமாகப் பொறுப்பு உடையவர்களாக இருந்தால், இக் காலத்தின் வட்டார ஆணையாளர்கள் அனுபவிக்கும் அளவிற்கு இவர்களுடைய நிலையை ஒப்புநோக்கலாம். குப்தர்களின் மாநில ஆளுநர்கள் விஷயபதிகளை (மாவட்ட அதிகாரிகளை) அமர்த்தும் அதிகாரம் பெற்றிருந்தனர்; ஆயுக்தகர் அல்லது குமாரமாத்தியர் என்ற பட்டங்களைப் பயன்படுத்தும் உரிமை பெற்றிருந்த தனியுக்தர் (அவர்களால் அமர்த்தப்படுகின்றவர்)என்று இவர்கள் விவரிக்கப்படுகின்றனர். விஷயபதிகள் தம் தலைமையகத்தை அதிஷ்டானங்களில் (நகரங்களில்) பெற்றிருந்தனர் என்பதும், இங்கு இவர்கள் தம் அதிகரணங்களைப் (அலுவலகம் அல்லது நீதிமன்றங்களை) பெற்றிருந்தனர் என்பதும் குறிப்பிட மிகச் சுவையாக இருக்கிறது. புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட செப்பேடுகள், சிறப்பாக எண்கள் 1, 2, 4, 5 போன்றவைகளிலிருந்து பெற்ற மற்றொரு சுவைமிக்க வரலாற்று உண்மை, விஷயபதிகளின் ஆட்சிப் பணிகளில் (சம்வியவகார) ஆலோசகர் கழகம் ஒன்று உதவியதாகும். அக் காலத்தின் பல்வேறு முக்கியக் குழு நலன்களின் நான்கு பகர ஆள்களைக்கொண்டு இக் கழகம் அமைந்தது. அதாவது, (1) நகர

[66] Watters, 'Yuan Chwang,' Vol. I, p. 344.
[67] Mukherji, 'Harsha,' p. 84.

சிரஸ்தின், நகரின் செல்வ மிகுந்த மக்களின் பிரதிநிதி; நகரின் பெருஞ் செல்வந்தர். (2) சார்தவாகர் (தலைமை வணிகர்); பல்வேறு வணிகக் கழகங்களின் பிரதிநிதி. (3) பிரதம குலிகா (தலைமைக் கைவினைஞர்); பல்வேறு கைவினைஞர் பிரிவுகளின் பிரதிநிதி. (4) பிரதம காயஸ்தா (தலைமை எழுத்தர்); இவர் காயஸ்த வகுப்பினரின் பிரதிநிதியாக இருந்திருக்கலாம் அல்லது இக் காலத்திய தலைமைச் செயலாளரைப்போல ஓர் அரசாங்க அலுவலராக இருந்திருக்கவேண்டும்[68]

இக் கருத்தறிவிப்புகள் தகவுடையனவாக இருப்பதைப் போல், குப்தர்களின் பேரரசாட்சி மத்திய அரசாங்கத்தையும் மாநில அரசாங்கங்களையும் கொண்டிருந்ததென்று இங்கு நாம் ஏற்றுக்கொண்டிருக்கிறோம். இவைகள் முழுதும் மையப்படுத்தப்பட்டிருக்கின்றன. மாநில ஆளுநர், மாவட்ட அலுவலர்கள் ஆகியோரின் அமைப்புகளை மாநில அரசாங்கம் கொண்டிருந்தது. அரசருக்கும் மாநில ஆளுநருக்கும் உள்ள தொடர்பு யாதெனில், ஆளுநர் அரசரால் அமர்த்தப்பெற்றவர் என்பதுதான். இது மற்றக் கல்வெட்டுகளால் ஆதாரம் பெறுகிறது.[69] எல்லா மாநிலங்களுக்கும் அரசர் கோப்தர் (Goptas) அல்லது ஆளுநர்களை அமர்த்தினர் என்று அறிகிறோம்—சர்வேசு தேசேசு வித்ஹாயகோப்திரன்.

பேரரசு முழுவதும் மாநிலங்களாகவும், மாநிலங்கள் மாவட்டங்களாகவும் பிரிக்கப்பட்டனவென்பதும், மத்திய அரசாங்கத்தால் கட்டுப்படுத்தப்பெற்ற பல அதிகாரிகளால் இந்த மாநிலங்களும் மாவட்டங்களும் ஆட்சி செய்யப்பட்டனவென்பதுமான முடிவை இது வலியுறுத்தாது. முதலில், ஆளுநர்கள் அரசரால் அமர்த்தப்பட்டிருந்தாலும் அவர்கள் அரசருக்குப் பொறுப்புடையவர்களல்லர். மாநில ஆளுநர்கள், அரசர் ஆகியவர்களுடன் மாவட்ட அதிகாரிகளின் தொடர்பும் இதே போல்தான் இருந்திருக்கும். இங்கு உய்த்துணரப்பட்டதென்னவெனில், அரசரின் சொந்த அரசு என நாம் குறிப்பிட்டதற்குப் பொருத்தமாய் இருக்கிறது என்பதே. ஏனெனில், தாமோதர்பூர் கல்வெட்டுகளின் காலத்தில், அதாவது, கி.பி. 443—533-ல், பேரரசு அளவில் சுருங்கிக்கொண்டுவரும்பொழுது, தாய்நாட்டின் மாநிலமல்லாத வேறெந்த மாநிலமும் நேர்முகமாகக் கட்டுப்படுத்தப்படவில்லை. இச் செப்பேடுகள் குறிப்பிடுகின்ற புந்ரவர்த்தன மாநிலம்—புக்தி—தாய்நாட்டிற்குள் இருந்தது;

[68] Ep. Ind. XV, pp. 128—129.

[69] Nos. 1' and 18 of Cor. Ins. Ind., Vol. III; Madhuban Plate of Harsa.

ஒன்று, இதை புத்தகுப்தனும் பானுகுப்தனும் இன்னும் வைத்திருந்தனர்;[70] இரண்டு, பீகாரின் அரசர்கள் வடக்கு வங்காளத்தைப் பொதுவாகத் தம் நாட்டோடு சேர்த்துக்கொண்டனர். ஆகவே, பேரரசு சிதைவுற்ற காலத்தில் சொந்த மாநிலத்திற்கு எது மெய்யாக இருந்ததோ அது திக்விஜயத்தாலும் அரசதந்திரத்தாலும் ஆக்கப்பட்டதும், மேல்நிலை அரசருக்குப் பற்றுறுதியின் ஒரே ஒரு குறைபாட்டைமட்டுமே இத்தலைவர்கள் அறிந்திருந்ததும், ஒரு பேரரசின் மத்திய அரசாங்கத்திற்கு மெய்யாக இருந்திருக்கமுடியாது. உண்மையில் அதிகார வர்க்கத்தின்மீது ஆட்சிக் கட்டுப்பாட்டை அனுமதிக்கின்ற நிலப் பிரிவுகளோடு திறை செலுத்தும் முறை ஒத்திருக்கவியலாது. பர்னதத்தன், விஸ்வவர்மன் போன்ற மாநில ஆளுநர்கள், தாம் விரும்புகின்ற பதவிகளுக்குத் தம் மைந்தர்களை அமர்த்த முடியுமானால், பேரரசின் மத்திய அரசாங்கமொன்று உண்மையில் இருந்தது என்பதைக் காட்டிலும் பெயரளவில்தான் இருந்ததென்பது உறுதி. வசார்க் (Vasarh) முத்திரைகளை ஆதாரமாகக்கொண்டு வைசாலியைப் (Vaisalyadhi-sthanadhikarana)[71] போல் மாவட்ட அலுவலகங்கள் இருந்தனவென்று மறுபடியும் உறுதியாகக் கூறினால், வைசாலி தாய்நாட்டின் ஒரு பகுதி என்றும், எனவே, அது உள்துறையின் ஒரு பகுதி என்றும் கூறி நாம் மேலே குறிப்பிட்ட அதே வாதத்தை எடுத்துக்கூறலாம். ஆகவே, தாமோதர்பூர் செப்பேடுகள், வசாரக் முத்திரைகள் ஆகியவற்றின் சான்று, குப்தப் பேரரசில் மையப்படுத்தப்பட்ட அரசாங்கம் இருந்தமைக்கு முடிவான சான்றில்லை.

## ஆட்சிப் பரப்புகள்

எவ்வாறாயினும், பேரரசில் தேசம் அல்லது புக்தி, அதாவது, மாநிலம், விஷயா, அதாவது, மாவட்டம் போன்ற ஏற்றத்தாழ்வான, குழம்பிய ஆட்சிப் பரப்பு முறை இருந்தது. மேல்நிலை அரசரின் செல்வாக்கு மண்டலத்தை இப் பரப்புகள் பின்பற்றின; எனவே, இவை பரப்பில் மாறிக்கொண்டுமிருந்தன. புக்தி, விஷயா ஆகியவற்றின் தொடர்புடைய பரப்புபற்றிய ஒரு கருத்தைக் கங்கைக்கும் யமுனைக்கும் இடையேயுள்ள நாட்டை 'விஷயா'[72] என்பதிலிருந்தும், யமுனைக்கும் நர்மதைக்கும் இடையேயுள்ள நாட்டை 'புக்தி'[73] என்பதிலிருந்தும் உருவாக்கிக்கொள்ளலாம். சுகுலி

[70] Jaiswal, Modern Review, Aug. 1933.
[71] Annual Report of the Archaeological Survey of India, 1903–4, pp. 101, et seq.
[72] Cor. Ins. Ind., Vol. III, No. 16.
[73] Ibid., No. 19.

தேசம்,[74] நகர் புக்தி,[75] சுராஷ்டிரா[76] போன்ற மாநிலங்களும், லாதா,[77] அந்தர்வேதி,[78] அரிக்கின[79] போன்ற விஷயாக்களும் இருந்தன. அரசரின் செல்வாக்கு மண்டலத்தைப் பின்பற்றி மாநிலங்கள் அமைந்ததால் ஒவ்வொரு சமயமும் புதிய மாநிலங்கள் தோன்றின. எடுத்துக்காட்டாக, ஹர்ஷரின் காலத்தில், யமுனைக்கும் நர்மதைக்கும் இடைப்பட்ட நாட்டைக்கொண்ட அவ்வளவு பெரியதொரு மாநிலத்தை நாம் காணவில்லை; இதை மகாராஜா சுரஸ்மி சந்திரன் (Surasmi chandra) பொறுப்பில் புதகுப்தன் வைத்தான்;[80] ஹர்ஷரின் சிரவஸ்தி புக்தியும்[81] (Sravasti Bhukti) அஹிச்சத்திர புக்தியும் (Ahichatra Bhuktti)[82] குப்தர்கள் காலத்தில் இருந்ததாகத் தோன்றவில்லை.

## அரசாங்கத்தின் அலுவலர்கள்

இப் பகுதிகளின் ஆட்சித் தலைவர்களின் கடமைபற்றியும், மத்திய நிறுவனத்துடன், அதாவது, மேலநிலை அரசருடன் இவர்களுடைய தொடர்புபற்றியும் உறுதியாக எதுவும் சொல்லமுடியாது. பதவிகளின் பகட்டோசை மிக்க, சொற்பகட்டான பட்டங்களிலிருந்து நாம் எதையும் ஊகிக்கமுடியாது; இவர்களில்சிலர் பேரரசு அலுவலர்களாக இருந்தனரா அல்லது திறை செலுத்தும் தலைவர்களின் அலுவலர்களாக இருந்தனரா என்பதையும், பேரரசின் மத்தியில், மாநிலத்தில், மாவட்டத்தில், கிராமத்தில் இருந்த அலுவலர்களைப்போல் வெவ்வேறு வகையான அலுவலர்களா என்பதையும், திறை செலுத்தும் அரசர்களின் இதேபோன்ற அல்லது வேறு வகையான அலுவலர்களா என்பதையும் திட்டவட்டமாகக் கூற இயலவில்லை. அதாவது, மகாவலாதிகிருதா, மகாசப்தலாகிருதா போன்ற சொற்களில் காணும் முன்னடைமொழியாகிய 'மகா' என்ற சொல், இந்த அலுவலர்கள், மேல்நிலை அரசர் அல்லது பேரரசு அலுவலர்கள் ஆகியோருக்குரியவர்கள் என்பதைச் சுட்டிக்காட்டவில்லை; இதேபோல் முன்னடைச்சொல் சேர்க்கப்படாத வலாதிகிருதா, அக்சபடலாதிகிருதா (Aksapataladhikrta) போன்ற சொற்கள், திறைசெலுத்துபவர்களுக்குரியன என்று குறிப்பிடவுமில்லை. குப்தர்கள், ஹர்ஷர் ஆகியோரின் பேரரசு அலுவலர்களின் பட்டங்கள் பகட்டோசை

[74] Ibid., No. 5.
[75] Ibid., No. 46.
[76] Ibid., No. 14.
[77] Ibid., No. 18.
[78] Ibid., No. 16.
[79] Ibid., Nos, 2 & 36.
[80] Cor. Ind. Ins., Vol. III, 10.
[81] Madhuban Inscriptions of Harsa.
[82] Banskhera Plate of Harsa.

உடையனவாகவும் கவர்ச்சிகரமாகவும் இருந்தன. எடுத்துக்காட்டாக, பரிபிராஜக மகாராஜ ஹஸ்தின், சர்வநாதர் போன்ற குறைந்த வலிமையுடைய அரசர்களின் பட்டங்களைப்போல் பேரரசு அலுவலர்களின் பட்டங்கள் இருந்தன. இவர்களில் முன்னவர் மகாசந்தி விக்ரகிக, மகாபாலாதிகிருதா[83] போன்றவர்களையும், அமாத்தியர், போகிகர்[84] போன்றவர்களையும் பெற்றிருந்த இவர் குப்தர்களின் ஒரு குறுநில மன்னரேயாவார். மகாசந்தி விக்கிர கிகர், மகாபாலாதிகிருதா, போகிகர், அமாத்தியர்[85] போன்ற பட்டங்களை மகாராஜா சர்வநாதரின் அலுவலர்களும் பெற்றிருந்தனர். குப்தர்களுக்குத் திறை செலுத்துகிற மன்னராகிய சர்வநாதரின் செயலாளர் மகாசந்திவிக்கிரகிகர் என்ற பட்டத்தையும், ஹர்ஷரின் படைத்தலைவரும், சர்வநாதரின் படைத்தலைவரும், குப்தர்கள், ஹர்ஷர் ஆகியோரின் அலுவலர்களும் அவர்களுடைய சில தலைவர்களும் இதே பட்டங்களைப் பெற்றிருக்கையில், சமுத்திரகுப்தரின் வெளியுறவுச் செயலாளர் சம்திவிக்ரகிகா[86] என்ற எளிய பட்டத்தையும் பெற்றிருந்தால், உண்மையில் இரண்டு முறையான ஆட்சி இருந்ததா இல்லையா என்பதையும், ஒவ்வொன்றும் தன் சொந்த மண்டலத்தில் இருவகையாக நடைபெற்றனவா இல்லையா என்பதையும் கூறுவது கடினமாகும். மேல்நிலை அரசர் அல்லது சக்கரவர்த்தியின் அரசாங்க நிறுவனத்தை முழுமையாக சாமந்தர் அல்லது திறை செலுத்துவோர் வைத்திருக்க முடியுமானால், பின் சாமந்தர்கள் தம் அரசுகளை ஆண்டதைப்போல்தான் சக்கரவர்த்தியும் ஆட்சி செய்திருக்கவேண்டுமென்று உய்த்துணரவேண்டும்.

இது நாட்டின் மரபுகளுக்கும் சட்டத் தொகுப்புகளின் நீதி வாசகங்களுக்கும் முற்றிலும் பொருத்தமாக இருந்தது. இந்த மரபின் எதிரொலியைக் காளிதாசரின் இலக்கியங்களிலும் சமுத்திரகுப்தரின் அலகாபாத் கல்வெட்டிலும், பாணன் விவரித்துள்ள திக்விஜயத்தின்போது வெளியான ஹர்ஷரின் பேரறிக்கையிலும் நாம் பெற்றிருக்கிறோம். மனுவைப்போன்ற சட்டத் தொகுப்புகளின் இவ் வினைப்பயனுக்கு நாம் தீர்வு முடிவைப் பெற்றிருக்கிறோம்.[87] உண்மையில் நாடு முழுவதும் தன்னாட்சிப் பரப்புகள் புள்ளிகளைப்போல் சிதறலாக இருந்தன. ஆகையால், பேரரசின் நிலப்பிரிவுகள் ஆட்சிப் பரப்புகளாக இருந்தனவென்றும், அவைகளில் ஆள்களை அமர்த்தி அரச மேதகவாளர் மத்தியிலிருந்து கட்டுப்படுத்தினரென்றும் நாம் சொன்னால், அது நிலையைத் தவறாக அறிந்துகொள்வதாகும். மகாசாமந்தர், மகாராஜா, தௌசாத

83 Cor. Ind. Ins., No. 23.
84 Ibid., No. 22.
85 Ibid., Nos. 28 & 30.
86 Ibid., No. 1.
87 Ibid., vii, 202—3.

சானிகர், பிரமாத்தரர், ராஜஸ்தானியர், குமாரமாத்தியர், உபாரிகர், விஷயபதிகள் ஆகியோரை மதுபூபன் செப்பேடு கூறுகிறது. இங்கு மகாசாமந்தர், மகாராஜா போன்றோருடன் விஷயபதிகளுமிருந்தனர்; அலுவலர்களின் தெளிவற்ற ஒரு படிநிலை முறையை இவைகள் அமைத்தன. இவர்களில் சிலர், குறிப்பாக சாமந்தர், அரசர்கள் போன்றோர், பேரரசின் பல்வேறு பகுதிகளின் ஆளுநர்களாக இருந்தனர். மாநிலங்களையும் மாவட்டங்களையும் கட்டுப்படுத்தவும் ஆட்சி செய்யவும் குறுநிலத் தலைவர்கள் அமர்த்தப்பட்ட கல்வெட்டுக் குறிப்புகள் பலவற்றை நாம் பெற்றிருக்கிறோம். மேல்நிலை அரசருக்கு மற்றத் தலைவர்கள் கடமை மாறுதவர்களாக இருக்கும்படி பார்த்துக்கொள்வது இவர்களின் கடமையாகும். இவர்களுடைய தல அறிவும் தலச் சிறப்பும் இப் பணிக்கு இவர்களைத் தகுந்தவர்களாக்கின. பெரும்பாலும் இக் குறுநிலத் தலைவர்களின்வேண்டுகோளுக்கிணங்க, இவர்களுடையநாட்டிற்கு இவர்களே அமர்த்தப்பெற்றனர். தம் சொந்தப் புக்திகளையும் விஷயங்களையும் (Visaya) பேரரசர் சார்பில் தாமே ஆட்சி செய்ய வேண்டிக்கொண்டதை சமுத்திரகுப்தரின் அலகாபாத் கல்வெட்டு கூறுகிறது. பேரரசின் பகுதிகளைப் பேரரசரின் சார்பில் கட்டுப்படுத்த குறுநிலத் தலைவர்கள் அமர்த்தப்பட்டனரென்று நாம் உறுதியாகக் கூறலாம். இவர்களுடைய கட்டுப்பாடு இக்கால மாவட்ட அல்லது கோட்ட அதிகாரியின் கட்டுப்பாட்டைப் போலன்றி இக்காலத்திய அரசியல் செயலியின் கட்டுப்பாட்டைப் போலிருந்தது. சக்கரவர்த்தியின் சொந்த அரசோடு (தாய் நாட்டோடு) திறை செலுத்தும் தலைவர்களில் சிலர் தொடர்பு படுத்தப்பட்டிருந்தனர். இதை ஹர்ஷரின் பன்சேகர செப்பேடு கூறுகிறது.

## நிதியியல் முறை

மத்திய அல்லது பேரரசு நிதியியல் முறை என்பதொன்றுமில்லை என்பது தெளிவு. அலகாபாத் கல்வெட்டில் கூறியிருப்பதைப்போல் இனங்களிடமிருந்தும் குறுநிலத் தலைவர்களிடமிருந்தும் திறை இறுக்குமாறு எல்லா ஆளுநர்களும் விஷயபதிகளும் கேட்டுக்கொள்ளப்பட்டனர். ஆளுநர் வழியாக இத்தகைய திறைகளை ஒழுங்காகச் செலுத்துவதுகூடப் பழக்கத்தில் இருந்ததாகத் தெரியவில்லை; ஏனெனில், இத் தலைவர்கள் அல்லது சாமந்தர்கள் அரசரை நேரில் கண்டாடுவது வழக்கம். இத்தகைய சமயங்களில் பரிசுகள் கொடுத்தல் வழக்கம். இவைகள் திறைப் பொருள்களாகக் கொள்ளப்பட்டன.[88] புக்தி அல்லது போகிகம்

[88] Cor. Ins. Ind., Vol. III, No. 1.

(Bhogika) அரச வருமானத்திற்குரியவைகளை உட்கருத்தாகக் கொண்டிருந்தது; மாநிலங்களும் நிதியியற் பிரிவுகளாக இருந்திருக்கவேண்டுமென்பதை இது காட்டுகிறது.'[89] என்று பெனி பிரசாத் கூறும்பொழுது, அதாவது, புக்தி, தேசம் ஆகிய பேரரசின் ஒவ்வொரு பகுதியின் தலைவர்கள் அல்லது குறுநில மன்னர்களிடமிருந்து பொதுவாகச் சில திறைகள் அரசருக்குச் சேரவேண்டுமென்பதை நாம் நன்குணரலாம். இதனால்தான் ஒரு மாநிலத்தை ஒரு நிதியியற் பிரிவு என்று சொல்லுகிறோம். மத்திய அரசாங்கம் புகுத்திய உண்மையான விளையுளின் மதிப்பீட்டை அடிப்படையாகக்கொண்டு மாநிலங்களிலும் மாவட்டங்களிலும் ஓர் ஒழுங்கான வருவாய் முறை இருந்தது என்று பெனிபிரசாத் கருதினால், பின் அவரோடு நாம் உடன்பட முடியாது. ஏனெனில், இதை மெய்ப்பிக்கச் சான்றில்லை. மாவட்ட அலுவலர், 'பிரதம காயஸ்தரைத் தலைவராகக்கொண்டு எழுத்தர்களையும் காயஸ்தர்களையும் கொண்ட பெரியதொரு செயலாண்மையகத்தைப் பெற்றிருந்தார் என்பதுபற்றிய முடிவுகளை நாம் முன் குறிப்பிட்ட காரணங்களுக்காக ஏற்க முடியவில்லை.[90] ஆகையால், மகாசாமந்த மகாராஜா பாணன் மகாக்ஷப்படலாதிகிருதர் (Mahaksapataladhikrita), அதாவது, பதிவுகளின் நாயகம் ஒருவர் இருந்தார் என்று நாம் அறியும்பொழுது, பேரரசின் பதிவுகளைத் தொகுத்துப் பேணிக் கட்டுப்படுத்துபவர் என்ற பொருளில் பேரரசின் பதிவுகளின் தலைமை அலுவலராக அவர் இல்லை. ஆனால், இவர் மேல்நிலை அரசராகிய ஹர்ஷரின் பதிவுக் காப்பாளராக மட்டுமே இருந்தார். பேரரசு முழுவதும் பரவியிருந்த படைகளை மகாசேனாதிபதி கட்டுப்படுத்துபவராக இல்லாமல் பெயரளவில் ஓர் அதிகாரியாக இருந்தார்; ஆனால், அவர் தம் படைக்குத் தலைவராக மேல்நிலை அரசருக்குச் சேவை செய்தார். இதேபோன்ற மாற்றங்களுடன், மகாசந்திவிக்கிரகிகர், மேதகவரசரின் வெளியுறவுச் செயலாளராகமட்டுமே இருந்தார். மகாதண்ட நாயகர், மகாபிரதிஹாரா, பண்டாராதிகிருதர் போன்றோர்களும் இப்படித்தான் இருந்தனர். மேல்நிலை அரசரின் சொந்த ஆட்சிப் பகுதியைச் சேர்ந்த, பெருமிதத்திற்குரிய தல அலுவலர்கள்தாம் இவர்கள். பேரரசின் மீது மேல்நிலை அரசர் சுமத்திய அரசாங்கம் மிக நெகிழ்ச்சியாகவும் தொலைமறைவாகவுமிருந்தது. மேதகவாளரின் சூழ்ச்சித்திறனும் படைத்தேர்ச்சியும் இத்தகைய அரசாங்கத்தின் இரட்டை ஆதரவுகள். மகாராஜா ஹஷ்தின், விஸ்வ வர்மா ஆகியோரைப்போல், மாநில, மாவட்டங்களின் ஆளுநர்கள் ஆகிய பேரரசின்

[89] Beni Prasad, 'The State in Ancient India', p. 296.
[90] Ibid., p. 297.

அலுவலர்கள் பெரும்பாலும் தலத்தலைவர்களேயாவர். இவர்கள் தம் சொந்த நாடுகளுக்கு அரசர்களாக இருப்பதோடு, மாநிலம் அல்லது புக்தி, மாவட்டம் அல்லது விஷயா போன்றவைகளின் நலன்களை, குறுநிலத் தலைவர்களிடமிருந்து வசூலித்த திறைகளைச் செலுத்தியும், மேல்நிலை அரசருக்கு இவர்களை நம்பிக்கைக்குரியவர்களாக ஆக்கியும் பேணினர். இன்று செய்யப்படுவதுபோல் பேரரசின் பல்வேறு பகுதிகளுக்கும் சிவில், இராணுவ அலுவலர்களை இவர்களுடைய விரிவான நிறுவனத்தோடு மத்திய அரசாங்கம் அமர்த்தியிருக்க முடியாது. இத்தகைய முறை இரண்டு முக்கியமான கூறுகளை முன்னதாகக் கொள்ளுகிறது—(1) விரிவான செய்தித் தொடர்பு முறை; (2) தல மாறுபாடுகளை அகற்றித் தலப் பகுதிகளை இணைக்கும் உண்மையான முயற்சி. தற்காலம்வரை இவை இரண்டுமில்லாதிருந்தன. பேரரசின் நிலப் பரப்பை ஒப்பிட்டு, கிடைக்கக் கூடிய உறுதியற்ற செய்திக் குறிப்புகளை வைத்துக்கொண்டு, ஒரு மையமாக்கப்பெற்ற பேரரசு அமைப்பொன்று இருந்ததென்று சொல்வது மிகையாகும். தெளிவும் உறுதியுமற்ற ஒரு பேரரசில் உறுதியான பயனுடைய செல்வாக்கு மண்டலம்தான் தல அரசாங்கம்.

## தல அரசாங்க அமைப்பு

தல அரசாங்கம்பற்றி நாம் நினைக்கும்பொழுது, மேல்நிலை அரசரின் சொந்த நிலப்பரப்பின் அரசாங்கங்களையும், திறை செலுத்தும் அரசுகளையும், மாநகராட்சிகளையும் நாம் நினைக்க வேண்டியிருக்கும். இப் பிரிவுகளின் தல அரசாங்கங்கள் சுயேச்சையாகவும் ஒரேபடித்தான பிரிவுகளாகவும் இருந்தன. இவைகளின் அடிப்படை அமைப்புகள் நாட்டில் ஆழ்ந்து பரவலாக இருந்தன. இவைகளின் சொந்த நாணயங்களை இவைகளே அச்சிட்டுக் கொள்ளும் அளவிற்கு முழுத் தன்னாட்சி பெற்றிருந்தன. இவைகளுக்குரிய சட்டங்களையும், நீதிமன்றங்களையும், புக்தி, விஷயா போன்ற ஆட்சிப் பரப்புகளையும், சொந்த நிதியியல் முறைகளையும் பெற்றிருந்தன. மையப்படுத்துதலின் நுட்பமுறைபற்றிய கௌடில்லியரின் எதிர்நோக்கின் விளைவும் கடைசிக் காலத்தின் வளர்ச்சிகளும் ஓர் உயர் அளவு மையப்படுத்ததலை இவைகள் பெற்றன. தல அரசாங்கம் ஓர் அமைப்பைக் கொண்டிருந்தது. இதில் கட்டுப்பாடு முழுவதும் அரசரிடம் மையப்படுதப்பெற்றிருந்தது. தல அரசாங்கங்களைப் பேரரசு அரசாங்கம் அல்லது மத்திய அரசாங்கத்திலிருந்து வேறுபடுத்திக் காணத் தனிப்பட்ட அரசுகளின் அரசாங்கங்களை நாம் 'தல அரசாங்கம்' என்று சொல்லுகிறோம். இது உண்மையில் ஒரு பயனுடைய நிறுவனமாக இருந்தது.

சக்கரவர்த்தியாயினும் சாமந்தராயினும் உச்சியில் அரசர் இருந்தார். தம் சிறப்பிற்கேற்ப சாமந்தர்கள், இராஜா, மகாராஜா, மகாசாமந்தர் போன்ற பட்டங்களைச் சூட்டிக்கொண்டனர். பல அமைச்சர்கள் இவர்களுக்கு உதவியாக இருந்தனர். இவர்களுடைய பதவிகள் பெருமளவு மரபுவழி வந்தவை. மந்திரி, மகாசந்தி விக்கிரகர்,[91] மகாவாலாதிகிருதர்,[92] மகாபிரதிஹாரா,[93] மகாசப் பாடலிகர்,[94] மகாதண்ட நாயகர்[95] போன்றவர்கள் பிரதம அமைச்சர், வெளியுறவுச் செயலாளர், படைத்தலைவர், அரண்மனைக் காவலர், பதிவுகளின் தலைவர், போலிஸ் தலைவர் அல்லது நீதித்தலைவர் ஆகியவர்களுக்கு ஒப்பானவர்கள். இவர்களுடன் சேர்ந்து பொதுமக்களின் ஒழுக்கப் பொறுப்பேற்க ஓர் அமைச்சருமிருந்தார்—வினயஸ்திதிஸ்தாபகர் (Vinayasthitisthapaka).[96] கிராமம், விஷயா, புக்தி அல்லது செர்னி, நிகாமம், புகா போன்ற தலக் கூட்டாண்மை நிறுவனங்கள் ஆகிய பல்வேறு ஆட்சிப் பரப்புகள்மீது மாறுபட்ட அளவிலான கட்டுப்பாட்டை இந்த அலுவலர்கள் செயல்படுத்தியிருக்கலாம். ஹஸ்தின், சர்வநாதர் ஆகிய இரு மகாராஜாக்களும் திறை செலுத்துவோராக இருக்க நேர்ந்தாலும், இங்கு போகங்களும் புக்திகளுமிருந்தனவென்பதை இவர்களின் கல்வெட்டுகள் தெளிவாகக் குறிப்பிடுகின்றன.[97] சமுத்திரகுப்தரின் குறுநிலத் தலைவர்கள் தம் நாடுகளின் புக்திகளையும் விஷயாக்களையும் பெற்றிருந்தது அலகாபாத் கல்வெட்டிலிருந்து தெரிகிறது—ஸ்வ விஷயபுக்தி சாசன யாசனுதி உபாய சேவா. திறை செலுத்தும் மகாராஜாவாகிய இரண்டாம் துருவசேனர் தம் ஆயுக்தர்களையும், வினியுக்தர்களையும், திரன்கிகர்களையும், மகாதாரர்களையும் நிலைப் போர்வீர், நிலையற்ற போர்வீரர்களாகிய துருவாதி கரணிகர்களையும், தண்டபாசிகர்களையும், இராஜஸ்தானியர்களையும், குமாரமாத்தியர்களையும், மற்றவர்களையும் பெற்றிருந்தார்.[98] மற்றொருவராகிய மகாராஜா ஹஸ்தின், தம் அமாத்தியர்களையும், சந்திவிக்ரகிகர்களையும், போகிகர்களையும், விஷயபதிகளையும், உபாரிகர்களையும் பெற்றிருந்தார்.[99] இந்தக் கல்வெட்டுகள் அளித்த விவரங்களை வைத்துக்கொண்டு தல அரசாங்கங்களைப் போதிய அளவு வரையலாம்.

91 Cor. Ins. Ind., Vol. III, No. 22.
92 Ibid., No. 23.
93 Ibid., No. 39.
94 Ibid.
95 Ibid., No. 1.
96 Basarh Seals.
97 Cor. Ins. Ind., Vol. III, No. 24.
98 Ibid., No. 38.
99 Cor. Ins. Ind. Vol. III, Nos. 21—23 & 27—31.

மாநிலங்கள்—புக்தி அல்லது தேசம்—பொதுவாக உபாரிக மகாராஜா அல்லது இராஜஸ்தானியர்[100] அல்லது போகிகர்களால் ஆளப்பட்டன. மாநில ஆளுநர்களை இச் சொற்கள் குறிப்பிடுகின்றன. உருத்திரதாமனின் ஜுனகத் கல்வெட்டில் உள்ளதுபோல் மாநில ஆளுநர் இராஷ்டிரர் என்று பெயர் பெற்றிருந்தனர்.[101] தாமோதர்பூர் செப்பேட்டில் இராஜபுத்திர-தேவ-பக்தாரகர் புந்தரவர்த்தனத்தின் ஆளுநர் என்றும், பாஸ்ரா முத்திரைகளில் திரபுக்தியின் ஆளுநர் கோவிந்தகுப்தர் என்றும் இருக்கின்றன. மாநில ஆளுநர்கள், தனியுக்தர்களென்று, எண்ணற்ற கீழ்நிலை அலுவலர்களைப் பெற்றிருந்தனர். மாவட்டங்கள் அல்லது விஷயாக்களின் பொறுப்பதிகாரிகள் விஷயபதிகள் என்று பெயர் பெற்றிருந்தனர்.[102] சில சமயங்களில் ஆயுக்தகர்கள் மாவட்ட அலுவலர் நிலைக்கு உயர்த்தப்பெற்றனர். மாநிலத் தலைமையகங்களில், அதிகரணங்கள் எனப்பெற்ற அலுவலர் நிறுவனங்கள் இருந்தன. பாஸ்ரா முத்திரைகளின்படி இரணபாண்டாகாராதிகரண அல்லது போர் அலுவலகம், தண்டபாசாதிகரண அல்லது காவல் தலைவர் அலுவலகம், வினயஸ்திதிஸ்தாபகாதிகரண அல்லது பொது ஒழுக்கநெறிக் காவலர் அலுவலகம், உபாகாதிகரண அல்லது ஆளநரின் அலுவலகம் போன்றவைகளை அதிகரணங்கள் கொண்டிருந்தன. மாநிலங்களைப்போல் மாவட்டங்களும் தனிப்பட்ட நிறுவனங்களைப் பெற்றிருந்தனவென்று தாமோதரபூர் செப்பேடுகள் குறிப்பிடுகின்றன. போலீஸ் அலுவலர்களாகிய தண்டிகா அல்லது தண்டபாசிகர், புஷ்டபாலர் அல்லது பதிவேடுகளைப் பேணுபவர், நிலையானவரும் நிலையற்றவருமான வீரர்கள்,[103] பொதுவான நிலைபேறுடைய அலுவலராகிய[104] துருவாதிகரணிகர்கள், ஆயுக்தர்களும், வினியுக்தர்களும்[105] பல்வேறு வகையான அலுவலர்களும், திராங்கிகர் அல்லது உத்ரங்க வரி வசூலிப்பவர்களும் மாவட்ட ஆட்சியோடு தொடர்புகொண்டிருந்ததை நாம் அறிகிறோம். ஓர் ஆலோசனைக் கழகம் விஷயபதிக்கு அவருடைய ஆட்சிப் பணிகளில்—சம்வியவகாரம்—உதவிற்று. பல்வேறு முக்கியக் குழுநலன்களைப் பிரதிபலிக்கும் நான்கு உறுப்பினர்களை இக் கழகம் கொண்டிருந்தது. அதாவது,(1) நகர மக்களின் மிகச் சிறந்த செல்வந்தராகிய நகர சிரேஷ்டி, (2) பல்வேறு வணிகக் கழகங்களின் பிரதிநிதியாகிய சார்த்த-

[100] Ibid., No. 38.

[101] Luder's List, No. 965.

[102] Ep. Ind.' XV, p. 138; Luder's List, No. 629.

[103], [104], [105], Cor. Ins. Ind., Vol. III, No. 38.

வாகர், (3) பல்வேறு கைவினைஞரின் பிரதிநிதியாகிய பிரதம குலிகர், (4) பிரதம காயஸ்தர்.[106]

## கிராம அரசாங்கம்

தல அரசாங்கத்தின் தாழ்மட்டத்தில் உள்ள பிரிவு தொல் பழைமையான கிராமமாகும். இதன் தலைவர் கிராமிகர்.[107] இவரோடு கிராம மூதறிஞர்கள் அல்லது மகாதாரர்கள்[108] இருந்தனர். கிராமத் தலைவரும் இவர்களும் கிராம அரசாங்கத்தின் மையக்கருவாக அமைந்தனர். இது பிரஹஸ்பதியின் கோட்பாட்டோடு ஒத்திருக்கிறது. 'வேதத்தோடும் தர்மத்தோடும் தொடர்புடைய நேர்மையானவர்கள், அதாவது, சமூகப் பொறுப்புடைய, திறமையான, தன்னடக்கமுடையவர்களும், உயர்குடிகளிலிருந்து தோன்றுகின்றவர்களும், எல்லாத் தொழில்வினைகளிலும் தேர்ச்சியுடையவர்களும் மகாதாரர்களால் அமர்த்தப்படவேண்டு' மென்று இவர் கூறுகிறார். இரண்டு, மூன்று அல்லது ஐந்து பேர் ஆலோசகர்களாக அமர்த்தப்படுவர்; கிராம மக்களும், கைவினைஞர்களும், கூட்டு நிறுவனங்களும் இவர்களுடைய அறிவுரையை ஏற்றுக்கொள்வர்.[109] கிராம அரசாங்கத்தை நடத்திய மகாதாரர் அல்லது மகாதாமர்—மாற்றுச் சொற்கள்—ஆகியவர்களுக்கப்பால், கிராமம் தன் சொந்த நீதிமன்றமொன்றைப் பெற்றிருந்ததென்பது குறிப்பிடத்தக்கதாகும். பிரஹஸ்பதி சொல்லுகிறபடி இது 'பிரதிஸ்திதம்' என்ற பெயரைப் பெற்றிருந்தது.[110] இதைப்பற்றி அரசருடனுகிய கிராமத்தின் தொடர்பை பிரஹஸ்பதியே வெளிக்கொணருகிறார். மக்களுக்கு உகந்ததாக அல்லது அல்லாததாக இருந்தாலும், சட்டங்களுக்கும் வழக்கங்களுக்கும் ஒப்ப இவர்களால் (கிராம மூதறிஞர்கள்) பிறப்பிக்கப்படுகின்ற கட்டளைகள் அரசரால் ஏற்கப்படவேண்டும்.[111] மகாதாரர்கள் ஒருவருக்கொருவர் முரண்படுகிறபொழுதுதான் அரசர் தலையிட்டுத் தம்முடைய தீர்ப்பைப் புகுத்துவார்.[112] அதாவது, அரசருக்கு ஒரு மேல்முறையீடு இருக்கக்கூடும். நாட்டின் சட்டங்களுக்கும் வழக்கங்களுக்கும் எதிரான குற்றவாளிகளுக்கு இம்மூதறிஞர்கள் தண்டனை விதிக்கலாம்.[113] மேலும், தளவாடகர், அதாவது, கணக்கர், தூதர், அதாவது, செய்தி கொண்டுசெல்வோர், சீமாகர்மகார், அதாவது, கிராம எல்லை வகுப்பவர்,[114]

[106] Ep. Ind., XV, pp. 128—29.
[107] Cor. Ins. Ind., Vol. III, No. 24. [108] Ibid., Nos. 38 & 46.
[109] Brhaspati, S.B.E., Vol. XXXIII, xvii, 9 & 10.
[110] Ibid., 1, 2—3, Pratisthita-Pratisthita-mudrita sasita tatha, etc.
[111] Ibid., xvii, 18. [112] Ibid., xvii, 20.
[113] Ibid., 17. [114] Fleet, No. 39.

கரணிகர் அல்லது எழுத்தர்கள் ஆகியோரையும் கிராம அரசாங்கம் கொண்டிருந்தது.[115] தேசீயப் பொருளாதாரத்தில் கிராம ஆட்சியை ஒரு சிறிய நிதியியற் பிரிவாகக் கொள்ளும்பொழுது இதன் தன்னிறைவு முழுமை பெறுகிறது. பல்வேறு அரசருக்குரிய வருவாய்களைக் கிராமம் வசூலித்ததென்று நாம் அறிகிறோம். உத்ரங்கம் (நிலவாரியாக இருக்கலாம்), உபரிகரம் (நிலத்திற்குச் சொந்த உரிமையற்ற உழவர்களிடமிருந்து வசூலிக்கப்படும் வரி), தானியம் (நெல்), ஹிரண்ய (தங்கத்தில் செலுத்துவது), ஆதேயம் (கொடுத்துவிடக்கூடியது), விஸ்திகா (கட்டாய உழைப்பு), தசாபராத (பத்துக் குற்றங்களிலிருந்து தண்டம், அதாவது. உடலின் மூன்று குற்றங்கள், திருட்டு, கொலை, பிறன் மனை நயத்தல்; பேச்சின் நான்கு குற்றங்கள், கடுஞ்சொல்,பொய், அவதூறு, கருத்தற்ற பேச்சு; மனத்தால் மூன்று குற்றங்கள், மற்றவர்களுடைய உடைமைக்குப் பேராசை, தவறு நினைத்தல்,உண்மையற்றதற்கு ஈடுபாடு), போகம் (துய்த்தல்), பாகம் (பங்கு)[116] போன்ற வரிகளைக் கிராமம் செலுத்தவேண்டும். ஆகவே, ஒரு நிதியியற் பிரிவாகக் கிராமத்தின் சிறப்பு ஐயமற்றது மேலும், தசாபராத என்ற தலைப்பில், அதாவது, இப் பத்துக் குற்றங்கள்; குற்றங்களைத் தண்டிக்கும் அதிகாரத்தையும் குற்றங்களை முடிவு செய்யும் அதிகாரத்தையும் இது குறிப்பிடுகிறது. இந்த வரிகளைக் கிராமங்கள் செலுத்தின. இந் நீதிமுறை, மிகப் பயனுடையதாக இருந்ததுமட்டுமன்றி, பணிய மறுக்கும் ஒவ்வொரு வழக்கிலும், கிராம சபை அளித்த தனித்த தண்டனை அல்லது குறிப்பிட்ட தனிப்பட்ட தண்டனை எங்கும் ஒப்புதல் பெறுவதுபோல் தோன்றும்;[117] ஏனெனில், பத்துக் குற்றங்களிலிருந்து அரசர் பெறுகின்ற வருமானத்தின் காரணமாக, இறுதியில் கலந்துகொள்ளும்பொழுது, தம்முடைய அதிகாரத்தைப் பயன்படுத்திக் கிராம சபையின் முடிவுகளை நிலைபெறச் செய்யவேண்டும்.

நிலமாற்றம்பற்றிய முக்கியமான விவரங்கள் தாமோதர்பூர் செப்பேடுகளிலிருந்து கிடைக்கின்றன. 'வடக்கு வங்காளத்திலிருந்தும் ஃபாரிட்பூரிலிருந்தும் கிடைத்த செப்பேடுகளின் தல அலுவலர்களின் ஒரு வகுப்பினராகிய புஷ்டபாலர்களை இவை குறிப்பிடுகின்றன. எல்லா நிலங்களின் உடைமை உரிமைபற்றி இவர்கள் தெரிந்திருந்தார்கள் என்று தெரிகிறது வாங்குவோரிடமிருந்து மனுக்களைப் பெற்றுக்கொண்ட பின், மாற்றப்படவிருக்கும் நிலத்தின் உடைமை, உரிமையைப் பதிவுகளைப் பேணு

[115] Cowel & Thomas, 'Harsacarita,' p. 198.
[116] Cor. Ins. Ind., Vol. III, No. 38.
[117] Village Communities in East & West, p. 68.

வோர் உறுதிசெய்வதிலும், அரசாங்கத்திற்குஅனுப்புவதிலும், அரசாங்கம் நில விற்பனைகளுக்கு இசைவளிக்கும் நில மாற்றங்களை ஏற்பாடு செய்வதிலும், இத்தகைய செயல்வினையைச் செய்து முடிப்பதைச் சோதனை செய்வதிலும் அரசாங்கம்கிராம நிறுவனர்களாகிய மகாதாரர், அஷ்டகுலாதிகானர், கிராமிகர் போன்றவர்களோடு கலந்துகொண்டதைச் செப்பேடுகள் ஒன்றில் காணுகிறோம்.[118] கிராமத்தில் வளர்ச்சியடைந்த இந்நிலத்தில் விரிவான ஆட்சியின் பின்விளைவாக நில அளவீடும் வகைப்பாடும் இருந்திருப்பதாகத் தெரிகிறது. பயிர் செய்யத்தக்கதும் பொதுவானதுமான இருவகை நிலமிருந்தது. பாதாவர்த்தம் தான் நிலத்தின் கணிப்பு அடிப்படைக் கூறாகும்.[119] கிராமத்தின் பொருளாதார விளக்கத்தை இது நிறைவுசெய்கிறது. இப்பொழுது பெருமளவு வளர்ச்சியடைந்துள்ள தன்னாட்சி நிறுவனங்கள், கூட்டு நிறுவனங்கள் ஆகியவற்றை நாம் இப்பொழுது ஆராயலாம்.

## கூட்டாண்மை நிறுவனங்களின் ஆட்சி

குலம், பூகம், விராதம், செர்னி ஆகியவைகளை இவை கொண்டிருக்கின்றன; இந் நிறுவனங்களின் சிறப்புபற்றி மனுவிலிருந்து எல்லாச் சட்டத் தொகுப்புகளும் வலியுறுத்துகின்றன. பாணினியில் சங்கம், கணம் ஆகியவற்றின் குறிப்புகளை நாம் முன்னரே பார்த்திருக்கிறோம்.[120] ஒருவகையான சங்கமென பூகாவை காஷிகர் விளக்குகிறார்; அதாவது, பொருள் திரட்டுவதைத்[121] தலைமையாகக்கொண்ட பல்வேறு தொழில் செய்யும் பல்வேறு சாதியைச் சேர்ந்த மனிதர்களின் கூட்டு நிறுவனமாகும். இவர்களின் தொழில் பெரும்பாலும் சட்டத்திற்கு எதிரானவை.[122] ஒரு தொழிலை அல்லது வணிகத்தைச் செய்கிறவர்களின் கூட்டு நிறுவனம்தான் செர்னி என்று காயதமும் தத்வபோதினியும் விளக்குகின்றன. ஆனால், இவை முற்காலத்திலேயே இருந்திருந்தபோதிலும் இவைகளின் சட்டங்களை முதல் முறையாக ஏற்றுக்கொண்டார். ஜனபதத்தின் (நாட்டுப்புறத்தின்) சட்டங்களையும் செர்னியின்[123] (வணிக, தொழிற் கழகங்கள்) சட்டங்களையும் சட்டத்தின் பொதுவான வகையில்

[118] Ep. Ind. XV, p. 129.
[119] Cor. Ins. Ind., Vol. III, No. 38.
[120] Bahu Puga gana samghasya tithuk (v. 2, 52).
[121] Nana Jatiyah aniyata urttayah
Arthakama-pradhanah samghah puga, vol. 3, 112.
[122] Nana jatiyah aniyata-vrttayah
Utsedha jivinah samghah Vratah. v. 3, 113.
[123] Jati-janapadan Dharman Sreni dharmansca Dharmavit,
Samiksya kula dharmansca sva-dharmam pratipadayet. (viii, 14).

மனு புகுத்தினார். நிகாமம், பூகம், கனம் ஆகிய ஏற்பமைதி இல்லாத கோட்பாட்டில் பற்றுடைய சங்கங்களின் சட்டத்துடன் நாரதர் இதை மேலும் சேர்த்தார்.[124] இந் நிறுவனங்களின் சட்டங்களையும் மரபுகளையும் அப்படியே வைத்துப் பேணும் கடமைப் பொறுப்பை அரசர் பெற்றிருந்தார். யாஞ்வல்கியரின் சட்டத்தோடு முரண்படாதபொழுது ஒருவர் தம் பழக்கங்களையும் மரபுகளையும் அரசருடைய சட்டங்களையும் பின்பற்ற வேண்டுமென்று சொல்லி, சட்டங்கள், மரபுகள் ஆகியவற்றில் தலத்தன்மையை வலியுறுத்துகிறார்.[125] தல நிறுவனங்களின் தன்மையை இது சுட்டிக்காட்டுகிறது.

இவைகளின் பணிகளைப் பொறுத்தவரையில், பொறுப்பையும் தொடக்கத் துணிவையும் பெருமளவு இவைகள் குறிப்பிடுவதுபோல் இவை பலவிதமாக இருந்தன. இதற்கு நாம் பிற்கால ஸ்மிருதிகளாகிய நாரதர், பிரஹஸ்பதி, யாஞ்வல்கியர் போன்றோர்களைத்தான் பெருமளவு நம்பியிருக்கவேண்டியிருக்கிறது. நீதி செலுத்துதலும் இன்னும் பல நகராட்சிக்குரிய பணிகளும் தல நிறுவனங்களின் பணிகளாகும். 'குலங்கள், சேர்னிஸ், கணங்கள், (அரசரால் அமர்த்தப்பட்ட) ஒருவரும் அரசரும் ஆகிய எல்லாம் வழக்குகளை முடிவுசெய்யும் அதிகாரத்தைப் பெற்றிருந்தன; அடுத்தடுத்து வரும் இவைகள் வரிசையில் முன்னிருப்பவைகளுக்கு மேலானவை.'[126] அரச நீதி மன்றங்கள், பூகங்களின் நீதிமன்றங்கள், சேர்னிஸ், குல நீதிமன்றங்கள் இவைகளின் முக்கியத்துவம் ஏறுவரிசையில் இருக்கிறதெனும்பொழுது யாஞ்வல்கியர் மிகத் தெளிவாகக் கூறுகிறார்.[127] இவை எவ்வளவு பரவலாகவும் ஆழமாகவும் வேரூன்றியுள்ளனவென்பதை முக்கர்ஜி காட்டியுள்ளதுபோல், பத்தாம், பதினொன்றாம் நூற்றாண்டின் தென்னிந்தியக் கல்வெட்டுகளும் குறிப்பிடுவதை உணரலாம்.[128] 'சபை (சபைக் கட்டிடம்) பயணர்களுக்கான தண்ணீர்ப் பந்தல்,

[124] Pasandi-naigama-Serni-puga-vrata-ganadisu,
Samrakset samayam raja durge janapadetatha. (x, 2).

[125] Nija-dharma-virodhena yastu samayiko bhavet,
Sop: yatnena samraksya dharmorajh krtascayah.
(Samvidvyatikarma Prakarana).

[126] Kulani srenaya scaiva ganascadhikrtonrpah. Pratistha vyaavharanam guruvebhya stuttarottaram. 1, 7.

[127] Nrpenadhikrtah pugah srenayotha kulanica, Purvam Purvam guru jnyeyam vyavahara vidhaunrnam.
(Sadharana-vyavahara-matrika Prakarana).

[128] 'Local Administration in Ancient India,' pp. 129–130.

கோவில், குளம் அல்லது தோட்டம் அமைக்கவும், இரவலருக்கும் உதவற்றவர்களுக்கும் உதவவும், வேள்விச் சடங்குகள் நடத்தவும், பொதுவான வழி அல்லது பாதுகாப்பு அமைக்கவும் இதுபோன்ற பொதுப்பணியை மக்கள் ஏற்றுக்கொள்ளுமுன் தம் பிரதிநிதிகள் வழியாகத் தல நிறுவனங்களுடன் எழுத்துருவில் உடன்பாடு செய்துகொள்ளவேண்டுமென்பதையும், தல நிறுவனங்கள் தக்க அளவில் பங்கு பெறவேண்டுமென்பதையும் பிரஹஸ்பதி கூறும்பொழுது,' கிராமம், பூகம், செர்னி, கணம் போன்ற தல நிறுவனங்களின் பணி மிகத் தெளிவாகக் குறிப்பிடப்படுகிறது.[129] தல நிறுவனங்களின் தேவைகளுக்கும் சமூகப் பொருளாதாரத்திற்கும் ஏற்ப இவைகளின் நகரவைக்குரிய பணியின் பலவகையான இயல்பை இது காட்டுகிறது. பாதுகாப்பு தல நிறுவனங்களின் பொறுப்பு என்பது இப் பட்டியலில் மிகக் குறிப்பிடத்தக்கதொன்றாகும். அரசாங்கத்தின் ஒரு கூறாகிய பாதுகாப்பைத் தல நிறுவனங்கள் தாமே அமைத்துக்கொள்ளும் இப் பொறுப்பு இவைகளின் சிறப்பை உயர்த்துகிறது. பாசனக் குளங்களையும் கால்வாய்களையும் பேணத் தலச்சபைகள் கட்டாய உழைப்பை எவ்வாறு பயன்படுத்தினவென்பதை எட்டாம், ஒன்பதாம் நூற்றாண்டிற்குரிய தென்னிந்தியக் கல்வெட்டுகள் காட்டுவதைப் பேராசிரியர் முக்கர்ஜி மேலும் குறிப்பிடுகிறார்.

## குப்தர் பேரரசில் தன்னாட்சி இனங்கள்

தன்னாட்சிக் கூட்டு நிறுவனங்களின் விவரங்கள் இவைகளே. ஆரிய சமூகத்தின் பழைமையான மரபுகளை இவைகள் கொண்டிருக்கின்றன. ஆனால், இவைகளுக்கப்பால், கணங்களும் தன்னாட்சி இனங்களுமிருந்தன; குப்தர்களின் மேல்நிலை அதிகாரத்தை இவைகள் ஏற்றுக்கொண்டிருந்தபோதிலும், கொள்கையளவில் இவைகள் உண்மையில் சிலவராட்சிக்குரியனவாக இருந்தன. சமுத்திரகுப்தரின் அலகாபாத் கல்வெட்டில் கூறப்பட்டுள்ள மாளவர், அர்ஜுனயனர்,[130] யவ்தேயர், மத்ரகர், ஆபிரர், பிரசர்ஜனர், சனகாணிகர், கரகர், கரபரிகர் போன்றோர் இவர்களே. இறைமையை இழந்த இம்மக்கள் குப்தர்களின் பேரரசில் கலந்துவிட்டது தெளிவு. மௌரியரின் காலத்தில் இவர்கள் சிறிது சிறிதாகக் கீழ்ப்படுத்தப்பட்டது குப்தர் காலத்தில் உறுதியடைந்தது. இருந்தபோதிலும், லூதியானாவில் கண்டுபிடிக்கப் பெற்றுள்ள யவ்தேகிகரின் தெய்வப் படையலுக்கான பட்டயத் தகடுகளும்[130] ஆர்ஜுனயனரின் காசுகளும்[131] இவர்களின்

[129] S.B.E., Vol. XXXIII, pp. 347—348.
[130] Smith Catalogue of Indian Coins, p. 180.
[131] J.R.A.S., 1897, p. 887.

சுயேச்சையான ஆட்சியை மெய்ப்பிக்கின்றன. இவர்களின் சொந்தக் காசுகளை இவர்கள் வெளியிடலாம் என்பது மட்டுமன்று. இவர்களுடைய சட்டங்களையும் வழக்கங்களையும் புனிதமாகக் கருதவேண்டும். எனவே, மற்றக் கூட்டாண்மை நிறுவனங்களைப்போல் கணங்களின் சட்டங்களை அரசர் ஆதரித்து மதிக்க வேண்டுமென்று சட்ட நூல்கள் வகுத்துரைக்கின்றன. நைகமங்கள், செர்னிகள், பூகங்கள், கணங்கள் ஆகியவை அரண்காப்புப் பெற்ற நகரங்களாயினும், இவைகள்மீது சட்டங்களை நிலவச் செய்யவேண்டுமென்பதைக் கணங்களின் நிகழ்வைக் கருத்தில் கொண்டுதான் குறிப்பாக நாரதர் விதிசெய்தார்.[132] பூகம், விராதம் போன்றவைகளோடு கணங்கள் பொதுவான கூட்டாண்மை நிறுவனங்களின் வகைகளில் இப்பொழுது சேர்த்துக் கொள்ளப்படுகின்றன. குப்தர்களின் புகழைக் குறித்த காலமும், திறை செலுத்தும் முறையின் முழு வளர்ச்சியும் அரசியற் கணங்களின் சிதைவைக் கண்டனவென்பதை இது காட்டுகிறது.

### அரசரும் தல நிறுவனங்களும்

எனவே, தல நிறுவனங்களின் தன்மை, பணி ஆகியவற்றின் ஓர் ஆய்வு, சமூகப் பொருளாதாரத்தில் தல அரசாங்கம் பயனுடையதாக இருந்ததால் இது பரவலாகச் செயல்படுத்தப் பட்டதென்ற முடிவிற்குக் கொண்டுசெல்கிறது. அமைப்பில் இன்றியமையா ஜன நாயகமாக இது இருக்கையில் விரிவான அதிகாரங்களைச் செயல்படுத்தியது. முற்கால இந்திய ஆட்சிமுறையின் உண்மையான அடிப்படையாக இது இருந்தது. அரசரின் தனி வல்லாட்சிக்குப் பயனுடைய தடையை இது அளித்தது. தல நிறுவனங்கள் ஒன்றோடொன்று முரண்படுகிற நிகழ்வுகளில்தான் இவைகளின்மீது அரசர் தம் அதிகாரத்தைச் செலுத்தலாமென்பதை நாம் முன்பு கண்டோம். தல நிறுவனங்கள் அரசரின் அல்லது சமூகத்தின் நலன்களுக்கு எதிராகச் செயல்படும்பொழுது அல்லது போதிய காரணமின்றிப் போர்க்கோலம் கொள்ளுதல், அல்லது ஒன்றோடொன்று சண்டையிடுதல், அல்லது அரசர்மீது பகைமைப் போக்கை மேற்கொள்ளுதல், அல்லது பொதுப் பணத்தை வீணழிவு செய்தல், அல்லது நெறிமுறைக்கொவ்வாத செயலில் ஈடுபடுதல், அல்லது வேதங்களில் குறிப்பிட்டுள்ள சமய போதனைகளுக்கு மாறுக நடத்தல், அல்லது சொந்த வெறுப்பு காரணமாக ஒன்றோடொன்று சேரும்பொழுதும் விலக்குசெய்யும் பொழுதும் அரசர் தலையிடுவதை மெய்ப்பிக்கலாமென்று நாரதர் கருதினர்.[133] விஷ்ணு,[134] யாஞ்வல்கியர்[135] போன்ற மற்ற

[132] Ibid., x, 2. [133] Narada, x, 4–7. [134] Narada, v. 167.
[135] II, Ibid., p. 187.

சுமிருதிகளும் இதைப்போன்றே கூறுகின்றன. சுருங்கக் கூறின், தல நிறுவனங்களின் அதிகாரங்கள் பல வகைகளில் தன்னிறைவு பெற்றிருந்தாலும் அரசத் தலையீடு என்ற உருவில் சில குறை பாட்டை ஏற்றுக்கொள்ளவேண்டியிருந்தது; அதே சமயத்தில் அரசர் நாட்டின்மீது ஆட்சி செலுத்தினாலும், தல அரசாங்கங் களின் மறுக்கமுடியாத உரிமைகள் என்ற உருவில் அரசரின் அதிகாரத்தின் குறைபாட்டை இவர் ஏற்றுக்கொள்ளவேண்டி யிருந்தது. அரசின் இயல்பு, இறைமை ஆகியவைபற்றி மத்திய, தல நிறுவனங்களுக்கிடையேயான உறவு வினா எழுப்புகிறது.

## அரசிறைமையின் செயற்பரப்பு

பின் ஒரேகாலத்திற்குரிய மற்றொரு சமூகத்தில் அரசின் நிலை என்ன? அரசரின் சின்னமாக அமைந்த அரசு சமயத்திற்குக் கட் டளையிடக்கூடிய நிலைக்கு உயர்ந்ததை நாம் விளக்கியுள்ளோம். அதாவது, சமூக நலனைப் பெற அரசரின் அரசாங்கம் ஏற்றுக் கொண்ட கொள்கை எந்த ஒரு சமய அல்லது சமயப் பிரிவோடும் இதன் நலன்களை ஒன்று எனக் கருதாது, எல்லாச் சமயங்கள், பிரிவுகள் ஆகியவற்றோடும் இழைவித்தது. நெறிமுறை, சமயம் ஆகியவற்றின் இயல்புகளை விட்டுவிட அரசு முயன்றபொழுதும், தலப்பரப்புகள், சமூகப் பிரிவுகள் ஆகியவற்றின் வழக்கங்க ளுக்கும் வழக்காறுகளுக்கும் இது மதிப்புக் காட்டியபொழுதும், பொதுச் சட்டம் அல்லது தர்மம் இதனுதவிக்கு வந்தது. இதே சமயத்தில் இது சமயச்சார்பற்றதாகவும் தனிநிலையானதாகவும் பெரிதும் வளர்ச்சியடைந்தது ஆகையால், இதற்குமுன் இருந் ததைவிட இது மக்களின் வாழ்க்கையையும் போக்கையும் மிகப் பெருமளவு பாதித்தது. ஏனெனில், சட்டத்தின் உரிமைகளின் செயற்பரப்பும் செயற்பாடும் தெளிவாயின. சமயப் பொறைக் கொள்கையினாலும், தனி நிலையான சட்டமுறைகளைப்போன்ற வலிமை மிக்க கருவியாலும், எவ்வளவு குறைவானதாக இருந் திருந்தாலும், இதனுடைய கட்டுப்பாட்டை இன்று இறைமை யரசு என்று நாம் கூறும் அளவிற்குச் சமயத்தின்மீது செலுத்தி யது. சட்டமியற்றிச் செயல்படுத்துதல், குழுக்களுக்குக் கட்டளை யிடுதல், சமயத்தைக் கட்டுப்படுத்துதல், சமூக வாழ்க்கையின் போக்கை இயக்குதல், இன்னும் பிற துணைச்செயற்பாடுகளை நடத்துதல் ஆகிய இதனுடைய அதிகாரத்தின்மீது இன்று அரசின் இறைமை தோற்றுவிக்கப்பெற்றிருக்கிறது. சமூக வாழ்க்கையில் அரசு ஆதிக்கம் செலுத்தியிருக்கக்கூடிய ஒருகாலம் முற்கால இந்தியாவில் இருந்திருக்குமானால், அது இதுதான்;

ஏனெனில், அரசின் தனி மேலாதிக்கத்தைச் செயற்படுத்தும் கூறுகள் பெரும்பாலும் இங்கு இருந்தன.

ஆனால், முற்கால இந்திய அரசை நாம் நினைக்கும்பொழுது, அரசின் சின்னமாகவும் உருவாகவுமிருந்த அரசரைப்பற்றியும் நாம் நினைக்கிறோம். ஆகையால், இன்று இறைமையாக்கும் எல்லா அதிகாரங்களையும் அரசர் செயல்படுத்தினரா என்பதையும் நாம் பார்க்கவேண்டும். நாத்திகர்கள், தள்ளிவைக்கப்பட்டவர்கள், வணிகர்கள், பெரு வணிகர்கள், இன ஆட்சிக் குழுக்கள் போன்ற பல்வேறு சமூகக் குழுக்கள், கூட்டாண்மைக் கழகங்கள் ஆகியவற்றின் நிலைபெற்ற வழக்காறுகளை அரசர் பேணவேண்டுமென்று விதி செய்தவர் நாரதராவார்.[136] கடமை தவறித் தம் விதிகளிலிருந்து விலகிச் சென்ற குடும்பங்கள், சாதிகள், தொழிற் கழகங்கள், மன்றங்கள் அல்லது குறிப்பிட்ட மாவட்டங்களின் மக்கள் ஆகிய எல்லோரையும் வழிக்குக் கொண்டுவந்து ஒழுங்கை நிலைநிறுத்த வேண்டுமென்று யாஞ்வல்கியர் வற்புறுத்தினர்.[137] அரசரின் சட்டமியற்றும் அதிகாரத்தைக் கட்டுப்படுத்தி அரசரின் இறைமையை இச் சட்டம் சார்ந்த விதிகள் ஊறுபடுத்தின. ஏனெனில், சமூகப் பிரிவுகள், கூட்டாண்மைக் கழகங்கள், தலப்பரப்புகள் ஆகியவற்றின் சட்டங்களை முறையே பேணவேண்டியிருந்ததை இவர் கண்டார். ஆனால், உண்மையில், சமூகப் பிரிவுகள், கூட்டாண்மை நிறுவனங்கள் ஆகியவற்றின் சட்டங்களை இணைத்து, எல்லோர் நலனுக்கும் உகந்த முறையில் இவற்றைச் செயல்படுத்தும் நிலையில் அரசர் இருந்தார். இதனால் தான், முன்குறிப்பிட்டதுபோல் அரசரின் சட்டங்கள் அல்லது இராஜகிருதம் நிலைபெற்றுவிட்ட வழக்காறுகளுக்கு ஒப்பக் கட்டுப்படுத்தும் வலிமைபெற்றிருந்ததென்பதை யாஞ்வல்கியர் நிலைநிறுத்தினர்.[138] மக்களை அவர்களுடைய தனிப்பட்ட இணைப்புகளோடு அரசர் வைத்திருக்கவேண்டுமென்று நாரதரும் யாஞ்வல்கியரும் ஐயப்பாட்டிற்கு இடமில்லாமல் வற்புறுத்தினர்கள். எனவே, கூட்டாண்மைக் கழகங்கள், நாத்திகர்கள் போன்றோரின் தல வழக்காறுகளையும் சட்டங்களையும் தக்க வைத்துக் கொண்டது. அரசரின் சட்டமியற்றும் ஆற்றலை ஊறு படுத்தவில்லை. இதற்கு மேலாக, சமயப் பொறைக் கொள்கையைப் பேண, இவைகளைத் தக்கவைத்துக்கொள்வதும் இணைப்

[136] Pasandi Naigama Sreni Puga Vrata Ganadisu; Samrakset Samayam raja Durge janapade tatha. (x, ii).

Pasandi Naigama-dnami Sthiti Samayamucyate (x, i).

[137] I, 361.

[138] Nijadharma-Virodhena ya stu samayiko bhavet; So pi yatnena samrakshya dharma rajakrta Sca yah.

பதும் தேவையாயின. தல வழக்காறும் பழக்கங்களும் அப்படியே பேணப்பட்டும் நன்ருக இணைக்கப்பட்ட அளவிற்கு இக் கொள்கை பயனுடையதாக இருந்ததை நாம் முன்னரே கண்டோம். ஆகையால், சமயப் பொறைக் கொள்கை அறிவிப்பால் தான் அரசர் பல பிரிவினரையும் ஒழுங்குபடுத்தி சமய வாழ்க்கையைக் கட்டுப்படுத்தினுர்.

ஒரு நிலையில், அரசர், சமயங்களுக்கிடையில் சமநீதியைச் செலுத்தி நீதியின் உறைவிடமானுர்; சட்டங்களை வரைந்து செயல்படுத்தி அரசாங்கத்தை இயக்கினுர். இந் நிலையில் இவர் இறைமை உடையவராக இருந்தார் என்பதைச் சிறிது நேர்மையோடு சொல்லலாம். இராஷ்டிரத்தின் வழியாக, அதாவது, அரசாங்கத்தின் வழியாக இவருடைய இறைமை பயனுள்ளதாக இருந்தது. இராஷ்டிரம் அல்லது அரசு, சமூகத்தின் தலைசிறந்த அமைப்பாகியது. அரச அதிகாரத்தோடு இதனுடைய தனி முதன்மை உடனிணைந்து பரவி நின்றது. இறுதியாக, முற்கால இந்தியாவின் ஆட்சிமுறையில் இறைமையென்பது, சக்கரவர்த்தியாக, தர்மப் பிரவர்த்தகராக, காலத்தைப் படைத்தவராக, மனித உருவில் கடவுளாக, நிலத்தின் நீரின் அதிபராக, சட்டம், நீதி ஆகியவற்றின் பிறப்பிடமாக இருந்த அரசரின் இறைமையாக இருந்தது. இப்படி இருந்துங்கூட இவர் சமூகத்திற்கு அதிகார ஆணையிட இயலாது. இவருடைய இறைமை அல்லது தனி முதன்மை, சமூகத்தின், அதாவது, சமூகப் பிரிவுகள், சமூக நிறுவனங்கள், தனிப்பட்டவர்கள் ஆகியோரின் உரிமைக் கோரிக்கைகள், நலன்கள் ஆகியவற்றின் தலையாய நடுவராக இருந்ததைக் கொண்டிருந்தது. இவருடைய பேரரசு மண்டலமாக இருந்தது.

## கலைச்சொற்கள்

(ஆங்கிலம்—தமிழ்)

| | | |
|---|---|---|
| Autocracy | — | தனியாட்சி |
| Empire | — | பேரரசு |
| Federal | — | கூட்டரசு |
| Feudal | — | நிலமானிய முறை |
| Kingdom | — | முடியரசு |
| Kingship | — | அரசபதவி |
| Monrachy | — | முடியாட்சி |
| Oligarchy | — | சிலவராட்சி |
| Polity | — | ஆட்சி அமைப்புமுறை |
| Sovereignty | — | இறைமை |
| Tributary system | — | திறை செலுத்தும் முறை |

(தமிழ்—ஆங்கிலம்)

| | | |
|---|---|---|
| அரசபதவி | — | Kingship |
| ஆட்சி அமைப்புமுறை | — | Polity |
| இறைமை | — | Sovereignty |
| கூட்டரசு | — | Federal |
| சிலவராட்சி | — | Oligarchy |
| தனியாட்சி | — | Autocracy |
| திறை செலுத்தும் முறை | — | Tributary system |
| நிலமானிய (முறை) | — | Feudal |
| பேரரசு | — | Empire |
| முடியரசு | — | Kingdom |
| முடியாட்சி | — | Monarchy |

## பொருள் குறிப்பு அகராதி

# தமிழ் வெளியீட்டுக் கழகம்

சென்னை-9

## 1966 வரை வெளியிட்டுள்ள நூல்கள்

**பொருளாதாரம்**

| | | | | |
|---|---|---|---|---|
| *1. | பொருளாதாரம்-II ... | ... சி. வேலாயுதம் | ... | 9—00 |
| 2. | புதுமைப் பொருளாதாரக் கூறுகள் | ... திருமதி ஆர். தாமரஜாட்சி | ... | 12—00 |
| 3. | பொருளாதாரம்—ஓர் அறிமுகம்-I | ... தி. சி. மோகன் | ... | 12—00 |
| 4. | ,, II | ... எம். ஏ. அபூர்வசாமி, பி. வி. ஸ்ரீநிவாசன் | ... | 10—75 |
| 5. | பொருளாதாரக் கோட்பாடு வளர்ந்த வரலாறு | ... க. முத்தையன் | ... | 7—00 |
| *6. | பணவியலும் பாங்கியலும்-II ... | ... சி. வேலாயுதம் | ... | 11—50 |
| 7. | நவீன பாங்கு இயல் ... | ... க. வெற்றிவேல் | ... | 7—50 |
| *8. | இந்தியச் செலாவணியும் பாங்கு முறையும் | ... பி. வி. ஸ்ரீநிவாசன் | ... | 5—50 |
| *9. | அரசாங்க நிதி இயல் ... | ... அர. சேஷாசலம் | ... | 4—75 |
| 10. | இந்தியப் பொருளியல்-I ... | ... எம். பாலசுப்பிரமணியன் | ... | 10—00 |
| 11. | ,, II ... | ... எம். லூர்துநாதன் | ... | 4—25 |
| 12. | நமது பொருளாதாரப் பிரச்சினை-I | ... சி. சுந்தரராஜன் | ... | 10—75 |
| 13. | ,, II | ... எஸ். குழந்தைநாதன் | ... | 10—50 |
| 14. | இங்கிலாந்தின் பொருளாதார வரலாறு-I | ... சீ. சீ. இராமசாமி | ... | 6—00 |
| 15. | ,, II | ... ,, | ... | 6—00 |
| 16. | அமெரிக்காவின் நவீன பொருளாதார வளர்ச்சி | ... தி. சி. மோகன் | ... | 5—00 |

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 17. | அமெரிக்கப் பொருளாதார வரலாறு–I | ... | மு. க. சுப்பிரமணியம் | — | 11—00 |
| 18. | ,, II | ... | பி. வி. ஸ்ரீநிவாசன் | ... | 6—00 |
| 19. | ,, III | ... | ,, | ... | 6—50 |
| 20. | அரசாங்க நிதியியலின் பொருளாதாரம்–I | ... | மா. குமாரசாமி | ... | 10—00 |
| 21. | ,, II | ... | அர. சேஷாசலம் | ... | 9—50 |
| 22. | இந்தியாவின் பொருளாதார வளர்ச்சி–I | ... | தே. வேலப்பன் | ... | 10—00 |
| 23. | ,, II | ... | ஜி. சிதம்பரம் | ... | 8—00 |
| 24. | பணம்—சிறு விளக்கம் ... | ... | கோ. இராதாகிருஷ்ணன் | ... | 10—00 |
| *25. | வணிக இயலின் தத்துவங்கள் ... | ... | கு. ஆளுடைய பிள்ளை | ... | 9—50 |
| 26. | பத்தொன்பதாம் நூற்றுண்டில் கிரேட் பிரிட்டனில் தொழில் வாணிபப் புரட்சி | ... | கு. ரா. கருப்பண்ணன் | ... | 11—00 |
| 27. | பென்ஹாம் பொருளாதாரம்–I | ... | ஏ. குழந்தை | ... | 11—00 |
| 28. | ,, II | ... | எஸ். குழந்தைநாதன் | ... | 7—00 |
| *29. | வரவுசெலவுத் திட்டம் ... | ... | ஆர். ரங்காச்சாரி | ... | 6—00 |



**வரலாறு**

| | | | | | |
|---|---|---|---|---|---|
| *30. | பிரிட்டன் வரலாறு–I ... | ... | கி. ர. அனுமந்தன் | ... | 10—00 |
| *31. | ,, II ... | ... | ,, | ... | 9—75 |
| *32. | ஐரோப்பிய வரலாறு–I ... | ... | டி. வி. சொக்கப்பா | ... | 4—50 |
| 33. | ஐரோப்பா—கடந்த ஐந்து நூற்றுண்டுகாலச் சரித்திரம் | ... | வை. விருத்தகிரீசன் | ... | 15—00 |
| 34. | இங்கிலாந்து வரலாறு–I ... | ... | இரா. அண்ணமலை | ... | 13—00 |
| 35. | ,, II ... | ... | பா. மாணிக்கவேலு | ... | 13—00 |
| 36. | ,, III ... | ... | என். ஜே. ராஜகோபால் | ... | 8—00 |
| 37. | ,, IV ... | ... | ,, | ... | 8—00 |

* மூலநூல் (Original Book)

வரலாறு—தொடர்ச்சி

| | | | |
|---|---|---|---|
| 38. | இங்கிலாந்தின் வரலாறு-I | க். த. திருநாவுக்கரசு | 15—00 |
| 39. | ,, II | எம். எக்ஸ். மிராண்டா | 8—00 |
| 40. | ,, III | ,, | 5—00 |
| 41 | இந்தியாவின் சிறப்பு வரலாறு-I | தி. வெ. குப்புசாமி | 7—00 |
| 42. | ,, II | ஏ. உஸ்மான் ஷெரீப் | 9—00 |
| 43. | ,, III | அ. பாண்டுரங்கன் | 11—00 |
| 44. | கிரேக்க நாட்டு வரலாறு-I | சைமன் ஐ. எஸ் பாக்கியநாதன் | 7—50 |
| 45. | ,, II | ,, | 7—00 |
| 46. | ,, III | பி. இராமானுஜம் தேவதாஸ் | 7—75 |

அரசியல்

| | | | |
|---|---|---|---|
| 47. | இந்திய அரசியலமைப்பு | வீ. கண்ணையா | 4—75 |
| 48. | அரசியலுக்கு ஓர் அறிமுகம் | டி. செல்லப்பா | 8—50 |
| 49. | தற்கால அரசியல் அமைப்புகள் | மோ. வள்ளுவன் கிளாரன்சு | 8—50 |
| 50. | பன்னாட்டு அரசியல்-I | திருமதி நூர்ஜஹான் பாவா | 16—00 |
| 51. | பொதுத்துறை ஆட்சி இயல்-I | வீ. கண்ணையா | 9—00 |
| 52. | ,, II | அ. ஜெகதீசன் | 7—25 |
| 55. | பொதுத்துறை ஆட்சியியலுக்கு ஓர் அறிமுகம்-I | வீ. கண்ணையா | 7—50 |
| 54. | ,, II | டி. செல்லப்பா | 7—50 |

உளவியல்

| | | | |
|---|---|---|---|
| 55. | குழந்தை உளவியல்-I | கி. ர. அப்புள்ளாச்சாரி | 8—00 |
| 56. | ,, II | ,, | 7—00 |

| | | | |
|---|---|---|---|
| 57. | உட்கவர் மனம் ... | ... சி. ந. வைத்தீஸ்வரன் | ... 7—00 |
| 58. | இளையோர் உளவியல்–I ... | ... தி. இரா. அரங்கராசன் | ... 12—00 |
| 59. | ,, II ... | ... ,, | ... 9—00 |
| 60. | சமூக உளவியல் ... | ... என். வேதமணி மானுவேல் | ... 9—25 |
| 61. | பிறழ்நிலை உளவியல் ... | ... அ. பெசன்ட் கிரீப்பர்ராஜ் | ... 11—00 |
| 62. | பித்தரின் உள்ளம் ... | ... ,, | ... 3—00 |
| *63. | குமர உள்ளம் ... | ... டாக்டர் மு. அறம் | ... 6—25 |

**தத்துவம்**

| | | | |
|---|---|---|---|
| 64. | இந்து சமயத் தத்துவம் ... | ... ஞா. ராஜாபகதூர் | ... 5—50 |
| *65. | அறிவு ஆராய்ச்சி இயல் ... | ... ஆர். இராமானுஜாச்சாரி | ... 3—50 |
| *66. | மேலைநாட்டுத் தத்துவம் ... | ... ஆர். எஸ். தேசிகன் | ... 3—50 |
| 67. | அத்துவித தத்துவம் ... | ... கோ. மோ. காந்தி | ... 6—50 |
| 68. | ஆங்கிலேயப் பயன்வழிக் கொள்கையினர் | ... மோ. வள்ளுவன் கிளாரன்சு | ... 5—50 |
| 69. | இந்தியத் தத்துவம் ... | ... வ. அ. தேவசேனபதி, பா. நா. சண்முகசுந்தரம் | ... 3—50 |

**அறவியல்**

| | | | |
|---|---|---|---|
| 70. | அறவியல்—ஓர் அறிமுகம் ... | ... கோ. மோ. காந்தி | .. 8—50 |

**அளவையியல்**

| | | | |
|---|---|---|---|
| 71. | அளவை இயல்—தொடக்க நூல் ... | ... கி. ர. அப்புள்ளாச்சாரி | ... 2—50 |

* மூல நூல் (Original Book)

**மானிடவியல்**

| | | | |
|---|---|---|---|
| *72. | மானிடவியல் | ம. சு. கோபாலகிருஷ்ணன் | 4—75 |
| 73. | பண்பாட்டுக் கோலங்கள் | கி. பூ சுப்பிரமணியன் | 5—50 |
| 74. | இந்தியாவில் குடியானவர் வாழ்க்கை | எஸ். இலட்சுமி | 3—50 |

***மூகவியல்**

| | | | |
|---|---|---|---|
| 75. | சமூகவியலின் அடிப்படைக் கோட்பாடுகள் | ஜெ. நாராயணன் | 10—00 |

**புவியியல்**

| | | | |
|---|---|---|---|
| 76. | ஆசியா-I | கொ. சேஷ. நரசிம்மன் | 9—50 |
| 77. | ,, II | ,, | 8—75 |
| 78. | ஐரோப்பாக் கண்டத்தின் புவியியல் | ஏ.எஸ். நாராயணன் | 8—50 |
| *79. | தென்கிழக்கு ஆசியா | ஜி. கிருஷ்ணமூர்த்தி | 8—50 |
| *80. | வட அமெரிக்கா | குமாரி இரா. அலமேலு | 8—25 |
| 81. | தென் அமெரிக்கா | எம். என். பத்மநாபன் | 9—00 |
| *82. | தென் கண்டங்கள்—ஆஸ்திரேலியா | திருமதி எச். நியூமன் | 4—00 |
| *83. | ,, —ஆஃப்பிரிக்கா | எஸ். முத்துக்கிருஷ்ணக் கரையாளர் | 3—25 |
| *84. | புவிப்புறவியல்-II | நா. அனந்தபத்மநாபன் | 6—00 |
| *85. | செய்முறைப் புவியியல் | சு. ஜெயச்சந்திரன் | 9—00 |
| *86. | மக்கட் பரப்பியல் | வி. எஸ். அனந்தபத்மநாபன் | 6—25 |
| *87. | சமுத்திரவியல் | கோ. இராமசாமி | 6—50 |
| 88. | காலநிலை இயல்-I | கொ. சேஷ. நரசிம்மன் | 10—00 |
| 89. | ,, II | ,, | 5—00 |

| | | | |
|---|---|---|---|
| 90. | வளியியலுக்கு ஓர் அறிமுகம் | கோ. இராமசாமி | 11—00 |
| *91. | புவி அமைப்பு இயல் | சி. விசுவநாதன் | 4—75 |

**புள்ளியியல்**

| | | | |
|---|---|---|---|
| *92. | புள்ளியியல்—அறிமுகம் | சு. வைத்தியநாதன் | 10—00 |
| 93. | புள்ளியியல் முறைகள்-I | கோ. சண்முகசுந்தரம் | 10—00 |
| 94. | ,, II | கே. ஆர். இராஜகோபாலன் | 14—00 |
| 95. | நம்மைச் சுற்றியுள்ள பேரண்டம் | தி. வி. லட்சுமிநரசிம்மன் | 6—50 |

**உயர் கணிதம்**

| | | | |
|---|---|---|---|
| *96. | ஆயத்தொலை வடிவ கணிதம் | டி. கே. மாணிக்கவாசகம் பிள்ளை | 12—50 |
| *97. | வகை நுண்கணிதம் | ,, | 8—00 |
| *98. | தொகை நுண்கணிதம் | தி. கோவிந்தராசன் | 9—00 |

**விலங்கியல்**

| | | | |
|---|---|---|---|
| *99. | விலங்கியல் | பெ. மா. அண்ணுமலை, இரா. முருகேசன் | 12—00 |

**பௌதிகவியல்**

| | | | |
|---|---|---|---|
| 100. | ஒளி நூல் | ச. சம்பத்து | 10—00 |

* மூல நூல் (Original Book)




**விஞ்ஞானம்**

| | | | |
|---|---|---|---|
| *101. | வானவெளி வெற்றி | டாக்டர் எம். ஏ. தங்கராஜ் | 6—00 |
| *102. | ரேடியோ | ,, பி. திருஞானசம்பந்தம் | 4—75 |
| *103. | எக்ஸ்-கதிர்கள் | பெ. நா. அப்புசாமி, ஜே. பி. மாணிக்கம் | 4—50 |
| *104. | பாம்புகள் | பெ. மா. அண்ணுமலை | 3—50 |
| *105. | தாவரம்—வாழ்வும் வரலாறும் | டாக்டர் கு. சீனிவாசன் | 8—00 |
| *106. | கரும்பு | கு. பெரியசாமி | 4—00 |

**மருத்துவம்**

| | | | |
|---|---|---|---|
| *107. | நீரிழிவு—க்ஷயரோகம் | டாக்டர் ஜி வேங்கடசாமி, டாக்டர் ஏ. கதிரேசன் | 2—50 |
| 108. | மகப்பேறும் மாதர் நோயும் | டாக்டர் (குமாரி) மணிமேகலை | 8—25 |
| *109. | பாக்டீரியா | சு. சுந்தரம் | 2—50 |

**பொறியியல்**

| | | | |
|---|---|---|---|
| 110. | நீங்களே உங்கள் வீட்டைக் கட்டலாம் | கே. வி. கிருஷ்ணராஜ், சி. ஆர். சுப்பிரமணியம், ஆர். இராமசாமி, கே. வேணுகோபால் | 8—50 |

**சட்டம்**

| | | | |
|---|---|---|---|
| *111. | குற்றவியல் சட்டம் | எம். சண்முகசுப்பிரமணியம் | 10—00 |

**பொது நூல்கள்**

| | | | |
|---|---|---|---|
| 112. | மகாத்மா காந்தி | சரஸ்வதி தங்கையன் | 3—25 |
| 113. | விவசாயப் புரட்சி | வி. கார்த்திகேயன் | 8—00 |
| 114. | சேமக் கை-நூல் | ஆ. சுப்பிரமணியம் | 2—50 |
| *115. | முற்காலச் சோழர் கலையும் சிற்பமும் | எஸ். ஆர். பாலசுப்பிரமணியம் | 9—00 |
| *116. | உணவும் ஊட்டமும் | தி. வேங்கடகிருஷ்ணய்யங்கார் | 4—50 |

* மூல நூல் (Original Book)